# மஞ்சள் பிசாசு

**(தங்கத்தின் கதை)**

**உலக நாடுகளையும் அவற்றின் மக்களையும்**

**பிடித்து ஆட்டும் தங்கப் பிசாசின் வரலாறும்**

**பொருளாதார முக்கியத்துவமும்**

*அ.வி.அனிக்கின்*

தமிழில்

நா.தர்மராஜன்



# பதிப்பாளர் குறிப்பு

ப ண உலோகம் என்ற முறையில் தங்கத்தின் வரலாற்றையும் அதன் நவீனப் பிரச்சினைகளையும் இந்தப் புத்தகத்தில் விரிவாக ஆராளிணிந்திருக்கிறார். மார்க்சிய–லெனினிய அரசியல் பொருளாதாரம், குறிப்பாக பணவியல் தத்துவம் இப்புத்தகத்தின் தத்துவ அடிப்படை யாகும்.

தங்க ஆதார அளவுகோலின் செயல்முறையையும் அதன் உண்மையான சாராம்சத்தையும் ஆசிரியர் நன்கு விளக்கியிருக்கிறார். ஏராளமான வரலாற்று விவரங்களை பிரபல சோவியத் பொருளியலாளரான அ.வி.அனிக்கின் இப்புத்தகத்தில் பயன்படுத்தியுள்ளார்.

**–பதிப்பாளர்**

# தங்கத்தின் கதை..!

**ஆ** யிரக்கணக்கான ஆண்டுகளுக்குமுன் கிரேகத்தில் மின்னும் தங்கக் கட்டியை ஒரு குழந்தை எடுத்ததாக கூறப்படுகிறது. அப்போதுதான், முதன்முறையாக தங்கம் அறிமுகமானது என்றும் சொல்லப்படுகிறது.



இயற்கையாக கற்களோடு கலந்து மின்னிய உலோகமாக தங்கம் இருந்தது. எனவே, மனிதர்கள் அறிந்த முதல் உலோகம் தங்கம் என்பதில் சந்தேகமில்லை. தங்கம் உலகம் முழுவதும் பரவியுள்ள பல்வேறு கலாச்சாரங்களில் முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது. தங்கத்தின் இலகு தன்மை, கவர்ச்சி, அழகு எல்லாமும் சேர்ந்து அந்த உலோகத்தின்மீது மனிதர்களுக்கு காதலை அதிகரித்துள்ளது. ஒரே சமயத்தில் உலகின் பல்வேறு பகுதிகளில் வாழ்ந்த பல்வேறு பிரிவு மக்கள் தங்கத்தை கண்டுபிடித்துள்ளனர். யாரெல்லாம் தங்கத்தை பார்த்தார்களோ அவர்கள் அனைவருக்கும் தங்கம் பிடித்திருந்தது.

மனித இனத்தில் தங்கம் பரவலாக அறியப்பட்டிருந்தது. மனித இனத்தின் முன்னேற்றத்திற்கு இரும்பும், செம்பும் தொழில்நுட்ப வளர்ச்சியில் உதவியாக இருந்தது என்று தான் கருதி வந்தோம். ஆனால், தங்கம்தான் முதலில் வந்தது.

வேலை செய்வதற்கு இலகுவான உலோகமாக தங்கம் இருந்தது. ஆபரணங்கள் செய்வதற்கு தங்கம் பயன் படுத்தப்பட்டது. சக்தி வாய்ந்த அறிதான உலோகமாக இருந்ததால் தங்கம் நாணயமாகவும் பயன்படுத்தப்பட்டது.

தொடக்ககால நாகரிகங்களில் தங்கத்தை கடவுளாகவும், அரசர்களாகவும் மக்கள் மதித்தார்கள். கடவுளின் பெயரால் மன்னரின் பெயரால் தங்கம் படைக்கப்பட்டது.

அழகும், சக்தியும் ஒருங்கேபெற்ற தங்கம் புராதன காலத்திலேயே சிம்மாசனம் மற்றும் கடவுள் சிலைகளை செய்வதற்கு பயன்படுத்தப்பட்டது. உணவு தட்டுகள், கப்புகள், பாத்திரங்கள், ஆபரணங்கள் என்று தனிப் பட்ட பல்வேறு உபயோகங்களுக்கு தங்கம் பயன் படுத்தப்பட்டது.

ட்ராய் யுத்தத்தின் மொத்த நோக்கமே தங்க குவியலை கைப்பற்றுவதுதான் என்று கூறப்படுகிறது. கி.மு.2460–2600 காலகட்டத்திற்கு இடையில் கண்டறியப் பட்ட தங்க குவியலில் இருந்த நகைகளும், பொருள்களும் வியக்க வைத்தன.



தங்கம் பணமாக கருதப்படுவதற்கு முன்பே தங்கத்தின்மீது மனிதர்களுக்கு ஈர்ப்பு அதிகமாக இருந்தது. ஆயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்னரே தங்கம் புலக்கத் தில் இருந்தாலும் கி.மு.700ல் தான் பணமாக கருதப் பட்டது.

பினிசியர்கள், எகிப்தியர்கள், இந்தியர்கள், ஹைத்தியர் கள், சீனர்கள் என உலகின் பல்வேறு பகுதியினரும் தங்கத்தைத் தேடி அலைந்தனர். தங்களிடம் சிக்கிய போர் கைதிகளை தங்கச் சுரங்கங்களில் அடிமைகளாக வேலை வாங்கினர்.

பணமாக கருதப்படுவதற்கு முந்திய காலத்திலேயே தங்கத்திற்காக மனிதன் எல்லா வகையிலும் முயற்சிகளை மேற்க்கொண்டான். கிரீசில் கி.மு.550–க்கு முன்னரே மத்திய தரைகடல் நாடுகளில் தங்கச் சுரங்கங்கள் அறிமுகமாகின. அந்தக்கால கட்டத்திலேயே கிரீஸ் தங்க நாணயத்தை அறிமுகப்படுத்தியது.

கிரேக்க அறிஞர்களான பிளேட்டோ, அரிஸ்டாட்டில் உள்ளிட்டோர் தங்கத்தைப் பற்றி நிறைய எழுதினார்கள். தங்கம் தண்ணீருடன் தொடர்புடையது என்ற உண்மையை  யை அவர்கள் எழுதினார்கள். தண்ணீர் மற்றும் சூரிய ஒளியின் அடர்த்தியான கலவைதான் தங்கம் என்று கூறப்படுகிறது.

தங்கத்தை தோண்டி எடுப்பதுக்குறித்த நடைமுறைகளை கிரேக்கர்கள் வெகு முன்னதாகவே அறிந்திருந்தனர். அலெக்சாண்டர் கட்டித்தங்கம் வெட்டியெடுத்து... இறந்த பிறகு ஆசியா மைனர், எகிப்து ஆகிய பகுதிகளில் தங்கச் சுரங்கங்கள் உருவாகின. அவற்றில் சில அரசுக்கு சொந்தமாகவும் வேறுசில தனியாருக்கு சொந்தமாகவும் இருந்தன. தனியார் சுரங்கங்கள் அரசுக்கு குறிப்பிட்ட அளவு தங்கத்தை பிரித்துக் கொடுத்தன. சைத்தியர்கள், சிம்மேரியர்கள் உள்ளிட்டோரும் தங்கச் சுரங்கங்களை உருவாக்கினார்கள்.

கிரேக்கத்திலும், ரோமிலும் தங்கம் மற்றும் வெள்ளி நாணயங்கள் உருவாக்கப்பட்டு உலகப் பொருளாதாரம் அறிமுகப்படுத்தப்பட்டது. உலகின் பல்வேறு நாடுகளில் வியாபாரத்திற்கு இந்த நாணயங்கள் உதவியாக இருந்தன. பண்டமாற்று முறைக்கு மாற்றாக நாணயமுறை அறிமுகமானது.

பணம் அறிமுகமானது. ஆனால், அதன் பெயர் தங்கம் என்றே இருந்தது.  தென்னமெரிக்காவில் வாழ்ந்த இன்கா பழங்குடியின மக்கள் தங்கத்தை சூரியனின் கண்ணீர் என்று அழைத்தார்கள். கிரேக்க கவிஞரான ஹோமர், தான் எழுதிய இலியட், ஒடிஸி ஆகிய காவியங்களில்



தங்கத்தை பயன் படுத்தியிருக்கிறார். சாதாரண மக்களின் சொத்தாக தங்கத்தை அவர் குறிப்பிட்டிருக்கிறார்.

எகிப்தின் முதல் பேரரசான மீன்ஸ் பேரரசில் கி.மு.3100ல் ஒருபங்கு தங்கம் இரண்டரை பங்கு வெள்ளிக்கு சமம் என்று நிர்ணயம் செய்யப்பட்டது.

கி.மு.1320ல் எகிப்தில் உள்ள தங்கச் சுரங்கங்கள், அவற்றுக்கு செல்லும் வழி, அவற்றில் வேலை செய்பவர்களின் குடியிருப்புகள் ஆகியவற்றை குறிப்பிடும் வரைபடம் எழுதப்பட்டிருந்தது.

தங்கம் முதல்முறையாக கி.மு.700ல் பணமாக பயன்படுத்தப்பட்டது. லிதிய வியாபாரிகள் இந்த நாணயங்களை உருவாக்கினார்கள். 63 சதவீதம் தங்கமும், 27 சதவீதம் வெள்ளியும் கலந்த கலவையாக இந்த நாணயம் இருந்தது.

# மின்னும் சில உண்மைகள்..!



**தங்கம் என்றால் என்ன?**

உ லகம் முழுவதும் பல்வேறு பகுதிகளில் மஞ்சள் நிறத்தில் அரிதான உலகமாக தங்கம் வெட்டி எடுக்கப்படுகிறது. சுரங்கங்களில் சுத்தமாகவும் வேறுசில கனிமங்கள் கலந்தும் தங்கம் கிடைக்கிறது.

**தங்கம் எங்கே கண்டுப்பிடிக்கப்படுகிறது?**

உலகம் முழுவதும் பரவலாக கிடைத்தாலும், தென்னாப் பிரிக்கா, கனடா, அமெரிக்கா, ஆஸ்திரேலியா ஆகிய நாடுகள் தங்க உற்பத்தியில் முக்கியமானவை.

**தங்கத்திற்கு வேதி அடையாளமாக ஏயு (AU) ) என்ற ஆங்கில எழுத்துக்கள் எப்படி வந்தன?**

Aurum என்ற லத்தீன் வார்த்தையின் சுருக்கமே ஏயு ஆகும். இந்த லத்தீன் வார்த்தைக்கு அதிகாலை வெளிச்சம் என்று அர்த்தம் ஆகும்.

**தங்கத்திற்கு கோல்டு என்ற ஆங்கில பெயர் எப்படி வந்தது?**

மஞ்சள் நிறத்திற்கு பழைய ஆங்கில வார்த்தை ஜியோலு (Geolu)) என்பதிலிருந்து மருவி கோல்டு என்ற வார்த்தை உருவானது.

**கேரட் என்றால் என்ன?**

24 கேரட் என்பது எதுவுமே கலக்காத சுத்தமான தங்கமாகும். கேரட் குறையும்போது தங்கத்துடன் அந்த அளவுக்கு செம்பு உள்ளிட்ட வேறு உலோகங்கள் கலக்கப்பட்டிருப்பதாக அர்த்தமாகும்.

**தங்கத்தை எவ்வளவு தூரம் நீட்டி விரிக்க முடியும்?**

மிகவும் இலகுவான உலோகங்களில் தங்கத்திற்கு முக்கியமான இடம் உண்டு. 30 கிராம் தங்கத்தை 30 சதுர மீட்டர் பரப்பிற்கு விரிக்க முடியும். தங்கத்தை மிக மெல்லிய திரைச்சீலை அளவுக்கு தகடாக தட்டமுடியும். அப்படி தட்டும்போது மறுபக்கம் உள்ள உருவம் தெரியும்.

**மற்ற உலோகங்களை தங்கமாக மாற்ற முடியுமா?**

பல நூற்றாண்டுகளாக இந்த முயற்சியில் பலரும் ஈடுபட்டனர். ஆனால், அது சாத்தியமில்லை என்பதே உண்மை.



**அமில சோதனை என்றால் என்ன?**

சுத்தமான தங்கத்தை பரிசோதிக்க நைட்ரிக், ஹைட்ரோ குளோரிக் அமிலங்களை பயன்படுத்துவது வழக்கம். சுத்தமான தங்கம் இந்த அமில சோதனையில் தனது நிறத்தை இழக்காது. செம்பு உள்ளிட்ட வேறு உலோகம் கலந்திருந்தால் நீலநிறமாக மாறிவிடும்.

**அலாய் என்பது என்ன?**

செம்பு, வெள்ளி, ஜிங்க், பிளாட்டினம் உள்ளிட்ட உலோகங்கள் தங்கத்துடன் கலக்க லாய் பயன்படுகிறது.

**முட்டாள்களின் தங்கம் எது?**

இரும்பு பைரைட் என்ற உலோகத்தை முட்டாள்களின் தங்கம் என்று அழைக்கிறார்கள். இந்த உலோகம் மிகவும் கெட்டியானது. ஆனால், தங்கம் மிகவும் இலகுவானது.

**கோல்டு ஸ்டாண்டர்டு என்றால் என்ன?**

ஓரு நாடு தனது காகித பணத்திற்கு இணையாக தங்கம் வாங்கும் விற்கும் அளவை நிர்ணயிப்பது ஆகும். ஆனால், இப்போது எந்த நாடும் இந்த கோல்டு ஸ்டாண்டர்டு முறையை பின்பற்றுவதில்லை.

**தங்க விலை நிர்ணயம் என்றால் என்ன?**

லண்டனில் தங்க வியாபாரிகள் 5 பேர் அடங்கிய குழு தினந்தோறும் ஒரு விலையை நிர்ணயிக்கிறார்கள். அது, உலகம் முழுவதும் கடைப்பிடிக்கப்படுகிறது.

**தங்கக்கட்டி என்றால் என்ன?**

சுரங்கத்தில் வெட்டி எடுக்கப்படும் தங்கம் இப்படி அழைக்கப்படுகிறது. இது, 30 கிராம் அளவிருந்து 50 கிலோ அளவு வரை இருக்கும். இதுவரை வெட்டி எடுக்கப்பட்டதில் மிகப்பெரிய தங்கக் கட்டி 1869ம் ஆண்டு ஆஸ்திரேலியாவில் கிடைத்தது. அதன் அளவு 90.9 கிலோ ஆகும்.

**தங்க இலை என்றால் என்ன?**

மிக மெல்லிய தங்க தகடுதான் தங்க இலை என்று அழைக்கப்படுகிறது. திறமையான நகைத் தொழிலாளி தங்கத்தை மிக மெல்லிய தகடாக தட்டி எடுக்கமுடியும். ஒரு அங்குலம் கனத்திற்கு 2 லட்சத்து 50 ஆயிரம் மெல்லிய தகடுகள் என்ற கணக்கில் தட்டமுடியும். மிக மெல்லிய தகடாக தங்கத்தை தட்டி செய்ய முடியும். உலகில் வெட்டி எடுக்கப்படும் மொத்த தங்கத்தில் மூன்றில் இரண்டு பங்கு தென்னாப்பிரிக்காவில் கிடைக்கிறது.

தங்கம் எந்த காலத்திலும், எந்த வகையிலும் தனது தரத்தை இழப்பதில்லை. எனவேதான், ஆயிர கணக்கான ஆண்டுகளுக்கு முந்தைய தங்கத்தால் செய்யப்பட்ட பொருள்கள் இப்போதும் அப்படியே உருக்குலையாமல் இருக்கின்றன.

மிக ஆழமான தங்க சுரங்கம் தென்னாப்பிரிக்காவில் உள்ளது. பூமிக்கடியில் 3.5 கிலோ மீட்டர் ஆழம் வரை உள்ள இந்த சுரங்கத்தின் பெயர் டவ் டோன் ஆகும்.

ஆயிரகணக்கான ஆண்டுகளாக ஆப்பிரிக்கர்கஷீமீ நகைத்தொழிலில் ஈடுபட்டிருப்பதாக கூறப்படுகிறது தவறு. உலகில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள மிகப்பழமை யான தங்க ஆபரணம் எகிப்தைச் சேர்ந்தது. கி.மு.1352ம் ஆண்டைச் சேர்ந்தது இது.

தங்கத்தை உண்பது பாதுகாப்பானதா என்ற கேள்வி பலரிடமும் உள்ளது. சில சமூகத்தைச் சேர்ந்தவர்கள் தங்கத்தை உண்பும் பழக்கம் உள்ளவர்கள். மனித உடலில் தங்கம் எதிர் விளைவை ஏற்படுத்தாது. எனவேதான், செயற்கைப் பல்கூட தங்கத்தில் செய்து பொருத்துகிறார்கள்.

மேற்கு ஆப்பிரிக்கா 11 முதல் 17 ம் நூற்றாண்டு வரை உலகின் தங்க விநியோக நாடுகளில் முன்னணி நாடாக இருந்தது.

கம்யூட்டர்களில் பொருத்தப்படும் மிக நுண்ணிய மைக்ரோ சிப்புகளிலும், தொலைபேசி நிலையங்கள் மற்றும் சில தொழிற்சாலை உபகரணங்களில் தங்கம் பயன்படுத்தப்படுகிறது.

விண்வெளி ஓடங்களிலும் தங்கம் மேல் தகடாக பயன்படுத்தப்படுகிறது. சூரிய ஒளியின் வெப்பத்தை எதிர்கொள்வதற்கு இது பயன்படுத்தப்படுகிறது. விண்வெளியில் நடக்கும் விண்வெளி வீரர்கள் தங்களை விண்வெளி ஓடத்துடன் இணைப்பதற்கு பயன்படும் இணைப்பு தண்டில் தங்கம் தங்கச்சுரங்கத்தின் உள்தோற்றம் பயன்படுத்தப்படுகிறது.



கண்ணாடியுடன் தங்கத்தைக் கலந்து ஜன்னல்கள் செய்யப்படுகின்றன. இவ்வாறு, செளிணியப்படும் கண்ணாடிகள் சூரிய வெளிச்சத்தை உள்ளே புகாமல் தடுத்து, வீட்டிற்குள் இதமான சூழலை பாதுகாக்கின்றன.

தங்க சுரங்கத்தில் வேலை செய்யும் தொழிலாளர்கள் தண்டுகளில் பொருத்தப்பட்ட கூண்டுகளில் பயணிப் பார்கள். தங்கச் சுரங்கத் தொழிலாளர்கள் கடினமான இரும்பு தொப்பிகள், பூட்ஸ்கள், பேட்டரி விளக்குகள், காதுகளை மூடும் கருவிகள், சுவாச கருவிகள் உள்ளிட்டவற்றை பயன்படுத்துவார்கள்.

சுரங்கத்தின் அடியில் தாழ்வான, குறுகலான பகுதிகளில் பள்ளங்களைத் தோண்டி அதன் உறுதித்தன்மையை அறிந்து பின்னர் துளையிடுவார்கள். இவ்வாறு துளையிடப்படும் பாறைகள் பின்னர் வெடி வைத்து சிறுசிறு துண்டுகளாக பிளக்கப்படும். அவ்வாறு பிளக்கப் பட்ட பாறைகள் சுரங்கத்திலிருந்து வெளியே ரயில்வே பாதைகள் மூலம் மேல்பகுதிக்கு அனுப்பப்படும்.

மேலே வந்த தங்கத்தாதுவை அரைத்து தங்கத் தூளாக்குகிறார்கள். அவ்வாறு, தூளாக்கப்பட்ட தங்கம் வேதி பரிசோதனைக்கு உட்படுத்தப்பட்டு

90 சதவீதம் சுத்தமான தங்கமாக மின் உளையில் உருக்கி கெட்டிப் படுத்தப்படுகிறது.

# அறிமுகம்

## *மனிதகுலத்தின் வாழ்க்கையில் தங்கம்*

இந்தப் புத்தகம் 1978–ன் கடைசியில் முதல் தடவையாக ரஷ்ய மொழியில் வெளியிடப்பட்டது. அதன் பிறகு நடைபெற்றிருக்கும் சம்பவங்கள் இன்றைக்கும் அதன் பொருத்தத்தை உறுதிப்படுத்தியுள்ளன. "தங்க நெருக்கடி", "தங்க வேட்டை" என்று கூக்குரலிடுகின்ற தலைப்புச் செய்திகள் முதலாளித்துவ உலகத்தின் செய்திப் பத்திரிகைகளில் பல தடவைகள் வெளியிடப் பட்டிருக்கின்றன. தங்கத்தின் விலைகளைப் பற்றிய வரைபடங்களில் வலது பக்கத்திலிருக்கும் குறுக்கு நெடுக்கான கோடு திடீரென்று அநேகமாக நேர் கோணத்தில் மேலே ஏறிப்போய்விட்டது. இந்த ஒப்புமை அளவில் மேலே ஏறிப்போய்விட்டது. இந்த ஒப்புமை அளவில் அதை எடுத்துக்காட்டுவது கூட வெகு சீக்கிரத்தில் முடியாமற் போய்விட்டது. ஏனென்றால் 1980ன் ஆரம்பத்தில் லண்டன் அல்லது நியூயார்க்கில் தங்கத்தின் சந்தை விலை பத்து வருடங்களுக்கு முன்பிருந்த அதன் விலையைக் காட்டிலும் சுமார் 25 மடங்கு அதிகரித்திருந்தது.

பிறகு 1980–1982ல் தங்கத்தின் விலை 50 சதவிகிதம் வீழ்ச்சியடைந்தது. 1982ன் முதற்பாதியின் போது ஒரு அவுன்ஸ் தங்கத்தின் விலை சராசரியாக 400 டாலர்களாக இருந்தது. அது பொருளாதார மந்தத்தின் நீண்ட காலகட்டம். அப்பொழுது பெரும்பான்மையான பொருள்களின் தேவை குறைந்துவிட்டது. பல முதலாளித்துவ நாடுகளில் உற்பத்தியும் தொழில் முதலீடும் குறைந்தது இதற்கு முக்கிய காரணமாகும். தங்கத்தின் விலையில் இத்தகைய கூர்மையான ஏற்ற இறக்கங்கள் முதலாளித்துவப் பொருளாதாரத்தின் நிலையற்ற தன்மையைப் பிரதிபலித்தல், மிகைப்படுத்திக் காட்டுதல் ஆகிய இரண்டையுமே செய்கின்றன.

1971 வரை ஒரு டிராய் அவுன்ஸ் தங்கத்துக்கு 35 டாலர்கள் (ஒரு கிராமுக்கு 1.1 டாலர்) அதிகாரபூர்வமான விலையாக இருந்தது. ஆனால் அமெரிக்கக் கருவூலத்திலிருந்து சட்ட பூர்வமாக இந்த விலைக்கு வாங்குவதென்றால் அது ஒரே வகையைச் சேர்ந்த, தனித்தகுதிகளைக்

கொண்ட கொள்வினையாரளால் மட்டுமே முடியும். அவை வெளிநாட்டு நிதி நிறுவனங்களாக அல்லது மத்திய வங்கிகளாக இருக்கும். தங்க ஆபரணங்கள் தயாரிப்பவர்களும் மின்நுட்ப வியல் கருவிகளைத் தயாரிப்பவர்களும் தங்களுடைய மூலதனத்தில் ஒரு பகுதியைத் தங்கத்தில் முதலீடு செய்வது விவேகமானது என்று நினைக்கும் செல்வம் படைத்த முதலீட்டாளர்களும் அந்த நேரத்தில் சுதந்திர மான சந்தையில் அதை வாங்கிய விலைக்கு இது சிறிதளவே வேறுபட்டிருந்தது.

ஆபரணங்களையும் தங்க நாணயங்களையும் வாங்குபவர்கள் ஒரு அவுன்ஸ் தங்கத்துக்கு அதிகமாகக் கொடுத்தது உண்மையே. ஆபரணங்களையும் நாணயங் களையும் தயாரிப்பதற்குச் செய்யப்படும் செலவு, தயாரிப் பாளர்கள் மற்றும் சில்லறை விற்பனையாளர்களின் லாபம், பலவிதமான வரிகள் மற்றும் உபரி வரிகள் ஆகியவற்றுக்கும் சேர்த்து அவர்கள் விலை கொடுக்க வேண்டியிருந்தது. ஆனால் அந்த வேறுபாடு மிகவும் அதிகமாக இருக்கவில்லை. ஒரு அவுன்ஸ் தங்கத்துக்குச் சில டஜன் டாலர்களே விலை இருந்தது.

1980 ஜனவரி மாதத்தின் நடுப்பகுதியில் ஏற்பட்ட தங்க விலையேற்றத்தின் உச்ச கட்டத்தில் மொத்த விலை ஒரு அவுன்சுக்கு 840–850 டாலர்கள் வரை உயர்ந்தது. ஒரு கிராம் சுத்தமான தங்கத்தின் விலை சுமார் 27 டாலர்களாக உயர்ந்தது. ஆபரணக் கடைகளில் பளபளப் பான அலமாரிகளில் தொங்கவிட்டிருந்த விலைப் பட்டியல்களை மாற்றக் கூட கடை முதலாளிகளுக்கு நேரமில்லை. அளிப்பைக் காட்டிலும் தேவை மிகமிக அதிகமாக இருந்தது.



இப்படி ஏற்பட்ட விலை உயர்வு தங்கத்துக்கு மட்டுமல்ல. வெள்ளி, பிளாட்டினம் மற்றும் பிளாட்டின வகையைச் சேர்ந்த இதர உலோகங்களின் விலைகள் வானத்தைத் தொடுவதுபோல உயர்ந்தன. இதன் பின்னணியில் வேறு சக்திகளுக்கும் வேறு விதிகளுக்கும் உட்பட்டு விலையும் தொடர்ச்சியாக அதிகரித்தது. இத்தகைய நிலையில்தான் முதலாளித்துவம் இந்த நூற்றாண்டின் எண்பதுக்களுக்குள் நுழைந்தது.

உலகத்தில் தங்க விலையேற்றத்தைக் காட்டிலும் மிகவும் முக்கியமான விஷயங்கள் இருக்கின்றன என்பது உண்மையே. பொருளாதாரத் துறையிலிருந்து ஒரு உதாரணத்தைக் கூறுவதென்றால் எண்ணெய் விலைகளின் அதிகரிப்பு அல்லது வீழ்ச்சி இதைக் காட்டிலும் அதிக முக்கியமானது, மிக அதிகமான விளைவை ஏற்படுத்தக் கூடியது.

தொழில்துறையில் தங்கம் மிக அடக்கமான, குறைவான அளவில் தான் உபயோகிக்கப்படுகிறது என்பதைக் கொண்டு ஒருவர் சிந்திக்கக் கூடியதைக் காட்டிலும் அதன் பொருளாதார [மற்றும் அரசியல்] முக்கியத்துவம் மிகவும் அதிகமாக இருக்கிறது. அதனோடு பௌதிக மற்றும் இரசாயன ரீதியில் சம்பந்தப்பட்டிருக்கும் உலோகங்களான வெள்ளி, பிளாட்டினம்

ஆகியவற்றின் முக்கியத்துவத்தைக் காட்டிலும் அது மிகவும் அதிகமாக இருக்கிறது.

# பண்டமும் பணமும்

நவீனமான பண்டங்கள் என்ற விரிவான உலகத்தில் தங்கம் மிகவும் சிறப்பான இடத்தைப் பெற்றிருக்கிறது. அதன் பிரத்யேமான சமூகப் பணிகள் இந்த இடத்தை நிர்ணயிக்கின்றன. தங்கம் பிரகாசமான தோற்றத்தைக் கொண்டிருப்பதோடு புகழ்மிக்க வரலாற்றையும் கொண் டிருக்கிறது. அந்த வரலாற்றைத் தெரிந்து கொள்ளாமல் அதன் இன்றைய பாத்திரத்தை நாம் புரிந்துகொள்ள முடியாது.

ஒரு பொருளாதார நிகழ்வு என்ற முறையில் சோஷலிசம் தங்கத்தை முதலாளித்துவத்திடமிருந்து பாரம்பரியமாகப் பெற்றது. சோஷலிசத்தின் கீழ் பண்டங்களைக் கொள்வினை மற்றும் விற்பனை செய்தல் நடை பெறுகிறது, பணம் உபயோகமாகிறது என்ற அளவில் விசேஷமான பொருளாதார மற்றும் சமூக –உளவியல் தன்மைகளைக் கொண்டிருக்கும் மிக பிரத்யேகப் பண்டம் என்ற முறையில் தங்கம் அதன் பாத்திரத்தை இங்கும் தக்க வைத்துக் கொண்டிருக்கிறது. ஆனால் முதலாளித்துவ சமூகத்தில் தங்கத்தின் கூறுகளுக்கும் செயல்களுக்கும் அவை மிகப் பெரும் அளவில் வேறுபடுகின்றன. சமீபத்தில் ஏற்பட்ட தங்க விலையேற்றம் பொருளாதாரக் கருத்தோட்டத்தில் அழிவைத் தரக்கூடியது, அறிவியல் கருத்தோட்டத்தில் அருவருப்பானது; இத்தங்க விலை யேற்றத்துக்குச் சோஷலிஸ்ட் நாடுகளில் ஒப்புமை கிடையாது, அப்படி ஏற்படவும் முடியாது என்ற உண்மை யிலிருந்து மட்டுமே இதைப் பார்க்க முடியும்.



தங்கத்தின் விலையேற்றத்தை உபயோகித்து அனுபவ மில்லாதவர்கள், விவரம் தெரியாதவர்கள் [இவர்களில் பெரும்பான்மையானவர்கள் பணக்காரர்கள் அல்ல] ஆகியோரிடமிருந்து தொடர்ந்து பணத்தைப் பறிக்கின்ற தனிப்பட்ட வர்த்தகர்கள், ஊக வாணிகத்தில் ஈடுபடுபவர்கள், பங்குச் சந்தை சூதாட்டக்காரர்கள் என்ற சமூக அடுக்கமைவு சோஷலிஸ்ட் நாடுகளில் கிடையாது.

ஆனால் அங்கே தங்கம் வாங்கப்படுகிறது, விற்பனை செய்யப்படுகிறது; பல காரணங்களுக்காக அதை வைத்திருக்க ஏராளமானவர்கள் முற்படுகிறார்கள். இந்தக் காரணங்கள் பகுத்தறிவுக்குப் புறம்பானவை, சோஷலிஸ்ட் வாழ்க்கை முறையின் சாராம்சத்தோடு பொருந்தாதவை என்பதை நாம் ஒத்துக்கொண்டால் கூட , சமூக யதார்த்தம் என்பதை நாம் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும்.

எல்லாக் காலங்களிலுமே விசேஷமான கவனத்தையும் அக்கறையையும் ஈர்த்துக்கொண்டிருக்கும் இந்த உலோகத்தை நாம் நெருங்கிப் பார்ப்போம். எல்லோருமே தங்கத்தைப் பார்த்திருப்பீர்கள், தங்கத்தினால் செய்யப் பட்ட

மோதிரங்கள், வளையல்கள், கடிகாரங்கள் மற்றும் தங்கப்பற்கள் போன்ற பொருள்கள் பல வாசகர்களிடம் இருக்கும். பலர் தங்க நாயணங்களையும் ஒருவேளை பார்த்திருக்கக்கூடும். இவை ஒரு காலத்தில் பணம் என்ற முறையில் செலாவணியாகிக்கொண்டிருந்தன, ஆனால் தற்பொழுது அரிய பொருள்கள் என்று பத்திரமாக வைக்கப்படுகின்றன. சில சமயங்களில் இவை வரலாற்று மற்றும் கலைத்துறை மதிப்பைக் கொண்டிருக்கின்றன; நாணயத் தொகுப்புகளில் இடம் பெறுகின்றன.

தங்கம் மிகவும் விலையுயர்ந்த பண்டம் என்பது நமக்குத் தெரியும். இன்னும் துல்லியமாகச் சொல்வதென்றால் குறைவான அளவுகளில் அது அதிகமான மதிப்பைக் கொண்டிருக்கிறது. ஏதாவதொரு எடையளவின்படி தங்கத்தைக் காட்டிலும் வெள்ளி பல பத்துத் தடவைகளும் செம்பு ஆயிரக்கணக்கான தடவைகளும் இரும்பு பல்லாயிரக்கணக்கான தடவைகளும் குறைவான விலையைக் கொண்டிருக்கின்றன. தங்கம் அரிய உலோகம் என்று அழைக்கப்படுவது நமக்குத் தெரியும்.

தங்கம் அழகுடையது என்பதை எல்லோருமே ஒத்துக் கொள்வார்கள். அது அடர்த்தியான மஞ்சள் நிறத்தைக் கொண்டிருக்கிறது; அதோடு சேர்க்கப்படுகின்ற கலப்புப் பொருள்களின் அளவையும் ரகத்தையும் பொறுத்து அது வெவ்வேறு வர்ணங்களை அடையக் கூடியது (வழக்கமாக வெள்ளி, செம்பு, நிக்கல் மற்றும் குறைவான மதிப்படைய மற்ற உலோகங்கள் தங்கத்தோடு சேர்க்கப்படுகின்றன), ஐரோப்பிய மொழி களில் தங்கத்தைக் குறிக்கும் சொல் மஞ்சள் என்ற சொல்லிலிருந்து தோன்றியிருக்கிறது. மக்கள் மிகவும் தொன்மையான காலத்திலிருந்தே தங்கத்தை உபயோகித்து நகைகளையும் ஆபரணங்களையும் செய்து வந்திருக்கிறார்கள். சில சமயங்களில் இவை மிக அதிகமான கலை மதிப்பைக் கொண்டிருக்கின்றன, முக்கியமான கலாச்சார மற்றும் வரலாற்றுச் சின்னங் களாகப் பிரபலமடைந்துள்ளன. பண்டைக்கால எகிப்தியர்கள், ஸித்தியர்கள் மற்றும் திரேசியர்களால் செய்யப்பட்ட தங்கப் பொருள்களும் மத்திய கால மற்றும் நவீனகாலக் கைவினைஞர்களின் கலைப் படைப்புகளும் உலகத்தின் பொருட்காட்சிச்சாலைகளில் பொக்கிஷமாகப் போற்றப்படுகின்றன. நவீன ஆபரணத் தொழில் மிகவும் வெவ்வேறான கலை மற்றும் பணவியல் மதிப்பைக் கொண்ட பல பொருள்களைத் தயாரிக்கிறது.

தங்கம் அதற்கே உரித்தான சில பௌதிக மற்றும் இரசாயனத் தன்மைகளைக் கொண்டிருக்கிறது. அது இரும்பைப் போல துருப்

பிடிப்பதில்லை; செம்பின் மீது நீல –பச்சைச் சேர்மம் படர்வதைப் போல அதற்கு ஏற்படுவதில்லை; வெள்ளியைப் போல அது கறுத்து விடுவதுகூட இல்லை. பூமி அல்லது தண்ணீருக்கு அடியிலிருந்து செய்யப்பட்ட மற்ற பொருள்களும் தொழிற்சாலையிலிருந்து அப்பொழுது தான் கொண்டுவரப்பட்டதைப் போல பளிச்சென்ற தோற்றத்தைக் கொண்டிருக்கின்றன. அதனால்தான் தங்கம் உயர்ந்த உலோகம் என்று சொல்லப்படுகிறது.

தொழில்துறைப் பிரிவுகள் சிலவற்றில் தங்கம் பயன் படுத்தப்படுவதற்கு அதன் இயற்கையான தன்மைகள் ஏற்றவையாக இருக்கின்றன. பிரதானமாக கடந்த சில பத்தாண்டுகளில்தான் அதற்கு இந்த உபயோகம் ஏற்பட்டிருக்கிறது. மின்நுட்பவியல், வானவெளித் தொழில்நுட்பவியல் மற்றும் நவீன தகவல் தொடர்பு ஆகியவற்றில் அது பயன்படுத்தப்படுகிறது.

ஆனால் உலக வரலாற்றிலும் நவீன பொருளாதாரத்திலும் தங்கத்தின் முக்கியத்துவம் ஆபரணங்களைச் செய்வதிலும் தொழில்துறையிலும் அது பயன்படுத்தப்படுவதை வைத்து நிர்ணயிக்கப் படவில்லை. மேலும் அதனுடைய அலங்காகர உபயோகமாகக் கூட மதிப்பின் சொரூபமாக இருப்பது, பணமாக இருப்பது என்ற அதன் சமூகச் செயலோடு பெருமளவு இணைந்திருக்கிறது, அதன் பயனுள்ள இயற்கையான குணங்களோடு அதிகமான சம்பந்தம் இல்லாதிருக்கிறது என்பதை நாம் காண்போம்.



சமூகத்தில் பணம் வகிக்கின்ற பாத்திரம் சமூக அமைப்பைப் பொறுத்திருக்கிறது. இதைத் திருப்பிச் சொல்வதும் ஒரு வகையான அர்த்தத்தில் சரியாகவே இருக்கும்; ஒரு குறிப்பிட்ட சமூகத்தில் பணம் எப்படிச் செயல்படுகின்றது என்பதை நாம் பார்த்தோமானால் அதன் தன்மை, மக்களுக்கிடையே உள்ள உடைமை மற்றும் பொருளாதார உறவுகளின் தன்மை ஆகியவற்றை நாம் முடிவு செய்யக் கூடும்.

மனிதகுல வளர்ச்சியின் யுகங்கள் ஒவ்வொன்றுக் கிடையிலும் வேறுபாடுகள் உண்டு. அவற்றில் எத்தகைய பணவகை பயன்படுத்தப்பட்டது என்பதும் ஒன்றாகும். ஹோமர் காலத்திய கிரேக்கத்தில் இன்னும் உலோக நாணயங்கள் ஏற்படவில்லை; இரும்பு மற்றும் செப்புத் துண்டுகள் அல்லது கால்நடை பணமாகப் பயன்பட்டன. சென்ற நூற்றாண்டில் தங்க மற்றும் வெள்ளி நாயணங்கள் உலக முழுவதிலும் செலாவணியாகிக்கொண்டிருந்தன. அதுபோலவே சகஜமான நிலைமைகளில் அவற்றின் மதிப்புக்கு உலோகப் பணத்துக்குப் பரிவர்த்தனை செய்யப்படக்கூடிய வங்கி நோட்டுகளும் செலாவணியாகிக் கொண்டிருந்தன. இன்று முதலாளித்துவ நாடுகளில் பெரும் பகுதிக்குப் பணம் என்பது வங்கிகளின் பேரேட்டுப் புத்தகங்களில் பதிவு செய்யப்படும் கணக்கின் வடிவமாக இருக்கிறது; ரொக்கப் பணம் சம்பந்தப்படாமலேயே வங்கிகளிலிருந்து மாற்றுவதற்கு அது பயன்படுகிறது. ரொக்கப் பணம் [வங்கி நோட்டுகளும் சாதாரண உலோக நாணயங்களும்] பண அளிப்பில் மிகவும் சிறிய பகுதியாகவே இருக்கிறது. சோவியத் யூனியனில் பணம் அதே வடிவங்களை அடைகிறது.

ஆனால் அது குறுகிய சுற்று வட்டத்துக்குள்ளாகவே இயங்க முடியும்; மேலும் அது சமூக நலன்களுக்குக் கீழ்ப்பட்டிருக்கும், யாரும் பணத்தை உபயோகித்து நிலத்தையோ, வீடுகளையோ அல்லது தொழிலில் ஒரு பங்கையோ வாஙக் முடியாது. சோஷலிஸ்ட் நிறுவனங்கள் வங்கி மாற்று முறைகளின் மூலமே, அரசாங்க வங்கியின் ஒரு கணக்கிலிருந்து மற்றொரு கணக்குக்குப் பணத்தை மாற்றுவதன் மூலமே தங்களுடைய கணக்குகளை முற்றிலும் முடிவு செய்கின்றன. பொது மக்களுக்கம் அரசு நிறுவனங்களுக்குமிடையே ரொக்கப்பணம் சம்பந்தப் படாமல் வங்கியிலிருந்த மாற்றுவதன் மூலம் பணம் கொடுக்கின்ற முறையும் தொடங்கப்பட்டிருக்கிறது. பொதுமக்களின் மிகவும் பெருமான்மையான வழங்கீடுகள் ரொக்கப் பணத்தில் [அரசு வங்கி, கருவூல நோட்டுகள் மற்றும்

சில்லறை நாணயங்கள்] நடைபெறுகின்றன. நாட்டின் பண அளிப்பைத் திட்டமிடுவதும் ஒழுங்கு படுத்துவதும் சோஷலிஸ்ட் பொருளாதாரத் திட்ட மிடுதலில் முக்கியமான பகுதியாக இருக்கிறது.

முதலாளித்துவ மற்றும சோஷலிசப் பொருளாதாரத்தில் இருக்கின்ற எல்லாவிதமான பணங்களையும் காகிதக் கடன் பணம் என்று கூறுவது சரியானதே. முன்பு செலாவணியிலிருந்தே தங்க அல்லது வெள்ளிப் பணத்தைப் போன்றதல்ல இது. இதற்கு உள்ளார்ந்த மதிப்புப் கிடையாது. ஒரு 100 டாலர் அல்லது 100 ரூபிள் நோட்டின் வாங்கும் சக்திக்கும் அதன் தயாரிப்புச் செலவுக்கும் எத்தகைய சம்பந்தமும் கிடையாது. இந்தப் பணம் கடன் [அந்த வார்த்தையின் விரிவான பொருளில்] தன்மையைக் கொண்டிருக்கிறது. ஏனென்றால் அது அந்தப் பணத்தை வெளியிடுகின்ற நிறுவனத்தின் மீதுள்ள நம்பிக்கையை ஆதாரமாகக் கொண்டிருக்கிறது. இலத்தீன் மொழியில் கடன் என்ற சொல் நம்பிக்கையைக் குறிக்கும்.

இந்தப் பணத்தைக் காகிதப் பணம் என்று சொல்வதற்கு நாம் பழகிவிட்டோம்; எனினும் அது மென்மேலும் “சடத்தன்மை அற்றதாகிக்கொண்டிருக்கிறது, வங்கியின் பேரேட்டுப் புத்தகங்களில் குறிப்புக்களின் வடிவத்தில் இருக்கிறது; சமீப காலத்தில் மின் கணக்குப் பொறிகளின் நினைவில் மின்னியக்கச் சமிஞ்ஞைகளாக இருக்கிறது.

சோஷலிஸ்ட் பொருளாதாரத்தில் தங்கம் பணமாகுமா? பொருளாதார நிபுணர்கள் இந்தக் கேள்விக்கு வெவ்வேறு பதில்களைக் கூறுகிறார்கள், சிலர் ஆம் என்கிறார்கள், சிலர் இல்லை என்கிறார்கள். ஆனால் அவர்கள் எல்லோருமே பல்வேறு வாசக மறைப்புக்கள் மற்றும் தனிக் குறிப்பீடுகள் மூலம் இந்தப் பதிலை மழுப்பியுரைக்க முற்படுகிறார்கள்.

உண்மையில் இது அன்றாட அனுபவத்தில் சிறிதும் வெளிப்படையாகத் தோன்றுவதில்லை. ஒரு பக்கத்தில் நாம் தங்கத்தைப் பணமாக நினைத்துப் பழக்கப்பட்டுவிட்டோம். ஏதோ ஒரு வகையில் தங்கத்தால் பலப்படுத்தப்பட்டால் மட்டுமே நோட்டுகள் செலாவணியாக முடியும் என்று நினைப்பது வழக்கமானதே.

மறு பக்கத்தில் நீங்கள் தங்கத்தை எடுத்துக் கொண்டு கடைக்குச் சென்று சாமான்களை வாங்க முடியாது; வீட்டு வாடகையைக் கொடுக்க தங்கத்தை உபயோகிக்க முடியாது. ஒரு கார் அல்லது தொலைக்காட்சிப் பெட்டியின் விலை இத்தனை கிராம் தங்கம் என்று யாரும் சொல்ல முயற்சிப்பதில்லை. சோவியத் யூனியனில் எல்லாப் பொருள்களும் இதைப் பொறுத்தவரை

தங்கத்துக்கும் மற்ற பண்டங்களுக்கும் வேறுபாடு கிடையாது. ஒரு நபரிடம் தங்கம் இருந்து அவருக்குப் பணம், சாதாரணக் காகிதப் பணம் தேவையென்றால் அவர் முதலில் தன்னிடமிருக்கம் தங்கத்தை விற்பனை செய்ய வேண்டும். அது அவருடைய தாத்தாவின் தங்க கடிகாரமாகவோ அல்லது பாட்டியின் தங்க வளையலாகவோ இருந்தது அவற்றை நினைவுச் சின்னமாக அவர் மதிப்பதாக இருந்தால் அதை ஒரு பாட்டியின் தங்க வளையலாகவோ இருந்து அவற்றை நினைவுச் சின்னமாக அவர் மதிப்பதாக இருந்தால் அதை ஒரு கடைக்கக் கொண்டுபோய் அடகு வைக்க வேண்டும். ஆனால் ஒரு பர்கோட், டிரான் சிஸ்டர் பெட்டி அல்லது வெள்ளிக் கரண்டிகள் இவற்றையும் விற்பனை செய்ய அல்லது அடகு வைக்க முடியும். இரண்டுக்கும் வேறுபாடு இருக்கிறதா? ஆம், தங்கம் ஒரே சீரானது, நெடுங்காலம் இருப்பது, எடுத்துச் செல்லத்தக்கது. மேலும் அதற்கு இன்னொரு குணாம்சமும் இருக்கிறது. அதை வரையறுத்துக் கூறுவது கடினம். ஆனால் அது உண்மையானது. அது நெடுங்கால மரபு எனப்படும். மற்ற பண்டங்களிலிருந்து அதை வேறுபடுத்திக் காட்டுகின்ற பழக்கம் அந்தக் குணாம்சமாகும். ஏதாவதொரு பொருளுக்கு ஒரு விசேஷமான மதிப்பை ஏற்றிக் கூற வேண்டுமென்றால் ரஷ்யாவில் தங்கத்தையும் சேர்த்துக் கொள்கிறார்கள். உதாரணமாக, பருத்தியை "வெள்ளைத் தங்கம்" என்றும் எண்ணெயை "கறுப்புத் தங்கம்" என்றும் சொல்கிறார்கள்.

சோவியத் யூனியனில் தங்கம் அதற்குரிய எல்லாவிதமான பணவியல் செயல்களையும் நடைமுறை யில் இழந்துவிட்டது என்று சோஷலிஸ்ட் சமூகத்தில் பணத்தின் பாத்திரத்தை ஆராய்கின்ற பல சோவியத் பொருளியலாளர்கள் கருதுகின்றனர். காகிதக் கடன் பணத்தின் வாங்கும் சக்தியும் அதன் நிலையான தன்மையும் தங்கத்தை ஆதாரமாகக் கொண்டிருக்க வில்லை. அவை உற்பத்தி செய்யப்பட்டு செலாவணியில் புகுத்தப்படுகின்ற பண்டங்களின் அளிப்பைப் பொறுத்திருக்கின்றன. இவற்றில் மிகப் பெரும்பான்மையானவை அரசினால் நிர்ணயிக்கப்பட்ட நிலையான விலைகளைக் கொண்டிருக்கின்றன.

காகிதக் கடன் பணத்தின் நிலையான தன்மையை நிறுவுவதில் அரசின் தங்க இருப்புக்கள் ஒரு குறிப்பிட்ட பாத்திரத்தை வகிக்கின்றன. ஏனென்றால் தங்கம் மிகவும் விலை உயர்ந்த பண்டமாகும்; வெளிநாட்டில் அதன் மதிப்பை சுலபமாகக் கைப்பெற முடியும். "சோஷலிஸ்ட் நாடுகளில் மத்திய தங்க இருப்புக்கள் பிரதானமாக வெளிநாட்டுப் பொருளாதார உறவுகளோடு சம்பந்தப்பட்ட சர்வதேச ஒப்பந்தங்களுக்குக் காப்பாகவே

உபயோகிக்கப்படுகின்றன'' என்று மாபெரும் சோவியத் கலைக்களஞ்சியம் தெரிவிக்கிறது. சோவியத் ரூபிளின் தங்க அளவு சட்டபூர்வமாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. 0.987412 கிராம் சுத்தமான தங்கம் நிர்ணயிக்கப்பட்டது.

இதற்கு முன்பு, அதாவது 1950 மார்ச் முதல் தேதியிலிருந்து அது 0.222168 கிராமுக்குச் சமமாக இருந்தது. தேசியப் பொருளாதாரத்தின் பணவியல் அலகுகள் அனைத்தும் 10:1 என்ற விகிதத்தில் மறு கணக்கிடப்பட்டு [பத்து மடங்கு குறைக்கப்பட்டு] புதிய நோட்டுகள் வெளியிடப்பட்ட பொழுது விலைகளின் விகிதத்தில் ஏற்பட்டது. தங்கக் கையிருப்பைப் போல ரூபிளின் தங்க உள்ளடக்கமும் பிரதானமாக வெளிநாட்டு உறவுகள் துறையில்தான் யதார்த்தமான பாத்திரத்தை வகிக்கிறது. அந்நிய நாயணங்களுக்கு ரூபிளின் அளவு விகிதத்தை [பரிவர்த்தனை விகிதங்களை] நிர்ணயிக்கும் ஆதாரமாக உதவுகிறது. ரூபிள், டாலர் ஆகிய இரண்டு நாணயங்களின் தங்க உள்ளடக்கத்தை ஆதாரமாகக் கொண்டு அவற்றுக்கிடையே அளவுவிகிதம் [ஒப்புமை] 1973 பிப்ரவரி முதல் 100 டால களுக்கு 74 ரூபிள்கள் 61 கோபெக்குகள் என்று நிர்ணயிக்கப்பட்டது.

அதாவது ஒரு டாலர் சுமாராக 75 கோபெக்குகளுக்குச் சமமாகும். ஆனால் அதற்குப்பிறகு டாலரின் தங்க உள்ளடக்கம் எல்லாவகையான யதார்த்தமான, பொருளாதார முக்கியத்துவத்தையும் இழந்துவிட்டது. ஒப்பீட்டளவில் மற்ற நாணயங்களோடு ஏற்ற இறக்கங்களுக்கு உட்பட்டிருக்கிறது. ஆகவேடாலருக்கும் ரூபிளுக்கும் மேலே கூறப்பட்டிருக்கும் ஒப்புமை தற்பொழுது சோவியத் யூனியன் அரசு வங்கி வெளிநாடு களின் நாணயங்களோடு சம்பந்தப்பட்ட வகையில் டாலரின் சந்தை விலையைக் கணகக்லெடுத்துக் கொண்டு டாலருக்கு ரூபிள் விகிதத்தை நிர்ணயிக்கிறது.

உலகப் பணம் என்ற வகையில் தங்கத்தின் செயலால் மட்டுமல்லாமல் முற்றிலும் உள்நாட்டுப் பொருளதார நிகழ்வுப் போக்குகளில் அதன் பாத்திரத்தினாலும் சோவியத் யூனியனில் காகிதப் கடன் பணம் தங்கத்தோடு சம்பந்தப்பட்டிருக்கிறது என்ற மற்ற சோவியத் நிபுணர்கள் கருதுகிறார்கள். காகிதக் கடன் பணம் தங்கத்தின் பிரதிநிதி என்ற முறையினால் மட்டுமே பண்டங்களைப் பொறுத்தவரை அதன் வாங்கும் சக்தியைப் பெறுகிறது என்று அவர்கள் நம்புகிறார்கள்.

இப்புத்தகத்தின் ஆசிரியர் முதலில் சொல்லப்பட்ட கருத்துக்கு நெருக்கமானவர் என்பதை வாசகர் முன்பே ஊகித்திருக்க முடியும்.

தங்கத்துக்கும் காகிதக் கடன் பணத்துக்கும் இடையி லுள்ள உறவைப் பற்றிய பிரச்சினையில் எத்தகைய கருத்து வேறுபாடுகள் இருந்தாலும்கூட, வெளிநாட்டுப் பொருளாதாரத் துறையில், குறிப்பாக முதலாளித்துவ நாடுகளோடு சோவியத் யூனியன் கொண்டிருக்கும் உறவுகளில் தங்கம் முக்கியமான பாத்திரத்தை வகிக்கிறது என்பதை எல்லோருமே ஒத்துக்கொள்கிறார்கள். சோவியத் யூனியன் தங்கத்தை உற்பத்தி செளிணிகின்ற முக்கியமான நாடு என்பத னால் இத்தகைய பாத்திரம் ஏற்பட்டிருக்கிறது.



மிக முந்திய 1921ம் வருடத்திலேயே லெனின் தங்கத்தைப் பற்றிய கம்யூனிஸ்ட்களின் அµகுமுறையை தற்பொழுதும் சோஷலிசத்தின் முழு

வெற்றிக்குப் பிறகும் தங்கத்தின் முக்கியத்துவம் என்ற கட்டுரையில் மிகுந்த தெளிவோடு எழுதினார். புதிய பொருளாதாரக் கொள்கை அறிமுகம் செய்யப்பட்ட பொழுது அந்தக் கட்டுரை எழுதப்பட்டது. பல வருடங்களாக யுத்தத்தினால் பாதிக்கப்பட்டிருந்த நாட்டில் வழக்கமான பண்ட பண உறவுகளை மீண்டும் ஏற்படுத்துவம் முதலாளித்துவ மேற்கு நாடுகளோடு வர்த்தக உறவுகளை ஏற்படுத்துவதும் தங்கப் பிரச்சினை மிகவும் முக்கியமானதாக இருந்தது. “நாம் பெரும் நகரங்களில் சிலவற்றின் தெருக்களின் பொது கழிப்பிடங்களைக் கட்டுவதற்குத் தங்கத்தைப் பயன்படுத்துவோம் என்று நினைக்கிறேன். ‘சுதந்திரத்துக்காக நடைபெற்ற மாபெரும் யுத்தத்தில்’, 1914–18ம் வருடங்களில் நடைபெற்ற யுத்தத்தில் தங்கத்துக்காக பத்து மில்லியன் மக்கள் எப்படி கொல்லப்பட்டார்கள், முப்பது மில்லியன் மக்கள் எப்படி ஊனப்படுத்தப்பட்டார்கள் என்பதை இன்னும் மறந்துவிடாத தலைமுறைக்கு மிக ‘நியாயமான’ மிகவும் அறிவூட்டுகின்ற வகையில் தங்கத்தைப் பயன்படுத்துவது அதுவே.... அதற்கிடையில், ரு.சோ. கூ.சோ. குடியரசிலுள்ள தங்கத்தை நாம் காப்பாற்ற வேண்டும், அதை மிக அதிகமான விலைக்கு விற்று அதைக் கொண்டு மிகக் குறைவான விலைக்குப் பொருட்களை வாங்க வேண்டும்” என்று லெனின் எழுதினார்.

தங்கம் முதலாளித்துவக் காட்டுமிராண்டித் தனத்தின் சின்னமாகும். உலக முழுவதிலும் ஆபத்துக்களை ஏற்படுத்துகின்ற மூலதனத்துக்க அது மறுபெயர் என்று ஓரளவுக்குக் கூறலாம். ஆனால் முதலாளித்துவ நாடுகளில் அது மிகவும் அதிகமாக மதிக்கப்படுவதால் சோஷலிசப் பொருளாதார நிர்மாணத்தின் நலன்களுக்கு அதை நாம் உபயோகிக்க முடியும், உபயோகிக்க வேண்டும். உலகச் சந்தையில் தங்கத்தின் விலை வேகமாக ஏறிக்கொண்டிருக்கும்பொழுது, சில சமயங்களில் ஒரே நாளில் ஒரு அவுன்சுக்கு 40 அல்லது 50 டாலர்கள் அதிகரித்துக் கொண்டிருக்கும் இந்தநேரத்தில் லெனினுடைய செய்முறையான அறிவுரை குறிப்பிடத்தக்க அளவுக்குப் பொருத்தமானதே. 1980ல் சந்தையில் தங்கத்தின் மிகக் குறைவான விலைக்கும் மிக அதிகமான விலைக்கும் இடையே உஷீமீள வேறுபாடு ஒரு அவுன்சுக்கு 400 டாலர்கள் வரை இருந்தது. இத்தகைய நிலையில் தங்கத்தை விற்பனை செய்பவர் தன்னுடைய வர்த்தக அறிவையும் மதி நுட்பத்தையும் நிதானத்தையும் வெளிக்காட்டுவதற்குப் போதிய வாய்ப்புக்கள் ஏற்படுகின்றன.

அதிகத் தொலையிலுள்ள எதிர்காலத்தில் சமூக அமைப்பின் வடிவம் உலகரீதியாக மாற்றமடைகின்ற பொழுது தங்கத்தின் நிலை எப்படியிருக்கும்?

மனித குலத்தால் திரட்டப்பட்டிருக்கும் தங்கத்தை மிகச் சிறந்த வகையில் எப்படி உபயோகிப்பது, அதை எவ்வளவு உற்பத்தி செய்வது என்பதை எதிர்காலத் தலைமுறையினரே அநேகமாக முடிவு செய்து கொள்வார்கள். தங்கத்தின் பணவியல் செயல்கள் முற்றிலும் ஒழிக்கப்பட்டுவிடும் என்பதை ஒருவர் சந்தேகிக்கத் தேவையில்லை. உலோகத்தின் உபயோகம் அறிவுக்குப் பொருந்தியதாகவும் செயல்முறையோடும் அமைக்கப்படும். அதற்குள் தங்கத்திலிருந்து அந்தப் பிசாசு முத்திரை அகற்றப்பட்டுவிடும்; பேராசை, தவறான வழிகளில் அடைந்த செல்வம் மற்றும் மனிதனை மனிதன் சுரண்டுவதற்கு அது இனியும் சின்னமாக இருக்காது. முதலாவதாகவும் முதன்மையாகவும் அது தொழில் நுட்பவியலில் உபயோகிக்கப்படும் என்பது தெளிவு. ஆனால் அதன் அழகு மனிதனுடைய ஆரோக்கியமான அழகுணர்ச்சியைத் திருப்தி செய்யப் பயன்படும்.

# சிறிதளவு வரலாறு

ஆ னால் நாம் எதிர்காலத்தை விட்டு மறுபடியும் கடந்த காலத்தை நோக்கித் திரும்புவோம். இப்புத்தகத்ன் தலைப்பை உருவாக்கியது மாக்சிம் கோர்க்கி எழுதிய மஞ்சள் பிசாசு நகரம் என்ற பிரசுரமே. அவர் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்த நியூயார்க் நகரகத்தை பணத்தை அடிப்படையாகக் கொண்ட ஒரு நாகரிகத்தின் இராட்சசத்தனமான உற்பத்தி என்று சித்தரித்திருந்தார். அந்தக் காலத்தில் பணத்தின் சக்திவாய்ந்த வடிவமாக, சாராம்சத்தில் பணத்தின் மறு பெயராகத் தங்கம் இருந்தது என்ற உண்மையின் பிரதிபலிப்பான இந்த உருவகம் அருள் வெளிப்பாட்டின் வன்மையைக் கொண்டிருக்கிறது. சாதாரணமான அர்த்தத்திலும் விஞ்ஞான ஆராய்ச்சியிலும் பணம்தான் மூலதனத்தின் ஆரம்ப வடிவம்.

தங்கத்தின் வரலாற்றைத் தெரிந்து கொள்ள பலஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னால்போக வேண்டும். பண்டைக் காலத்திலேயே தங்கம் பணமாக, ஒன்றுகுவிக்கப்பட்ட பொருளாதார சக்தியாகக, விரும்பப் படும் பொருளாக, பேராசையின் வடிவமாகத் தோற்றமளிக் கிறது. ரோமானியக் கவிஞரான விர்கிகல் auri sacra fames ("சாபக்கேடான தங்க வேட்டை") என்ற சொற்றொடரை முதன் முதலாகப் பயன்படுத்தினார். ஆனால் இந்தச் சூத்திரத்தை முழுமை யாக்க முதலாளித்துவத்தினால்தான் முடிந்தது. ஏன்? முதலாளித்துவ சமூகத்தில் தங்கம் பணமாக மட்டும் இருக்கவில்லை. மூலதனமாகவும், அதாவது பணத்தைப் பெருக்குவதற்காக செலாவணியில் ஈடுபடுத்தப்படுகின்ற பணமாகவும் இருக்கிறது. "வாழ்க்கை என்பது பணத்தால் இயக்கப்படும் இயந்திரம் என்பதைத் தவிர வேறொன்றுமில்லை.... தங்கமே இன்றைய சமூகங்கள் அனைத்துக்கும் ஆன்மிக சாராம்சம்" என்று பல்ஸாக்கின் வட்டிக் கடைக்காரரான கோப்ஸெக் தத்துவம் பேசுகிறார்.

ஒரு உலோகம் என்ற முறையிலும் இயற்கையாகக் கிடைக்கின்ற பயனுள்ள மூலப்பொருள் என்ற வகையிலும் தங்கத்தைப் பற்றி மனிதனுக்குச் சுமார் ஆறாயிரம் வருடங்களாகத் தெரியும். சுமார் 4,000- 4,500 வருடங்களுக்கு முன்னர் பண்டைக் கால உலகத்தில் அதிகமாக வளர்ச்சியடைந்த பகுதிகளில் அது சில பணவியல் கூறுகளைப் பெற்றது. சுமார் 2.500-2.600 வருடங்களுக்கு முன்பு முதல் தங்க நாணயங்கள் வெளியிடப்பட்டன.

பணம் என்ற முறையில் அதன் வாழ்க்கையின் தொடக்கத்தை இது குறிக்கிறது.

தங்கத்தின் மீதுள்ள ஆசை காரணமாக பயங்கரமான குற்றங்கள் செய்யப்பட்டிருந்தன. "உலோகத்துக்காக மக்கள் மடிகிறார்கள்..." என்ற சொற்றொடர் தங்கத்தின் வரலாற்றைத் துல்லியமாக வர்ணிக்கிறது. தங்கத்தின் சக்தி மக்களை ஈவிரக்கமற்றவர்களாக, தார்மிக ரீதியில் கெட்டவர்களாக மாற்றுகிறது. இதற்குப் பொறுப்பைத் தங்கத்தின் மீது சுமத்தக்கூடாது. ஏனென்றால் அது சில குணாம்சங்களைக் கொண்ட வெறும் ரசாயன மூலகமே; அதைச் செல்வத்தின் சொரூபமாக, அநேகமாக மதத்தைப் போன்று வழிபாட்டுக்குரிய பொருளாகச் செய்திருக்கும் சமூக அமைப்பே அதற்குப் பொறுப்பாகும்.

பல நூற்றாண்டுகளாக தங்கத்தோடு பணம் என்ற பாத்திரத்துக்கு வெள்ளி போட்டியிட்டது. 19-ம் நூற்றாண்டு வந்த பிறகுதான் பண உலோகமாகத் தங்கம் ஆட்சி செலுத்தத் தொடங்கியது. தங்க ஆதார அளவு என்ற பணவியல் முறை முக்கிய முதலாளித்துவ நாடுகளில் பின்பற்றப்பட்டது. அரசு தங்க நாணயங்களை (இங்கிலாந்தில் சவரன்களை, பிரான்சில் நெப்போலியன்களை, ரஷ்ராயவில் இம்பீரியல்களை) அச்சிட்டு வெளியிட்டது. இந்த நாணயங்களுக்குப் பணத்தின் மற்ற வடிவங்கள் எல்லாமே பரிவர்த்தனை செய்யப்பட்டன. தங்கம் பணவியல் முறையின் ஆதாரமாக, அச்சாக மாறியது. இத்தகைய பொருளாதாரத்தில் காகிதப் பண வீக்கம் ஏற்பட முடியாது. பண்டங்களின் விலைகள் உயர்ந்தபொழுது, தங்கத்தோடு ஒப்பு நோக்கில் இந்தப் பண்டங்களின் விலைகள் ஏதோ சில காரணங்களினால் அதிகரித்திருக்கின்றன என்பதே அதன் பொருளாகும்.

முதலாவதாகவும் முதன்மையாகவும், தங்க ஆதார அளவு கிரேட்பிரிட்டனில் பின்பற்றப்பட்டது; பிறகு நூற்றாண்டு காலத்துக்குள் மற்ற நாடுகளுக்கு அது படிப்படியாகப் பரவியது. அதனால்தான் கார்ல் மார்க்ஸ் 19ம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலும் பிற்பாதியிலுமிருந்த முதலாளித்துவத்தைப் பற்றித் தன்னுடைய ஆராய்ச்சியில் குறிப்பாக, தங்கத்தையே பணத்தின் ஒரே வடிவமாகக் கருத முடியும் என்ற உண்மையை அடிப்படையாகக் கொண்டார். அவர் மூலதனத்தில் பின்வருமாறு எழுதுகிறார்: "இந்தப் புத்தகம் முழுவதிலுமே, எளிமையை முன்னிட்டு, தங்கத்தைப் பணம் பண்டமாக நான் வைத்துக்கொண்டிருக்கிறேன்."

முதலாளித்துவத்தின் வளர்ச்சியில், அதன் பொருளாதாரப் பொறியமைவு மற்றும் சமூக உறவுகளின் உருவாக்கத்தில் தங்கம் முக்கியமான பாத்திரத்தை வகித்தது. முதலாளித்துவ நாகரிகம் அனைத்திலும் அது ஒரு முக்கியமான கூறாக இருக்கிறது.

15, 16–ம் நூற்றாண்டுகளின் பூகோள ரீதியான மாபெரும் கண்டுபிடிப்புகளுக்குப் பிறகு மேற்கு ஐரோப்பாவுக்குள் கொண்டுவரப்பட்ட தங்கம் (மற்றும் வெள்ளி) ஆரம்ப மூலதனத் திரட்டலுக்கு முக்கியமான தோற்றுவாயாக இருந்தது. அது மூடப்பட்டிருந்த நிலப்பிரபுத்துவப் பொருளாதாரத்தை அழித்து வர்த்தகம், கைத்தொழில்களின் வளர்ச்சியைச் சுறுசுறுப்பாக்கியது.

19ம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் கலிபோர்னியாவிலும் ஆஸ்திரேலியாவிலும் தங்கம் கண்டுபிடிக்கப்பட்டது மேற்கு ஐரோப்பாவிலும் வட அமெரிக்காவிலும் வேகமான பொருளாதார வளர்ச்சியைத் தூண்டியது. நாடுகளும் பிரதேசங்களும் பொருளாதார ரீதியில் நெருங்கி வருவதற்கும் உலகச் சந்தை உருவாவதற்கும் தங்கம் ஊக்கமளித்தது. தங்க வரவு தங்க ஆதார அளவை ஏற்படுத்துவதற்கும் கடன் வசதி முறையின் வளர்ச்சிக்கும் அடிப்படையாக இருந்தது.

19ம் நூற்றாண்டின் கடைசியில் தென் ஆப்பிரிக்காவில் தங்கம் கண்டுபிடிக்கப்பட்டது. அதன் மூலம் தங்கத்தின் நீண்ட வரலாற்றில் நவீனகாலக் கட்டம் தொடங்கியது என்று இதைப்பற்றிக் கூறமுடியும். இன்று முதலாளித்துவ உலகத்தில் உற்பத்தி செய்யப்படும் தங்கத்தில் சுமார் முக்கால் பகுதி தென் ஆப்பிரிக்கக் குடியரசில் உற்பத்தி செய்யப்படுகிறது. சமீபத்திய வருடங்களில் எல்லா முதலாளித்துவ நாடுகளும் சேர்ந்து வருடத்துக்கு 950–1000 டன் தங்கத்தை உற்பத்தி செய்கின்றன. அதிகமான டன்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. இந்த எண்கள் அதிகமாக மாற்றமடைவது கிடையாது. தங்கத்தின் விலை பிரமிக்கத்தக்க அளவுக்கு உயர்ந்துவிட்டபோதிலும் அதன் உற்பத்தி அதிகரிக்க வில்லை. இத்தகைய அசாதாரணமான பொருளாதாரப் போக்கு தங்கத்தை எண்ணெய்யோடு இணைக்கிறது. சமீபத்திய வருடங்களில் எண்ணெய் உற்பத்தி குறைந்து வரும் போக்கை நாம் அறிவோம்.

தங்க உற்பத்தி தென் ஆப்பிரிக்கக் குடியரசில் மிகப்பெரிய அளவுக்குக் குவிக்கப்பட்டிருப்பது வரப் போகின்ற வருடங்களிலும் பத்தாண்டுகளிலும் அதன் எதிர்காலத்துக்கு மிகவும் முக்கியமானதாகும். ஆப்பிரிக்காவின்

கொந்தளிப்பான தெற்குப் பகுதியில் ஸ்திரமில்லாத நிலைமை இருக்கிறது. ஜிம்பாப்வே மக்கள் அடைந்திருக்கும் வெற்றியும் தென் ஆப்பிரிக்கக் குடியரசில் தேசிய விடுதலை இயக்கத்தின் வளர்ச்சியும் இனவெறி அரசு மற்றும் அந்த நாட்டில் சர்வதேச ஏகபோக மூலதனத்தின் நிலையை மென்மேலும் பலவீனப்படுத்தி வருகின்றன. மறுபக்கத்தில் தென் ஆப்பிரிக்கக் குடியரசின் எதிர்காலமே தங்கச் சுரங்கத் தொழிலோடு, பல்லாயிரக்கணக்கான ஆப்பிரிக்க சுரங்கத் தொழிலாளர் களின் உழைப்பு மற்றும் போராட்டத்தோடு பெரும் அளவுக்கு இணைக்கப்பட்டிருக்கிறது.

தங்கம் வெட்டியெடுக்கப்படுகின்ற பிராந்தியங்களின் பொருளாதார வளர்ச்சியின் மீது அது நேரடியான, பலமான தாக்கத்தை ஒரு காலத்தில் ஏற்படுத்தியதுண்டு, சான்பிரான்சிஸ்கோ, சிட்னி, ஜோஹானஸ்பர்க் ஆகிய நகரங்கள் "தங்கத்தின் மீது" வளர்ச்சியடைந்தன.

தங்கத்தின் வகை பலவிதமாக வேறுபட்டிருந்ததும் உண்டு. முதல் உலக யுத்தத்துக்கு முன்பு கணிசமான தங்கம் நாணயங்களாக அச்சிடப்பட்டுப் பிறகு செலாவணிக்குள் புகுத்தப்பட்டது. சுமார் அதேஅளவு தங்கம் மத்திய வங்கிகளின் பாதுகாப்பு அறை களிலும் கருவூலங்களிலும் வைக்கப்பட்டு கடன் வசதிகளுக்கும் காகிதப்பணத்துக்கும் ஆதரவளிக்கப் பயன்படுத்தப்பட்டது. இரண்டு வகைகளிலுமே தங்கம் பணத்தின் வடிவத்தைப் பெற்றது; இருப்புக்களிலிருந்து செலாவணிக்குள்ளும், செலாவணியிலிருந்து இருப்புக்களுக்குள்ளும் தங்கம் தொடர்ச்சியாக மாற்றப்பட்டுக்கொண்டிருந்தது. இது தங்க ஆதார அளவின் கால கட்டமாகும்.

முதல் உலக யுத்தத்துக்குப் பிறகு பெரும்பான்மையான முதலாளித்துவ நாடுகள் தங்க நாணங்கள் அச்சிடுவதை நிறுத்திக்கொண்டன. காகிதப் பணத்துக்குத் தங்கத்தைப் பரிவர்த்தனை செய்வதைக் குறைத்துக் கொண்டன. 1929-1933ம் வருடங்களில் ஏற்பட்ட உலகப் பொருளாதார நெருக்கடிக் காலகட்டத்தில் இந்தப் பரிவர்த்தனையின் எல்லா வடிவங்களும் கடைசியாக ஒழிக்கப்பட்டன. முதலாளித்துவ நாடுகளின் தேசியப் பொருளாதாரங்களில் தங்கம் பணமாகப் பயன்படுத்தப்பட்டது முடிந்துவிட்டது. தங்கம் அரசின் இருப்புக்களிலும் மத்திய வங்கிகளிலும் மென்மேலும் அதிகமாகக் குவிக்கப்பட்டு சர்வதேசக் கடன்களைத் தீர்ப்பதற்கு மட்டுமே பயன்படுத்தப்பட்டது. சுரங்கத்திலிருந்து வெட்டியெடுக்கப் படும் புதுத் தங்கத்துக்கு ஒரே ஒரு பாதாளத்துக்குச் சென்றது", அதாவது சுரங்கத்தில் வெட்டியெடுக்கப்பட்டு வங்கிகள் மற்றும்

அரசின் கருவூலங்களின் இரும்புப் பெட்டகங் களுக்குக் கொண்டு போகப்பட்டது.

1930க்களில் சுரங்கங்களிலிருந்து வெட்டியெடுக்கப்படும் தங்கம் மட்டுமல்லாமல் தனிப்பட்டவர்களின் தங்க உடைமைகளின் கணிசமான பகுதியும்கூட அரசின் இருப்புக்களாக வைக்கப்பட்டன. 1945ல் (இரண்டாம் உலக யுத்தத்தின் முடிவின்போது) முதலாளித்துவ உலகத்தின் தங்க இருப்புக்களில் மூன்றில் இரண்டு பகுதிகள் (சுமார் 30,000 டன்கள்) மத்திய இருப்புக்களில் குவித்து வைக்கப்பட்டிருந்தன. இதில் மூன்றில் இரண்டு பங்குக்குச் சற்றுக் குறைவான அளவு (சுமார் 18,000 டன்கள்) அமெரிக்க அரசாங்கத்திடம் இருந்தது. யுத்தம் முடிவடைந்த முதல் வருடங்களின் போதும் அமெரிக்காவில் தங்கக் குவிப்பு தொடர்ந்தது. 1949ம் வருடக் கடைசியில் அமெரிக்காவிடம் 70 சதவிகிதம் (சுமார் 22,000 டன்கள்) தங்கம் இருந்தது.

யுத்தத்துக்குப் பிந்திய பணவியல் அமைப்பில், மற்ற அரசுகள் தங்களுடைய டாலர் இருப்புக்களை (வெளிநாட்டு நாணயத் திரட்டல்கள்) நிர்ணயிக்கப்பட்ட விகிதத்தில் தங்கத்துக்குப் பரிவர்த்தனை செளிணிது கொள்ளலாம் என்று அமெரிக்க அரசாங்கம் உத்திரவாதம் கொடுத்த அளவுக்கு அமெரிக்க டாலர் தங்கத்தின் மறுவடிவமாகக் கருதப்பட்டது. “டாலர் தங்கத்தைப் போலவே நம்பிக்கையானது” என்று அமெரிக்காவில் பொதுமக்கள் 1970-கள் வரைகூட சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

இன்று இதைக் கேட்க வேடிக்கையாக இருக்கிறது. 1968ல் சுதந்திரமான சந்தையில் தங்கத்தின் டாலர் விலைக்கு முட்டுக்கொடுப்பதை நிறுத்த வேண்டிய நிலை அமெரிக்காவுக்கு ஏற்பட்டது. 1971-ல் வெளி நாடுகளில் குவிந்திருக்கும் டாலர்களுக்குத் தங்கத்தைப் பரிவர்த்தனை செய்வதை அமெரிக்கா நிறுத்திக் கொண்டது. முதலாளித்துவத்தின் சர்வதேசப் பணவியல் அமைப்பு தங்கத்தோடு கொண்டிருந்த கடைசி இணைப்பும் உடைக்கப்பட்டது.

தங்கத்தோடு இணைக்கப்பட்ட பணவியல் அமைப்பு செயல்படுவது நவீன முதலாளித்துவத்துக்கு யதார்த்த ரீதியில் இயலாதாகிவிட்டது. அதே சமயத்தில் தங்கத்கதை அகற்றுகின்ற ஸ்தூலமான வடிவங்களும் காலகட்டங்களும் தலைமையான முதலாளித்துவ நாடுகள் பின்பற்றும் கொள்கையினால்தான் பெருமளவுக்கு நிர்ணயிக்கப்படுகின்றன. 1970-க்களில் அமெரிக்க ஐக்கியநாடு தங்கத்தைப் பணமற்றதாகச் செளிணியும்

கொள்கையை, அதாவது நாணயங்களின் மதிப்பை அளவிடுகின்ற அளவுகோலாகவும் சர்வதேசத் தீர்வுகளுக்குக் கடைசிச் சாதனமாகவும் பணவியல் அமைப்பிலிருந்து தங்கத்தை அகற்றுகின்ற கொள்கை யைக் கடைப்பிடித்தது.

1976–ல் சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் உறுப்பினர்கள் ஒரு உடன்பாட்டை முடிவு செய்தனர். நாணயத்தின் சம மதிப்புக்களைத் தங்கத்தில் எடுத்துக் கூறுவதை ஒழிப்பதும் இந்தச் சமமதிப்புக்களின் அடிப்படையில் நடவடிக்கைகளைச் செய்வதை நிறுத்துவதும் இந்த ஸ்தாபனத்தின் தங்க இருப்புக்களில் கணிசமான பகுதியை விற்பனை செய்வதும் இதன் முக்கியமான அம்சங்களாகும். எனினும் பணவியல் அமைப்பிலிருந்து தங்கத்தை உண்மையிலேயே அகற்றுவதற்கு இன்னும் வெகுதூரம் போகவேண்டும். முதலாளித்துவ நாடுகள் தங்களுடைய தங்க இருப்புக்களை சர்வதேச வழங்கீட்டுக்கு மிகவும் நம்பிக்கையான சாதனம் என்ற முறையில் வைத்துக்கொண்டிருக்கின்றன.

சில சமயங்களில் சந்தை விலைகளுக்குத் தங்கத்தை விற்பனை செய்து அல்லது அடகு வைத்து அவற்றைச் செலாவணியில் ஈடுபடுத்துக்கின்றன. சில நாடுகள், குறிப்பாக எண்ணெய் உற்பத்தி செய்யும் நாடுகள் சந்தையில் தங்கத்தை வாங்குவதன் மூலம் தங்களுடைய இருப்புக்களை அதிகப்படுத்துகின்றன. இப்படி மத்திய வங்கிகளுக்கும் பல்வேறு நாடுகளின் அரசாங்கங்களுக்குமிடையே ஒரு வகையில் தங்கப் போக்குவரத்து இருக்கிறது. ஐரோப்பியப் பொதுச் சந்தை நாடுகள் 1979ல் ஐரோப்பியப் பணவியல் அமைப்பை ஏற்படுத்திய பொழுது அதில் தங்கத்துக்கு ஒரு இடம் ஒதுக்கப்பட்டது குறிப்பிடத்தக்க சமிஞ்ஞையாகும்.

தங்கத்தின் வில அடிக்கடி அதிகரித்ததன் காரணமாக தங்க இருப்புக்களின் உண்மையான மதிப்பும் அதிகரித்திருக்கிறது. வழங்கீடுகளின் சமநிலையின் பற்றாக்குறைகளைத் தீர்ப்பதற்கு அவற்றின் சக்தியும் அதிகரித்திருக்கிறது. தங்கம் ஒரு முக்கியமான பணச் செயலை நிறைவேற்றுகிறது என்பதே இதன் உண்மை யான அர்த்தம்.

முதலாளித்துவ உலகத்தில் வளர்ச்சியடைந்து கொண்டிருக்கும் பணவீக்கம், பொருளாதாரத்திலும் அரசியலிலும் ஸ்திரமற்ற நிலைமை மற்றும் சர்வதேச நெருக்கடிகளின் விளைவாகப் பண மூல தனத்தை முதலீடு செய்வதற்குரிய சாதனம் என்ற வகையில் தங்கத்துக்கு மிகவும் அதிகமான தேவை ஏற்பட்டிருக்கிறது. மேலே கூறப்பட்ட நிகழ்வுகள் முடிவடையக்

கூடுமென்று தோன்றவில்லை. எனவே நீண்டகால நோக்கில் சந்தைகளில் தங்கத்தின் விலை அதிகரிக்க மென்று பெரும்பாலான நிபுணர்கள் உறுதியுடன் கூறுகிறார்கள்.

தங்கத்தின் செயல்களும் அதன் பொருளாதாரப் பாத்திரத் தின் பல்வேறு அம்சங்களும் எவ்வளவு மாறிய போதிலும் முதலாளித்துவ உலகத்தில் அதன் பொருளாதாரப் பாத்திரம் முக்கியமானதாக இருக்கிறது.

# அறிஞர்கள் மற்றும் எழுத்தாளர்களின் பார்வையில்

**த**ங்கத்தைப் பற்றி ஏராளமாக எழுதப்பட்டிருக்கிறது, தங்கத்தின் ரசாயனம், பௌதிகம், நிலவியல், வெட்டி யெடுக்கும் முறைகள் மற்றும் அதன் உபயோகம் ஆகியவற்றைப் பற்றி எண்ணற்ற புத்தகங்கள் வெளிவந்திருக்கின்றன. அதன் சமூக–பொருளாதார, பணவியல் அம்சங்களைப் பற்றி இன்னும் அதிகமான புத்தகங்கள்கூட எழுதப்பட்டிருக்கிலாம். 1840க்களில் நாடாளுமன்ற விவாதத்தில் பேசும் பொழுது கிளாட்ஸ்டன் பணம் ஏராளமானவர்களைப் பைத்தியக்காகரர்களாக்கிய மாதிரி காதல்கூட ஆக்கவில்லை என்று கூறியதை மார்க்ஸ் குறிப்பிட்டிருக்கிறார், அந்தக் காலத்தில் பணம் என்பது தங்கமே.

இதற்குப் பிறகு பணத்தைப் பற்றி எழுதிய கல்வித்துறைப் புத்தகங்களில் தங்கத்தைப் பற்றிக் குறைவாகவே கவனம் செலுத்தப்பட்டது; பல சமயங்களில் அது முற்றிலும் புறக்கணிக்கப் பட்டது. பொருளியலாளர்கள் அதைப் பற்றிய அக்கறையை இழந்து விட்டார்கள் என்பது இதற்கு அர்த்தமல்ல; பொருளாதாரத் தத்துவத்தின் அமைப்பில் சில மாற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன என்பதே இதன் அர்த்தம். மறுபக்கத்தில் சமூக–பொருளாதார

இலக்கியத்தில் தங்கத்தைப் பற்றி எழுதப்பட்டிருக் கும் புத்தகங்களின் எண்ணிக்கை வேகமாக அதிகரித்துக்கொண்டிருப்பதால் அவற்றைக் கணக் கிடுவது சுலபமான காரியமல்ல. இத்தலைப்பின் பல்தொகுதி அமைப்பும் பல்வகை வேறுபாடும் தங்கப் பிரச்சினையின் வெவ்வேறான–பொருளாதார, சமூக, உளவியல் மற்றும் இதரஅம் சங்களை ஆராயுமாறு ஆசிரியர்களைத் தூண்டுகின்றன. சோவியத் மற்றும் வெளிநாடுகளைச் சேர்ந்த ஆசிரியர்களால் எழுதப்பட்ட இப்புத்தகங்களில் பல இந்நூலை எழுதுவதற்குத் துணை செய்திருக்கின்றன. இப்புத்தங்கள் மற்றும் கட்டுரைகளின் தலைப்புகளைக் குறிப்புகளில் வாசகர் பார்க்கலாம்.

எல்லா மக்களினங்களுடைய நாட்டுக்கதைகளிலும் எல்லாக் காலங்களையும் சேர்ந்த புனைகதைகளிலும் மக்களின் வாழ்க்கையில் தங்கத்தின்

பாத்திரத்தைப் பற்றி ஏராளமான காட்சிப் பதிவுகளும் சிந்தனைகளும் அழியாத இடத்தைப் பெற்றிருக்கின்றன. அவற்றில் தங்கம் போற்றப்படுவதையும் சபிக்கப்படுவதையும் பார்க்கிறோம்; தங்கத்தின் சக்தியைப் பற்றி பக்தியை யும் பயத்தையும் இந்தச் சக்தி இல்லாத உலகத்தைப் பற்றிய கனவுகளையும் பார்க்கிறோம். ஹோமரும் ஸொபோக்ளிசும், சோஸரும் ஷேக்ஸ்பியரும், பூஷ்கினும் கோர்க்கியும்.... கலிபோர்னியாவில் ஏற்பட்ட தங்க வேட்டை மாபெரும் எழுத்தாளரான பிரெட் ஹார்ட்டையும் அலாஸ்காவின் தங்க வேட்டை ஜேக் லண்டனையும் நமக்குக் கொடுத்தது.

ரஷ்யாவில் தங்க முதலாளிகள் மற்றும் தங்க வேட்டையில் ஈடுபட்டிருப்பவர்களைப் பற்றி மாமின்–சிபிரியாக்கும் ஷிஷ்கோவும் சுவையான முறையில் எழுதியிருக்கிறார்கள். மிஹயில் ஸோஷ்சென்கோ கறுப்பு இளவரசன் என்ற கதையில் கருங்கடலில் தங்கத்தோடு மூழ்கிய ஆங்கிலக் கப்பலைத் தேடுவதைப் பற்றி எழுதியிருக்கிறார். ஆங்கில எழுத்தாளரான ஆலன் ஸில்லிட்டோ ஒரு வாழ்க்கை தொடங்குகிறது என்ற நாவலில் தங்க வியாபாரத்தையும் கடத்தல்காரர்களையும் அவர்களுடைய தலைவர்களையும் பற்றி வர்ணித்திருக்கிறார், இப்படிப் பலர் எழுதியிருக்கிறார்கள்.

ஆங்கிலக் கவிதைகளிலிருந்து எடுக்கப்பட்ட ஒரு உதாரணத்தைக் கீழே தருகிறோம். திறமை மிக்க அங்கத் கவிஞரான தாமஸ் ஹூட் [1798–1845] பின்வரும் வரிகளில் தங்கத்தைப் ''பாராட்டுகிறார்''.

**பளபளப்பும் மஞ்சளும் உறுதியும் குளுர்ச்சியும்!**

**உருக்கியோ செதுக்கியோ அடித்தோ வளைத்தோ**

**எல்லா வகையிலும் கிடைக்கும் தங்கம்!**

**கைக்குள் அடங்கும்; வாங்குவதோ கடினம்.**

**விற்றல் வாங்கல் பதுக்கல் பண்டமாற்று**

**இளைஞர்கள் அலட்சியப்படுத்த வயோதிகர் கட்டிப்பிடிக்க**

**சவக்குழிவரை தொடரும் எண்ணற்ற குற்றங்களுக்கு**

**இதுவே காரணம், தங்கம்! தங்கம்!**

**நன்மையோ தீமையோ ஆயிரமடங்கு பெருக்கும்.**

**காப்பதும் கெடுப்பதும் அருள்வதும் அழிப்பதும்**

**தங்கத்தின் குணமென்று அரசியோ மதுப்புட்டியோ**

**அச்சிடப்பட்டிருக்கும் முத்திரைக்காசு கூறும் .**

சில எழுத்தாளர்கள் தங்களுடைய கற்பனைக் கதைகளில் "தங்கப் பிரச்சினைகளைப்" பற்றி எழுதும்பொழுது முக்கியமான சமூக–பொருளாதாரப் பிரச்சினைகளைத் தெரிந்தோ, தெரியாமலோ எழுப்பு கிறார்கள். 1920–க்களில் சோவியத் எழுத்தாளர் அலெக்ஸி தோல்ஸ்தோய்காரின் அழிவுக்கதிர் என்ற தலைப்புடைய நாவலை எழுதினார். அதில் வருகின்ற முக்கிய பாத்திரமான பியோத்தர்காரின் என்ற வருகின்ற வீரசாகஸக்காரர் பூமியின் மடியிலிருந்து அதிகமான தங்கத்தை எடுப்பதற்கு ஒரு புது வழியைக் கண்டு பிடிக்கிறார். அதற்கு அவர் உபயோகப்படுத்துகின்ற கருவி நவீன லேஸர் ஒளிக்கற்றையைப் போன்றதாகும். இப்படி எடுக்கப்படுகின்ற தங்கத்தின் உற்பத்தி விலை ஒரு கிலோவுக்கு 2.5 டாலர்கள்தான். ஆனால் தங்கத்தின் அதிகார பூர்வமான விலை ஒரு கிலோவுக்குச் சுமார் 665 டாலர்களாகும். இது அந்தச் சமயத்தில் அமெரிக்காவில் பின்பற்றப்பட்ட பணவியல் அடிப்படை அலகுக்குப் பொருத்தமாக இருந்தது. இந்தத் தங்கத்தை உற்பத்தி விலைக்கு அமெரிக்கச் சந்தையில் விற்பனை செய்வதன் மூலம் அவர் அந்த நாட்டின் பொருளாதார அமைப்புக்கு ஆபத்தேற்படுத்துகிறார். பழம் நழுவிப் பாலில் விழுவதைப் போல தலைமையான அதிகாரம் சுலபமாக அவர் கைக்கு வந்துவிடுகிறது.

அமெரிக்க அரசாங்கம் காரினுடைய நடவடிக்கைகளைப் பற்றி பின்வரும் அறிக்கையைப் பொதுமக்களுக்கு வெளியிட்டது. "தங்கத் தீவிலிருக்கும் சுரங்கத்தை இயன்ற அளவுக்கு சீக்கிரமாக மூடிவிட வேண்டும்; தங்கம் முடிவில்லாமல் கிடைப்பதற்கான வாய்ப்பையே ஒழித்துவிட வேண்டும். மக்கள் களிமண்ணைப் போல தங்கத்தை வெட்டி எடுக்க முடியுமானால் உழைப்பு, மகிழ்ச்சி, வாழ்க்கையின் சமமதிப்பு என்னவாகும்? மனிதகுலம் பூர்விக காலத்துக்கு, பண்டமாற்று வியாபாரத்துக்கு, காட்டுமிராண்டித்தனத்துக்கும் குழப்பத் துக்கும் திரும்புவது நிச்சயம். மொத்த பொருளாதார அமைப்புமே சீர்குலைந்துவிடும். தொழில்துறையும் வர்த்தகமும் அழிந்துவிடும்." இதே பாணியில் இன்னும் எழுதப்படுகிறது.

ஒரு பொருளாதார நிபுணருக்கு முக்கியமான கேள்வி இதுவே: தோல்ஸ்தோயின் புனைகதையை நவீன கால் உலகத்துக்கு மாற்றினோ மென்றால் தங்கத்தின் விலை செம்பு அல்லது அலுமினியத்தின் விலைக்குத் திடீரென்று இறங்கிவிட்டால் அதன் மூலம் முதலாளித்துவப் பொருளாதாரத்தில் எத்தகைய விளைவுகள் ஏற்படும்? இப்புத்தகத்தின் கடைசியில் இக்கேள்விக்குப் பதிலைக் கண்டுபிடிக்க நாம் முயற்சிப்போம்.

சமீபத்திய வருடங்களில் முதலாளித்துவப் பொருளாதார அமைப்பில் தங்கம் வகிக்கும் இடம், தங்கத்தின் பாத்திரம் ஆகியவை பற்றி ஆழமான மாற்றகள் ஏற்பட்டிருக்கின்றன. தங்கத்தின் நீண்ட வரலாற்றில் ஒரு திருப்புமுனை ஏற்பட்டிருக்கிறதென்றுகூடச் சொல்லலாம். அதன் வரலாற்றில் இந்தக் கட்டம் எப்படி ஏற்பட்டது, இன்று அதன் பொருளாதாரப் பாத்திரம் என்ன, எதிர்காலத்தில் என்ன ஏற்படும் என்பதை இந்தப் புத்தகம் விளக்குகிறது.

இப்புத்தகம் பொருளாதாரம், வரலாறு மற்றும் அரசியலில் ஆர்வம் கொண்டுள்ள பொது வாசகருக்காக எழுதப்பட்டது. இந்தப் பதிப்பு இதற்கு முன்பு வெளியிடப்பட்ட ரஷ்யப் புத்தகத்தை ஆதாரமாகக் கொண்டிருக்கிறது. எனினும் இது கணிசமான அளவுக்குத் திருத்தி எழுதப்பட்டிருப்பதோடு புதிய விவரங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இந்தப் பணியில் ஆசிரியர் மூன்று நோக்கங்களைப் பின்பற்றியிருக்கிறார். முதலாவதாக, முதலாளித்துவ அமைப்பில் தங்கத்தின் நிலையில் அதிகமான புதிய அம்சங்களை ஏற்படுத்தியுள்ள 1978–82ம் வருடங்களைப் பற்றிய தகவல்களைச் சேர்க்க வேண்டும். இரண்டாவதாக, விளக்க முறையை அபிவிருத்தி செய்து இடைவெளிகளை நிரப்ப வேண்டும்; மூன்றாவதாக, வெளிநாட்டு வாசகரை ஓரளவுக்குக் கணக்கிலெடுத்துக்கொள்ள வேண்டும். இப்புத்தகத்தில் இப்பிரச்சினையைப் பற்றி தனிமுறையான ஆராய்ச்சி செய்திருப்பதாக ஆசிரியர் உரிமை கொண்டாடவில்லை.

அவருடைய நோக்கம் வேறு வகையானது; சோவியத் பொருளியலாளர்களால் வளர்த்துக் கூறப்பட்டுள்ள கருத்துக்களையும் சிந்தனைகளையும் வரலாற்று மற்றும் புள்ளி விவரங்களின் உதவியோடு பொதுமக்களுக்குப் புரிகின்ற, இயன்ற அளவுக்குச் சுவாரசியமான வடிவத்தில் எடுத்துக் கூறுவதே அந்த நோக்கம். கடந்த பத்து அல்லது பதினைந்து வருடங்களில் சர்வதேசப் பணவியல் பிரச்சினைகளைப் பற்றி பல முக்கியமான புத்தகங்கள் சோவியத்யூனியனில் வெளியிடப்பட்டிருக்கின்றன. தங்கப் பிரச்சினையைப் பற்றியும் அவற்றில்

விசேஷமாக ஆராய்ச்சி செய்யப் பட்டிருக்கிறது என்று கூறலாம். அவற்றில் சில அந்நிய மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கின்றன.

இப்புத்தகத்தில் தவறுகள் அல்லது குறைகள் காணப்பட்டால் அவற்றுக்கு ஆசிரியரைத் தவிர வேறு யாரும் பொறுப்பு அல்ல.

# தங்கம் எப்படிப் பணமாயிற்று?

**ஆ**கவே நாம் பணம் என்ற முறையில் தங்கத்தைப் பற்றி அக்கறை கொண்டிருக்கிறோம. தங்கத்தை "அதிகமாக முரண்பாட்டைக் கொண்ட உலோகமாக", அசாதாரணமான மற்றும் சிக்கலான சமூகச் செயல்களைக் கொண்டிருக்கும் உலோகமாகச் செய்வது இதுவே. தங்கம் பணமானது ஏன், எப்படி என்பதை விளக்கிக் கூறுவதற்கு நாம் பழங்காலத்துக்குப் பின்னோக்கிப் போகவேண்டும். பூர்விகமான சமூக அமைப்பை இன்னும் நீடித்துக்கொண்டு நவீன காலத்தில் உயிரோடிருக்கும் சில மக்கட் குழுக்களின் வாழ்க்கை பழங்கால வாழ்க்கையின் மாதிரிப்படிவத்தைக் கொண்டிருப்பதைப் பல உதாரணங்களில் காண முடியும்.

**பணத்தின் தோற்றம்**

பூர்விகக் குழுக்களின் மக்கள் கனிகளைச் சேகரித்தல் அல்லது காட்டு விலங்குகளை வேட்டையாடுவதன் மூலம் உயிர் வாழ்ந்தார்கள். இந்த நடவடிக்கைகளின் மூலம் அவர்களுக்குக் கிடைத்த பொருள்கள் அந்தக் குழுவின் உறுப்பினர்களுக்கிடையே பகிர்ந்து கொள்ளப்பட்டன. இந்தப் பூர்விக "உற்பத்தியின்" விளைவுகள் பண்ட மாற்றுச் செளிணியப்பட்டவில்லை. இந்தக் குழுக்களுக்கு இடையிலும் பண்ட மாற்றுக்கு அவசியமில்லை. ஆகவே பணத்துக்கும் அவசியம் ஏற்படவில்லை.

ஆனால் மனிதன் விலங்குகளைப் பழக்குவதற்கும் நிலத்தை உழுவதற்கும் ஆரம்பித்தான். சேகரித்ததலும் வேட்டையாடுதலும் கால்நடை வளர்ப்புக்கும் விவசாயத்துக்கும் இடமளித்தன. படிப்படியாக சில பூர்விகக் குழுக்கள் கால்நடை வளர்ப்பிலும் வேறு சில குழுக்கள் விவசாயத்திலும் அதிகமாக ஈடுபடத் தொடங்கின. இந்த நிலைமையில் பண்டமாற்று மனித வாழ்க்கையிலும் உற்பத்தி மற்றும் சமூகத்தின் வளர்ச்சியிலும் அவசியமான கூறாக மாறியது. மனித உழைப்பின் தனியான துறையாகக் கைத்தொழில்கள் வளர்ச்சியடைந்த பொழுது அது இன்னும் அதிகமான முக்கியத்துவத்தைப் பெற்றது.

அதே சமயத்தில் பூர்வீகக் கூட்டு வாழக்கைச் சமூக அமைப்பிலேயே மாற்றங்கள் ஏற்பட்டுக்கொண்டிருந்தன; எதிர்காலத்தில் தோன்றப் போகும் அடிமை உடைமைச் சமூகத்தின் கூறுகள் அதற்குள்ளாகவே படிப்படியாக வளர்ச்சியடைந்து கொண்டிருந்தன. மென்மேலும் பண்டங்கள் உற்பத்தி செய்யப்பட்டன. மென்மேலும் பண்டங்கள் உற்பத்தி செய்யப்பட்டன; முன்பு அது எப்பொழுதாவது நடைபெறும் தொழிலாக இருந்தது. பண்ட மாற்றுச் செய்யப்பட்ட பொருள் களுக்கிடையே உள்ள உறவு திட்டவட்டமானதாக இருக்கவில்லை. ஆனால் இப்பொழுது ஒவ்வொரு பண்டமும் ஏராளமான பல பண்டங்களின் மூலம் தன் மதிப்பை வெளிப்படுத்த முற்பட்டது, அவற்றுக்காகப் பரிவர்த்தனையும் செய்யப் பட்டது.

ஒரு குயவர் தன்னுடைய பானைகளைத் தானியத்துக்குப் பரிவர்த்தனை செய்ய வேண்டுமென்று சந்தைக்குப் போவதாக வைத்துக்கொள்வோம். ஆனால் அங்கே துரதிர்ஷ்டம் என்னவென்றால் தானியத்தை வைத்திருப்ப வருடைய பானைகள் நன்றாகவே இருக்கின்றன. எனவே தன்னுடைய தானியத்துக்குப் பரிவர்த்தனையாகப் பானைகளை வாங்கவேண்டிய அவசியம் அவருக்கு ஏற்படவில்லை. அந்தச் சந்தையில் இந்த இரண்டு உற்பத்தியாளர்கள் மட்டுமே இருந்தார்கள் என்றால் அவர்கள் தங்களுடைய பொருள்களை எடுத்துக் கொண்டு வீட்டுக்குத் திரும்ப வேண்டியதுதான். ஆனால் நல்லவேளையாக அந்தச் சந்தையில் கம்பளி, ஒலிவ எண்ணெய், வெண்கலக் கத்திகள், இன்னும் பல சாமான்களை விற்பனை செய்வதற்குப் பலர் வந்திருக்கிறார்கள்.

அந்தச் சந்தையில் ஒரு பானை ஒரு பவுண்ட் கம்பளி, ஒரு குறிப்பிட்ட அளவுடைய குப்பியிலிருக்கும் ஒலிவ எண்ணெய், இரண்டு வெண்கலக் கத்திகள், இன்னும் பல சாமான்களை விற்பனை செய்வதற்குப் பலர் வந்திருக்கிறார்கள். அந்தச் சந்தையில் ஒரு பானை ஒரு பவுண்ட் கம்பளி, ஒரு குறிப்பிட்ட அளவுடைய குப்பியிலிருக்கும் ஒலிவ எண்ணெய், இரண்டு வெண்கலக் கத்திகளுக்குச் சமம் என்று முன்பே மதிப்பிடப்பட்டு அது வாடிக்கையாகிவிட்டது. குயவர் தானிய வியாபாரிக்குத் திருப்தியளிக்கின்ற பண்டத்தைப் பெறுவதற்கு முன்பு பல பரிவர்த்தனை நடவடிக்கைகளைச் செய்ய வேண்டியிருக்கும்; கடைசியில் அவர் தனக்குத் தேவையான தானியத்தைப் பெற்றுக்கொள்வார்.

இப்படிப்பட்ட வியாபாரத்தைச் செய்ய அதிகக் கால தாமதமாகும். ஆனால் இது வெறும் கற்பனையல்ல என்பதைப் பின்வரும் உதாரணத்திலிருந்து தெரிந்து கொள்ளலாம். 19-ம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் வெப்பமண்டல

ஆப்பிரிக்காவைச் சுற்றிப் பிரயாணம் செய்த ஒரு ஐரோப்பியர் பின்வரும் வர்ணனையை எழுதியிருக்கிறார்: "படகை வாடகைக்குப் பெறுவதற்குச் செய்த ஏற்பாடு வேடிக்கையானதே. சையதின் முகவரோ தந்தத்தில் வாடகை வேண்டுமென்றார். என்னிடம் தந்தம் கிடையாது. ஆனால் முகம்மது- இபுன்-சாலிபிடம் தந்தம் இருந்தது; அவருக்குத் துணி வேண்டும். என்னிடம் துணியுமில்லாததால் இதனால் எனக்கு ஒன்றும் பயனில்லை. ஆனால் முகம்மது-இபுன்-காரிபிடம் துணி இருக்கிறது; அவருக்குக் கம்பி வேண்டும் என்றார்கள். நல்லவேளையாக என்னிடம் கம்பி இருந்தது. எனவே நான் முகம்மது -இபுன் -காரிபுக்குத் தேவையான அளவுக்குக் கம்பியைக் கொடுத்தேன், உடனே அவர் துணியை முகம்மது -இபுன் -சாலிபிட் கொடுத்தார். அவர் சையது -இபுன் -ஹபீபின் முகவர் விரும்பிய தந்தைத்தை அவரிடம் கொடுத்தார். அவர் படகை எடுத்துச் செல்ல எனக்கு அனுமதி கொடுத்தார்."

மற்ற எல்லாப் பண்டங்களின் மதிப்பையும் எடுத்துரைக்கக்கூடிய அவற்றுக்குத் தொடர்ந்து பரிவர்த்தனை செளிணியப்படும் தகுதியை உடைய ஒரு பண்டம், பொது சமமதிப்பு இல்லாதது பண்ட மாற்று முறை சந்தித்த முதற்பெரும் கஷ்டமாகும். பண்ட மாற்றைக் கடினமாக்கியதன் மூலம் அது சமூக உற்பத்தியின் முன்னேற்றத்தைக் குறைத்தது. இங்கே சமூக வளர்ச்சியின் முரண்பாட்டைப் பார்க் கிறோம்; அந்த முரண்பாட்டைத் தீர்ப்பதற்கு அது முயன்றுகொண்டிருந்தது. சீக்கிரமாகவோ அல்லது தாமத மாகவோ அதைத் தீர்க்கப் போகிறது. எங்கே?

பண்ட உலகம் என்ற பலவகையான மொத்தத் திரளிலிருந்து பொது சம மதிப்பின் குணாம்சங்களைக் கொண்ட ஒரு தனிப் பண்டத்தைப் பொறுக்கியெடுத்தது. இப்படிப்பட்ட ஒரு பண்டத்தைத் தேர்ந்தெடுப்பது மக்களுக்கிடையே உடன்பாட்டின் மூலமாக ஏற்படுவதோ அல்லது ஏதாவதொரு ஆணையின்படி ஏற்படுவதோ வழக்கமல்ல, அது மக்களின் சித்தத்துக்குச் சம்பந்தமில்லாமல் தன்னியல்பாக நடைபெறுகின்ற பொருளாதார நிகழ்வுப் போக்காகும். அத்தகைய ஒரு பண்டம் கண்டுபிடிக்கப்பட்ட பிறகு மற்ற எல்லாப் பண்டங்களும் அதை நேருக்கு நேராகப் பார்த்துத் தம்முடைய கண்களால் அதை விழுங்குகின்றன. இப்பொழுது அவை தம்முடைய மதிப்பை அந்தப் பண்டத்தின் மூலமாக எடுத்துரைக்கின்றன. அதனால் அவற்றை ஒன்றோடொன்று ஒப்பிட்டுக் கூறுவது சாத்தியமாகிறது.

பண்ட உலகத்திலிருந்து ஏதாவதொரு அவசியமான பொருளைச் சிரமமில்லாமல் தேர்ந்தெடுப்பதற்காக இப்பொழுது அவை இந்தப் பண்டத்துக்குத் தம்மைப் பரிவர்த்தனை செய்ய முயற்சி செய்கின்றன. இப்பொழுது அந்தக் குயவர் தம்முடைய பானைகளை இந்த விசேஷமான பண்டத்துக்குப் பரிவர்த்தனை செய்ய முடியும்; பிறகு அதைக் கொண்டு தானியம். ஒலிவ எண்ணெய் மற்றும் வேறு எந்தப் பொருளையும் வாங்க முடியும். உண்மை என்னவென்றால் இது வாங்குவதும் விற்பனையுமே; குயவர் தானியம் வாங்குவதற்காகப் பானையை விற்பனை செய்கிறார்.

நாம் மேற்கோள் காட்டிய ஆசிரியரால் வர்ணிக்கப்படும் ஆப்பிரிக்கப் பிரதேசத்தில் ஒரு பண்டம் (உதாரணமாக, தந்தம்) பொது சமமதிப்பு என்ற நிலையை முன்னாலேயே அடைந்திருந்தால் அவருடைய சிரமங்கள் இன்னும் சுலபமாகவே தீர்க்கப்பட்டிருக்கும். அவர் தன்னிடமிருந்த கம்பியைத் தந்தத்துக்குப் பரிவர்த்தனை செய்திருப்பார். பிறகு அதைக் கொண்டு படகை வாடகைக்குப் பெற்றிருப்பார்.

நாம் இன்னும் பணம் என்ற சொல்லை உச்சரிக்க வில்லை. ஆனால் எல்லா மதிப்புக்களையும் அளவிடக்கூடிய, பண்டச் சந்தையில் தொடர்ச்சியாகச் செலாவணியாகிக்கொண்டிருக்கின்ற பொது சமமதிப்பு என்ற பண்டம் சாராம்சத்தில் பணமே என்பதைச் சுலபமாகப் பார்க்க முடியும்.

சமூக வரலாறு மற்றும் பணத்தின் வரலாறு பற்றி எழுதப்பட்டிருக்கும் புத்தகங்களைப் படிக்கும் பொழுது ஏதாவதொரு காலத்தில் பணத்தின் செயலைப் புரிந்திராத ஒரு பண்டத்தை நினைத்துப் பார்க்க முடியாது என்பதைப் புரிந்து கொள்கிறோம். மெய்மயிர்த் தோல் (பர்), கடற்சங்குகள், மீன் மற்றும் கோகோ கொட்டைகள், கால்நடை மற்றும் உப்பு, அம்பர், மனிதர்கள்கூட (அடிமைகள்) – எல்லாமே பணமாக உபயோகப்படுத்தப்பட்டிருக்கின்றன.

இந்த உதாரணங்களில் ஒவ்வொரு பண்டமும் தற்செய லான வகையில் பணத்தின் செயலைப் பெற்றுவிட வில்லை. அந்த மக்கட் குழுவைச் சேர்ந்தவர்கள் வெளியிலிருந்து பெற்றுக் கொண்டமுக்கியமான பண்டங்கள்தான் இந்தப் பாத்திரத்தை அடைய முடியும். இதற்குக் கைதிகளையும் அடிமைகளையும் உதாரணமாகச் சொல்ல முடியும்.

19–ம் நூற்றாண்டின் இறுதியில் கூட ஆப்பிரிக்காவின் தொலைதூரப் பகுதிகள் சிலவற்றில், மேற்கு சூடானில் மதிப்பின் அடிப்படை அலகாக ஒரு அடிமை இருந்ததாக ஐரோப்பியப் பிரயாணிகள் எழுதியிருக்கிறார்கள்.

இந்தப் பண்டத்துக்கும் உள்நாடு மற்றும் ஐரோப்பாவில் தயாரிக்கப்பட்ட பண்டங்களுக்கும் மரபு வழிப்பட்ட திட்ட வட்டமான பரிவர்த்தனை உறவுகள் இருந்தன. மேற்கு ஐரோப்பாவின் வெள்ளிநாணயங்கள் அங்கே பணமாகக் கருதப்படவிலை. பல பண்டங்களில் ஒன்றாகவே கருதப்பட்டது என்பது வேடிக்கையே, இன்னொரு அவசியமான பண்டத்தை வாங்குவதற்கென்றே வேகமாகச் செலாவணியில் ஈடுபடுத்துவதற்காக இவை வாங்கப்படவில்லை. உடலில் அணிவதற்கு அல்லது வீட்டில் அலங்காரமாக வைத்திருப்பதற்குத்தான் இவை வாங்கப்பட்டன. ஆப்பிரிக்காவின் இந்தப் பகுதிகளில் வாழ்கின்ற சுதேயிடம் ஒரு குதிரையின் விலை என்ன என்று கேட்டால் அவர் உடனே "மூன்று கைதிகள்" (அடிமைகள்) என்று பதிலளிப்பார்.

ஒரு காளை மாட்டின் விலை "அரைக் கைதியாகும்". மூப்படைந்த அல்லது நோய்வாய்ப்பட்ட அடிமையே இந்த அசாதாரணமான பணவியல் அடிப்படை அலகு; இளம், ஆரோக்கியமான அடிமை முழுப் பணவியல் அலகாகக் கருதப்பட்டார். இந்தப் பழக்கம் காட்டுமிராண்டித்தனமானது என்று சுலபமாகச் சொல்லிவிடலாம். ஆனால் ஐரோப்பா மற்றும் அமெரிக்காவைச் சேர்ந்த மக்களினங்களும் தங்கள் காலத்தில் இதே போன்ற காட்டுமிராண்டித் தனமான வளர்ச்சிக் கட்டங்களைக் கடந்துதான் வந்திருக் கிறார்கள்.

எனினும் இத்தகைய அயற்பண்பான காட்டுமிராண்டித் தனம் பணத்தின் வரலாற்றில் ஒரு விதிவிலக்கே, ஒரு பிரதேசத்தில் முக்கியமான உற்பத்திப் பொருளாக இருந்து அங்கே அதிகமான அளவில் சந்தைப் பரிவர்த்தனைப் பொருளாகப் பயன்பட்டு வருகின்ற ஒரு பண்டம் பணவியல் செயல்களை அடைவது வழக்கம். மக்கள் எல்லோருமே மாலுமிகளாக அல்லது மீனவர்களாக இருந்த ஐஸ்லாந்தில் மீன் பணப் பண்டமாக இருந்தது இயற்கையே. பண்டங்களின் விலைகள் மீனின் (காட்) எண்ணிக்கையில் கணக்கிடப்பட்டன, எல்லாப் பண்டங்களுமே மீனுக்கு "வாங்கப்பட்டன, விற்கப்பட்டன". பழங்காலந்தொட்டே பல நாடுகளில் கால்நடை அல்லது ஆடுகள் பணமாகக் கருதப்பட்டன. ஹோமரின் கவிதைகளில் பல பண்டங்களின் மதிப்பு காளைகளின் மூலமாக எடுத்துக் கூறப்படுவதை நாம் அடிக்கடி பார்க்கிறோம். வரலாற்றில் பணத்தின் செயலில் கால்நடை முக்கியமான பாத்திரத்தை வகித்திருக்கிறது; இது பல மக்களினங்களுடைய மொழிகளிலும் பிரதிபலிக்கப்படுகிறது. இலத்தீன் மொழியில் Pecunia என்றால் பணத்தைக் குறிக்கும். இது pecus (கால்நடை) என்ற

சொல்லியிருந்து தோன்றியிருக்கிறது. ஆங்கிலத்தில் இதன் சாயலை pecuniary (பண வகையான) என்ற சொல்லில் காண்கிறோம்.

ரஷ்ய மொழியில் இது வேறு விதத்தில் பிரதிபலிக்கிறது. பழைய ரஷ்யனில் அரசரின் கருவூலத்துக்கு ஸ்கோத் நிட்ஸா என்று சொல்லப்படுகிறது. ஸ்கோட் என்ற சொல் கால்நடையைக் குறிக்கும். கருவூலத்தில் காளைகளும் பசுக்களும் இப்பொழுது இல்லை, மென்மயிர்த் தோல் (பர்) மற்றும் வெள்ளிப் பாளங்கள்தான் இருக்கின்றன என்றாலும் கருவூலக் காப்பாளர் ஸ்கோத்நிக் என்று அழைக்கப்பட்டார்.

மென்மயிர்த் தோலும் (பர்) பணத்தின் செயல்களை நிறைவேற்றியது; குறிப்பாக பழைய ரஷ்யாவிலும் ஸ்காண்டிநேவியாவிலும் இதைப் பார்க்கிறோம். வெவ்வேறு பிராணிகளின் (நீர்நாய், கீரியினப் பிராணிகள் முதலியன) மென் மயிர்த் தோல்களுக்கு இடையே திட்டவட்டமான விகிதங்கள் நிறுவப்பட்டன.

இப்பண்டங்கள் பணமாக உபயோகப்படுத்தப்பட்ட பொழுது மக்கள் எவ்வளவு கஷ்டடைந்திருப்பார்கள் என்பதை நாம் கற்பனை செய்துகொள்ள முடியும். நாம் முன்னர் எடுத்துக்கொண்ட குயவரின் உதாரணத்துக்குத் திரும்புவோம். அவர் பன்னிரண்டு ஆடுகளைக் கொண்ட கிடைக்குத் தன்னுடைய பானைகளைப் பரிவர்த்தனை செய்திருப்பதாக வைத்துக் கொள்வோம். ஆனால் தானிய வியாபாரியோ சில நாட்களுக்குப் பிறகு தான் தானியம் கொடுக்க முடியும் என்று கூறுகிறார். அப்படியானால் குயவர் தன்னுடைய கத்தும் "பணத்தை" எங்கே வைத்திருப்பார்? மேலும் அதற்கு உணவு கொடுக்க வேண்டும், கவனித்துப் பார்க்க வேண்டும், பராமரிக்க வேண்டும். ஆண்டுக்குப் பிளேக் நோய் ஏற்பட்டால் என்ன செய்வது? உதாரணமாக, அவருக்கு ஒருகத்தி அவசியமாக வாங்க வேண்டுமென்றால் என்ன செய்வார்? கத்தியின் விலை ஆட்டில் மூன்றிலொரு பகுதியாகும். ஆட்டை மூன்று பகுதிகளாக வெட்டுவாரா?

# உலோகப் பணம்

ப ணத்தின் செயல்களை நன்றாக நிறைவேற்றக் கூடிய தகுதியைக் கொண்ட பண்டத்தின் குணாம்சங்களைக் கற்பனைசெய்வது சுலபமானதே. முதலாவதாக, அது ஒரே சீரானதாகவும் ஒவ்வொரு பகுதியும் ஒரே விதமான தன்மையைக் கொண்டதாகவும் இருக்க வேண்டும். பணத்தின் அடிப்படை அலகின் ஒரு பகுதி மற்றொரு பகுதியிலிருந்து வேறுபட்டிருக்கக் கூடாது. ஒரு கொழுத்த ஆட்டிலிருந்து மற்றொரு மெலிந்த ஆடு வேறுபட்டிருப்பதைப் போல இருக்கக்கூடாது. இரண்டாவதாக, அது நீடித்திருப்பதாகவும் பழுதடையாத தாகவும் இருக்கவேண்டும். உதாரணமாக மீனை எடுத்துக் கொள்வோம். அதை எவ்வளவு நன்றாக உப்பிட்டுக் காய வைத்தாலும் அல்லது புகையில் வாட்டி வைத்திருந்தாலும் அது சீக்கிரத்தில் கெட்டுப் போய்விடுகிறது. மூன்றாவதாக, அது பொருளாதார ரீதியில் உட்பகுதிகளாகப் பிரிக்கப்படக் கூடியதாக இருக்க வேண்டும்.

கோட்டைப் பணம் என்று உபயோகப்படுத்தினால் ஒரு கோட்டின் பகுதிக்குத் தகுதியைக் கொண்டிருக்குமா? நான்காவதாக, அது குறைவான அளவைக் கொண்ட தாகவும் எடையில் அல்லது எண்ணளவையில் ஒவ்வொரு அடிப்படை அலகுக்கும் உயர்ந்த மதிப்பைக் கொண்டதாகவும் இருக்க வேண்டும். பசிபிக் பிராந்தியத்தில் சில தீவுகளில் கற்களாலான பணம் செலாவணியாகிக்கொண்டிருந்தது, அதை ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்துக்கு எடுத்துச் செல்வது மிகவும் கடினமாக இருந்ததாக சில மனித இன ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். இது மிக மோசமான பணம் என்றுதான் கூறவேண்டும். ஐந்தாவதாகவும் கடைசியாகவும் பணப் பண்டம் சார்பு நிலையில் நிலையான மதிப்பைக் கொண்டிருக்க வேண்டும்; பருவநிலை மாற்றங்கள் மற்றும் திடீரென்று ஏற்படக் கூடிய நிகழ்வுகளினால் அது அதிகமாக பாதிக்கப்படக் கூடியதாக இருக்கக்கூடாது.

நாம் மேலே குறிப்பிட்ட “பணத்தின்” வடிவங்கள் எல்லாவற்றிலுமே இந்த குணாம்சங்கள் முழுவதுமோ அல்லது பகுதியளவுக்கோ இல்லாதிருப்பது பரி வர்த்தனையின் இரண்டாவது பெரிய கஷ்டமாகும். பணத்தின் பாத்திரத்தை உலோகங்கள் வகிக்கத் தொடங்கியதன் மூலம் இது தீர்க்கப்பட்டது. பண்டைக் கால ஸ்பார்த்தாவில் செலாவணியில் இரும்புப் பணம் உபயோகிக்கப்பட்டது. ஒப்புநோக்கில் சமீபகாலம் வரை செம்பு பணத்தின்

பாத்திரத்தை உலோகங்கள் வகிக்கத் தொடங்கியதன் மூலம் இது தீர்க்கப்பட்டது. பண்டைக் கால ஸ்பார்த்தாவில் செலாவணியில் இரும்புப் பணம் உபயோகிக்கப்பட்டது. ஒப்புநோக்கில் சமீபகாலம் வரை செம்பு பணத்தின் செயல்களைச் செய்து கொண்டிருந்தது. ஈயம் மற்றும் தகரப் பணத்தைப் பற்றி நமக்கு விவரங்கள் கிடைத்துள்ளன.

ஆனால் பணம் என்ற வகையில் அரிய உலோகங்களான தங்கம் மற்றும் வெள்ளியோடு ஒப்பிடும்பொழுது இவை மிகவும் கீழ் நிலையிலிருப் பவையே. தங்கமும் வெள்ளியும் கணிசமான முக்கியத்துவத்தைக் கொண்ட மற்றொரு குணாம்சத்தைப் பெற்றிருக்கின்றன. அழகியல் ரீதியில் அவை கவர்ச்சி நிரம்பியவை.

எந்தப் பண்டமும் பயன் மதிப்பு இல்லாமல் பணமாக முடியாது. இரும்பைப் பயன்படுத்துவதை மக்கள் கற்றுக்கொள்வதற்கு முன்பு அவர்கள் செம்பைப்போல தங்கத்தை எடுத்துக் கொண்டு சிலசாதாரணமான, சிறிய, குறைந்த எடையுள்ள கருவிகளைச் செய்தார்கள்.பூர்விகக் கூட்டு வாழ்க்கை அமைப்பு சிதைந்து போகும்பொழுது தங்கமும் வெள்ளியும் ஆபரணங்களையும் வசதிப் பொருள் களையும் செய்வதற்குப் பயன்படுத்தப்பட்டன. இந்த உலோகங்களினால் செய்யப்பட்ட பொருள்களை இனக்குழுக்களின் தலைவர்கள் அலங்காரமாக அணிந்து கொண்டார்கள். அவர்கள் இப்பொழுது தந்தை வழிச் சமூகத்தின் அடிமை உடைமையாளர்களாக மாறிக் கொண்டிருந்தார்கள்.

அதே சமயத்தில் தங்கத்துக்கு ஏற்பட்டு வருகின்ற மாபெரும் ஆதிக்கத்துக்கும் அதன் பயன்மதிப்பின் குறுகிய தன்மைக்கம் இடையே உள்ள வேறுபாட்டை நாம் காணத் தவற முடியாது. மனிதனுடைய அடிப்படைத் தேவைகளை (உணவு, உடை, இருப்பிடம் மற்றும்கருவிகள்) அது பூர்த்தி செய்யவில்லை. ஆனால் மனிதனுடைய இரண்டாம் நிலைத் தேவைகளை அது பூர்த்தி செய்கிறது. ஆடம்பரம், கருமித்தனம், அதிகார வெறிபோன்ற கீழான மனித குணங்களைப் பேணி வளர்க்கின்ற சமூகத்தில் இத்தகைய இரண்டாம் நிலைத்தேவைகள் முக்கியத்துவம் அடைகின்றன.

மைதாஸ் என்ற அரசனைப் பற்றிய கிரேக்கப் பழங்கதையில் இந்த முரண்பாட்டைக் காணமுடியும். மைதாஸ் தொட்டதெல்லாம் பொன்னாக மாறும் என்று தெய்வம் வரமளித்தது. இது மிக பயங்கரமான வரம், அவரைத் தண்டிப்பதற்காகக் கொடுக்கப்பட்ட வரம். மைதாஸ் பெரும்

செல்வந்தரானார். ஆனால் அவர் உணவு சாப்பிட முடியாது, நுகர்வின் மற்ற சாதாரணத் தேவைகளையும் அவரால் பூர்த்தி செய்ய முடியவில்லை.

பூர்விகக் காலத்தில் வேட்டையாடியும் விவசாயம் செய்தும் பிழைத்துக் கொண்டிருந்த மக்கட் குழுக்களிலிருந்து வெகு தூரம் முன்னேறிச் சென்றுவிட்ட சமூகத்தில், ஒப்புநோக்கில் "பணக்கார" சமூகத்தில் தங்கம் பணமாக மாறியது. எகிப்து, மெஸபொடேமியா, ஆசியா, மைனர், கிரீஸ் ஆகியவற்றின் [3,000–1,000 கி.மு], வளர்ச்சியடைந்த அடிமை உடைமை நாகரிங்களில் தங்கம் செல்வம் மற்றும் பலத்தின் சின்னமாகி விட்டது. சில சமயங்களில் அது ஆடம்பரமாக வெளியே காட்டப்பட்டது. வேறு சமயங்களில் அது பெட்டிகளில், பதுக்கல்களில் மறைத்து வைக்கப்பட்டது. இரண்டு வடிவங்களுமே தங்கத்தின் பொருளாதார மற்றும் சமூகச் செயல்களின் அதிகரிப்பைப் பிரதிபலிக்கின்றன.

இதற்கிடையில் இந்தச் செயல்கள் அதிகச் சிக்கலான வையாக மாற்றமடைந்தன. மதிப்பின் அளவுகோல் மற்றும் செலாவணிச் சாதனம் என்ற ஆரம்பச் செயல்களோடு சேர்ந்து பதுக்கலும் மாபெரும் முக்கியத்துவத்தைப் பெற்றது. ஏனென்றால் கெட்டிப்படுத்தப்பட்ட மனித உழைப்பு என்ற முறையில் அதன் அதிகக் கச்சிதமான, சமூக ரீதியில் முக்கியத்துவம் வாய்ந்த வடிவத்தில் மதிப்பைத் திரட்டுவதும் தக்கவைத்துக் கொள்வதும் பதுக்கலாகும். வழங்கீட்டுச் சாதனம் என்ற செயலும் வளர்ச்சியடைந்தது, கடன்களை வழங்குவதற்கும் தீர்ப்பதற்கும் பணம் ஒரு சாதனமாயிற்று.

கடைசியாக, மக்களினங்களுக்கிடையே ஏற்பட்ட தொடர்புகளின் வளர்ச்சியினால் உலகப் பணம், அதாவது சர்வதேச ஒப்பந்தச் சாதனம், ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டுக்கு மதிப்பை மாற்றுவது, செல்வத்தின் உலக ரீதியான பொருண்மையாக்கம் முக்கியத்துவமடைந்தது.

அரிய உலோகங்கள் பணத்தின் தலைமையா வடிவமாக மாறுவதற்கு முன்பு பணத்தைக் கணக்கிடுவதற்கு முக்கிய மான வழி என்தே, கால்நடைகள், மென்மயிர்த்தோலைக் கொண்ட பிராணிகள், கோகோ கொட்டைகள், இதரவை ஒவ்வொன்றாக எண்ணப்பட்டன. இது ஓரளவுக்குச் சிரமம் நிறைந்ததே. இந்தப் பணத்தின் அடிப்படை அலகுகள் அளவிலும் தன்மையிலும் ஒன்றோடொன்று தவிர்க்க முடியாத வகையில் வேறுபாடுகளைக் கொண்டிருந்தன. அரிய உலோகங்கள் எடையை அடிப்படையாகக் கொண்ட பணத்துக்கு மாறுவதை சாத்தயமாக்கின.

தங்கத்துக்கு இயற்கையான பௌதிக குணாம்சங்கள், அதன் மென்மை, தகடாகத் தயாரிக்கப்பதற்கும் கம்பியாக இழுப்பதற்கும் உரிய தன்மைகள் இதை சுலபமாக்கின. தங்கத் தூசியையும் சுலபமாக எடையிடலாம். லண்டனின் கதாபாத்திரங்கள், 19–ம் நூற்றாண்டின் கடைசியில் வாழ்ந்த தங்க வேட்டைக்காரர்கள் தங்கத் தூசியைக் கொடுத்து கடைகளில் சாமான்களை வாங்கினார்கள். அதற்கு அவர்கள் ஒரு தராசையும் தங்களோடு எடுத்துக் கொண்டு சென்றார்கள்.

தங்கம், வெள்ளியின் எடையளவை ஆதாரமாகக் கொண்ட பணமென்பது மாபெரும் முன்னேற்றமே. ஆனால் எல்லாப் பிரச்சினைகளும் அதனால் தீர்ந்துவிடவில்லை. அந்தக் குயவரிடம் தங்கத்தின் குறிப்பிட்ட எடை துண்டுகளாக, பாளங்களாக, கம்பியாக, தூசியாகக் கொடுக்கப்படுவதாக வைத்துக் கொள்ளுங்கள். தேவையான அளவு தங்கத்தை நிறுப்பதற்கு அவரிடமோ அல்லது அதை வாங்குபவ ரிடமோ மிகவும் துல்லியமான தராசு இருக்க வேண்டும். அவர்கள் ஒருவரையொருவர் நம்பவில்லை என்றால் ஒரு தரகர் அல்லது மத்தியஸ்தரின் உதவியை அவர்கள் நாட வேண்டியிருக்கும். மேலும் தன்னிடம் கொடுக்கப்படுகின்ற தங்கத்தின் தூய்மையைச் சரிபார்ப்பதற்கு அந்தக் குயவர் தங்கத்தின் அனுபவமுள்ள நிபுணராகவும் இருக்க வேண்டும். இயற்கையான நிலைமையில் தங்கம், வெள்ளி, செம்பு மற்றும் மதிப்புக் குறைவான இதர உலோகங்களோடு கலந்துதான் வழக்கமாகக் கிடைக்கிறது. அந்த உலோகத்தின் தூள்மையைக் கண்ணால் பார்த்து அல்லது பற்களால் கடித்துக் கண்டுபிடிப்பது மிகவும் கடினம். எனவே குயவர் ஏமாற்றப்படுகின்ற ஆபத்தும் இருக்கிறது. 1860க்களில் பர்மாவில் எப்படி வெள்ளி பணமாக இருந்தது என்பதை ஒரு பிரயாணி பின்வருமாறு வர்ணிக்கிறார்:

“பர்மாவில் நீங்கள் சந்தைக்குப் போவதென்றால்.” வெள்ளிக்கட்டி, சுத்தியல், சிற்றுளி மற்றும் தராசு, எடைகளையும் கொண்டு போக வேண்டும். “இந்தச் சமையல் பானையின் விலை என்ன?” “உங்களுடைய பணத்தைக் காட்டுங்கள்” என்கிறார் வியாபாரி. அதன் தோற்றத்தைப் பார்த்த பிறகு அதில் எவ்வளவு பானைக்கு விலையாகக் கொடுக்க வேண்டும் என்பதை முடிவு செய்கிறார். பிறகு வியாபாரி ஒரு சிறு பட்டடைக் கல்லை எடுத்து வைக்கிறார். நீங்கள் வெள்ளிக் கட்டியை அதன் மீது வைத்து சிற்றுளியால் செதுக்குகிறீர்கள்; வியாபாரி குறிப்பிட்ட எடை வருகின்ற வரை இப்படிச் செதுக்குகிறீர்கள். பிறகு இந்த வெள்ளியை உங்களுடைய தராசில் எடை போடுகிறீர்கள். ஏனென்றால் வியாபாரியின் தராசை நம்ப

முடியாது. எடை சரியாக இருப்பதற்குச் சிறிது சேர்க்கிறீர்கள் அல்லது குறைக்கிறீர்கள். வெள்ளியிலிருந்து விழுகின்ற சிறு பகுதிகளின் மூலம் அதிகமான இழப்பு ஏற்படுவது இயற்கையே. அதோடு நீங்கள் நிறுக்கின்ற அளவு வெள்ளிக்குத் துல்லியமாக மட்டுமே வாங்குவது சரியானதல்ல, நீங்கள் வெள்ளிக் கட்டியிலிருந்து வெட்டிய துண்டுக்குச் சமமான மதிப்புடைய பொருளை வாங்குவதே சரியாகும். மிகச் சிறந்த வெள்ளியைக் கொடுக்க வேண்டியிருக்கும் பெரிய வியாபாரங்களில் இந்த பேரம் இன்னும்கூட சிக்கலானதாகும். ஏனென்றால் வெள்ளி எந்த அளவுக்குத் தூய்மையானதென்று துல்லியமாக மதிப்பிடுவதற்கு முதலில் மத்தியஸ்தரைக் கூப்பிட வேண்டியிருக்கும் அவருக்குக் கூலி தனியாகக் கொடுக்க வேண்டியிருக்கும்.''★

தங்கத்தில் இத்தகைய கஷ்டங்கள் மிகவும் அதிகமே. ஏனென்றால் தங்கத்தின் ஒவ்வொரு அடிப்படை அலகும். வெள்ளியைக் காட்டிலும் பன் மடங்கு அதிக விலையைக் கொண்டிருக்கிறது.

# நாணயம்

அ திகாரத்தைக் கொண்ட குழுவினால் அங்கீகார மளிக்கப்பட்டு உத்தரவாதம் செய்யப்பட்ட அரிய உலோகங்களின் எடையின் அடிப்படை அலகு கள் முன்னரே தயாரிக்கப்பட்ட வடிவத்தில் தொடக்கத்தில் பொருளாதாரத்தில் இல்லை. இது பரிவர்த்தனை யிலிருந்து மூன்றாவது பெரிய கஷ்டமாகும். நாணயங் களை அச்சிடுவதன் மூலம் இது தீர்க்கப்பட்டது. ஏனென்றால் உண்மையில் ஒரு நாணயமென்பது உலோகத்தின் உத்தரவாதமளிக்கப்பட்ட அளவோ, ஜார் காலத்தில் வெளியிடப்பட்ட ஐந்து ரூபாய் நாணயத்தை ஒரு நபர் கையில் வைத்திருந்தால் 87.12 சதவிகிதம் [3.871 கிராம்] சுத்தமான தங்கம் அதிலிருக்கிறதென்று அவர் உறுதியாகக் கருதலாம். அது இங்கிலாந்தில் வெளியிடப்பட்ட சரவன் நாணயமாக இருந்தால் அதில் 7.322 கிராம் சுத்தமான தங்கம் இருக்கும்.

நாணயம் தோன்றுவதற்கும் வளர்ச்சியடைவதற்கும் பல நூற்றாண்டுகளாயின, முதலில் உலோகப் பாளத்தில் முத்திரையிடுகின்ற வழக்கம் பின்பற்றப்பட்டது. இது அந்த உலோகத்தின் எடை மற்றும் தரத்துக்கு உத்த ரவாதத்தைக் கொடுத்தது. இத்தகைய வெள்ளிப்பாளங்கள் பழங்கால பாபிலோனின் கி.மு.3,000-2,000த்தில் உபயோகிக்கப்பட்டன என்று நாம் அறிகிறோம்.

ஒரு உலோகப் பாளத்தின் எடைக்கும் தரத்துக்கும் யார் சான்று கொடுக்க முடியும்? அதிகாரத்தைக் கொண்ட நபர்கள் அல்லது நிறுவனங்களின் உத்தர வாதமே ஏற்றுக்கொள்ளப்படும் என்பது இயற்கையே. வணிகர்களின் சங்கங்கள், நகராண்மைக் கழக அதிகாரிகள் மற்றும் திருச்சபையினர் இத்தகைய உத்தர வாதத்தைக் கொடுத்தார்கள். ஆனால் இதற்கு முன்பே, ஆரம்ப கட்டங்களிலேயே அரசு இந்த விஷயத்தைத் தன்னுடைய பொறுப்பில் எடுத்துக் கொண்டது. நாணயங்களை அச்சிடுவது அரசின் தனி உரிமையாயிற்று. இதன் மூலம் அரசுக்குக் கணிசமான லாபம் கிடைத்தது.

முத்திரையிடப்பட்ட உலோகப் பாளங்களை நாணயத்தின் கருவடிவம் என்று கருதலாம். எனினும் இன்று நம்மிடையே புழக்கத்திலுள்ள வடிவத்தில் நாணயங் கள் வெளியிடப்படுவதற்கு வெகு காலமாயிற்று. நாணங்களைத்

தயாரிக்க வெவ்வேறு அளவுகளைக் கொண்ட உலோக வில்லைகளில் அல்லது தகடுகளில் சித்திரங்களையும் வாசகங்களையும் சேர்த்து அச்சிட வேண்டும்.

இதற்கு ஒப்பு நோக்கில் உயர்ந்த தொழில்நுட்பம் வேண்டும். இதற்கு ஒப்பு நோக்கில் உயர்ந்த தொழில் நுட்பம் மற்றும் கலை அவசியமாக இருக்கிறது. முதன்முதலாக நாணயங்கள் எங்கே, எப்பொழுது வெளியிடப்பட்டன என்ற கேள்விகளுக்கு இன்னும் முழுமையான பதில் கிடைக்கவில்லை. ஆசியா மைனர் தீபகற்பத்தின் மேற்குப் பகுதியில் வசித்த லிடியர்கள் என்ற பெயர் கொண்ட மக்களைப் பற்றி ஹெரடோடஸ் பின்வரும் சுவாரசியமான விவரங்களைக் கூறுகிறார். அவற்றைச் சந்தேகிகிக்க காரணமில்லை. "லிடியர்களிடம் கிரேக்கர்களைப் போன்ற அதே பழக்க வழக்கங்கள் இருக்கின்றன... நமக்குத் தெரிந்த குறைவான விவரங்களின்படி இவர்கள்தான் முதலில் தங்க மற்றும் வெள்ளி நாணயங்களை உபயோகித்தார்கள்; சரக்குகளை முதலில் சில்லறையாக விற்பனை செய்தவர்கள் இவர்களே, கிரேக்கர்களுக்கும் அவர்களுக்கும் பொதுவாக இருக்கின்ற எல்லா விளையாட்டுக்களையும் தாங்கள்தான் முதலில் கண்டு பிடித்ததாகவும் அவர்கள் கூறுகிறார்கள்."

லிடியர்கள் கி.மு.ஏழாம் நூற்றாண்டில் நாணயங்களை அச்சிடத் தொடங்கியதாக வழக்கமாகக் கருதப்படுகிறது. அதற்கடுத்த நூற்றாண்டில் மது மத்தியதரைப் பகுதியின் அந்தக் காலத்திலேயே வல்லரசாக வளர்ச்சி யடைந்திருந்த பாரசீகத்திற்கும் பரவியிருக்க வேண்டும்.

பண்டைக்கால மக்களின் மனங்களில் தங்கம் செல்வத்தின் சொரூபம் என்ற எண்ணம் உறுதியாக நிலைத்துவிட்டது. லிடியாவின் அரசர் கிரேசஸ் [கி.மு.6ம் நூற்றாண்டு] ஏராளமான தங்கத்தை வைத்திருந்த காரணத்தால் அவர் மிகவும் அதிகமான செல்வம் படைத்த அரசராகக் கருதப்பட்டார். பாரசீகர்களுக்கு எதிராகப் போர் செய்யப் புறப்பட்டபொழுது டெல்லியிலுள்ள அப்போலோ தெய்வத்தின் ஆலயத்தில் கிரேசஸ் முன் எப்போதும் நடந்திராத வகையில் செல்வங்களைக் காணிக்கையாளித்தார்.

இவைகளில் 117 அரிய உலோகப் பாளங்களும் உட்படும். ஒவ்வொன்றும் 2.5 டேலன்ட் எடையுள்ள நான்கு தங்கப் பாளங்களும் அவற்றில் அடங்கும். மற்றவைகளில் தங்கமும் வெள்ளியும் கலந்திருந்தன. இவை ஒவ்வொன்றும் 2 டேலன்ட் எடையுள்ளவை. மேலும் சுத்தமான தங்கத்தில் செய்யப்பட்ட 10 டேலன்ட் எடையுள்ள சிங்கச் சிலையையும்

காணிக்கையளித்தார். இவை மட்டுமே சில டன்கள் தங்கத்தின் எடையைக் கொண்டிருந்திருக்கும். ஆனால் இவ்வளவு அதிகமாகக் காணிக்கையளித்த பிறகும் கூட கிரேசசையும் அவருடைய ராஜ்யத்தையும் கடவுள் காப்பாற்றவில்லை. ஒருவேளை அந்தப் பேராபத்தை இது விரைவுபடுத்தியிருக்கலாம். அரசர் கிரேசசின் தங்கக் காணிக்கையைப் பற்றி பாரசீகர்களுக்குத் தெரியும் என்பதில் சந்தேக மில்லை. இது அவர்களுடைய பேராசையை அதிகப்படுத்தியிருக்கும். கிரேசஸ் தன்னிடமிருந்த தங்கம் எல்லாவற்றையும் காணிக்கையாகக் கொடுத்துவிட வில்லையே! பாரசீகர்கள் லிடியாவின் தலைநகரத்தைக் கைப்பற்றிய பிறகு அவர்களிடம் ஏராளமான தங்கம் சிக்கியது என்று ஹெரடோடஸ் எழுதகிறார்.

பண்டைக்கால கிரேக்கத்திலும் ரோமாபுரியிலும் முதிர்ச்சி யடைந்த அடிமை உடைமையைக் கொண்டுள்ள நாகரிகம் உருவாகிய பொழுதே தங்கமும் வெள்ளியும் பணத்தின் தலைமையான வடிவமாகிவிட்டன. செம்பு இரண்டாம் நிலைப்பாத்திரத்தை வகித்தது. நாணயம் அச்சிடுவதிலும் உயர்ந்த தொழில்நுட்பத் தரம் ஏற்பட் டிருந்தது. பொருட்காட்சிச் சாலைகளிலும் நாணயத் தொகுப்புகளிலும் உள்ள பழங்கால பல நாணங்களில் இதைக் காண முடியும்.

ரோமாபுரியின் வீழ்ச்சியும் வளர்ச்சியின் கீழ்க் கட்டத்திலிருந்த மக்களினங்கள் மேற்கு ஐரோப்பாவை வெற்றி கொண்டதும் வர்த்தகம் மேற்கு ஐரோப்பிய நிலப்பிரபுத்துவம் சுவாரசியமான வகையில் அட்டிக் டேலன்ட் 26.2 கிலோ எடைக்குச் சமமானது. கிரீசிலும் அதைச் சுற்றிலுமிருந்து நாடுகளிலும் இது ஒரே சமயத்தில் எடையின் அளவாகவும் ஆகப் பெரிய பணவியல் அலகாகவும் இருந்தது. இயற்கைப் பொருளா தாரத்துக்குத் திரும்பியது. தங்கத்தை வெட்டி யெடுப்பதும் தங்க நாணயங்களை அச்சிடுவதும் அநேகமாக சில நூற்றாண்டுகளுக்கு நின்றுவிட்டது. ஆனால் 14 முதல் 16–ம் நூற்றாண்டுகளில் மேற்கு ஐரோப்பாவின் பல பகுதிகளில் ஏற்பட்ட பொருளாதார வளர்ச்சி அதிகமாகத் தங்கமும் வெள்ளியும் வேண்டுமென்று கோரியது. அதற்குப் பிந்திய நூற்றாண்டுகளில் எல்லாப் பகுதிகளிலும் பண உறவுகள் ஊடுருவிப் புகுந்தன. பணம் சமூக உறவுகளின் முக்கியமான சாதனமாகவும் உற்பத்தி மற்றும் பொருளாதார நடவடிக்கையின் முக்கிய நோக்கமாகவும் ஆயிற்று. நிலப்பிரபுத்துவ நிலவுடைமையாளரும் பண்ணையடிமையும் பரஸ்பரத் துணை நிலையில் பிணைக்கப்பட்டிருந்தனர். ஆனால் முதலாளிக்கும் கூலித் தொழிலாளிக்குமிடையே ஒரே ஒரு இணைப்பு மட்டுமே இருக்கிறது.

தொழிலாளியின் உழைப்புச் சக்திக்காக முதலாளி கொடுக்கும் பணம்தான் அந்த இணைப்பு. மூலதனம் பிரதானமாக புதிய பணத்தை உற்பத்தி செய்யக்கூடிய குறிப்பிட்ட அளவு பணம் என்ற வகையில்தான் செயலாற்றுகிறது.

தொடக்க முதலாளித்துவக் காலத்தின்போது தங்கம் மற்றும் வெள்ளி நாணயங்கள் பணத்தின் தலைமையான வடிவமாக இருந்தன. தொழில்துறை மற்றும் வர்த்தக வளர்ச்சி நிலையான பணச் செலாவணி முறை, நிலையான நாணயம் இருக்க வேண்டுமென்று வற்புறுத்தியது. இங்கிலாந்து, பிரான்ஸ், ஸ்பெயின் மற்றும் இதர நாடுகள் சிலவற்றில் சிறு நிலப்பிரபுத்துவ அலகுகள் படிப்படியாக மறைந்து வலிமையான மத்தியப்படுத்தப்பட்ட அரசுகள் தோன்றியதும் நாணயங்கள் அச்சிடுவதன் வளர்ச்சியை ஊக்குவித்தது.

# இரண்டு உலோகங்கள்

**ப** திவு செய்யப்பட்ட வரலாறு முழுவதிலும் தங்கமும் வெள்ளியும் பங்குதாரர்கள் மற்றும் எதிரிகள் என்ற பாத்திரத்தில் தோன்றுகின்றன. தங்கம் எப்பொழுதுமே வெள்ளியைக் காட்டிலும் அதிக விலையுள்ளதாக இருந்துவருகிறது. இவை இரண்டும் கிடைக்கும் இயற்கை நிலைமைகளில் தங்கத்தை உற்பத்தி செய்வதற்கு அதே அளவு வெள்ளியை உற்பத்தி செய்வதைக் காட்டிலும் அதிகமான உழைப்பைச் செலவிட வேண்டியிருப்பதே இதற்குக் காரணம். இரண்டு உலோகங்களுக்குமிடையே உள்ள மதிப்பின் விகிதம் தொடர்ச்சியாக மாறிக் கொண்டிருக்கிறது. ஒவ்வொரு உலோகத்தையும் உற்பத்தி செய்யத் தேவையான உழைப்பின் அளவு மாற்றமடைவதும் அதனையொட்டி உற்பத்திச் செலவுகள் மாற்றமடைவதும் இதற்குக் காரணம். இரண்டு உலோகங்களுக்குமிடையே உள்ள மதிப்பின் விகிதம் தொடர்ச்சியாக மாறிக் கொண்டிருக்கிறது. ஒவ்வொரு உலோகத்தையும் உற்பத்தி செய்யத் தேவையான உழைப்பின் அளவு மாற்றமடைவதும் அதனையொட்டி உற்பத்திச் செலவுகள் மாறற்மடைவதும் இதற்குக் காரணம். தங்கம் மற்றும் வெள்ளிக்கு ஏற்படுகின்ற தேவை யின் தீவிரமும் ஒரு முக்கியமான கூறாகும்.

கிரேக்க நாட்டின் மூலச்சிறப்பான காலம் வரை பல நூற்றாண்டுக் காலமாக தங்கத்துக்கும் வெள்ளிக்கும் இடையே உள்ள விகிதம் 6:1 மற்றும் 8:1 என்ற விகிதத்தில் மாற்றமடைந்து கொண்டிருந்தது. கிரீசில் ஹெரடோடஸ் காலத்தின்போது அது 13:1 என்பதாக இருந்தது. ரோமாபுரியில் குடியரசின் கடைசிக்காகலத்தின்போதும் முதல் சக்கரவர்த்திகளின் காலத்தின்போதும் தங்கத்தின் மதிப்பு வெள்ளியின் மதிப்பைக் காட்டிலும் 11–12 மடங்கு அதிகமாக இருந்தது. இதற்குப் பிறகு தங்கம் சார்பு நிலையில் அதிக விலையுடையதாக மாறியது; கி.பி.5ம் நூற்றாண்டில் மேற்கு ஐரோப்பாவில் இந்த உலோகங்களின் மதிப்பு 18:1 என்ற நிலையை அடைந்தது.

பிறகு 15ம் நூற்றாண்டின்போது அது 10:1 ஆகக் குறைந்தது; ஆனால் 18–19ம் நூற்றாண்டுகளின்போது அது 14:1 அல்லது 15:1 என்ற விகிதத்தில் ஸ்திரமாக இருந்தது. 19ம் நூற்றாண்டின் இறுதியில் வெள்ளியின் மதிப்பு வேகமாகக் கீழே இறங்கத் தொடங்கியது, அதன்

விளைவாகப் பணச் செலாவணி உலகத்திலிருந்து வெளியேற வேண்டிய நில அதற்கு ஏற்பட்டது. படிப்படியாகப் பணம் என்ற நிலை முடிவடைந்து அது சாதாரணப் பண்டமாக மாறியது. இந்த மாற்றம் இப்பொழுது பூர்த்தியடைந்து விட்டது என்று கூறலாம்.

சமீப காலம்வரை தங்கத்தின் டாலர் விலை கறாராக நிர்ணயிக்கப்பட்டிருந்தது. ஆனால் 20ம் நூற்றாண்டில் வெள்ளியின் விலை தொடர்ச்சியாகவும் பரபரப்பான முறையிலும் மாற்றமடைந்தது. ஆகவே இரண்டு உலோகங்களுக்குமிடையே உள்ள விகிதமும் தீவிரமாக மாற்றமடைந்தது; ஆனால் இது பணவியல் அமைப்புக்குச் சிறிதளவு முக்கியத்துவத்தைக்கூட அநேகமாகக் கொண்டிருக்கவில்லை. 1975ல் (தங்கம் மற்றும் வெள்ளியின் சந்தை டாலர் விலையின்படி) அது சராசரியாக 38:1 என்ற விகிதத்திலிருந்தது.

1979–80ல் வெள்ளியின் விலை பரபரப்பான ஏற்ற இறக்கங்களுக்கு உள்ளாயிற்று. உலக ரீதியான பணவீக்கம், நிலையான மதிப்புக்களைத் தேடுதலின் தாக்கம் ஆகியவற்றினால் அதன் விலை தங்கத்தைக் காட்டிலும் இன்னும் அதிகமாக அதிகரித்தது. அதன் விளைவாக இந்த உலோகங்களின் விலை விகிதம் வெள்ளிக்குச் சாதகமான வகையில் சுமார் 20:1 என்று மாறியது. ஆனால் வெஷீமீளிச் சந்தை திடீரென்று வீழ்ச்சியடைந்தது, அதன் விலை மறுபடியும் கீழே இறங்கியது. இந்த அரிய உலோகங்களின் சந்தை விலைகள் அதிகமான ஏற்ற இறக்கத்துக்கு உள்ளாகி வருவதால் அவற்றுக்கிடையே உள்ள விகிதமும் விரிவான எல்லைகளுக்குட்பட்டுத் தொடர்ச்சியாக மாற்றமடையும் என்பதில் சந்தேகமில்லை.

இரண்டாயிரம் வருடங்களாகத் தங்கம், வெள்ளி ஆகிய இரண்டிலுமே நாணயங்கள் அச்சிடப்பட்டன. எனவே இரண்டு உலோகங்களுக்கும் இடையிலான விகிதத்தை முறைப்படி நிர்ணயிக்க வேண்டிய அவசியம் அரசுகளுக்கு ஏற்பட்டது. இப்படி இரட்டையான பொது சம மதிப்பு, இரட்டையான விலைகளின் அளவுகோல்கள் சந்தை, பண்டப்புழக்கம் மற்றும் பொருளாதாரத்தின் மீது திணிக்கப்பட்டன. ஒரு குறிப்பிட்ட அளவு வெள்ளியின் மதிப்பு அதே அளவு தங்கத்தின் மதிப்பின் பத்திலொரு பங்கு அல்லது பதினைந்திலொரு பங்கு என்று அனுமானிக்கப்பட்டது. ஆனால் இப்படி அனுமானித்துக்கொள்வது பொது சம மதிப்பின் தன்மைக்கே முரண்பாடானதாகும்.

அரசு எந்த விகிதத்தை நிர்ணயித்தாலும் அது சீக்கிரமாகவோ, தாமதமாகவோ உண்மையற்றதாகி விடுகிறது, சந்தை இன்னொரு விகிதத்தை, உண்மை யான விகிதத்தை நிர்ணயிக்கிறது.

தங்கமும் வெள்ளியும் எந்த நீண்டகாலப் பகுதிக் கும் ஒன்றாகச் சேர்ந்து செலாவணியாக முடியாது என்பதைத் தத்துவமும் வரலாற்று நடைமுறையும் எடுத்துக்காட்டுகின்றன. ஏதாவதொரு உலோகம் செலாவணியிலிருந்து விரட்டப்படும். எந்த உலோகம்? சந்தை விலையைக் காட்டிலும் குறைவான விலை சட்டத்தால் நிர்ணயிக்கப்பட்டிருக்கும் அந்த ‘‘அதிக விலையைக் கொண்டிருக்கும்’’ பணம் விரட்டப்படும். இந்த நிகழ்வை முதன்முதலில் சுட்டிக் காட்டியவர் 16ம் நூற்றாண்டில் வாழ்ந்த ஆங்கில ராஜியப் பிரமுகரான தாமஸ் கிரெஷாம் என்று பணத்தைப் பற்றிய வரலாற்றில் நம்பப்படுகிறது. இதை கிரெஷாம் விதி என்று சொல்கிறார்கள்.

‘‘குறைந்த விலை நிர்ணயிக்கப்பட்டிருக்கும்’’ உலோகச் செலாவணியிலிருந்து பின்வரும் முறையினால் விரட்டப் படுகிறது. தங்கத்துக்கும் வெள்ளிக்கும் இடையிலான விகிதம் சட்டப்படி 15:1 என்று நிர்ணயிக்கப்பட்டிருப்பதாக வைத்துக் கொள்வோம். ஆனால் சந்தையல் பின்பற்றப் படுகின்ற விகிதம் 20:1 என்பதாகும். ஆகவே சட்டம் தங்கத்தின் விலையைக் குறைவாக வைத்திருப்பதை நாம் காண முடியும். சந்தையில் அதன் விலை அதிகமாக இருக்கும். இத்தகைய நிலைமையில் அதன் விலை அதிகமாக இருக்கும். இத்தகைய நிலைமையில் மக்கள் அரசிடம் தங்களிடமிருக்கும் வெள்ளிக்குப் பரிவர்த்தனையாகத் தங்கத்தைப் பெறுவதற்கு முயற்சி செய்வார்கள் பிறகு அதைப் பதுக்கி வைப்பார்கள், உருக்கிவிடுவார்கள், வெளிநாட்டுக்கு எடுத்துச் செல்வார்கள், தங்களுடைய வழங்கீடுகளை எல்லாம் வெள்ளியிலேயே கொடுப்பார்கள். இதன் விளைவாகத் தங்கம் பதுக்கி வைக்கப்படும். அதிகார பூர்வமான விகிதம் 15:1 ஆகவும் சந்தை விகிதம் 10:1 ஆகவும் இருக்கு மானால் இதற்கு எதிரான செயல்நடை பெறும். வெள்ளி பதுக்கி வைக்கப்படும்.

எனினும் இப்படிப்பட்ட ஏற்ற இறக்கங்கள் நீண்டகாலப் போக்கு என்ற பின்னணியில் நடைபெறுகின்றன. அதிக மதிப்புடைய உலோகம் குறைவான மதிப் புடைய உலோகத்தை விரட்டிவிடுகிறது. பணமாக உபயோகப்படுத்தப்படுவதிலிருந்து முதலில் செம்பு விரட்டப்பட்டது, பிறகு வெள்ளி, 19ம் நூற்றாண்டின் பிற்பாதியிலும் 20ம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் தங்கம் உலோகப் பணம் என்ற முறையில் ‘‘அரியா

சனத்தில்’’ வீற்றிருந்தது. வளர்ச்சியடைந்த முதலாளித்துவ நாடுகளில் பெரும்பாலானவற்றில் இரண்டு உலோக நாணய முறை [தங்கமும் வெள்ளியும்] என்ற பணவியல் அமைப்புக்குப் பதிலாகத் தங்க ஒற்றை உலோக நாணய முறை அல்லது தங்க ஆதார அளவு ஏற்பட்டது.

எல்லா நூற்றாண்டுகளிலுமே தங்கம் தான் மிக உயர்ந்த பணமாக இருந்தது. இரண்டு உலோக நாணய முறை காலத்தின்போது கூடபணத்தைப் பற்றியும் அதன் குறியடையாளமான சமூக நிகழவுகளையும் பற்றிய மக்களின் கருத்துக்களும் வெள்ளியைக் காட்டிலும் தங்கத்தோடுதான் அதிகமாக இணைக்கப்பட்டிருந்தன. பிற்காலத்தில் பணத்தோடு தங்கத்தின் சமன்பாடு இன்னும் நெருக்கமாயிற்று.

# தங்கமும் அதன் பதிற்பொருள்களும்

**த** ங்க ஆதார அளவுக்கு மாறுவதைச் செய்து முடிக்க நெடுங்காலமாயிற்று. முக்கியமான முதலாளித்துவ நாடுகளில் 19–ம் நூற்றாண்டின் கடைசியிலே அது பூர்த்தியடைந்தது.

பணத்தின் எல்லாச் செயல்களையும் தங்கம் எடுத்துக் கொண்டது. ஒவ்வொரு நாட்டிலும் பணவியல் அலகு ஒரு குறிப்பிட்ட அளவு தங்கம் என்று சட்ட பூர்வமாக நிர்ணயிக்கப்பட்டிருந்த படியால் விலைகள் இப்பொழுது தங்கத்தின் மூலமாக மட்டுமே எடுத்துக் கூறப்பட்டன. தங்கம் உண்மையிலேயே நாணயங்களின் வடிவத்தில் செலாவணியாயிற்று. தனிமுதலான அளவைக் கொண்டு பார்க்கும்பொழுது இந்த நாணயங்களின் செலாவணியும் தொடர்ச்சியாக வளர்ந்து கொண்டிருந்தது. தேசத்தின் பணவியல் செல்வம் திரட்டி வைக்கப்பட்டிருந்த மத்திய வங்கிகள் தங்க இருப்புக்களைக் காக்கின்ற அமைப்புக்களாயின. ஆனால் சமூகத்தின் செல்வங் கொழித்த பகுதியைச் சேர்ந்த தனிநபர்கள் தங்கள் வீடுகளில் தங்கத்தை –நாணயங்கள் அல்லது சாதாரணப் பொருள்களின் வடிவத்தில் –சேர்த்து வைக்கின்ற பழக்கம் வேரூன்றியது. தங்கத்தைக் கொடுத்து எந்தக் கடனையும் தீர்க்க முடியும், அது கடைசி வழங்கீட்டுச் சாதனமாயிற்று. கடைசியாக, தங்க ஆதார அளவுமுறை உலகத்தில் எல்லா முக்கியமான நாடுகளையும் அவற்றின் காலனிகளையும் தழுவி உலகளாவியதாயிற்று. இந்த அமைப்பில் தங்கம் மட்டுமே பணத்தின் ஒரே வடிவமல்ல, ஆனால் மொத்த பணவியல் அமைப்புக்கும் அதுவே அச்சாக இருந்தது. பணத்தின் இந்த முக்கிய மான வடிவத்துக்கு மற்ற எல்லா வடிவங்களும் கீழ்ப்படுத்தப்பட்டன.

ஆனால் உலோகப் பணம் என்ற பாத்திரத்தில் தங்கம் எவ்வளவு உறுதியாக வேரூன்றியதோ அந்த அளவுக்கு அதை விரட்டுவதற்குரிய நிலைமைகளும் சிறிதும் மாற்யமுடியாதபடி வளர்ச்சியடைந்தன. தங்கத்தை விரட்டக்கூடியது எது? இன்னொரு உலோகமா? இல்லை. அந்தப் பாத்திரத்துக்குத் தகுதியான

வேறு உலோகம் இனிமேல் கிடையாது. காகிதக் கடன் பணம் தங்கத்தை விரட்டியதைப் பற்றியே நாம் பேசுகிறோம்.

தங்கம் என்னதான் பிரகாசமாக இருந்தாலும் செலாவணிச் சாதனம் என்ற செயலுக்கு அது அப்படி ஒன்றும் அத்தியாவசியமானதல்ல. குயவர் கோதுமையும் எண்ணெயும் உடனடியாக வாங்குவதற்காகத்தான் பானைகளை விற்பனை செளிணிகிறாரென்றால் அவருக் குத் தங்கம் என்ற பொருளியல் அக்கறை கிடையாது. கோதுமை மற்றும் எண்ணெயின் உடைமையாளர்கள் உடனே ஏற்றுக்கொள்ளக்கூடிய ஒருவகையான "உத்திர வாதத்தைப்" பெறுவதே அவருக்கு முக்கியமானதாகும். அவர்களும் துணி, காலணிகள் அல்லது ஒயின் வாங்குவதற்காகத்தான தங்களுடைய சரக்குகளை விற்பனை செய்கிறார்களென்றால் ஒரு நாணயத்தின் எடையும் பிரகாசமான ஒளியும் அவர்களுக்கு எத்தகைய விசேஷமான முக்கியத்துவதையும் கொண்டிருக்காது.

முழு எடையைக் கொண்ட நாணயங்களோடு தங்க ளுடைய எடையைப் பகுதியளவுக்கு இழந்துவிட்ட, தேய்ந்துபோன நாணயங்களும் அதே அளவுக்கு வெற்றி கரமாகச் செலாவணியான பொழுது இந்த உண்மை முதன் முறையாக வெளிப்பட்டது. மேலும் இந்தப் பொருளாதார உண்மையைத் தங்களுடைய சொந்த லாபத்துக்குப் பயன்படுத்திக் கொள்கின்ற சாமர்த்தியசாலிகள்தான் எங்கும் இருக்கிறார்களே! அவர்கள் நாணங்களிலிருந்து சிறு பகுதிகளை வெட்டிவிடுகிறார்கள். அதன் விளைவாக நாணங்களின் எடை குறைந்துவிடுகிறது, நாணயத்தை அச்சிடுகின்ற தொழிலோடு சேர்ந்து கள்ள நாணயம் தயாரிக்கும் தொழிலும் ஆரம்பமாகிறது. குறைந்த எடையுள்ள மற்றும் குறைவான தரத்தைக் கொண்ட நாணயங்களின் மூலம் லாபமடையக் கூடிய சாதகமான நிலையில் அரசு இருக்கிறது. பணச் செலாவணி வரலாறு என்பதே நாணயக் "கலப்படத்தின்", குறைந்த எடையுள்ள நாணயங்கள் அல்லது மலிவான உலோகத்தை அதிகமாகக் கொண்டிருக்கும் நாணங்களின் வரலாறுதான். இந்த நாணங்கள் முன்னர் குறிக்கப்பட்ட அதே மதிப்பைக் கொண்டிருக்கின்றன.

பணம் தோல் மற்றும் கடற் சங்குகளிலிருந்து தங்கம் வரை படிப்படியாக ஏற்பட்ட பரிணாம வளர்ச்சி எதிர்மறையான ஒரு போக்கோடு விசித்திரமாக இணைந்திருக்கிறது; அதாவது தங்கத்திலிருந்து மலிவான "செயற்கைப் பொருளுக்கு" மாறும் போக்கோடு இணைந்திருக்கிறது. ஆனால் முதல் பார்வையில்தான் இது விசித்திரமாகத் தோன்றுகிறது. இந்தப்

பதிற்பொருள்கள் பணப் பண்டம் என்ற பழைய அர்த்தத்தில் பணமாக இருக்கவில்லை. அவற்றைத் தயாரிப்பதற்குச் செலவழிக்கப்பட்ட உழைப்பை அடிப்படையாக் கொண்டு அவற்றின் மதிப்பு நிர்ணயிக்கப்படவில்லை. அவை இப்பொழுது அடையாளப் பணம், பணத்தின் சின்னம் தான்.

பண்டப் பணத்தை அடையாளப் பணம விரட்டி யடிப்பதற்குப் பல நூற்றாண்டுகளாயின. அது இணக்கமான, தொடர்ச்சியான நிகழ்வுப் போக்கு அல்ல. தற்பொழுதுகூட அது இன்னும் பூர்த்தியடையவில்லை. முதலாளித்துவம் நீடிக்கின்ற வரையிலும் அது பூர்த்தியடைய முடியாது.

அடையாளப் பணம் வந்துவிட்ட காரணத்தால் பணச் செலாவணி விதிகள் தலைகீழாகத் திருப்பப்பட்டுவிட்டன என்று தோன்றும், பண்டப் பணம் செலாவணியாக முடிந்த தென்றால் றகடைசியாகப் பார்க்கும்பொழுது அதன் உற்பத்திக்குச் செலவழிக்கப்பட்ட உழைப்பு அதன் மதிப்பை இதிலிருந்து வேறுபட்டிருக்கிறது, அது செலாவணியில் இருப்பதன் மூலம் தன்னுடைய "மதிப்பைப்" [வாங்கும் சக்தியை] பெறுகிறது.

வெட்டப்பட்ட அல்லது தரக்குறைவான நாணயங்களை ஒதுக்கிவிட்டுப் பார்த்தால் வரலாற்றில் முதல் அடையாளப் பணம் தோல் மற்றும் துணியில் வெளியிடப்பட்டிருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது. இவற்றுக்குப் பதிலாகக் காகிதத்தை உபயோகித்தால் என்ன? ஒரு அர்த்தத்தில் காகிதம் தானே நவீன யுகத்தின் நாகரிகத்தின் சின்னம், காகிதப் பணத்தை ஒரு வகையான கடன் பணம் என்று கருதமுடியும். ஏனென்றால் அதன் செலாவணி அதன் மீது, அதாவது அதை வெளியிட்டிருக்கும் அமைப்பின் மீது வைக்கப்படுகின்ற நம்பிக்கையைப் பொறுத்திருக்கிறது. தங்கத்துக்கு இந்த நம்பிக்கை தேவையல்ல, அதைப்பற்றி எல்லோருக்கும் நம்பிக்கையுண்டு, ஆனால் காகிதப் பணம் செலாவணியாகிற தென்றால் அதை வெளியிடு கின்ற அமைப்பு அல்லது அதிகாரத்தின் மீது மக்களுக்கு நம்பிக்கை இருப்பதனால் தான் அது முடிகிறது. அத்தகைய அமைப்பு அல்லது அதிகாரம் வங்கியாக இருக்கும். தங்களுடைய பைகளிலோ அல்லது பெட்டியிலோ காகிதப் பணத்தை வைத்திருப்பவர்கள் அதன் மூலம் அதைச் செலாவணியில் ஈடுபடுத்திய அமைப்பின் வங்கிகளின் நடப்புக் கணக்குகள் அல்லது சேமிப்புக் கணக்குகளைப் போன்ற பணத்தின் இதர வடிவங்களில் அவற்றின் கடன் அம்சம் இன்னும் அதிக வெளிப்படையாகத் தெரிகிறது.

செம்பு, நிக்கல், அலுமினியம் (வெள்ளிகூட) ஆகிய வற்றால் செய்யப்பட்ட நாணங்கள் கடன் பணமே-அந்த வார்த்தைகளின் பொருளாதார அர்த்தத்தில், அந்த உலோகங்களின் மதிப்புக்காக அவை அங்கீகரிக்கப்படவில்லை. அவற்றின் மீது அரசு தன்னுடைய முத்திரையைப் பதித்திருப்பதால் அவை ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. பண வீக்கமும் இந்த உலோகங்களின் விலைகளில் ஏற்படும் தொடர்ச்சியான அதிகரிப்பும் பல முதலாளித்துவ நாடுகளில் சில்லறை நாணயங்களைப் பொறுத்தவரை ஒரு விசித்திரமான நிலையை ஏற்படுத்தியிருக்கின்றன என்பது உண்மையே. வெள்ளி நாணயத்தின் மதிப்பைக் காட்டிலும் அதிலடங்கியிருக்கும் உலோகத்தின் மதிப்பு அதிகரிக்கத் தொடங்கியதும் வெள்ளி நாணயம் செலாவணியிலிருந்து மறைந்துவிட்டது.

மேலும் அடிக்கடி வெள்ளி நாணங்கள் நாணயத் தொகுப்பு களுக்குரிய மதிப்புடையவை. வெள்ளி டாலருக்குக் கடன் பணம் என்ற நிலை முடிந்துவிட்டது. ஆனால் பணம் என்ற நிலையே அதற்கு முடிந்துவிட்டது, ஒரு குறிப்பிட்ட பண்டமாக அது மாறிவிட்டது என்றுகூடச் சொல்லலாம். வெள்ளி உலோகத்தின் சந்தை விலையையும் அந்த நாணயம் எவ்வளவு அபூர்வமாக வெளியிடப்படுகிறதென்பதையும் மற்றும் இதர காரணங்களையும் பொறுத்து அத பத்து அல்லது இருபது காகித டாலர்களின் மதிப்பைக் கொண்டிருக்கும். விலை உயர்ந்ததாக இல்லாத, இரும்பு அல்லாத உலோகங்களில் வெளியிடப்படுகின்ற பணத்துக்கும் இதே மாதிரியான நிகழ்வு ஏற்படுகிறது, மேற்கு ஜெர்மனியைச் சேர்ந்த மூனிக்கிலுள்ள அரசு நாணயச்சாலையின் இயக்குநரோடு 1979 ஏப்ரலின் நான் பேசியபொழுது அரசு ஒரு பென்னிங் நாணயத்தை அச்சிடுவதற்கு மூன்று பென்னிங் செலவாகிறதென்று அவர் தெரிவித்தார். நாணங்களை அச்சிடுவதன் மூலம் அரசுக்கு ஓரளவு லாபம் கிடைப்பது வழக்க மானது, இங்கே அது தலை கீழாக மாறிவிட்டது. பொருளாதாரத்துக்கு இத்தகைய இழப்புக்களை அரசு ஏற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது. அதிகமான மதிப்புடைய நாணயங்களை அச்சிடுவதன் மூலம் அரசாங்கம் இன்னும் லாபமடைந்து கொண்டிருக்கிறது; அந்த லாபத்திலிருந்து இந்த இழப்பை ஈடு செய்யலாம். ஆனால் பென்னிங்களை அச்சிடுவதன் மூலம் ஏற்படுகின்ற இழப்பு அதிகரித்துக்கொண்டேயிருக்கிறது. ஏனென்றால் பொருளாதாரம் ஏராளமான அளவில் பென்னிங் நாணயங்களை விழுங்கிக்கொண்டிருக்கிறது. இதற்கு ஒரே ஒரு அர்த்தமே இருக்க முடியும்; யாரோ அவற்றை உருக்கி அதன் மூலம் லாபமடைந்து கொண்டிருக்கிறார்கள்.

காகிதக் கடன் பணத்தின் வரலாறு மற்றும் தங்கத்தோடு அதன் உறவைப் பற்றிய பிரச்சினைக்கு நாம் திரும்புவோம். காகிதப் கடன் பணம் முதலில் தங்கத்துக்குப் பதிலாக அல்லது அதன் பிரதிநிதியாகத் தோன்றுகிறது. அது மிகவும் அதிகமாக வெளியிடப்படவில்லை என்றால் உலோகத்துக்குப் பதிலாக நிர்ணயிக்கப்பட்ட விகிதத்தில் அது பரிவர்த்தனை செய்யப்படு மானால் இந்தப் பணம் வெற்றிகரமானச் செலாவணியாகும். மேலும் பொருளாதாரத்துக்கும் கணிசமான அளவுக்குப் பயன்படும். ஒரு குறிப்பிட்ட கட்டம் வரை தங்கம் அதன் பதிற்பொருள்களால் விரட்டப்படுவதே தங்க ஆதார அளவின் முற்போக்கான வளர்ச்சியாகும்.

அமெரிக்கப் பொருளியலாளரான இராபர்ட் டிரிஃபின், 1815ல் அதிகமான வளர்ச்சியடைந்த மூன்று நாடுகளில் [அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ்] மதிப்பின் அளவில் பண அளிப்பின் அமைப்பு பின்வருமாறு இருந்ததென்று கூறுகிறார்: தங்க நாணங்கள் – 33 சதவிகிதம், வெள்ளி நாணயங்கள் – 34 சதவிகிதம், ரொக்கக் காகிதப் பணம் மற்றும் சில்லறை நாணயம் [செம்பு] –26 சதவிகிதம், வங்கிக் கணக்குகளிலுள்ள பணம் –6 சதவிகிதம், இது இன்னும் இரண்டு உலோக நாணய முறை மற்றும் கடன் அமைப்பின் குறைந்த வளர்ச்சியின் காகல கட்டமாகத்தான் இருந்தது.

ஒரு நூற்றாண்டில், 1913–வரை பண அளிப்பின் அமைப்பில் முக்கியமான மாற்றங்கள் ஏற்பட்டுவிட்டன. தங்கத்தின் பங்கு 10 சதவிகிதமாகக் குறைந்துவிட்டது–எனினும் இந்தக் கால கட்டத்தின்போது அது தன்னுடைய பலத்தின் சிகரத்தில் மொத்த பணவியல் அமைப்பின் அச்சாக இருப்பது தடுக்கப்படவில்லை. வெள்ளியின் பங்கு 3 சதவிகிதமாகக் குறைந்தது. அது கீழ்நிலையான பாத்திரத்தை வகிக்கத் தொடங்கியது. ரொக்கப் பணம் [காகிதமும் செம்பும்] 19 சதவிகிதமாக இருந்தன; மீதம் 68 சதவிகிதம் வங்கிக் கணக்குகளின் பணத்தால் நடை பெற்றது. கடன் அமைப்பு பிரம்மாண்டமான அளவுக்கு வளர்ச்சியடைந்து விட்டது.

அரசாங்கங்கள் மிகவும் ஆரம்பக்காலத்திலேயே [குறைந்த பட்சம் 17–ம் நூற்றாண்டிலேயே] தங்கத்துக்கு அல்லது வெள்ளிக்கு மாற்றப்பட முடியாத காகிதப் பணத்தை அவசியமானதென்று பொது மக்களை நம்பவைத்து விட்டால் இதைச் செய்வது மிகச் சுலபமானதே. 19,20ம் நூற்றாண்டுகளில் அரசு இதே நோக்கத்துக்குக் கடன் அமைப்பைப் பயன்படுத்தியது. வங்கிகளின் கணக்குப் புத்தகங்களில் அரசுக் கருவூலத்தின் பெயரில் கடன் எழுதிக்கொண்டு அதற்குப் பதிலாகத் தன் கடன் பத்திரங்களை வாங்கிக் கொள்ளுமாறு வங்கிகளை அரசு நிர்ப்பந்தித்தது. இந்த நிதித்ததே.

உலோகத்தோடு சம்பந்தப்பட்ட விதத்தில் காகிதக் அதிகரிப்பும், அதாவது பணவீக்கம் ஏற்பட்டது. நவீன நிலைமைகளில் காகிதக்கடன் பணம் தங்கத்தோடு எல்லாத் தொடர்பையும் இழந்துவிட்டது. அது மட்டுமே பணத்தின் செலாவணியாகின்ற வடிவமாக இருக்கிறது.

அதன் மதிப்புக் குறைவை பண்ட விலைகளின் பொது மட்டத்தின் அதிகரிப்பின் மூலமாக அளக்க முடியும்; இது பல்வேறு குறியீட்டெண்களின் உதவியோடு எடுத்துரைக்கப்படுகிறது. அதே சமயத்தில் இந்தப் பணம் தங்கத்தோடு சம்பந்தப்பட்ட விதத்திலும் வழக்கமாக மதிப்புக் குறைவுக்கு உள்ளாகிறது; தங்கத்தின் விலை அதிகரிப்பதில் இதைக் காண முடியும். ஆனால் இந்த நிகழ்வுப் போக்கின் பொருளாதார மற்றும் சமூக முக்கியத்தும் தற்பொழுது ஒப்பு நோக்கில் இரண்டாம் நிலையானதே. தங்க விலையின் அதிகரிப்பைக் காட்டிலும் எண்ணெளிணி விலையின் அதிகரிப்புதாண் பண வீக்கத்தின் அதிக முக்கியமான கூறு என்றுகூடச் சொல்லலாம்.

தங்கத்தை மஞ்சள் பிசாசு என்று சொன்னால் காகிதப் பணத்தைக் கொடுமையான கண்டுபிடிப்பு என்று பலர் கருதுகிறார்கள். ஏனென்றால் அது ஏழைகள், ஒன்றுமறியாதவர்களிடமிருந்து பணத்தைப் பறிக்கும் கருவியாக இருக்கிறது. கத்தே தன்னுடைய பாஸ்து நாடகத்தின் இரண்டாம் பகுதியில் காகிதப் பணத்தை இப்படிச் சித்திரிக்கிறார்.

கத்தேயின் காலத்தில் ஒரு விதிவிலக்காக இருந்தது தற்பொழுது எங்கும் பின்பற்றப்படுகின்ற நடவடிக்கையாக இருக்கிறது. முதலாளித்துவ நாடுகளில் தங்க நாணங்கள் செலாவணியிலிருந்து அகற்றப்பட்டுத தற்பொழுது சில பத்தாண்டுகளாகிவிட்டன. காகிதக் கடன் பணத்தைத் தங்கமாக மாற்றும் முறையின் கடைசிச் சுவடுகளும்கூட மிகவும் சமீப காலத்தில் மறைந்து போய்விட்டன. பண வீக்கம் முதலாளித்துவப் பொருளாதாரத்தின் நிரந்தரமான கூறாகிவிட்டது. பொருளியலாளர்களும் அரசியல்வாதிகளும் அதைப் பற்றியே எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருப்பதால் இந்தச் சொல் எப்படிச் தோன்றியது என்பதைக் கண்டுபிடிக்க அவர்கள் முயற்சி செய்திருக்கிறார்கள். அலெக்சாந்தர் டெல் மார் என்ற அமெரிக்கர்தான் இந்தச் சொல்லை 1864-ம் வருடத்தில் முதன்முதலாக ஆங்கிலத்தில் உபயோகித்தார் என்பது அநேமாகத் திட்டவட்டமாக நிறுவப்பட்டிருக்கிறது.

அவர் தங்கததையும் பணத்தையும் பற்றி சில கூசாரசியமான புத்தகங்களை எழுதியிருக்கிறார். அமெரிக்காவில் உள்நாட்டு யுத்தம் நடைபெற்ற காலத்தில் வாஷிங்டன் அரசாங்கம் ‘‘பச்சைக் காகிதம்’’ என்று சொல்லப்பட்ட, மாற்றப்பட்ட முடியாத காகிதப் பணத்தை ஏராளமான அளவில் வெளியிட்ட பொழுது இது நடைபெற்றது. ரஷ்யாவில் புரட்சிக்கு முந்திய இலக்கியத்தில் ‘‘பண வீக்கம்’’ என்ற சொல் அநேகமாக உபயோகிக்கப்படவில்லை; 1923– 24ம் வருடங்களில், குறிப்பாக ஜெர்மனியில் ஏற்பட்ட மாபெரும் பண வீக்கத்தினால் மார்க் பல பில்லியன் தடவைகள் மதிப்புக் குறைவடைந்ததை ஒட்டி அந்தச் சொல் முதலில் உபயோகிக்கப்பட்டது.தங்கத்தோடு இணைக்கப்படாத காகிதக் கடன் பணம் பொருளாதாரத்துக்கு நல்ல முறையில் உதவி செய்யுமா? அது நிலையான வாங்கும் சக்தியைக் கொண்டிருக்குமா? ஆம். ஆனால் சிறப்பான முறையில் திட்டமிடப்பட்ட உற்பத்தியோடும் பொருள்கள் மற்றும் சேவைகளின் கைவரப் பெறுதலோடும் நெகிழ்ச்சியான முறையில் ஒருங்கிணைக்கப்படும் பொழுது மட்டுமே அது சாத்தியம். சோஷலிசம் மட்டுமே அத்தகைய நிலைமைகளைப் படைக்கிறது. ஆனால் சோஷலிஸ்ட் சமூகத்தில்கூட இந்தச் சாத்தியம் தானாக நிறைவேறுவதில்லை, பெரிய கஷ்டங்களைச் சமாளித்த பிறகே அது நிறைவேறுகிறது.

பணவியல் அமைப்பின் அபிவிருத்தி தங்கத்தோடு இணைக்கப்பட்டிராத காகிதப் கடன் பணத்தின் வளர்ச்சி யின் மூலமாக நடைபெற வேண்டும். அதன் வாங்கும் சக்தியின் நிலையான தன்மை சமூக உற்பத்தி, பண்டப் புழக்கம், அபிவிருத்தியடைந்த திட்டமிடுதல் ஆகியவற்றின் தொடர்ச்சியான வளர்ச்சியினால் உத்தர வாதம் செய்யப்படுகிறது. வங்கிப் பண மாற்றங்களை விரிவுபடுத்துவத்தைக் கொண்டிருக் கிறன்றன. ரொக்கக் காகிதப் பணத்துக்குப் பதிலாக வங்கிப் பணம், பணம் இல்லாத வழங்கீடுகள் ஆகியவற்றின் அளவு விகிதம் அதிகரித்து வருகிறது. அது தொடர்ந்து அதிகரிக்கும். அடுத்துவரவிருக்கும் சில பத்தாண்டுகள் வங்கிக் கடன் தீர்வுகள், வர்த்தகக் கணக்குகள், ஆவணச் சோதனை ஆகியவை இயந்திரமயமாக்கப்படுதல் அதிகரிக்கும் கால கட்டமாகும்.

# மஞ்சள் உலோகத்தை எப்படித் தோண்டுகிறார்கள்?

பெ லிக்ஸ் கிரிவின் நகைக்சுவையான விடுகதை களையும் உருவகக் கதைகளையும் எழுதியிருக்கிறார். அவர் தங்கத்தைப் பற்றி பின்வருமாறு எழுதுகிறார்.

"வாழ்க்கைக்குப் பிராணவாயு அவசியம்; ஆனால் தங்கம் இல்லாமல் வாழ்க்கை நடத்துவதும் சுலபமான காரியமல்ல. உண்மையில் நடப்பதென்ன? பிராணவாயு நிறையக் கிடைக்கிறது, சுலபமாக மூச்சுவிட முடிகிறது என்றால் நம்மிடம் தங்கம் இருப்பதில்லை. நம்மிடம் தங்கம் ஏராளமாக இருக்கும் பொழுது மூச்சுவிட முடிவதில்லை. அதாவது நம்மிடம் போதுமான பிராணவாயு இல்லை என்று அதற்கு அர்த்தம்.

ஏனென்றால் பூமியிலேயே மிகத் தொன்மையான விதிகளின்படி, பூஷ்கின் சித்தரித்த பேராசைக்கார வீரனின் கடைசிச் சொற்களை நினைவு கூர்வோம். அந்த வீரனிடம் ஆறு பெட்டிகள் நிறையத் தங்கம் இருந்தது. அவன் தன்னுடைய தங்கத்துக்கே பலியானான்.

**எனக்கு மயக்கமேற்படுகிறது....**

**என் கால்கள் துவள்கின்றன ....**

**எனக்கு மூச்சுத் திணறுகிறது....**

**காற்று! காற்று வேண்டும்!**

**என் சாவிகள் எங்கே?**

**எங்கே சாவிகள்!....★**

இதிலிடங்கியிருக்கும் நீதி அன்றாட வாழ்க்கையிலிருந்து வெகுதூரம் ஒதுங்கிப்போன, அயற்பண்பு சார்ந்த பொக்கிஷங்களின் உடைமையாளர்களுக்கு மட்டு மல்லாமல் இன்னும் சாதாரணமான சொத்து வடிவங் களை அதிகமாகத் திரட்டிக் கொண்டிருப்பவர் களுக்கும்

பொருந்துவதே... மற்ற பல உதாரணங்களைப் போலவே இங்கும் தங்கம் செல்வத்தின் குறியீடாக, உடைமையின் குறியீடாக இருக்கிறது.

இங்கே உருவகமாகப் பயன்படுத்தப்பட்டிருக்கும் ரசாயன நிகழ்வைப் பொறுத்தவரை அதைப் பற்றி எத்தகைய சந்தேகமும் கிடையாது. தங்கம் பிராணவாயுவோடு சேர்வதில்லை என்ற உண்மை அதன் பொருளாதாரச் செயல்களில் முக்கியமான பாத்திரத்தை வகித்திருக்கிறது, இன்னும் வகிக்கிறது என்பது நாம் அறிந்ததே.

இந்தச் செயல்களை இன்னும் விரிவாக விவாதிப்பதற்கு முன்பு தங்கம் இயற்கையாகக் கிடைக்கின்ற வடிவத்தைப் பற்றி, அது எங்கே எடுக்கப்படுகிறது, அது சமூக-பொருளாதாரச் செயல்களை எப்படிப் பெறுகிறது என்பனவற்றைப் பற்றி சுருங்கிய அளவிலாவது நாம் எழுதுவது அவசியம்.

# ரசாயனம், பௌதிகம், நிலவியல்

க லைக்களஞ்சியத்ல் பின்வரும் குறிப்பு காணப்படுகிறது: தங்கம் (இலத்தீன் மொழியில் Aurum), Au, மெண்டேலேயெனின் தனிம அட்டவணையின் முதல் பிரிவில் உள்ள ரசாயன மூலகம்; அணு எண் 79, அணுப் பொருண்மை 196.665; கனமான உலோகம், மஞ்சள் நிறம். ஒரே ஒரு நிலையான அசட்டோப் மட்டுமே உண்டு.

செம்பு, வெள்ளி மற்றும் தங்கம் ஒரு விசேஷ துணைப்பிரிவாக இருக்கின்றன. அவற்றின் அணு அமைப்பில் பொதுக் கூறுகளை, ஒரே விதமான ரசாயனத் தன்மைகளைக் கொண்டிருக்கின்றன. இம் மும்மூர்த்திகளும் நிலவியல் தொடர்பாலும் இணைக்கப் பட்டிருக் கின்றன. தங்கம் இயற்கையான வடிவத்தில் வெள்ளியுடனும் பல இடங்களில் செம்புடனும் கலந்து அகப்படுகிறது.

தங்கம் வெள்ளியுடனும் செம்புடனும் கொண்டிருக்கும் ரசாயன மற்றும் நிலவியல் உறவு அவற்றின் பொருளதார உறவின் அடிப்படைக்குக் காரணம் என்பதில் சந்தேக மில்லை. இந்த மூன்று உலோகங்களுமே வரலாற்றில் பணச் செயல்களை நிறைவேற்றிருக்கின்றன. ஆபரணத் தொழிலில் தங்கம், வெள்ளி இரண்டும் சேர்ந்தே பெரும்பாலும் உபயோகப்படுத்தப்படுகின்றன.

ரசாயனரீதியில் தங்கம் பாதிக்கப்படுவதில்லை என்ற போதிலும் அதற்குச் சல விதிவிலக்குகளும் உண்டு. அது அமிலங்களில் கரைவதில்லை என்றா லும் ஹைட்ரோ க்ளோரிக் அமிலத்தையும் நைட்ரிக் அமிலத்தையும் கலந்த “ஜாரின் வோட்காவுக்கு” முன்னால் அது செயலற்றுப்போய் விடுகிறது. சோடியம் ஸையனைட் (NaCN) மற்றும் பொட்டாஸியம் ஸையனைடில் (KCN) தங்கம் கரைவதனால் இந்த அரிய உலோகத்தை அதன் தாதுப்பொருளிலிருந்து பிரித்தெடுக்கும் முக்கிய மான முறையாகத் தற்பொழுது இருக்கின்ற ஸையனை டிசேஷன் என்ற முறையின் அடிப்படையாக இருக்கிறது.

19-ம் நூற்றாண்டின் கடைசியில் இந்தமுறை பின்பற்றப் பட்டதனால் தென் ஆப்பிரிக்காவிலுள்ள தங்கச்சுரங்கத் தொழிலில் புரட்சிகரமான மாற்றமேற்

பட்டது. இதன்மூலம் ஒப்புநோக்கில் குறைவான ஆனால் அசாதாரணமான அளவுக்கு நிலையான உலோக உள்ளடக்கத்தைக் கொண்ட தாதுப் பொருளிலிருந்து உலோகத்தைப் பிரித்தெடுப்பது சாத்தியமாயிற்று.

தங்கத்தின் பொருளாதாரச் செயல்களுக்கு அதன் பௌதிக குணாம்சங்களும் முக்கியமானவையாகும். தங்கம் மிகமென்மையான, வளையக்கூடிய உலோகம், அதை முடிவில்லாத அளவுக்கு அடித்து நீட்டலாம். மிக மெல்லிய, அநேகமாக ஊடுருவிப் பார்க்கக்கூடிய சவ்வைப் போல, மனித உரோமத்தைக் காட்டிலும் மெல்லிய கம்பி மாதிரி (இந்தக் கம்பியில் ஒரு கிராம் இரண்டு கிலோமீட்டர் நீளத்துக்கு வரக்கூடியதாகும்) இதைத் தயாரிக்க முடியும்.

தங்கம் வெப்பம் மற்றும் மின்சாரக் கடத்தியாகும். இது 10640 சென்டிகிரேட் வெப்பத்தில் உருகக் கூடியது. அதன் அடர்த்தி (இன எடை) ஒரு கியூபிக் சென்டி மீட்டருக்கு 19.3 கிராம்களாகும். பிளாட்டின் இனத்தைச் சேர்ந்த உலோகங்கள் தான் தங்கத்தைக் காட்டிலும் அதிகமான எடையைக் கொண்டிருக்கின்றன.

பணவியல் ஆதார எடையைக் கொண்டிருக்கும் தங்கப் பாளங்கள் மட்டுமே ரசாயன ரீதியில் அநேகமாகக் கலப்பற்ற தங்கத்தைக் (சுமார் 99.5–99.9) சதவிகிதம்) கொண்டிருக்கின்றன. தொழில் நுட்பவியலிலும் ஆபரணத் தொழிலிலும் நாணயங்கள் அச்சிடுவதிலும் எப்பொழுதுமே கலப்பு உலோகமாகத் தான் தங்கம் உபயோகிக்கப்படுகின்றது. பெரும்பாலும் செம்பு அல்லது வெள்ளி அதோடு சேர்த்து உபயோகிக்கப்படுகிறது. அந்தக் கலப்பு அதற்கு நீடித்து உழைக்கக்கூடிய தன்மையையும் இதர அவசியமான குணங்களையும் கொடுக்கிறது; அந்தப் பொருள்களை மலிவாகவும் செய்கிறது. கலப்பிலுள்ள தங்க அடக்கத்தைத் தூய்மை என்று சொல்கிறோம்.

சோவியத் யூனியனிலும் மற்ற பல நாடுகளிலும் கலப்பு உலோகத்தில் ஒவ்வொரு ஆயிரம் பங்குகளிலும் தங்கம் எத்தனை பங்கு இருக்கிறது என்பதைக் கொண்டு அதன் தூய்மையை எடுத்துரைக்கிறோம். மேலே சொல்லப்பட்ட பாளங்களின் தூளிணிமை முதல் 995 முதல் 999 வரை உள்ளது. பழைய ரஷ்யாவில் ஒரு பவுண்டை 96 ஜோலோட்னிக்குகளாகப் பிரித்து அதில் எத்தனை ஜோலோட்னிக்குகள் சுத்தமான தங்கம் இருக்கின்றன என்பதை நிர்ணயிக்கும் அளவு கோல் இருந்தது. சோவியத் யூனியனிலும் இந்த அளவுகோல் 1927 வரை பின்பற்றப்பட்டது.

கடைசியாக, சில மேற்கு நாடுகளில், குறிப்பாக பிரிட்டனிலும் அமெரிக்காவிலும் காரட் என்ற அளவுகோல் இன்னும் உபயோகப்படுத்தப் படுகிறது. மொத்தம் 24 காரட்டுகளில் எத்தனை காரட் தூய்மை என்பதைச் சொல்கிறார்கள். உதாரணமாக, சில வகையான ஆபரணங்களில் 958 பங்கு தூய்மையான தங்கம் உபயோகப்படுத்தப்படுகிறது; இது ஜோலோட்னிக் முறையில் 92க்கும், காரட் முறையில் 23 காரட்டுகளுக்கும் பொருந்தும். பொருள்கள் தயாரிப்பதற்கு இதைக் காட்டிலும் குறைவான தூய்மையைக் கொண்ட தங்கத்தை உபயோகிப்பது வழக்கம்.

ஆங்கில சவரன் 22 காரட் தங்கத்திலிருந்து அச்சிடப் பட்டது (இன்னும் ஏற்றுமதிக்காக அச்சிடப்படுகிறது). இது 916.67 தூய்மைக்கும் சமம் : 7.322 கிராம் சுத்தமான தங்கத்தைக் கொண்டிருக்கும் ஒரு நாணயம் 7.988 கிராம்கள் எடையைக் கொண்டிருக்கும். இன்று அதன் விலை ஒரு காகிதப் பண ஸ்டர்லிங் பவுன் அல்ல. அதைக் காட்டிலும் மிக அதிகம் என்பது இயற்கையே.

இருபது டாலர்கள் மதிப்பைக் கொண்ட அமெரிக்கத் தங்கநாணயம் ("இரட்டைக் கழுகு" என்று சொல்லப் படுவது) 900 தூய்மையைக் கொண்ட தங்கத்திலிருந்து அச்சிடப்பட்டு 33.44 கிராம்கள் எடையைக் கொண்டிருக் கும். அதிலுள்ள தங்கத்தின் எடை 30.093 கிராம்களாகும். நவீன காலத்தின் அதிகமான எடையுள்ள நாணயம் மெக்சிகோவின் சென்டினரியோ (50 பெசோக்கள்) இதன் எடை 41.66 கிராம்களாகும். இதிலுள்ள தங்கத்தின் எடை 37.494 கிராம்களாகும். இந்த "கனமான" நாணயத்தின் வட்டம் 37 மில்லிமிட்டர்கள், கனம் 2.8 மில்லிமீட்டர்கள்.

தங்கம் எல்லா இடங்களிலும் காணப்படுகிறது. எல்லா விதமான நிலங்களிலும் எல்லா தாதுப்பொருட்களிலும் கடல் தண்ணீரிலும் இருக்கிறது. ஆனால் பெரும்பாலான இனங்களில் அதன் குவிப்பு மிகவும் சொற்ப மான அளவுக்குத் தான் இருக்கிறது. சமீபத்திய மதிப்பீடுகளின்படி பூமியின் புறத்தோட்டின் ஒரு டன் மண்ணில் சராசரியாக சுமார் 4 மில்லி கிராம் தங்கம் இருக்கிறது. மண்ணில் கிடைக்கும் செம்பு, துத்தநாகம் மற்றும் ஈயம் ஆகியவற்றைக் காட்டிலும் இது பல்லாயிர மடங்கு குறைவானதே. பூமியின் மேல்தோட்டைக் காட்டிலும் பூமியில் விழுகின்ற எரிநட்சத்திரங்கள் இன்னும் அதிகமான அளவு தங்கத்தை வழக்கமாகக்கொண்டிருக்கின்றன என்பது சுவாரசியமானதாகும். எரி நட்சத்திரங்களின் பொருட்சேர்க்கை பூமியின் மத்தியப் பகுதிகளைப் போன்றிருப்பதாக அனுமானிக்கப்படுவதால், பூமியின் மத்தியப் பகுதியில்

மற்ற கனமான உலோகங் களோடு ஏராளமான அளவுக்குத் தங்கமும் இருக்கிற தென்ற கருதுகோளை சில விஞ்ஞானிகள் முன்வைத்திருக் கிறார்கள்.

கனிப்பொருள்கள் என்பன ரசயானக் கூட்டுப் பொருள் களே. இவற்றில் உலோகங்களும் அடங்கியிருக்கின்றன. இவற்றிலிருந்துதான் உலோகங்கள் வழக்கமாகப் பிரித்தெடுக்கப்படுகின்றன. சுமார் இருபது வெவ்வேறான கனிப்பொருள்களில் தங்கம் கிடைத்த போதிலும் மூலத் தங்கமே தொழில்துறை ரீதியில் முக்கியமானதாகும். இது சாதாரணமாகக் கண்ணால் பார்க்க முடியாத துகளிலிருந்து பல பத்து கிலோகிராம்கள் எடையுள்ள கட்டிகள் வரை வெவ்வேறு அளவைக் கொண்ட ஸ்படிகக் கற்களில் பொதிந்திருக்கிறது. ஒப்பு நோக்கில் பெரிய தங்கக் குந்துமணிகள் –"கண்ணால் பார்க்கப்படக் கூடிய தங்கம்" –அபூர்வமாகக் கூட அகப்படுவதில்லை; ஏராளமான தங்கத் தாதுப்பொருள் இருக்கும் சுரங்கத்தில் பல வருடங்களாகப் பணியாற்றிக்கொண்டிருக்கும் ஒரு மண்ணியல் நிபுணர் குந்துமணியளவு தங்கம் பொதிந் திருக்கும் கல்லை ஒருக்காலும் பாராதிருக்கவும் கூடும். ரஷ்யாவில் யாரும் தங்கக் கட்டிகளைக் கண்டெடுத்தால் அரசுப் பொருட்காட்சிச்சாலையில் அவற்றை ஒப்படைக்க வேண்டும் என்று 1825–ம் வருடத்திலேயே அரசு ஆணையிட்டது. தற்பொழுது சோவியத் யூனியனில் பிரபலமடைந்திருக்கும் மாணிக்கத் தொகுப்புக்கு இவ்வாறு அடிப்படை போடப்பட்டது.

உலக முழுவதிலும் சில டஜன் பெரிய தங்கக் கட்டிகள் தான்இருக்கின்றன. இவை ஒவ்வொன்றுக்குமக் தனித்தனிப் பெயர் உண்டு. ரஷ்யாவிலிருக்கும் தங்கக் கட்டிகளில் மிகப் பெரிய 36 கிலோ எடையுள்ளது. இது 1842ல் யூராலில் கண்டுபிடிக்கப்பட்டது. இதற்குப் "பெரிய முக்கோணம்" என்று பெயர் சூட்டப்பட்டிருக்கிறது. சோவியத் யூனியனில் வைக்கப்பட்டிருக்கும் மாணிக்கத் தொகுப்பில் இன்றும் இந்தக் கட்டியைப் பார்க்க முடியும். மற்ற நாடுகளில் கண்டுபிடிக்கப்பட்ட பெரிய தங்கக் கட்டிகள் தங்கத்தால் செய்யப்பட்ட கலைப் பொருள்களுக்கு ஏற்பட்ட கதியை அடைந்தது துரதிர்ஷ்டமானதே.

அவை உலோகத்துக்காக உருக்கப்பட்டுவிட்டன. அதனால்தான் பொயி தங்கக் கட்டிகளைப் பற்றி இன்று நம்மிடம் மிகவும் குறைந்த விவரங்கள் மட்டுமே இருக்கின்றன. ஒரு தகவலின்படி ஆஸ்திரேலியாவில் ஒரு நாட்டுப்பாதையின் செல்தடப் படுகுழியில் 1869ல் கண்டு பிடிக்கப்பட்ட "அந்நியருக்கு வரவேற்பு" என்ற தங்கக்கட்டிதான் மிகப் பெரியதாகும்.

அதன் எடை 70.9 கிலோ; அதிலுள்ள சுத்தமான தங்கத்தின் எடை 69.6 கிலோ எடையாகும். தங்கத் தின் வரலாற்றைப் பற்றி சிறப்புமிக்க நூல்களில் ஒன்றை எழுதியுள்ள ஜெர்மன் விஞ்ஞானியான ஜி.குவிரிங் 19ம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் பிரேசில் நாட்டில் 193 கிலோ எடையுள்ள ஒரு தங்கக்கட்டி கண்டுபிடிக்கப்பட்டதாக எழுதியிருக்கிறார். ஆஸ்திரேலியாவில் கண்டுபிடிக்கப்பட்ட "ஹோல்டெர் மான் தங்கக் கட்டி" கல்லோடு சேர்ந்து 285 கிலோ எடையைக் கொண்டிருந்தது; அதில் 93 கிலோ தங்கம் இருந்தது.

ஆனால் மிகவும் பெரும்பான்மையான தங்கம் கட்டி களாகக் கிடைப்பதில்லை என்பது உண்மையே. இரண்டு வகையான தங்க வண்டல் தொழில்துறை ரீதியில் முக்கியமானவையாகும். மூல வண்டல் (தாதுப்பொருள்), துணைவண்டல் (வண்டற்படிவு அல்லது வண்டல் மண்).தொன்மைக் காலத்தில் நில அமைப்பு உருவாகிக் கொண்டிருந்த பொழுது, பூமியின் மேல்தோடு உருவாகிய பொழுது முதல் வகையைச் சேர்ந்த தங்க வண்டல் ஏற்பட்டது. இது வழக்கமாக மலைப் பிராந்தியங்களில் காணப்படுகிறது. இரண்டாவது வகை தங்க தாதுப்பொருளின் மீது காற்று, தண்ணீர் மற்றும் இதர இயற்கைச் சக்திகளின் தாக்குத்தினால் ஏற்படும் விளைவாகும். இது பெரும்பாலும் இன்றைய அல்லது இதற்கு முன்பிருந்த ஆறுகளின் பாதைகளில் அகப்படுகிறது. தங்கத் தாதுப்பொருள் பூமியில் மிகவும் ஆழமான பகுதிகளில்தான் பெரும்பாலும் காணப்படும்; அதை சுரங்கத்தின் மூலம் தோண்டி எடுக்க வேண்டும். வண்டற்படிவங்கள் பூமியின் மேற்பரப்புக்கு அருகில் அல்லது மேற்பரப்பிலேயே வழக்கமாகக் காணப்படுகின்றன. ஆனால் சில சமயங்களில் அவற்றின் மீது ஓரளவுக்கு கனமான பாறை அடுக்குகள் இருப்பதுண்டு.

தங்கம் கிடைப்பதில் மூன்றாவதாக ஒரு வகையைப் பிரித்துக் கூற விஞ்ஞானிகள் சமீப காலத்தில் ஒத்துக்கொண்டுள்ளனர். முன்பே நாசப்படுத்தப்பட்ட பாறையின் மீது திரும்பத் திரும்ப நடைபெறுகின்ற நிலவியல் நிகழ்வுகளின் விளைவாகத் தங்கம் தோற்றுவிக்கப்படுவதுமுண்டு. தென் ஆப்பிரிக்காவில் விட்வாட்டர்ஸ் ராண்ட் என்ற இடத்திலுள்ள பிரபலமான மலைத் தொடர்களை இதற்கு உதாரணமாகக் கூறலாம். ஆனால் இங்கே தங்கம் பாறைகளில் பொதிந்திருக்கின்ற முறையிலும் அவை தோண்டியெடுக்கப்படுகின்ற விதத்திலும் தாதுப் பொருட்களைப் போன்றிருப்பதால் அந்த வகையோடு இது பெரும்பாலும் சேர்க்கப்படுகிறது.

ஆறுகளின் வண்டற்படிவங்களில் மக்கள் முதலில் தங்கத்தைப் பிரித்தெடுக்கத் தொடங்கியது இயற்கை யானதே. இந்தப் பிரதேசங்களுக்குப் போவது சுலபம், சிக்கலான கருவிகளோ, வேலை முறையோ இங்கே அவசியமல்ல. 19ம் நூற்றாண்டில் கலிபோர்னியா, ஆஸ்திரேலியா மற்றும் அலாஸ்காவில் ஏற்பட்ட தங்க வேட்டைகளும் ரஷ்யாவிலேற்பட்ட வளமான பல கண்டுபிடிப்புகளும் பிரதானமாக வண்டற்படிவங்களோடு சம்பந்தப்பட்டவையே. இன்று நமக்குக் கிடைத்திருக்கும் மதிப்பீடுகளின்படி 1848–1875ம் வருடங்களில் உலகத் தின் தங்க உற்பத்தியில் 90 சதவீகிதம் வண்டற் படிவுகளிலிருந்தே கிடைத்தது.

ஆனால் 1929ல் முதலாளித்துவ உலகத்தில் இது 8 சதவிவிகதமாகவும் 1971ல் 2 சதவீகிதமாகவும் குறைந்தது. இப்பொழுது அநேகமாக எல்லாத் தங்கமுமே தென் ஆப்பிரிக்கக் குடியரசிலுள்ள மலைத் தொடர்களிலிருந்தும் உலகத்தின் பல பகுதிகளி லிருக்கும் மூலப் பிறப்பிடங்களிலிருந்தும் வெட்டி எடுக்கப்படுகிறது. வெள்ளி, செம்பு, யுரேனியம் மற்றும் இதர தாதுப்பொருள்களிலிருந்து துணைப் பொருளாகக் கிடைக்கும் தங்கத்தின் சதவீகிதம் சமீப வருடங்களில் கணிசமாக அதிகரித்திருக்கிறது.

1923ல் சோவியத் யூனியனில் யாக்குடியா பிரதேசத் திலுள்ள ஆல்டான் ஆற்றங்கரையில் தங்கம் கண்டு டிக்கப்பட்டது, இந்த வண்டற்படிவுகளில் இன்றளவும் தங்கம் எடுக்கப்பட்டு வருகிறது. சோவியத் யூனியனில் மிக உயர்ந்த தொழில்நுட்பவியலைப் பயன்படுத்தி வண்டற்படிவுகளிலிருந்து தங்கத்தைப் பிரித் தெடுத்தல் இன்றும் கணிசமான முக்கியத்துவத்தைக் கொண்டிருக்கிறது.

அதிகமான அளவில் தங்கம் கிடைக்கின்ற ஒரு புதிய இடம் கண்டுபிடிக்கப்படுவது பரபரப்பானது என்பதோடு சில சமயங்கில் நாடகத்தைப்போல சுவாரசியமானதாகவும் வேறு சமயங்களில் சோகமான சம்பவமாகவும் இருக்கிறது. உண்மையான மற்றும் கற்பனையான கண்டுபிடிப்பு களைப் பற்றி வர்ணனைகளை இலக்கியத்தில் அடிக்கடி பார்க்கிறோம். ஜேக் லண்டன் என்ற மாபெரும் எழுத்தாள ருடைய சிறு கதையில் பின்வரும் வர்ணனை இடம் பெற்றிருக்கிறது.

“அவன் கையில் அரைக் கல்லை மட்டும்தான் பிடித்துக்கொண்டிருந்தான், அதன் மறு பாதி கன்னித் தங்கம். அதைச் சட்டியில் போட்டுவிட்டு இன்னொரு கல்லை எடுத்துப் பரிசோதித்தான். அதில் மஞ்சளாக ஒன்றுமேயில்லை. ஆனால் அவன் தன்னுடைய வலுவான விரல்களினால்

உளுத்துப்போன குவார்ட்சை இரண்டு கைகளிலும் பிரகாசமான மஞ்சள் நிறைகின்ற வரை சுரண்டினான். ஒவ்வொரு துணுக்காக மண்ணை அகற்றிவிட்டு கொதித்துக் கொண்டிருந்த தங்கச் சட்டியில் அதைப் போட்டான். அது ஒரு பொக்கிஷக் குழியே. அங்கே குவார்ட்ஸ் மிகவும் உளுத்துப்போயிருந்த படியால் தங்கத்தைக் காட்டிலும் அது குறைவாகத்தான் இருந்தது. அவ்வப்பொழுது அவனுக்குக் கிடைத்த கட்டிகு கல்லே இல்லாமல் தங்கமாக இருந்தது. ஒரு பாறையில் அவனுடைய குந்தாலி பட்டு அதிலிருந்த தங்கம் அப்படியே நெஞ்சைத் திறந்து காட்டியது. உள்ளங்கையில் மாணிக்கக் கற்களைப் போல அது பளபளப்பாக ஒளி வீசியது. அவன் அதைப் பார்த்துத் தலையை அசைத்தான். அதன் மீது ஒளி அழகாகப் பட்டுத் தெறிப்பதைப் பார்க்கத் தலையை மெதுவாகக் கொண்டு போய்த் திரப்பினான்,'' அந்தக் கதையின் முடிவு இதுதான். அந்தத் தங்கவேட்டைக்காரனை ஒரு திருடன் தாக்குகிறான். ஆனால் அந்த அதிர்ஷ்டசாலி தன்னுடைய சூழ்ச்சியினால் எதிரியைக் கொன்றுவிடுகிறான். பிறகு நாற்பதாயிரம் டாலர்கள் மதிப்புள்ள தங்கத்தை எடுத்துக்கொண்டு தோத்திரப் பாடலைப் பாடியவாறு சொந்த ஊருக்குத் திரும்புகிறான்.

இன்றும்கூட உண்மையான வாழ்க்கையில் தங்கம் கிடைக்குமிடங்கள் குறிப்பிடத்தக்க விதத்தில் கண்டு பிடிக்கப்படுகின்றன. ஆனால் தங்க உற்பத்தி யின் எதிர்காலம் இவற்றை நம்பியிருக்கவில்லை என்பது உண்மையே. மண்ணியல்ரீதியில் தங்கவள வாய்ப்பைக் கண்டுபிடிக்கும் முயற்சி தற்பொழுது கறாரான விஞ்ஞான அடிப்படையில் சிக்கலான, விலையுயர்ந்த கருவிகளின் உதவியைக் கொண்டு செய்யப்படுகிறது. அதன் வெற்றிக்குக் பல துறைகளையும் சேர்ந்த நிபுணர்களின் ஒருங்கிணைந்த வேலை அவசியமாக இருக்கிறது. இந்த வேட்டையின் பொழுது தங்கம் கிடைக்கும் பகுதியின் எல்லைகள் கண்டுபிடிக்கப்படுகின்றன.

அந்தத் தாதுப்பொருளிலிருக்கும் சராசரியான தங்க உள்ளடக்கம் மதிப்பிடப்படுகிறது. அங்கே தங்கம் கிடைக்கின்ற நிலைமைகள் கணக்கிலெடுத்துக் கொள்ளப்படுகின்றன. அங்கே தங்கத்தைத்தோண்டி எடுப்பதிலுள்ள லாபத்தைப் பற்றி பொருளாதார ரீதியில் மதிப்பீடுகள் செய்யப்படுகின்றன.

எவ்வாறு தோண்டியெடுக்கப்படுகிறது?

டிமோத்தி கிரீன் என்பவர் தங்கத்தை அதன் எல்லா வடிவங்களிலும் அதன் முன்னேற்றத்தின் எல்லாக் கட்டங்களையும் தன் கண்களால், காதுகளால், கைகளால் –தன்னுடைய மூக்கி னாலும் நாக்கினாலும்கூடஅறிவதற்காகக் கடமை உணர்ச்சி யோடு உலக முழுவதும் பிராயணம் செய்திருக்கிறார். அவர் தென் ஆப்பிரிக்காவிலுள்ள ஒரு நவீனமான தங்கச் சுரங்கத்தைப் பின்வருமாறு வர்ணிக்கிறார்:

“தங்கச் சுரங்கத்துக்குள் போவதென்பது நரகத்துக்குள் போய்வருவதைப் போன்றதே, உங்களுடைய எல்லா உடைகளையும்– உள்ளாடைகளைக்கூட –வெளி யிலேயே கழற்றிப்போட்டுவிட வேண்டும். பிறகு வெள்ளை மேலங்கியை அணிந்துகொண்டு ஒரு இரும்புக் கூட்டுக்குள் நுழைக்கிறீர்கள். அது பாறைகளுக்கு நடுவே ஒரு மைல் தூரத்தை இரண்டே நிமிடங்ளில் வேகமாகக் கீழே இறங்குகிறது. அதற்கும் கீழே சந்தடியான, வெப்பமான, ஈரம் நிறைந்த உலகம் இருக்கிறது. சுரங்கத் தொழிலாளிகளுடைய இரும்புத் தொப்பிகளின் மீதுள்ள விளக்குகள் அங்கே மின்மினிப் பூச்சிகளைப் போல நடனமாடிக் கொண்டிருக்கின்றன. பாறையின் ஊடே வெட்டப்பட்டிருக்கும் அடுக்கின் வழியாகப் பத்து நிமிடம் நடந்துசெல்கிறீர்கள்.

அங்கேயுள்ள இயற்கையான வெப்பம் 100 டிகிரி பாரன்ஹீட்டுக்கும் அதிகமானது, அங்கே வியர்வை, ஈரம் ஆகிய இரண்டும் சேர்ந்து உள்ளே வருகின்ற நபரின் உடலைத் தெப்பமாக நனைத்து விடுகின்றன. அங்கேயிருக்கும் குளிர்பதன அமைப்பின் சத்தம் விடாமல் கேட்கிறது. இரும்புத் தண்டவாளங்களில் வண்டிகள் கடகடத்துக்கொண்டே செல்கின்றன. இவற்றுக்கு மேல் அழுத்தப்பட்ட காற்றினால் இயங்குகின்ற துளைப்புக் கருவிகள் பாறையைக் குடைகின்ற பொழுது ஏற்படும் பேரிரைச்சல் கேட்கிறது. அந்தக் குகைப் பாதையின் ஒரு பக்கத்தில் ஒரு குறுகலான வழி தெரிகிறது. அது சுமார் 250 கோணத்தில் பூமியின் மடியை நோக்கிச் செல்கிறது. அதன் உயரம் நாற்பது அங்குலங்கள் கூட இருக்காது. மரக்கட்டைகள் அந்தச் செல்வழியை எப்படியோ தாங்கிப்பிடித்துக் சென்டிகிரேட் அளவையில் சுமார் 38 டிகிரி. கொண்டிருக்கின்றன. சுரங்க பாஷையில் இதற்கு “ஸ்டோப்” என்று பெயர். எல்லாப் பக்கங்களிலுமிருந்து அதற்குள் பாறைகள் துருத்திக்கொண்டிருக்கின்றன.

அங்கே தேங்கி நிற்கும் சூடான தண்ணீர்க் குட்டைகளில் எல்லோரும் முழந்தாளிட்டபடி அல்லது படுத்த நிலையில் இருக்கிறார்கள்.

கூரையிலிருந்து மென்மையான துணுக்குகள் அந்தக் குட்டையில் விழுந்து கொண்டிருக்கின்றன. அங்கே பறக்கும் தூசியைத் தணிப்பதற்காகத் தண்ணீர் எல்லா இடங்களிலும் பீச்சி அடிக்கப்படுகிறது. அந்தத் தண்ணீரின் மறைவில் பாறையில் சிகப்பு வர்ணம் பூசப்பட்ட இடத்தில் துளைப்புக் கருவியின் நீண்ட கூர்மையான மூக்கு துளைத்துக் கொண்டிருக்கிறது. அந்த இடத்தின் ஒரு பக்கத்தில் போடப்பட்டிருக்கும் தொர்ச்சியான சிகப்புக் கோடு பாறையில் நான்கு அங்குல நரம்பைத் துலாம்பரமாகக் காட்டுகிறது.

அதைப் பார்க்கும்பொழுது அனுபவமில்லாதவர்களும் கூட அதற்கு மேலேயும் கீழேயும் இருக்கின்ற பாறையிலிருந்து அது வேறுபட்டிருப்பதைப் பார்க்க முடியும். அங்கே வெள்ளைக் கற்கள் நெருக்கமாகத் தெரிகின்றன. அவற்றுக்கு இடையே அங்குமிங்கும் கண்ணுக்குப் புலனாகாத மிகவும் சிறிய தங்கத் தூசி சுரங்கத் தொழிலாளியின் தலைவிளக்கின் ஒளியில் பிரகாசிக்கிறது. சான்ட்விச்சில் இரண்டு பக்கத்திலும் ரொட்டி நடுவே கறித்துண்டு இருக்கும். அதிலிருக்கும் கறியைப் போன்றது இந்த நரம்பு. ஆரஞ்சு சுதந்திர அரசிலிருக்கும் இந்தச் சுரங்கத்துக்கு ஃப்ரீ ஸ்டேட் கெடுல்ட் என்று பெயர். கற்களுக்கிடையே பார்க்கக்கூடிய வெகு சில தங்கச் சுரங்கங்களில் இதுவும் ஒன்றாகும். தென் ஆப்பிரிக்காவில் இதுவரை கண்டுபிடிக்கப்பட்டவற்றிலேயே மிகவும் அதிகமான தங்கப் பாறைகள் இங்கே இருக்கின்றன.''

ஃப்ரீ ஸ்டேட் கெடுல்ட் சுரங்கம் 1971ல் 2 மில்லியன் டன் தாதுப்பொருளைச் சுத்தப்படுத்தியது. அதிலிருந்து 53 டன் தங்கம் பிரித்தெடுக்கப்பட்டது. ஒரு டன் தாதுப்பொருளில் சராசரியாக 26,4 கிராம் தங்கம் கிடைத்தது. இது தென் ஆப்பிரிக்காவிலிருக்கும் தங்கச் சுரங்கங்களின் சராசரி தங்க உள்ளடக்கத்தைப் போல இரண்டு மடங்காகும். மேற்கு டிரிபோன்டீன் சுரங்கத்தில் ஒரு டன் தாதுப்பொருளுக்கு 31.4 கிராம் தங்கம் கிடைப்பது மிகவும் அதிகமான சாதனையாகும். இந்தச் சுரங்கத்திலிருந்து 89 டன்கள் தங்கம் வெட்டியெடுக்கப்பட்டிருக்கிறது. இந்த இரண்டு பெரிய சுரங்கங்களின் உற்பத்திச் செலவுகள் மிகக் குறைவாக இருக்கின்றன. ஒரு அவுன்ஸ் தங்கத்துக்கு அன்றைக்கிருந்த சந்தை விலையான 40 டாலர்கள் என்ற விகிதத்தின்படி இந்த இரு சுரங்கங் களின் உற்பத்திச் செலவுகளும் முறையே ஒரு அவுன்ஸ் தங்கத்துக்கு 14.1 மற்றும் 15.3 டாலர்களாக இருந்தன. சாதகமான இயற்கையான நிலைமைகளின் கீழ் பெரிய அளவு உற்பத்தி நல்ல பலனையும் அதிகமான லாபத்தை யும் கொடுக்கிறது.

தென் ஆப்பிரிக்காவில் இருப்பதைப் போன்ற சுரங்கங்கள் தங்கம் உற்பத்தி செயக்கின்ற வேறு எந்த நாட்டிலும் கிடையாது. நவீன சுரங்கள் என்பது பெரிய, சிக்கல் மிகுந்த, அதிகமான செலவு ஏற்படுகின்ற அமைப்பாகும். அப்படிப்பட்ட ஒரு சுரங்கத்தை நிர்மாணிக்க நெடுங்காலமாகும் (வழக்கமாக 5-6 வருடங்களாகும்), அதிகமான மூலதன முதலீடும் அவசியம். எழுபதுக்களின் தொடக்கத்தில் இப்படிப்பட்ட ஒரு சுரங்கத்தைக் கட்டுவதற்கு குறைந்த பட்சம் 100 மில்லியன் டாலர்கள் செலவு ஏற்பட்டது. அதற்குப் பிறகு இந்தச் செலவு இரு மடங்கு அல்லது மும் மடங்கு அதிகரித்திருக்கும் என்று நாம் அனுமானிக்கலாம். பூமிக்கடியில் மிகவும் ஆழத்தில் (இது சில சமயங்களில் 3,000-3,500 மீட்டர்களாகக் கூட இருக்கலாம்) குளிர்ச்சி மற்றும் காற்றோட்ட வசதி, தண்ணீரை வெளியேற்றுவதற்கும் அளிப்பதற்கும் வசதிகள், தடைகளை அகற்றுதல், சக்தி அளிப்பு, சமதளத்திலும் செங்குத்தாகவும் போக்குவரத்து ஆகியவற்றை ஏற்படுத்துவதில் சிக்கலான தொழில்நுட்ப பிரச்சினைகள் உள்ளன.

சுரங்கச் கம்பெனிகள் உற்பத்திக்கு மிகவும் அவசிய மான செலவுகளை மட்டுமே செளிணிகின்றன. சுரங்கத் தொழிலாளிகளின் வேலையின் துன்பங்களைக் குறைக்க முயற்சிப்பதில்லை. வெட்டியெடுப்பதை இயந்திரமயமாக்குவதிலும் தொழிலாளியின் உற்பத்தித் திறனிலும் தென் ஆப்பிரிக்கக் குடியரசு அமெரிக்காவுக்கும் கனடாவுக்கும் வெகு தூரம் பின்னாலிருக்கிறது. இதன் தொடர்பாக கிரீன் பின் வருமாறு எழுதுகிறார். “பூமிக்கடியில் நடைபெறுகின்ற வேலையை இயந்திரமயமாக்குவதில் பல வருட காலமாகவே தங்கச் சுரங்கத்தொழில் மிகவும் மெது வாகவே இருந்து வந்திருக்கிறது. ஏனென்றால் ஒரு இயந்திரத்தை உபயோகிப்பதைக் காட்டிலும் பத்து ஆப்பிரிக்கர்களை சுரங்கத்துக்குள் அனுப்புவது பெரும்பாலும் மலிவானதாகவே இருக்கும்.” தென் ஆப்பிரிக்காவின் சுரங்கங்களில் தொழிலாளிகளின் வேலை கடினமானதாக, ஆபத்துமிக்கதாக இருக்கிறது. மிகப் பெரிய சுரங்கங்கள் ஒவ்வொன்றுமே 20,000 தொழிலாளர்கள் வரை வேலைக்கு ஒவ்வொன்றுமே 20,000 தொழிலாளர்கள் வரை வேலைக்கு வைத்திருக் கின்றன. இவர்களில் 90 சதவிகிதத்னர் ஆப்பிரிக்கர்களாக இருப்பது வழக்கமானது. பூமிக்கடியில் நடைபெறுகின்றன வேலைகளில் ஆப்பிரிக்கர்களின் சதவீகிதம் இன்னும் அதிகமாகக்கூட இருக்கும். ஏனென்றால் அங்கே வெள்ளையர்கள் நிர்வாகம் மற்றும் தொழில்நுட்ப ரீதியில் சிக்கலான வேலைகளை மட்டும்தான் செய்கிறார்கள். உதாரண மாக, வெடி மருந்துகளைக் கையாளுவதற்கு ஆப்பிரிக்கர் களை

அனுமதிப்பதில்லை என்பது வழக்கம். அத் தகைய வேலைகளில் வெள்ளையர்கள் மட்டுமே ஈடுபடுத்தப் படுகிறார்கள்.

பூமிக்கடியில் தாதுப்பொருளை வெட்டியெடுத்து மேலே கொண்டுவருவது தங்க உற்பத்தி என்னும் தொழில்நுட்பத் தொடரில் மிக முக்கியமான கட்டம், ஆனால் அது முதல் கட்டம் மட்டுமே, தாதுப்பொருளைச் சுத்தப்படுத்துவதும் உலோகத்தை உருக்குவதும் தொழிற்சாலைகளில் நடைபெறுகிறது. தென் ஆப்பிரிக்காவில் ஒரு சுரங்க நிர்மாணத்துக்குத் தேவையான மூலதன முதலீட்டில் இந்தச் செலவு சுமார் 15 சதவீகிதமாக இருக்கிறது. இந்தத் தொழில்துறையிலுள்ள மொத்தத் தொழிலாளர் எண்ணிக்கையில் 6 சதவீதத்தினர் தொழிற்சாலைகளில் வேலை செய்கிறார்கள்.

தாதுப்பொருள் நசுக்குதல், அரைத்தல் மற்றும் தரம் பிரித்தல் என்ற சில கட்டங்களைக் கடந்து செல்கிறது. கூழாக்கப்பட்ட தாதுப்பொருளிலிருந்து ஸையனைட் முறை அல்லது மற்ற முறைகளின் மூலம் தங்கம் பிரித் தெடுக்கப்படுகிறது. தென் ஆப்பிரிக்காவிலுள்ள சுரங்கத் தொழிற்சாலைகளில் உருக்கிய பிறகு 1,000 அவுன்ஸ் (சுமார் 31 கிலோ) எடையுள்ள கரடுமுரடான தங்கப்பாளங்கள் தயாரிக்கப்படுகின்றன. இவற்றில் 85 முதல் 90 சதவீகிதம் வரை சுத்தமான தங்கம் இருக்கும். தென் ஆப்பிரிக்காவிலுள்ள சுரங்கக் கழகத்துக்குச் சொந்தமான மத்திய நிலையத்தில் (ரேண்ட் சுத்திகரிப்பு நிலையம்) மின்பகுப்பு முறையில் இவை மேலும் தூய்மைப்படுத்தப்படுகின்றன. இக்கழகம் தொழில்முனைர்கள் ஒன்று சேர்ந்துள்ள செல்வாக்குள்ள அமைப்பாகும். இது பல முக்கியமான பொருளாதார, அரசியல் பணிகளை, குறிப்பாக சுரங்கத்துக்கு தக்க தொழிலாளர்களை வேலைக்குச் சேர்ப்பதையும் அரசாங்கத்தோடுள்ள உறவுகளில் சுரங்கத் தொழிலைப் பிரதிநிதித்துவப்படுத்துவதையும் நிறைவேற்றுகிறது.

சுத்திகரிப்பு நிலையத்திலிருந்து தங்கம் ஆதார அளவுப் பாளங்களாக வெளிவருகிறது. இவை வழக்கமாக 402 அவுன்ஸ்கள் (சுமார் 12.5 கிலோகிராம்) எடையைக் கொண்டிருக்கும், தூய்மை 996 ஆக இருக்கும். சர்வதேச ஆதார அளவுகள் நெடுங்காலமாகவே தங்கப் பாளங்கள் 10.9 முதல் 13.8 வரை கிலோ எடையும் 995 தூய்மையும் கொண்டிருக்க அனுமதிக்கின்றன. பல வழிகளிலும் தங்கத்தைப் பயன்படுத்துவதில் இந்தப் பாளங்கள்தான் தொடக்க மூலப் பொருளாக உபயோகிக்கப்படுகின்றன.

வண்டற்படிவுகளின் முக்கியமான சாதகம் என்ன வென்றால் அங்கே சுரங்கங்கள் தேவையில்லை; மேலும் பெரும்பாலும் நசுக்குவதிலும் வழக்கமாகவே எத்தகைய செலவும் கிடையாது. வண்டற்படிவுகளிலிருந்து தங்கத்தைப் பிரித்தெடுப்பதை இயந்திரமாகக்குவதற்கும் உற்பத்தித் திறனை அதிகப்படுத்துவதற்கும் பொறியியல் விஞ்ஞானம் அதிகமான பங்களித்திருக்கிறது. இன்று இத்துறையில் தூர்வாரி இயந்திரங்கள், ஹைட்ரோ மானிட்டர்கள் [தங்கம் விளைகின்ற மணலைக் கழுவுவதற்குரிய தண்ணீர்த் துப்பாக்கிகள்], மணற் கலவையை வெளியேற்றும் குழாள்கள், பூமியைத் தோண்டும் இயந்திரங்கள், புல்டோசர்கள் இதரவை உபயோகிக்கப்படுத்தும் அதிலிருந்து தங்கக்தைப் பிரிப்பதும் தாதுப்பொருள் தங்கத்தைப்போல அதே முறையில்தான் செய்யப்படுகிறது.

1970க்கள் வரையிலும் உலகச் சந்தையில் தங்கத்தின் விலை செயற்கையாகக் குறைவான மட்டத்தில் வைக்கப்பட்டிரந்தது நமக்குத் தெரியும். பெரும் பாலான நாடுகளில் வண்டற்படிவுகளில் தங்கத்தைப் பிரித் தெடுக்கும் தொழில் தென் ஆப்பிரிக்க சுரங்கங்களின் போட்டியை எதிர்த்து நிற்க முடியவில்லை. அவை மெதுவாக அழிந்து கொண்டிருந்தன. அவை மெதுவாக அழிந்து கொண்டிருந்தன. தற்பொழுது தங்கத்துக்கு ஏற்பட்டுள்ள புதிய விலை மட்டங்களின் காரணமாக சில வண்டற்படிவுகளில் தங்கத்தைப் பிரித்தெடுக்கும் தொழில் மறுபடியும் தொடங்கப் படலாம். ஆனால் இதன் மூலம் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் ஏற்படக் கூடும் என்று நிபுணர்கள் எதிர்பார்க்கவில்லை.

சமீப வருடங்களில் தென் ஆப்பிரிக்க சுரங்கத் தொழிலுக்கு வேறு விதத்தில் தீவிரமான போட்டி ஏற்பட்டிருக்கிறுது. பிரதானமாக இரும்பு அல்லாத உலோகங்களின் உற்பத்தியின் போது தங்கம் துணைப் பொருளாகக் கிடைப்பதே அந்தப் போட்டி. சமீப வருடங்களில் கனடாவில் மொத்த தங்க உற்பத்தியில் சுமார் மூன்றில் ஒரு பங்கு தற்செயலான உற்பத்தி யாகக் கிடைக்கிறது. அமெரிக்காவில் இது சுமார் 40 சதவீகிதமாக இருக்கிறது. 1970க்களில் இளம் தீவு அரசாகிய, பசிபிக் மாக்கடலில் உள்ள பாப்புவாநியுகினியா தங்க உற்பத்தியாளர்கள் மத்தியில் முக்கியமான இடத்தைப் பெற்றது. அதன் ஒரு பகுதியான போகன்வில் தீவில் செம்பு மிகவும் அதிகமான அளவில் கிடைக்கிறது. வெளிநாட்டுக் கம்பெனிகள் இதை எடுத்துச் சுத்தப்படுத்துகின்றன. இவற்றிலிருந்தும் தங்கம் கிடைக்கிறது. 1978ல் பாப்புவா-நியுகினியாவில் 23 டன்களுக்கும் அதிகமான தங்கம் கிடைத்தது. தங்கம் உற்பத்தி செய்கின்ற சோஷலிஸ்ட்

அல்லாத நாடுகளில் அது நான்காவது இடத்தை வகிக்கிறது. இந்த எல்லா நாடுகளிலும் இப்படித் தற்செயலாக உற்பத்தி செய்யப்படும் தங்கம் மொத்தத்தில் சுமார் 100 டன்களை எட்டிவிட்டது என்று கூறலாம்.

இது அதிகமான உற்பத்தியே. எனினும் தென் ஆப்பிரிக்க சுரங்கத் தொழிலின் தங்க உற்பத்தியோடு ஒப்பிடும் பொழுது இது ஏழு அல்லது எட்டு மடங்கு குறைவானதே. அதனால் தான் முதலாளித்துவ உலகத்தில் தென் ஆப்பிரிக்க சுரங்கத்தொழில் ஏகபோகமான நிலையை வகித்து வருகிறது.

# எவ்வளவு? எப்பொழுது? எங்கே?

பு ள்ளிவிவரங்கள் எல்லாவற்றையும் எடுத்துக்கூறக் கூடியவை. ஆனால் ஒன்றை எப்பொழுதும் நினைவி லிருறுத்த வேண்டும். அவற்றின் நம்பகத் தன்மை வெவ்வேறு அளவில் இருக்கும். உலகத்தில் எவ்வளவு தங்கம் உற்பத்தி செய்யப்பட்டிருக்கிறது. இன்று எவ்வளவு உற்பத்தி செய்யப்படுகிறது என்ற பிரச்சினையில் நெடுங்காலத்துக்கு முன்பே மக்கள் அக்கறை காட்டத் தொடங்கினார்கள். ஆனால் 19ம் நூற்றாண்டின் போதுதான் கடந்தகால உற்பத்தியைப் பற்றி ஓரளவுக்கு யதார்த்தமான மதிப்பீடுகள் செய்யப்பட்டன. அந்த நூற்றாண்டின் கடைசியில்தான் புள்ளிவிவரங்கள் திருப்தியளித்தன.

தங்க உற்பத்தியின் மொத்த வரலாற்றிலும் – இது 6,000 வருடங்கள் உள்ளடக்கியது– மனிதகுலம் 90,000 முதல் 1,00,000 டன்கள் தங்கத்தைப் பூமியிலிருந்து வெட்டியெடுத்திருக்கும். இது மாபெரும் அளவுக்குத் துல்லியமான மதிப்பீடு அல்ல.

இந்த உற்பத்தி மிகவும் அதிகமா அல்லது மிகக் குறைவா? தங்கத்தை வெட்டியெடுப்பதற்கு மிகவும் அதிகமான உழைப்பைச் செலவிடுவது அவசியம் என்பதைக் கணக்கிலெடுத்துக் கொண்டால் இது மிக அதிகமான உற்பத்தியே. இன்றும்கூட தங்கம் கொழிக்கின்ற தென்ஆப்பிரிக்கக் குடியரசில் 4,00,000 சுரங்கத் தொழிலாளிகள் நவீனமான தொழில் நுட்பவியலைப் பயன்படுத்தி வருடந்தோறும் 700 முதல் 800 டன்கள் சுத்தமான தங்கத்தை “மேலே அனுப்புகிறார்கள்.” இது ஒரு தொழிலாளிக்கு சராசரியாக சுமார் 2 கிலோகிராமாகும். அப்படியானால் மண்வெட்டியும் சட்டியும் தவிர வேறு எதுவுமில்லாமல் தங்க வேட்டையில் ஈடுபட்டவர்கள் சேகரித்த ஒவ்வொரு குந்துமணி தங்கத்துக்கும் எவ்வளவு பாடுபட்டிருக்க வேண்டியிருந்தது!

ஆனால் தொழில் நுட்பவியல் முன்னேற்றம் எவ்வளவு ஏற்பட்டிருந்த போதிலும், நெடுங்காலமாகவே மனித குலத்துக்கு அறிமுகமாகியுள்ள மற்ற உலோகங்களோடு ஒப்பிடுகின்றபொழுது இது மிகவும் அதிகமென்று சொல்ல முடியாது. ஒரு குறிப்பிட்ட அர்த்தத்தில் இது மிகவும் குறைவானதே. இதுவரை மனிதகுலம் உற்பத்தி செய்துள்ள தங்கம்

முழுவதையுமே 17 மீட்டர் பக்கத்தைக் கொண்ட ஒரு கனசதுரத்தில் அல்லது சராசரியான அளவுகளைக் கொண்ட திரைப்பட அரங்கில் அடைத்துவிடலாம். வருடந்தோறும் உற்பத்தி செய்யப்படுகின்ற தங்கம் ஒரு வீட்டிலுள்ள சிறிய அறையை நிரப்புவதற்குத்தான் போதுமானதாக இருக்கும்.

நிற்க, மொத்த மற்றும் வருடாந்தர உற்பத்திகளைப் பொறுத்தவரை, காலக்கணக்கு ஏற்பட்டதிலிருந்து எவ்வளவு எண்ணெய் உற்பத்தி செய்யப்பட்டிருக்கிறது அல்லது எவ்வளவு உருக்கு உருக்கப்பட்டிருக்கிறது என்பதைப் பற்றி யாருமே குறிப்பான அக்கறை காட்டுவதிலலை. செம்பு அல்லது வெள்ளியில்கூட இது மிகவும் முக்கியமாகக் கருதப்படவில்லை. ஆனால் தங்கம் விசேஷமானதாகும். நுகர்வு நடைபெறும்பொழுது எண்ணெய் மறைந்துவிடுகிறது. இரும்பிலும் உருக்கிலும் ஒரு பகுதி மட்டுமே ஓட்டை உடைசல் என்ற பெயரில் மறுபடியும் உருக்குவதற்கு அனுப்பப்படுகின்றன. செம்பின், குறிப்பாக வெள்ளியின் இரண்டாம் நிலை உபயோகம் மேலும் அதிக முக்கியமானதாகும். ஆனால் தங்கம் ஒன்றுதான் “அழிவில்லாதது” அதன் இயற்கையான மற்றும் சமூக குணாம்சங்களின் காரணமாக ஒரு தடவை உற்பத்தி செய்யப்பட்ட பிறகு அது அழிவது இல்லை; பூமியில், தண்ணீரில் அல்லது காற்றில் மறைந்துவிடுவது இல்லை. மூவாயிரம் வருடங்களுக்கு முன்பு எகிப்தில் அல்லது முந்நூறு வருடங்களுக்கு முன்பு எகிப்தில் அல்லது முந்நூறு வருடங்களுக்கு முன்பு பிரேசிலில் உற்பத்தி செய்யப்பட்ட தங்கத்தைக் கொண்டு உங்களுடைய திருமண மோதிரம் தயாரிக்கப்பட்டிருந்தால் ஆச்சரியப்பட முடியாது. இந்தத் தங்கம் அந்தக் காலத்தில் ஒரு பாளமாக, நாணயமாக, புரூச்சாக, சிகரெட் பெட்டியாக இருந்திருக்கக்கூடும். இன்னும் வேறு எந்த வடிவங்களை அது அடைந்திருக்கும் என்பதை யாரால் சொல்ல முடியும்?

தங்கம் “அழிவில்லாதது” என்று கூறுவது ஒரு வகையில் மிகைப்படுத்துவதே. அதில் ஒரு குறிப்பிட்ட சதவீகிதம் “நுகர்வு செய்யப்படுகிறது”. அது ஒருபோதும் திரும்பக் கிடைக்காது. தங்கத்தை உருக்கும் பொழுதும் அதைக் கொண்டு ஒரு பொருளைச் செய்கின்ற பொழுதும் இழப்புக்கள் ஏற்படுவதுண்டு. தங்கமக் நாணங்களாகச் செலாவணியாகும் பொழுது ஆயிரக்கணக்கான நபர்களின் பேராசைமிக்க அல்லது அலட்சியம் நிறைந்த கரங்களால் கையாளப்பட்டு அவை தேய்ந்து விடுகின்றன. கடல் மணலிலும் யாராலும் எக்காலத்திலும் கண்டுபிடிக்கப்பட முடியாத புதையல்களிலும் எவ்வளவு தங்கம் அழிந்தது என்பது யாருக்குத்

தெரியும்? கடைசியாக, தொழில்நுட்பத் துறையில் தங்கத்தைப் பயன்படுத்துகின்றன நவீன வடிவங்கள் அதைப் பகுதி யளவுக்கு அழித்துவிடகின்றன. அதாவது அவற்றின் இரண்டாம் நிலை உபயோகம் என்பது சாத்தியமல்ல அல்லது பொருளாதார ரீதியில் லாபகரமானது அல்ல (கம்பிகள், கரைசல்கள், மருந்துகள் இதரவை). 1940க்களில் ஒரு அமெரிக்க நிபுணர் இப்படி திரும்பப் பெற முடியாதபடி இழந்த தங்கம் என்று குறிப்பிட்டார். அந்த சமயத்தில் இது 6,000-7,000 டன்கள் தங்கத்துக்குச் சமமாக இருந்தது (மொத்த உற்பத்தியில் சுமார் 10 சதவிகிதம்).

பத்து சதவீதம் என்பதை ஒத்துக்கொள்வோம். எனினும் அநேகமாக உற்பத்தி செய்யப்படுகிறது தங்கம் முழுவதுமே பொருளாதார ரீதியில் சுறுசுறுப்பானது, அதாவது மேலும் உபயோகிக்கப்படுவதற்குத் தகுந்த வடிவத்தல் இருக்கிறது. வருடாந்தர உற்பத்தி மனிதகுலம் திரட்டி இருக்கிறது. வருடாந்தர உற்பத்தி மனிதகுலம் திரட்டி வைத்திருக்கும் தங்க இருப்புக்களோடு மிகவும் குறைந்த சதவீகிதத்தையே சேர்க்கிறது. சமீப வருடங்களில் இது சுமர் ஒரு சதவீகிதமாகும். இதைப் மொறுத்த வரை வேறு எந்தப் பண்டமும் தங்கத்துக்கு அருகில் கூட வர முடியாது.

பண்டைக்கால உலகத்திலும் மத்திய கால உலகத்திலும் தங்க உற்பத்தியைப் பற்றிய மதிப்பீடுகள் மிகவும் சந்தேகத்துக்குரியனவாக இருப்பது இயற்கையானதே. குவரிங் பழங்கால எழுத்தாளர்கள். ஆவணங்கள், மண்ணியல் புள்ளி விவரங்களின் ஆதாரம் மற்றும் எல்லாவற்றுக்கும் மேலாகத் தன்னுடைய உள்ளு ணர்வையும் உபயோகித்து மிக ஜாக்கிரதையாகச் சில கணக்குகளைச் செய்திருக்கிறார். அமெரிக்கா கண்டுபிடிக்கப்படும் வரை உலகத்தில் சுமார் 12,700 டன்கள் தங்கம் உற்பத்தி செய்யப்பட்டதாக அவர் கருதுகிறார்.

பண்டைக்கால உலகத்தில் (5ம் நூற்றாண்டில் ரோம வீழ்ச்சியடைகின்ற வரை) எகிப்து (தற்பொழுது சூடான் என்று அழைக்கப்படுகின்ற பிரதேசமும் சேர்ந்தது) மற்றும் பிரினேய் தீபகற்பமுமே தங்கம் உற்பத்தி செய்யப்பட்ட இரண்டு முக்கியமான பிரதேசங்களாகும். பரோவா அரசர்கள் காலத்திய எகிப்திலிருந்து நமக்குக் கிடைத்துள்ள பொருளாயதக் கலாச்சாரச் சின்னங்கள் மற்றும் எழுத்துக்கள் அதன் பொருளாதாரத்தில் தங்கம் வகித்த பாத்திரத்துக்கும் தங்கத்தைப் பிரிப்பதிலும் உருக்குவதிலும் அடைந்திருந்த முன்னேற்றத்துக்கும் சுரங்கங்களில் அடிமை உழைப்பின் பயங்கரமான நிலைமைகளுக்கும் சான்று கூறுகின்றன. கி.மு.14ம் நூற்றாண்டைச்

சேர்ந்த டுடன்காமன் என்ற பரோவா அரசருடைய சமாதியிலிருந்து பல கலைச் செல்வங்கள் எடுக்கப்பட்டிருக்கின்றன. அங்கேயிருந்த சில தங்கப் பொருள்கள் மிகவும் அழகானவை என்பதால் உலகப் புகழடைந்திருக்கின்றன.

தங்கம் எகிப்திலிருந்து மத்திய கிழக்குப் பிரதேசத்தைச் சேர்ந்த பக்கத்து நாடுகளுக்குப் போயிற்று. எகிப்திய அரசர்கள் பாபிலோன், அஸ்ஸிரியா மற்றும் பக்கத்தி லிருக்கும் இதர அரசுகளோடு நடத்திய அரசாங்கக் கடிதங்கள் [கி.மு.15-14ம் நூற்றாண்டுகள்] சுவடிக் கூடத்தில் பாதுகாக்கப்பட்டிருக்கின்றன. இவற்றில் தங்கத்தைப் பற்றி எண்ணற்ற குறிப்புகள் இடம் பெற்றிருக் கின்றன. பரோவாவின் தங்கச் செல்வங்களைத் தம்மோடு பகிர்ந்துகொள்ளுமாறு மற்ற அரசர்கள் திரும்பத் திரும்பத் கேட்டுக் கொள்வதும் அதைப் புகழ்ச்சியான முறையில் மிகைப்படுத்துவதும் இக்கடிதங்களில் இடம் பெற்றிருக்கின்றன. 3,500 வருடங்களுக்கு முன்பிருந்த அரசியல் சூழ்ச்சித்திறமும் அந்நிய வர்த்தகமும் சர்வதேச வழங்கீடுகளும் இப்படியிருந்தன.

டுடன்காமன் காலத்தைச் சேர்ந்த கல்வெட்டுக்களில் ஒன்றில் ஒரு நபருடைய பெயர் காணப்படுகிறது. தங்கத் தாதுப் பொருள்களைக் கண்டுபிடிக்குமாறு அரசாங்கம் தன்னை அனுப்பியதாக ரென்னி என்ற பெயர் கொண்ட ஒருவர் தெரிவிக்கிறார். உலகத்தின் முதல் மண்ணியல் நிபுணர் மற்றும் கனிப்பொருள் ஆராய்ச்சியாளர் என்று இவரைக் கூற முடியுமென்று குவிரிங் கருதுகிறார். ஓன் [ஹெவியோ அ.வி.அனிக்கின் 79 பொலிஸ்] என்ற இடத்தில் ப்டா என்ற தெளிணிவத்துக்குக் கட்டப்பட்டிருந்த ஆலயத்திலிருந்த தொன்மையான “பல்கலைக்கழகத்தில்” சுரங்கத் தொழில் கற்பிக்கப்பட்டது என்று கருதுவதற்கு அதிகமான சாத்தியங்கள் இருக்கின்றன.

தற்பொழுது ஸ்பெயின் என்ற பெயரைக் கொண்ட பிரதேசத்திலும் தங்கம் வெட்டியெடுத்தல் பெரிய அளவில் நடைபெற்றது. ரோமானியப் பேரரசுக் காலத்தில் தங்கம் கிடைத்த முக்கியமான தோற்றுவாய் இதுவே. தங்கம் கிடைக்கும் தாதுப் பொருள்களை நசுக்குவதற்கும் கழுவுவதற்கும் ரோமானியர்கள் சிக்கல்மிகுந்த பொறியியல் அமைப்புகளை ஏற்படுத்தியிருந்தார்கள். மறுபடியும் இதேஅளவில் 19ம் நூற்றாண்டில்தான் வேலை நடைபெற்றது. அறிஞரும் எழுத்தாளருமான மூத்த பிளினி கி.பி.முதல் நூற்றாண்டின்போது உயர்ந்த அந்தஸ்துடைய ரோமானிய அதிகாரியாக ஸ்பெயினில் பணியாற்றினார். இந்தப் பிரதேசத்தைச் சேர்ந்த

சுரங்கங்கள் வருடந் தோறும் சுமார் 6,550 கிலோ கிராம்கள் [எடையின் நவீன அளவுகளில் மாற்றித் தரப்பட்டிருக்கிறது – ஆசிரியர்] தங்கம் உற்பத்தி செய்ததாக அவர் எழுதியிருக் கிறார். இன்றைய அளவுகோல்களை வைத்துப் பார்த்தால் கூட இது மிகஅதிகமான உற்பத்தியே. தங்கம் உற்பத்திசெய்யும் நாடுகளான மெக்சிகோ அல்லது ஜாயிர் சமீபவருடங்களில் சுமாராக இதே அளவு தங்கத்தைத் தான் உற்பத்தி செய்திருக்கின்றன.

ஐரோப்பாவில் மத்திய காலம் தங்க உற்பத்தியின் பின்னடைவுக் காகலமாகும். ரோமானியப் பேரரசுக் காலத்தின்போது பரவியிருந்த பல தொழில்நுட்ப முறைகள் மறக்கப்பட்டன. தாதுப்பொருள் தங்கத் தின் உற்பத்தி அநேகமாக நின்றுபோய்விட்டது. ஆற்றங்கரைகளிலும் நீரோட்டங்களின் கரைகளிலும் அங்குமிங்குமாக மக்கள் பூர்விகமான முறையில் “தங்கத்தைக் கழுவினார்கள்”. தொடக்க காலக் கிறிஸ்தவ சமயம் ஏழ்மையே புண்ணியமென்று போற்றியது. தங்கத்துக்கு எதிராக போதனை செய்தது. மேற்கு ஐரோப்பாவில் 9 முதல் 13ம் நூற்றாண்டு முடிய எங்குமே தங்க நாணயங்கள் அச்சிடப்படவில்லை.

மத்திய காலத்தின் பிந்திய கட்டத்தில் தங்கம் உற்பத்தி செய்கின்ற முக்கியமான பிரதேசமாக வெப்ப மண்டலத்தைச் சேர்ந்த ஆப்பிரிக்கா இருந்தது. துணிச்ச லான பிரயாணிகளும் வணிகர்களும் குறிப்பாகப் போர்த்து கீசியர்களும் தங்கம் கிடைக்குமிடத்தைத் தேடி தென் ஆப்பிரிக்காவின் மேற்குக் கடற்கரையில் மேலும் மேலும் தெற்கே சென்றனர். இன்று கானா என்ற பெயரைக் கொண்ட சுதந்திர நாடு காலனியாதிக்க காலத்தில் கோல்டு கோஸ்ட் [தங்கக் கரை] என்று அழைக்கப்பட்டது. ஐரோப்பியர்கள் 15ம் நூற்றாண்டில் அதற்கு இந்தப் பெயரைக் கொடுத்திருந்தார்கள். டேனியல் டிஃபோ எழுதிய பிரபலமான கதையில் வரும் துணிச்சல் மிக்க கதாபாத்திரமான இராபின்சன் குருசோ கினியா வளைகுடாவின் ஏதோ ஒரு கரையோரத்தில் இருந்த சுதேசிகளிடம் சிறுநகைகளைக் கொடத்து 5 பவுண்ட் ஒன்பது அவுன்ஸ் எடையுள்ள தங்கத் தூசியை [சுமார் 2.5 கிலோகிராம்] வாங்குகிறார்.

அறிவாளிகளும் திறமை கொண்டவர்களும் ரசவாதத் தின் உதவியால் இப்பிரச்சினையைத் தீர்க்க, மதிப்புக்குறைவான உலோகங்களிலிருந்து தங்கத்தைப் பெறுவதற்கு ஒரு வழியை கண்டுபிடிக்க முயன்ற னர். பலவிதமான உலோகங்களைக் கொண்டு தாதுப்பொருள்களுமே ஓரளவு தங்கத்தை வழக்கமாகக் கொண்டிருக்கின்றன. ஆனால் இதை வெறும்

கண்களைக் கொண்டு பார்க்க முடியாது. தாதுப் பொருளை உருக்கும் பொழுது அதிலிருந்து தங்கம் தனியாகப் பிரிந்து வரும். அதைப் பார்த்தால் அது வெள்ளி அல்லது செம்பிலிருந்து ஏற்பட்டது போலத் தோன்றும். இதிலிருந்து தான் நல்லெண்ணம் படைத்த தவறுகளும் அப்பட்டமான மோசடிகளும் பிறந்தன. ரசவாதத்திலிருந்துதான் பிற்காலத்தில் ரசாயனம் என்ற விஞ்ஞானம் வளர்ச்சி அடைந்தது உண்மையே. மத்திய கால வரலாற்றிலும் இலக்கியத்திலும் ரசவாதம் மாபெரும் அளவுக்குச் சுவையூட்டுகிறது. ஆனால் இங்கே நாம் புள்ளிவிவரங்களைப் பற்றிப் பேசுவதால் அது ஒரு கிராம் தங்கத்தைக்கூட உற்பத்தி செய்ததாகச் சொல்ல முடியாது.

ரசவாதத்தில் பல போக்குகள் இருந்தன. ஆனால் மத்திய காலத்தின் தொடக்க நிலையிலே அராபிய ரசவாதிகளால் அறிமுகப்படுத்தப்பட்ட சில பொதுக்கோட்பாடுகள் இயங்கின. கந்தகமும் பாதரசமும் வெவ்வேறு அளவு விகிதங்களில் ஒன்று சேர்கின்ற பொழுது எல்லா உலோகங்களுமே தோன்றுவதாக தங்கத்தைத் தயாரிக்க வேண்டுமென்றால் இந்த இரண்டு பொருள்களையும் கலக்கும் சரியான அளவு விகிதங்களைக் கண்டுபிடிக்க வேண்டும். அதைக் கண்டுபிடித்துவிட்டால் தங்கத்தைத் தயாரித்துவிடலாம். தங்கத்தின் தகப்பனார் கந்தகம் என்றும் அதன் தாயார் பாதரசம் என்றும் ராசவாதிகள் கருதினார்கள்.

இந்த இரண்டு மூலகங்களிலிருந்தும் தங்கத்தின் அணுக்களைப் பெறுகின்ற தத்துவ ரீதியான சாத்தியம் இருப்பதை நவீன அணு விஞ்ஞானம் எடுத்துக் காட்டியிருப்பது சுவாரசியமானதே. அதற்குப் பாதரச அணுக்களை கந்தக அணுக்களின் விரைவுப் படுத்தப்பட்ட கருமூலங்களைக்கொண்டு தாக்க வேண்டும். எனினும் இந்த முறையின் மூலம் தங்கத்தை உற்பத்தி செய்வதற்கு வழக்கமான முறையைக் காட்டிலும் பல பில்லியன் மடங்கு அதிகச் செலவாகும். மற்ற மூலகங்களை மாற்றியமைப்பதன் மூலம் தங்கத்தைத் தயாரிப்பதும் தத்துவ ரீதியில் சாத்தியமானதே. ஆனால் இவை ஒருபோதும் காரிய சாத்தியமல்ல.

ரவசாதிகளின் ‘‘கண்டுபிடிப்புக்களுக்கும்’’ நவீன விஞ்ஞானத்தின் உண்மைகளுக்கும் தற்செயலான பொருத்தங்களைத் தவிர வேறு எத்தகைய தொடர்பும் கிடையாது. பாதரசத்தின் உயர்ந்த இன எடையும் கந்தகத்தின் நிறமும் இவை தங்கத்தோடு சம்பந்தம் உடையவை என்று நினைப்பதற்குக் காரணமாக இருந் திருக்கலாம்.

மத்திய காலத்தில் ரசவாதத்தின் செல்வாக்கு எங்கும் பரவியிருந்தபடியால் மதிப்பில்லாத உலோகங்களைத் தங்கமாக மாற்றுகின்ற முயற்சியில் அரசரைத் தவிர வேறு யாரும் ஈடுபடக் கூடாதென்று இங்கிலாந்தின் நான்காம் ஹென்ரி ஆணை வெளியிட்டார். எனினும் ரசவாதத்தின் வளர்ச்சியின் ஆரம்பக் கட்டத்திலேயே உலோகங்களை மாற்ற முடியாது, இரவசாதிகளின் கூற்றுக்கள் வெறும் பிதற்றலே என்று சிலர் கூறினார்கள். அவர்களில் கீழை நாடுகளின் மாபெரும் சிந்தனையாளரான அவிசென்னாவும் ஒருவர்.

அமெரிக்கக் கண்டத்தைக் கண்டுபிடித்தது அரிய உலோகங்களின் வரலாற்றில், முதலாவதாகவும் முதன்மையாகவும் வெள்ளியின் வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயத்தைத் துவக்கியது. அ.ஸோத்பெர் அரிய உலோகங்களின் உற்பத்தியின் புள்ளிவிவரங்களைப் பற்றிய துறையில் எல்லோராலும் அங்கீகரிக்கப்படும் தகுதிச் சிறப்புடையவர். வருடந்தோறும் வெள்ளியின் உலக உற்பத்தியின் மதிப்பு 1830–க்கள் வரையிலும் தங்கத்தின் மதிப்பைக் காட்டிலும் அதிகமாக இருந்தது. இதில் மிகவும் அதிகமான சதவீகிதம் புதிய உலகத்தி லிருந்து வந்தது என்று அவர் எழுதியிருக்கிறார். இந்த உண்மை பணவியல் அமைப்பின் எதிர்காலத்துக்கு மாபெரும் முக்கியத்துவத்தைக் கொண்டிருந்தது. வெள்ளியின் “பணவியல் வாழ்க்கை” நீடிப்பதற்கும் இரட்டை அமைப்பு (இரண்டு மற்றும் நாணய முறை) 19ம் நூற்றாண்டின் நடுப்பகுதி மற்றும் கடைசிவரை பின்பற்றப்பட்டதற்கும் காரணமாக இருந்தது.

ஸ்பானிஷ்காரர்களும் போர்த்துகீசியர்களும் தாதுப் பொருள் தங்க இருப்புக்களைக் கண்டுபிடிப்பதில் வெற்றி அடையாததும் வண்டற்படிவுகளில் பாடுபடுவதன் மூலம் நிலையான மற்றும் நீடித்த முறையில் தங்கம் கிடைக்காததும் அமெரிக்காவில் தங்க உற்பத்தி ஒப்பு நோக்கில் பின்தங்கியிருந்ததற்குக் காரணங்களாகும். எனினும் 19–ம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் கலிபோர்னியாவிலும் ஆஸ்திரேலியாவிலும் தங்கம் கண்டுபிடிக்கப்படுகின்ற வரை உலகத்தின் முக்கியமான தங்க உற்பத்திப் பிரதேசமாக தெற்கு மற்றும் மத்திய அமெரிக்கா இருந்தது. ஸோத்பெரின் மதிப்பீடுகளை ஆதாரமாகக் கொண்ட குவிரிங்கின் புள்ளிவிவரங்களின்படி, 16ம் நூற்றாண்டில் மூன்றில் இரண்டு பங்குகளும் உற்பத்தி செய்தது. 16,17ம் நூற்றாண்டுகளின்போது பிரதானமாகக் கொலம்பியா விலும் பொலிவியாவிலும் தான் தங்கம் உற்பத்தி செய்யப்பட்டது. 18–ம் நூற்றாண்டில் பிரேசிலில் தங்கம் உற்பத்தி

செய்யப்பட்டதோடு அது உலக உற்பத்தியில் முதலிடத்தையும் பெற்றது. அன்று பிரேசில் நாடு போர்த்துகீசியாவுக்குச் சொந்தமான பிரதேசமாக இருந்தது. அதிகாரபூர்வமாக வெள்ளியைக் கைவிட்டுத் தங்கத்தை அடிப்படையாகக் கொண்ட பணவியல் அமைப்பைக் கடைப்பிடித்த முதல் நாடு போர்த்துகீசியா ஆகும்.

தங்க உற்பத்தியைப் பொறுத்தவரை 18ம் நூற்றாண்டின் இறுதியும் 19ம் நூற்றாண்டின் முதற்பாதியும் "பஞ்சம் ஏற்பட்ட வருடங்களாகும்". 1741-1760 டன்களை எட்டியது, பிறகு ஒரே சீராகக் குறைந்து 1811- 1820ல் 11.4 டன்கள் மட்டுமே இருந்தது. பிறகு மெதுவாக அதிகரிக்கத் தொடங்கியது. இந்தக்காலகட்டத்தில் மேற்கு ஐரோப்பாவிலும் வட அமெரிக்காவிலும் தொழிற்துறைப் புரட்சி ஏற்பட்டுக் கொண்டிருந்தது என்பதை நாம் நினைவிலிறுத்த வேண்டும். விற்பனைக்காக நடைபெறும் பண்ட உற்பத்தி வேகமாக வளர்ச்சி அடைந்தது. ஆகவே பணத்துக்கான தேவையும் அதிகரித்தது. இந்தச் சம்பவங்களோடு சேர்ந்து முன்னேறுவதற்குத் தங்கத்தினால் முடியவில்லை. 19-ம் நூற்றாண்டின் முதற்பாதியில் பணவியல் அமைப்புகளின் அடிப்படை என்ற முறையில் அதன் எதிர்காலம் சிறிதும் உத்தரவாதம் செய்யப்பட்டிருக்கவில்லை. தென் அமெரிக்காவின் வண்டற்படிவுகளில் ஏதும் கிடைக்காது போனதற்கும் கலிபோர்னியாவில் தங்கம் கண்டுபிடிக்கப்படுவதற்கும் இடையே குறுகிய காலத்தின்போது தங்கம் உற்பத்தி செய்வதில் ரஷ்யா முதலிடத்தைப் பெற்றிருந்தது. 1831-1840ல் உலக உற்பத்தியில் மூன்றில் ஒரு பங்குக்கும் அதிகமாகவே அது உற்பத்தி செய்தது. 1840-க்களின் கடைசிவரை ரஷ்யா இத்தலைமையை வைத்துக்கொண்டிருந்தது.

பழங்காலத்தில் யூராலிலும் அல்டாயிலும் தங்கம் வெட்டி எடுக்கப்பட்டிருப்பதைத் தொல்பொருள் ஆராய்ச்சி மற்றும் வரலாற்று விவரங்கள் தெரிவிக் கின்றன. "அல்டாய்" என்ற சொல்லே துருக்கிய மொழியில் தங்கத்தைக் குறிக்கும் "அல்டான்" என்ற சொல்லிலிருந்து தோன்றியதாகும். எனினும் இத்தொழில் பிறகு கைவிடப்பட்டது. அதன் நுணுக்கங்களும் மறக்கப்பட்டன. யூராலில் தங்கம் மறுபடியும்கண்டுபிடிக்கப்பட்ட பிறகு, 18ம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் ரஷ்யத் தங்கத்தின் நவீன வரலாறு தொடங்குகிறது. பின்னர் தங்கம் (பெரும்பாலும் வண்டற்படிவுகளில்) மேற்கு மற்றும் கிழக்கு சைபீரியா விலும் தூரகிழக்கிலும் கண்டுபிடிக்கப்பட்டது.

இது தங்கத்தின் வரலாற்றில் “இருளடர்ந்த” காலமாகும். இக்காலத்தின்போது ரஷ்யாவில் தங்கம் வெட்டியெடுக்கப்படுவதை மேற்கு நாடுகளின் கவனத் துக்குக் கொண்டுவந்தவர். தன் வாழ்நாள் முழுவதி லும் தங்கப் பிரச்சினைகளைப் பற்றி அக்கறை எடுத்துக்கொண்ட மாபெரும் ஜெர்மானிய அறிஞரான அலெக்சாந்தர் ஹூம்போல்ட் ஆவார். உலகத்தில் தங்க உற்பத்தியின் போக்குகளைப் பற்றி ஒரு விசேஷமான புத்தகத்தை அவர் 1838–ல் வெளியிட்டார். ரஷ்யாவின் நிதி அமைச்சாரன ஈ.எஃப்.கான்க்ரின் என்பவரிடமிருந்து அவர் நேரடியாகப் பெற்றுக்கொண்ட விவரங்களையும் இதில் இணைத்திருந்தார். மேற்கு ஐரோப்பாவின் வங்கி அதிபர்களுக்கும் பொருளியலாளர்களுக்கும் இந்த விவரங்கள் ஓரளவுக்கு உற்சாகமளித்திருக்கக்கூடும்.

1848 ஜனவரியில் ஒரு புதிய, அதிகமான புனைவியற் தன்மைகொண்ட அத்தியாயம் தொடங்கியது. கிரீன் அதைப்பற்றிப் பின்வருமாறு எழுதுகிறார். “அமெரிக்கன் நதியும் ஸாக்ரமென்டோ நதியும் ஒன்று கலக்கும் இடத்துக்குப் பக்கத்தில் ஜான் ஸூட்டரின் அரசை ஆலைக்கு அருகே தங்கத்தூசிகள் என்று தோன்றியவற்றை ஒரு தச்சர் கண்டார். அவர் பெயர் ஜேம்ஸ் மார்ஷல் .... முதலில் மார்ஷலும் ஸூட்டரும் இந்தக் கண்டுபிடிப்பைப்பற்றிய செய்தியை

ரகசியமாக வைத்துக்கொள்ள முயற்சித்தார்கள். ஆனால் தங்கத்தைப் பற்றிய வதந்திகளை ரகசியமாக வைத்துக் கொள்வது சுலபமல்லவே. சீக்கிரத்தில் இந்தத் தகவல் அப்பொழுது சிரமதசையிலிருந்த கடற்கரை நகரமான சான் –பிரான்சிஸ் கோவுக்குப் பரவியது. அங்கே சுமார் 2,000 பேர்கள் வசித்துக் கொண்டிருந்தார்கள். வசந்தகாலம் வருவதற்குள் கலிபோர்னியாவில் பாதி பேர்கள் தங்கள் விளையும் வயல்களை நோக்கி ஓடி வந்தார்கள்... 1848ம் வருட இலையுதிர் காலத்தின் போது இந்தக் கண்டுபிடிப்புக்களைப் பற்றிய முதல் வதந்திகள் நியூயார்க்கைச் சுற்றிவந்து கொண்டிருந்தன. ஒவ்வொரு நாளும் புதிய செய்திகள் வந்து கொண்டிருந்ததனால் பரபரப்பு அதிகரித்தது. வரலாற்றில் இதுவரை நடந்திராத காரியங்கள் அடுத்த சில மாதங்களில் நடைபெற்றன. ஒரு சில நாட்களுக்குள்ளாக ஏராளமாகப் பணம் திரட்டுகின்ற வாய்ப்பு திடீரென்று ஆயிரக்கணக்கான மனிதர்களுக்கு முன்னால் தோன்றியது... ஜனாதிபதி போல்க் 1848 டிசம்பரில் காங்கிரசில் நிகழ்த்திய சொற்பொழிவில் இந்தக் கண்டுபிடிப்புக்களின் விஸ்தீரணத்தைப் பற்றிக் கடைசியாக உறுதி செய்வதற்கு முன்பே மேற்குக் கடற்கரைக்குப் போவதற்கு இடம்பிடிக்கச் சண்டை தொடங்கிவிட்டது.”

மேலே குறிப்பிடப்பட்ட ஜான் ஸுட்டர் தமக்கே உரித்தான வழியில் குறிப்பிடத்தக்க நபராக இருந்தார். கலிபோர்னியாவில் முதன்முதலாகத் தங்கத்தைக் கண்டுபிடித்தவர் ஸ்விட்சர்லாந்திலிருந்து சிறிது காலத்துக்கு முன்பு அமெரிக்காவுக்கு வந்தவர். அவர் சுறுசுறுப்பானவர், செயலூக்கம் நிறைந்தவர். ஆனால் புனைவியலான கற்பனைகளில் திளைப்பவர். அவருடைய சுவையான வாழ்க்கையை ஆஸ்திரிய எழுத்தாளரான ஸ்டெபான் ஸ்வீக் சுவாரசியமான வரலாற்று கதையாக [மனிதகுலத்தின் நட்சத்திரக் காலம் என்னும் நூலில்] எழுதியிருக்கிறார். ஸுட்டரின் நிலத்தில் தங்கம் கண்டுபிடிக்கப்பட்டதன் விளைவாக அவருக்கு மகிழ்ச்சியான வாழ்க்கை ஏற்படவில்லை. அவர் ஏழ்மையில், யார் என்பதே தெரியாத பரிதாபகரமான நிலையில் மரணமடைந்தார்.

தங்கத்தின் கொடுங்கரங்களால் அழிக்கப்பட்டுப் புதைகுழிகளுக்கு அனுப்பப்பட்டவர்களில் ஸுட்டர் முதல் நபரல்ல, அவர் கடைசி நபருமல்ல. அத்தகைய மனிதர்களைத் தங்கத்தின் உண்மையான வரலாற்றிலும் அதைப் பற்றிய கற்பனைக் கதைகளிலும் நாம் பார்க்கின்றோம்.

கலிபோர்னியாவில் தங்கம் கண்டுபிடிக்கப்பட்டதை மனிதகுலத்தின் ‘‘நட்சத்திரக்’’ காலங்களில் ஒன்று என ஸ்டெபான் ஸ்வீக் எழுதியபொழுது அந்த சம்பவத்தின் வரலாற்று முக்கியத்துவத்தை அவர் மனதில் எண்ணிப் பார்த்திருக்க வேண்டும். நாகரிகத்தின் கேந்திரங்களிலிருந்து வெகுதூரத்துக்கப்பால், எளிதில் கடக்கப்பட முடியாத தூரத்துக்கு அப்பால் கலிபோர்னியா அமைந்திருந்தது. அங்கே தங்கம் கண்டுபிடிக்கப்பட்டது 19-ம் நூற்றாண்டில் முதலாளித்துவ வளர்ச்சியில் முக்கியமான பாத்திரத்தை வகித்தது. அங்கேயிருந்து அமெரிக்காவின் கிழக்குக் கடலோரத்துக்கும் மேற்கு ஐரோப்பாவுக்கும் வந்த தங்கம் முதலாளித்துவப் பொருளாதாரத்தில் புதிய இரத்தம் செலுத்தியதுபோல இருந்தது. தொழில்துறை, கூட்டுக் கம்பெனிகள் [டிரஸ்டுகள்] மற்றும் பொயி வங்கிகளின் வளர்ச்சியை, ரயில்வே பாதைகள் அமைப்பதை, உலக வர்த்தக வளர்ச்சியை அது ஊக்குவித்தது. அமெரிக்காவின் பொருளாதார வளர்ச்சியிலும் தங்கம் குறுப்பிடத்தக்க முக்கியமான பாத்திரத்தை வகித்தது. மேற்கிலும் மத்தியப் பகுதியிலும் ஏராளமான புதிய பிரதேசங்களிலும் மக்கள் குடியமர்வதை, தனிப்பட்ட அரசுகளும் பிரதேசங்களும் பொருளாதார ரீதியில் நெருங்கி வருதலை, விரிவான போக்குவரத்து வளர்ச்சியை அது ஊக்குவித்தது.

கலிபோர்னியாவில் நடைபெற்ற தங்கவேட்டையில் சாதாரண மக்களின் தலைவிதியும் துன்பமும் கலந்திருந்த படியால் அது அமெரிக்க மக்களின்

நாட்டு ஆற்றலில் கலந்துவிட்டது. அதைப்பற்றி எண்ணற்ற இலக்கியங் கள் எழுதப்பட்டிருக்கின்றன. ஆனால் இந்தச் சமயத்தில் நாம் புள்ளிவிவரங்களைப் பற்றித்தான் அக்கறை கொண்டிருக்கிறோம். கலிபோர்னியாவில் தங்கம் கண்டுபிடிக்கப் பட்டதன் பலனாக உலகத்தின் தங்க உற்பத்தியில் அமெரிக்கா முதலிடத்தைப் பெற்றது; 1851-ல் ஆஸ்திரோலியாவில் தங்க வேட்டை தொடங்கிவிட்டபடியால் எப்பொழுது£வது அதற்கு முதல் இடத்தை விட்டுத் தந்திருக்கலாமே தவிர மற்றபடி அந்த நூற்றாண்டின் கடைசிவரை அமெரிக்கா அநேகமாக முதலிடத்தைத் தக்க வைத்துக் கொண்டிருந்தது.

கலிபோர்னியாவிலும் ஆஸ்திரேலியாவிலும் தங்கம் கண்டுபிடிக்கப்பட்டதும் ரஷ்யாவிலும் உலகத்தின் மற்ற பகுதிகளிலும் அதன் உற்பத்தி அதிகரித்ததும் தங்கத்தைப் பொறுத்தவரையிலும் மொத்த உலகத்தின் நிலைமையும் பரபரப்பான முறையில் மாற்றமடைந்தது. 19-ம் நூற்றாண்டின் பிற்பாதியில் 11,000 டன்கள் தங்கம் உற்பத்தி செய்யப்பட்டது. இது முதற்பாதியைக் காட்டிலும் எட்டு மடங்கு அதிகம், அமெரிக்கக் கண்டம் கண்டுபிடிக்கப்பட்ட பிறகு மொத்த காலகட்டத்துக்கும் சேர்ந்து இது இரு மடங்காகும்.

ஆனால் தங்கத்தின் தேவை இன்னும் வேகமாக வளர்ச்சியடைந்து கொண்டிருந்தது. ஏனென்றால் இந்தக் காலகட்டத்தின்போது முக்கியமான எல்லா நாடுகளிலும் தங்க ஆதார அளவுகோல் அமுலாக்கப்பட்டு தங்கம் பணவியல் அமைப்புகளின் அடிப்படையாகவும் உலகப் பணமாகவும் விளங்கியது. ஆகவே 1870க்களில் வண்டற்படிவுகளின் பெரும் பகுதியில் தங்கம் எடுக்கப்பட்டுவிட்ட பிறகு, பெரிய, எளிதில் நெருங்கக் கூடிய தாதுப்பொருள் சேமிப்பிடங்கள் புதிதாகக் கண்டுபிடிக்கப்படாத பொபது நிபுணர்கள் மத்தியில் அவநம்பிக்கை பரவத் தொடங்கியது.

1877-ல் ஆஸ்திரியரான எடுவர்ட் ஸூஸ் தங்கத்தின் எதிர்காலம் என்ற தலைப்புக் கொண்ட புத்தகத்தை வெளியிட்டார். அது அந்த சமயத்தில் தற்சிந்தனை நிறைந்ததாகத் தோன்றியதென்றாலும் அதிலடங்கிய கருத்துக்கள் (தங்கத்தின் எதிர்காலம், வாய்ப்புக்கள் இதரவை) கடந்த நூற்றாண்டின்போத எப்படியோ அப்படி அல்லது சிறிதளவு மாற்றங்களுடனோ திரும்பத்திரும்பச் சொல்லப்பட்டு அலுப்பைத் தருபவையாகிவிட்டன. ஸூஸ் பின்வரும் கருத்துக்களை வற்புறுத்தினார். முதலாவதாக, எதிர்காலத்தில் தங்க உற்பத்தி மிகப்பெரும் அளவுக்கு வண்டற்படிவுகளையே நம்பியிருக்கிறது; இரண்டாவதாக, மனிதகுலம்

முன்னரே தனக்குக் கிடைக்கக்கூடிய தங்கத்தில் பாதியை அடைந்துவிட்டது. மேலும் உற்பத்தி செல்வதற்குரிய வாள்ப்புக்கள் மிகவும் பாதகமாக இருக்கின்றன; மூன்றாவதாக, தங்க ஆதார அளவுகோலை உலக முழுவதிலும் அமுலாக்குவதற்குப் போதுமான தங்கம் நம்மிடமில்லை.

இந்த ஆரூடங்களும் இதற்குப் பிறகு சொல்லப்பட்ட மற்ற பலவும் தவறென்று காட்டப்பட்டுவிட்டன. தங்கத்தின் வரலாறு முழுவதிலுமே போலியான ஆரூடங்களும் தவறான முன்னறிவிப்புக்களும் நிறைந்திருக்கின்றன. 1935–ல் ஆங்கில நிதித் துறை நிபுணரான பால் எய்ன்சீக் தங்கத்தின் எதிர்காலம் என்ற அதே தலைப்பைக் கொண்ட புத்தகத்தில் ‘‘தங்க ஆதார அளவுகோல் ஒருக்காலும் எல்லா நாடுகளிலும் கைவிடப்படாது என்று கருதுவதில் தவறில்லை என்பதில் சந்தேகம் இருகக் முடியாது’’ என்று எழுதினார்.

‘‘தங்கத்தைப் பண உலோகம் என்ற நிலையிலிருந்து எடுத்துவிட்டால் அதன் விலை இன்றைய விலையின் சிறிய பகதியாகக் குறைந்துவிடும் என்பதில் சந்தேகமில்லை’’★ என்றும் எழுதினார். இரண்டு கருத்துக்களையும் ‘‘சந்தேகமில்லை’’ என்று எழுதியிருப்பது குறிப்பிடத்தக்க தாகும். உண்மை என்ன வென்றால் பிரான்சின் தலைமையில் தங்க முகாம் என்று அழைக்கப்பட்ட நாடுகள் மற்ற எல்லா நாடுகளையும் காட்டிலும் இன்னும் அதிகமான காலத்துக்குத் தங்க ஆதார அளவைப் பின்பற்றிக்கொண்டு எளிணின்சீக்கின் புத்தகத்தில் மை கூட உலர்வதற்கு முன்பே அதைக் கைவிட்டுவிட்டன. சம்பிரதாயப்படி தங்கம் பண உலோகம் அல்ல என்ற நிலை சர்வதேச ரீதியில் 1970–க்களின் நடைபெற்ற பொழுது தங்கத்தின் சந்தை விலை மற்றும் வாங்கும் சக்தி குறையவில்லை.

1870–களிலும் 1880–களிலும் தங்கம் அதன் முன்னேற்றத்தில் மிகவும் சிறப்பான கட்டத்தின் வாயிலில் இருந்தது. தூர்வாரி இயந்திரங்கள் மணல் வண்டற் படிவுகளிலிருந்து தங்கத்தைப் பிரித்தெடுப்பதில் புதிய வாய்ப்புக்களைத் தோற்றுவித்திருந்தன. 1886–ல் தென் ஆப்பிரிக்காவில் விட் வாட்டர்ஸ்ரேன்ட் மலைத்தொடர் கண்டுபிடிக்கப்பட்டது, இது உலகத்திலேயே மிகவும் வளமான தங்கத் தாதுப்பொருள் பிரதேசம். இங்கே தங்க உற்பத்தி முதல் தடவையாக ஒரு தொழில் என்ற அடிப்படையில் பெரிய அளவான முதலாளித்துவ பொருளாதாரம் என்ற தண்டவாளத்தின் மீது அமைக்கப்பட்டது. சீக்கிரமாகவே முக்கியமான தொழில்நுட்பச் சீர்த்திருத்தங்கள் செய்யப்பட்டன. இதற்கு முன்பு நடைபெற்றிராத வகையில் மிகவும்

ஆழமான பகுதிகளுக்குச் சென்று தாதுப்பொருள் வெட்டியெடுப்பதும் தாதுப்பொருளிலிருந்து கிடைக்கும் தங்கத்தின் சதவீகிதத்தைக் கணிசமாக அதிகரிப்பதும் இந்தப் புதிய முறைகளின் மூலம் சாத்தியமாயிற்று. 19ம் நூற்றாண்டின் கடைசியிலிருந்தே முதலாளித்துவ உலகத்தின் தங்கச் சுரங்கத் தொழிலின் தலைவிதி தென் ஆப்பிரிக்காவோடு பிரிக்கப்பட முடியாத விதத்தில் இணைக்கப்பட்டு விட்டது.

1886ல் தென் ஆப்பிரிக்காவில் ஒரு டன்னுக்கும் குறைவான தங்கமே வெட்டியெடுக்கப்பட்டது. 1898ல் 117 டன்கள் வெட்டியெடுக்கப்பட்டன. போயர் யுத்தத் னால் தங்க உற்பத்தி தீவிரமாக வீழ்ச்சியடைந்த பிறகு அது மறுபடியும் தீவிரமாக அதிகரிக்கத் தொடங்கியது. 20ம் நூற்றாண்டின் முதல் பத்தாண்டுகளில் தென்ஆப்பிரிக்கா உலகத்தில் தங்க உற்பத்தியில் முதல் இடத்தைப் பெற்றிருந்தது. 1913ல் தென் ஆப்பிரிக்க யூனியன் [1910ல் இது ஒரு பிரிட்டிஷ் டொமினியனாக அமைக் கப்பட்டது] 274 டன்கள் தங்கத்தை உற்பத்தி செய்தது. உலகத்தின் மொத்த உற்பத்தியில் இது 42 சதவீகிதமாகும். அமெரிக்கா 134 டன்களை உற்பத்தி செய்து இரண்டாவது இடத்தைப் பெற்றது.

19-ம் நூற்றாண்டின் கடைசியில் வடக்கு கனடா விலும் அலாஸ்காவிலும் குளோன்டைக் தங்க வேட்டை நடைபெற்றது. ஜேக் லண்டனின் பேனாவும் சார்லி சாப்ளினுடைய நடிப்பும் இதை அழியாக் காவியமாக்கியுள்ளன. எனினும் 20ம் நூற்றாண்டில் தங்க உற்பத்தியின் பிரதான போக்குகளின் மீது இவை மிகக்குறைவான தாக்கத்தையே கொண்டிருந்தன.

அதுவரை தங்க உற்பத்தி முதலாளித்துவத் தொழில் துறையில் மற்ற பிரிவுகளிலிருந்து வேறுபட்டிருந்தது. சரியானபடி கணக்கு வைக்கப்பட்டிருக்கும் வழக்கமான தொழில் நிறுவனத்தைப்போல அது இருக்க வில்லை. அதிர்ஷ்டத்தை அடிப்படையாகக் கொண்ட விளையாட்டைப் போலவே இருந்தது. தங்க வேட்டையில் ஆயிரக்கணக்கானவர்கள் ஏழைகளா னார்கள். குறைவான எண்ணிக்கையுள்ள சிலர் கற்பனையிலும் நினைத்துப்பார்க்க முடியாத அளவுக்குப் பணக்காரர்களானார்கள். தென் ஆப்பிரிக்காவில் நிலைமை வேறுவிதமாக இருந்தது. சுத்தம் செய்யப்பட்ட ஒவ்வொரு டன் தாதுப் பொருளுக்கும் உற்பத்தி செய்யப்பட்ட ஒவ்வொரு அவுன்ஸ் தங்கத்துக்கும் எவ்வளவு பணம் செலவழிக்கப்பட்டிருக்கிற தென்பது இங்கே கம்பெனிகளுக்கு நன்றாகத் தெரியும். மற்ற தொழில்துறைப் பிரிவுகளில் கிடைக்கும் லாபத்துக்குச் சிறிதும் குறையாமல் தங்க உற்பத்தியிலும் பெறுவதற்கு அவர்கஷீமீ

முயற்சிக்கிறார்கள் . இங்கே அவர்கள் சில தந்திரங்களைச் செய்ய முடியும். உற்பத்திச் செலவுகளின் இயக்கியலைப் பொறுத்து சுத்தம் செளிணியப்படும் தாதுப்பொருளின் அளவையும் கிடைக்கும் தங்கத்தின் அளவையும் மாற்ற முடியும்.

இன்னொரு முக்கியமான மாற்றம் நடைபெற்றது. 1930க்கள் வரை பவுன் ஸ்டர்லிங்கிலும் டாலர்களிலும் தங்கத்தின் விலை இரண்டு நூற்றாண்டு காலமாக அநேகமாக எந்த மாற்றமும் இல்லாதிருந்து வந்திருக்கிறது. ஏனென்றால் இந்த இரண்டு நாணயங் களின் நிலையான தங்க உள்ளடக்கத்தைக் கொண்டு அது நிர்ணயிக்கப்பட்டிருந்தது.

1931–ல் பவுனின் மதிப்புக் குறைப்பும் 1934–ல் டாலரின் மதிப்புக் குறைப்பும் இந்த நாணயங்களின் தங்க உள்ளடக்கத்தில் தீவிரமான வீழ்ச்சியை, ஆகவே தங்கத்தின் விலையின் அதிகரிப்பைக் குறித்தன. அது டாலர்களில் 69 சதவீகிதம் அதிகரித்தது. பவுன்களில் (இரண்டாம் உலக யுத்தம் தொடங்கியது பொழுது) இன்னும் கூடுதலாகவே உயர்ந்தது. அதே சமயத்தில் உலகப் பொருளாதார நெருக்கடியின் தாக்கத்கதினால் மற்ற பண்டங்களின் விலைகளும் குறைந்தன. ஆகவே தங்கச் சுரங்கத் தொழிலின் உற்பத்திச் செலவுகளும் குறைந்தன.

பெரும்பாலான தொழில்கள் பொருளாதார மந்தத்தினால் பாதிக்கப்பட்டு உற்பத்தியைக் குறைத்துக் கொண்டிருந்த நேரத்தில் ஒரு விசித்திரமான சம்பவம் நடைபெற்றது: தங்கக் கம்பெனிகள் ஏராளமாக லாபமடைந்து கொண்டு செழிப்பாக இருந்தன. 1940ல் முதலாளித்துவ உலகத்தில் தங்க உற்பத்தி தென் ஆப்பிரிக்க யூனியனிலிருந்து 40 சதவீகிதம் கிகைடத்தையும் சேர்த்து அதன் சிகரத்தை 1,138 டன்களை எட்டியது. இப்பொழுது உலக தங்க உற்பத்தியில் இரண்டாவது இடத்தைக் கனடா பெற்றிருந்தது. அமெரிக்கா மூன்றாவது இடத்தைப் பெற்றிருந்தது.

அடுத்துவந்த முப்பதாண்டுகளும் முதலாளித்துவ நாடுகளைச் சேர்ந்த தங்க உற்பத்தியாளர்களுக்குச் சிரமம் நிறைந்த காலமாகும். தொழில்துறையை யுத்தத் தேவைகளுக்கு மாற்றியமைத்த படியால் அமெரிக்காவில் கனடாவிலும் தென் ஆப்பிரிக்காவிலும்கூட தங்க உற்பத்தி தீவிரமாகக் குறைந்தது. பண வீக்கத்தின் காரணமாக உற்பத்திச் செலவுகள் கணிசமான அளவுக்கு அதிகரித்தன. ஆனால் 1934–ல் நிர்ணயிக்கப்பட்ட டாலரின் அதிகாரபூர்வமான தங்க விலை 1971 வரை மாறாமலிருந்தது. தங்க உற்பத்தியில் லாபம் மென்மேலும் குறைந்து கொண்டே வந்தது. பல

சுரங்கங்கள் நிரந்தரமாக அல்லது தற்காலிகமாக மூடப்பட்டன. தென் ஆப்பிரிக்கத் தங்கத் தொழில் இந்தக் கால கட்டத்தை சுலபமாகவே கடந்தது. அங்கே புதிய வளமான தங்கம் இருக்குமிடங்கள் கண்டுபிடிக்கப்பப்பட்டன. தொழில் நுட்பவியலின் முன்னேற்றத்தால் செலவு களைக் குறைப்பது சாத்தியமாயிற்று. வெள்ளைத் தொழிலாளர் களைக் காட்டிலும் ஆப்பிரிக்கர்களின் உழைப்புச் சக்தி இன்னும் மிக மலிவானதாகவே இருந்தது.

1945-ல் முதலாளித்துவ நாடுகளில் தங்க உற்பத்தி 654 டன்களாகக் குறைந்தது. அதில் பாதிக்கும் அதிகமானது தென்ஆப்பிரிக்காவில் உற்பத்தி செய்யப்பட்டது. 1962ல் யுத்தத்துக்கு முன்பு எட்டிய சிகரத்தை அது கடந்துவிட்டது; 1960க்களின் கடைசியிலும் 1970க்களின் தொடக்கத்திலும் வருடந்தோறும் 1,250-1300 டன்கள் என்ற மட்டத்தில் நிலைத்தது. இதில் சுமார் முக்கால் பங்கு தென் ஆப்பிரிக்கக் குடியரசிலிருந்து (1961 முதல் அதற்கு இப்பெயர் ஏற்பட்டது) ஒரே சீராகக் கிடைத்துவந்தது.

1968-ல் தங்கத்தின் சுதந்திரமான சந்தை விலை அதிகாரபூர்வமாக நிர்ணயிக்கப்பட்ட விலையிலிருந்து வேறுபட்டிருக்க அனுமதிக்கப் பட்ட பொழுது ஒரு புது யுகம் தொடங்கியது. அதன் விலை மேலே ஏறியதென்பது உண்மையே. 1972 வரை இந்த வேறுபாடு ஒப்பீட்டளவில் சொற்பமான அளவுக்குத்தான் இருந்தது, ஆனால் பண வீக்கத்தின் விளைவாக, மூலப்பொருள்களின் விலைகள் எல்லா இடங்களிலும் அதிகரித்து பொழுது, பணவியல் அமைப்பு நெருக்கடியில் சிக்கிய பொழுது தங்கத்தின் சந்தை விலை வானத்தைஎட்டியது.

தங்கச் சுரங்கக் கம்பெனிகளின் லாபமும் வானத்தை எட்டியது. ஆனால் தங்கத்தின் உற்பத்தி குறைந்ததே தவிர அதிகரிக்கவில்லை. கம்பெனிகள் ஏகபோகங்களுக்கு உரிய வகையில் நடந்து கொண்டன: விலைகளை உயர்ந்த மட்டத்திலேயே வைத்திருக்க வேண்டுமென்பதற்காக அவை உற்பத்தியைக் குறைத்தன. முந்திய விலையில் சுத்தம் செளிணிவது லாபகரமாக இல்லாத மட்டமான தாதுப் பொருள்களை உபயோகிப்பதன் மூலம் இதைச் சாதிக்க முடியும். 1975ல் முதலாளித்துவ நாடுகளில் தங்க உற்பத்தி பல வருடங்களுக்குப் பிறகு முதல் தடவையாக 1,000 டன்களுக்குக் கீழே குறைந்தது.

1980-ல் தென்ஆப்பிரிக்கக் குடியரசில் உற்பத்தி செய்யப்பட்ட 675 டன்களையும் சேர்த்து (சுமார் 70 சதவீகிதம்) சுமார் 690 டன்கள் உற்பத்தி

செய்யப்பட்டன. யுத்தத்துக்கு முன்பிருந்ததைப் போல இப்பொழுதும் கனடா இரண்டாவதாக இருந்தது. பிரேசில் மூன்றாவதாகவும் அமெரிக்கா நான்காவதா கவும் இருந்தன. எனினும் வட அமெரிக்காவிலிருக்கும் இந்த இரண்டு நாடுகளிலும் தனி முதலான உற்பத்தியின் அளவு இரண்டாம் உலக யுத்தத்துக்கு முன்பிருந்ததைக் காட்டிலும் மிகவும் குறைவாக இருந்தது. எஞ்சிய அளவை இதர பல நாடுகள் உற்பத்தி செய்தன. அவற்றில் மிகவும் முக்கியமானவை அட்டவணை 1–ல் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

நெடுங்காலமாகவே தங்கம் உற்பத்தி செய்து வரும் நாடுகளான ஆஸ்திரேலியா, கானா, ஜிம்பாப்வே மற்றும் சமீபத்தில் தங்கம் உற்பத்தி செய்கின்ற நாடான பாப்புவா–நியுகினியாவும் அவற்றில் உள்ளன. ஐரோப்பாவில் தங்க உற்பத்தி என்பது அநேகமாக இல்லையென்றே சொல்லலாம். எனினும் சில நாடுகளில் அநேகமாக ரோமானியர் காலத்தைச் சேர்ந்த பழைய சுரங்கங்களிலிருந்து சிறிதளவு தங்கம் உற்பத்தி செய்யப்படுகிறது. இரும்பு அல்லாத உலோகங்களை உற்பத்தி செளிணியும் பொழுது கிடைக்கும் தங்கத்தையும் இதோடு சேர்த்துக் கொஷீமீள வேண்டும். சமீப வருடங்களில் மேற்கு ஐரோப்பாவைச் சேர்ந்த எல்லா நாடுகளும் மொத்தத்தில் வருடந்தோறும் 10–15 டன்கள் தங்கத்தை உற்பத்தி செய்தன. சில சமயங்களில் ஒரு நாடு “சொந்தமாகத்” தங்கத்தை உற்பத்தி செய்வது தேசிய கௌரவமாகக் கருதப்படுகிறது. இங்கிலாந்தின் அரசியான இரண்டாம் எலிஸபெத்தின் திருமண மோதிரம் வேல்ஸ் பிரதேசத்தில் உற்பத்தி செய்யப்படுகின்ற மிகக் குறைவான அளவைக் கொண்ட தங்கத்தில், பிரிட்டிஷ் தங்கத்தில் தயாரிக்கப்பட்டது.

தங்கம் கிடைக்கும் இடங்களில் மிகப் பெரியவை 1950–க்களில் தென் ஆப்பிரிக்காவில் கண்டு பிடிக்கப்பட்டன. அதற்குப் பிறகு புதிய கண்டு பிடிப்புக்களைப் பற்றி பரபரப்பான செளிணிதிகள் அவ்வப்பொழுது வெளிவருவதுண்டு. ஆனால் இவை அனைத்துமே பொய்யாக அல்லது மிகப்பெரிய அளவுக்கு மிகைப்படுத்தப்பட்டவையாக இருக்கின்றன. 1970க்களில் தங்கத்தின் விலையில் ஏற்பட்ட மகத்தான அதிகரிப்பினால் தங்கவேட்டை ஓரளவுக்கு ஊக்குவிக்கப் பட்டது. ஆனால் இதுவரையிலும் முக்கியமான விளைவு கள் ஏற்படவில்லை.

முதலாளித்துவ நாடுகளில் தங்க உற்பத்தி யுத்தத்துக்கு முன்பிருந்த அளவைக் காட்டிலும் கணிசமாகக் குறைந்திருப்பதை நாம் பார்க்கலாம். அதே சமயத்தில் கடந்த 40 வருடங்களில் சரக்குகள் மற்றும் வசதிகளின்

மொத்த உற்பத்தி பல மடங்கு அதிகரித்திருக்கிறது. பல முக்கியமான உலோகங்கள் யுத்தத்துக்கு முன்பு இருந்தைக் காட்டிலும் பல டஜன் மடங்கு அதிக மாகத் தற்பொழுது உற்பத்தி செய்யப்படுகின்றன. இந்த நிலைமை தங்கத்தின் வளர்ச்சியடைந்து வரும் தேவையோடு மோதுகிறது, அதனால் தங்கச் சந்தையில் சில முக்கியமான விளைவுகள் ஏற்படுகின்றன.

சீனாவில் தங்க உற்பத்திப் பிரச்சினை விசேஷமான அக்கறை கொண்டிருக்கிறது. சீனாவில் ஏராளமான எண்ணெய் வளம் கண்டுபிடிக்கப்பட்டிருப்பதாக அரை குறையான ஆதாரத்தைக் கொண்ட செய்திகள் மேற்கு நாடுகளில் அவ்வப்பொழுது பரப்பப்படுவதைப் போல சீனாவில் தங்கம் அகப்பட்டிருப்பதாக அதே மாதிரியான சந்தேகத்துக்குரிய தகவல்கள் தங்கம், எண்ணெள் ஆகிய இரண்டு பொருள்களுக்குமே இன்று உலகத்தில் பற்றாக்குறை ஏற்பட்டிருப்பதால் இத்தகைய செய்திகள் அதிகமான வரவேற்பைப் பெறுகின்றன. எனினும் சீனாவின் தங்க உற்பத்தி எதிர்காலத்தில் உலகத்தின் தங்க அளவைக் கணிசமாக அதிகரிக்கும் என்பது சிறிதும் சாத்தியமில்லாததே என்று நிபுணர்கள் கருதுகிறார்கள். எனினும் சீனாவில் தங்க வேட்டையைப் பற்றியும் புதிய கண்டுபிடிப்புக்களைப் பற்றியும் கவனிப்பதற்குரிய தகுதியைக் கொண்ட செய்திகள் மேற்கத்திய பத்திரிகைகளில்வெளிவந்திருக்கின்றன. சமீபத்தில் கண்டுபிடிக்கப்பட்ட காப்பிடங்களின் மூலமாக வருடம் 30 டன்களுக்கும் அதிகமாக உற்பத்தி செய்யப்படலாம் என்று சொல்லப்படுகிறது. சீனர்கள் திபெத்தின் மீது அதிகமான நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். கணிசமான அளவுக்கு வண்டற்படிவு மற்றும் தாதுப்பொருள் தங்கமும் ஒரு நாள் கண்டுபிடிக்கப்படும் என்று நம்புகிறார்கள். சீன மக்கள் குடியரசில் தங்கச் சுரங்கத் தொழிலின் வளர்ச்சியில் பல இடையூறுகள் ஏற்பட்டிருக்கின்றன. சுரங்க வேலை களுக்குச் சக்திவாய்ந்த அந்நியத் தொழில்நுட்பம் தேவைப்படுகிறது. ஆனால் அதை வாங்குவதற்கு சீனாவிடம் அந்நிய நாணயச் செலாவணி கிடையாது.

சீனாவில் தங்கம் கிகடைக்குமிடங்களை இயன்ற அளவுக்கு அதிகமாகக் கண்டுபிடிப்பதும் அவற்றைப் பயன்படுத்துவதை “நல்ல சமயத்துக்கு” விட்டுவைப்பதுமே அடிப்படையில் சீனாவின் இன்றைய தங்கக் கொள்கையாகும்.

# உழைப்பும் மூலதனமும்

**ம** னிதகுலத்தின் வளர்ச்சியிலிருக்கும் யுகங்கள் மக்கள் உழைக்கும் முறைகளையும் அவர்கள் உபயோகப் படுத்தும் கருவிகளையும் பொறுத்து வேறு படுகின்றன. உற்பத்தி முறைகளிலும் உற்பத்திக் கருவிகளிலும் ஏற்படுகின்ற மாற்றங்கள் சமூகத்தின் அமைப்பில், மக்களுக்கிடையே உள்ள பொருளாதார உறவுகளில் ஏற்படுகின்ற மாற்றங்களுக்கு அடிப்படையாக இருக்கின்றன. தங்கத்தின் உற்பத்தியிலும் இது மிகவும் வெளிப்படையாகத் தெரிகிறது. பண்டைக் கால எகிப்தில் கல்லாலும் வெண்கலத்தாலும் செய்யப்பட்ட கோடரிகளைப் பயன்படுத்தி தங்கம் வெட்டியெடுக்கப்பட்டது. மேலும் அடிமை உழைப்பைக் கொண்டுதான் எப்படிப்பட்ட பெரிய அளவான உற்பத்தியும் அன்று நடைபெற முடியும். 20ம் நூற்றாண்டில் மிகச் சிக்கலான தொழில் நுட்பவியலைப் பயன்படுத்தி தங்கம் வெட்டி எடுக்கப்படுகிறது. பெரிய முதலாளித்துவ நிறுவனங்களும் கூலி உழைப்பும் இந்த உற்பத்தி வடிவத்துக்குப் பொருந்தியவையாகும்.

இந்த விதியை அதன் நேர்ப்பொருளில் புரிந்துகொள்ளக் கூடாது. 19-ம் நூற்றாண்டில் கலிபோர்னியாவிலும் அலாஸ்காவிலும் தங்க வேட்டையில் ஈடுபட்டவர்கள் முதலாளித்துவத்தின் கீழ் வாழ்ந்தவர்களே. நீராவி இயந்திரங்களும் இரயில் போக்குவரத்தும் முன்பே வந்துவிட்டன. எனினும் அவர்கள் தங்க வேட்டைக்கு உபயோகித்த தொழில்நுட்பவியல் எகிப்திய, ரோமானியர்கள் காலத்திலிருந்து அநேகமாக மாற்றமடையவில்லை. ஆனால் அக்காலத்துக்குரிய வேலையின் மகத்தான அளவை அவர்கள் எட்டமுடிய வில்லை. அடிமை உடைமையாளர்கள் பலவந்தத்தின் மூலம் பெருந்திரளான மக்களை வேலையில் ஈடுபடுத்தி னார்கள், வெவ்வேறு தேர்ச்சிகளைக் கொண்ட தொழிலாளர்கள் மத்தியில் ஓரளவுக்கு உழைப்புப் பிரிவினையையும் அமுல் நடத்தினார்கள். தங்கம் பல ஊழிகளாகவே பிரதானமாக அடிமைகள் மற்றும் பண்ணையடிமைகளின் கட்டாய உழைப்பினால் தான் வெட்டியெடுக்கப்பட்டது. பண்டைக் காலத்தின் கிழக்கத்திய சர்வாதிகார முடியாட்சிகளில் [இவற்றில் எகிப்தும் அடங்கும்]

அரசுக்குச் சொந்தமான அடிமைகள் இருந்தார்கள், தங்க உற்பத்தி ஒரு வகையான அரசு ஏகபோகமாக இருந்தது. ஆலயங்களுக்கும் மதகுருக்களின் அமைப்புகளுக்கும் சொந்தமாக அடிமைகள் இருந்தார்கள். தங்கச்

சுரங்கங்களும் இருந்தன. ஸ்பெயினிலிருந்த ரோமானியர் களுடைய தங்கச் சுரங்கங்களிலும் அடிமை உழைப்பு உபயோகிக்கப்பட்டது.

தங்க உற்பத்தியில் அன்று மேலோங்கியிருந்த இத்தகைய சமூக வடிவங்கள் “கலப்பற்றவை” அல்ல என்பது உண்மையே. கிறிஸ்துவுக்கு முந்திய இரண்டாம் ஊழியக் காலத்திலேயே நுபியா மற்றும் குஷ் [இன்றைய சூடான்] பிரதேசங்களின் வண்டற்படிவுகளைச் சுதந்திரமான தயாரிப்பாளர்கள் வண்டற்படிவுகளைச் சுதந்திரமான தயாரிப்பாளர்கள் வெட்டியெடுத்தார்கள். அரசுக்கு [அரசருக்கும் மதகுருக்களுக்கும்] அவர்கள் செலுத்த வேண்டிய ஒரே கடமை தங்க வரியைக் கட்டுவதே என்று குவிரிங் எழுதுகிறார். கி.மு.2ம் நூற்றாண்டில் ஏற்பட்ட ஒரு “தங்க வேட்டையைப்” பற்றி ஸ்ட்ராபோ எழுதிய வர்ணனையை அவர் மேற்கோள் காட்டுகிறார். கிழக்கு ஆலப்ஸில் [தற்பொழுது ஆஸ்திரியா] டௌரிசி என்ற மக்கட்குழுவினர் வசித்த பிரதேசத்தில் தங்கம் கண்டுபிடிக்கப் பட்டிருந்தது. எனவே இத்தாலி முழுவதிலுமிருந்து மக்கள் அங்கே கூட்டமாகச் சென்றார்கள். இது அங்கேயிருந்தவர்களுக்கு அதிருப்தியளித்த படியால் அவர்கள் புதிதாக வந்தவர்களை விரட்டியடித் தார்கள். பிற்காலத்தில் இந்தக் கதை தலைகீழாக மாறியது. தங்கம் கண்டுபிடிக்கப்பட்ட இடத்தில் வசிக்கின்ற அதிர்ஷ்டத்தை அல்லது துரதிர்ஷ்டத்தைப் பெற்றிருந்தவர்களைப் புதிதாக வந்தவர்கள் விரட்டியடித்தார்கள். கொலை செய்தார்கள். ரோமானிய அரசு போ என்ற நதிக்கரையிலிருந்த தங்கம் அகப்படும் வண்டற்படிவுகளைப் பிரித்து தனி நபர்களுக்குக் குத்தகைக்குக் கொடுத்தது, அந்தக் குத்தகைதாரர் ஒருவர் தன்னுடைய பிரதேசத்தில் 5,000 தொழிலாளர்களுக்கு மேல் வேலைக்கு உபயோகப்படுத்தக்கூடாது என விதிக்கப் பட்டிருந்ததென்று பிளினி எழுதுகிறார். அந்தக் குத்தகைதாரர்கள் அடிமை உடைமையாளர்களாக இருந்திருப்பார்கள், அடிமைகள் தங்கத்தைச் சுத்தம் செய்யும் வேலையைச் செய்தார்கள் என்று நாம் கருதலாம்.

பண்டைய உலகத்தில் தங்க இருப்புக்கள் அரசுக் கருவூலங்களில் பதுக்கப்பட்டன. இவை ஒரு வெற்றி யாளரிடமிருந்து அடுத்த வருக்குக் கைமாறின. ரோமானியப் பேரரசு வீழ்ச்சியடைந்த பொழுது தங்கம் கிழக்கே கொண்டு செல்லப்பட்டு படையெடுப்புகளின் போதும் பெருந்திரளான மக்கள் இடம் பெயர்ந்து சென்றபொழுதும் ஏற்பட்ட கொந்தளிப்பான காலங்களில் பூமியில் புதைத்துவைக்கப் பட்டது. ஐரோப்பாவின் நிலப்பிரபுத்துவ கால அரசர்கள் தங்கத்தை “அங்குமிங்குமிருந்து” சேகரிக்க வேண்டிய கட்டாய

நிலையில் இருந்தார்கள். இதற்கு அவர்கள் நிலத்தின் மீது தங்களுக்கிருந்த உடைமையையும் பண்ணையடிமைகளைப் பொருளாதாரமற்ற வகையில் நிர்ப்பந்தித்தலையும் பயன்படுத்தினார்கள். தங்கம் அகப்படுகின்ற நிலத்தை சுதந்திரமான அல்லது அரை சுதந்திரமான தங்க வேட்டைக்காரர்களடங்கிய குழுக்களிடம், பிறகு தொடக்கக் கால முதலாளித்துவத் தொழில் முனைவர்களிடம் குத்தகைக்கு விடுகின்ற முறை மென்மேலும் அதிகமாகப் பரவியது.

சிலேஷியாவில் [இன்றைய போலந்தில்] தங்கம் வெட்டியெடுத்தல் நகரங்கள் மற்றும் நகர்ப்புற முதலாளி வர்க்கத்தின் வளர்ச்சியோடு இணைந்திருந்தது. அங்கே கூலிகள் மிகவும் குறைவாக இருந்தபடியால் தொழில் முனைவர்கள் நில உடைமையாளர்களுக்கு வாரம் கொடுத்த பிறகும் நல்ல லாபத்தைப் பெற்றனர். 16ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஒரு தொழிலாளிக்கு நாளொன்றுக்கு 16 பென்னிங் கூலி கொடுக்கப்பட்டது; ஒரு தங்க டுகாட் [3.42 கிராம் சுத்தமான தங்கம்] கிடைப்பதற்கு அவன் ஐம்பது நாட்கள் வேலை செய்யவேண்டும். ஓடர் நதியின் மேற்புறத்திலிருந்த கிளை நதிக்கரைகளில் தங்கம் குறைவாகவே கிடைத்த போதிலும் அங்கே பாடுபடுவது இதன் மூலம் சாத்திய மாயிற்று.

15,16-ம் நூற்றாண்டுகளில் அரிய உலோகங்களை வெட்டியெடுப்பது ஜெர்மனியில் குவிக்கப்பட்டிருந்தது அந்த நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு மாபெரும் முக்கியத்துவத்தைக் கொண்டிருந்தது. இந்தக் காலகட்டத்தில் "பொருளாதார ரீதியில் ஐரோப்பாவில் தலைமையிடத்தில்" அதை வைத்தது என்று பிரெடெரிக் எங்கெல்ஸ் கருதினார். இதன் காரணமாக அங்கே ஏற்பட்ட சமூக, பொருளாதார நிலைமைகள் "மதச் சீர்திருத்தம் என்று சொல்லப்பட்டு மதப் போர்வையில் நடைபெற்ற முதலாவது பூர்ஷ்வா புரட்சியை" உருவாக்கின என்கிறார். எனினும் ஐரோப்பாவில் தங்க மற்றும் வெள்ளி உற்பத்தியின் அளவு வளர்ச்சியடைந்து வரும் பொருளாதாரத்தின் தேவைகளோடு பொருந்தி நிற்பது மென்மேலும் குறைந்தது. "முன்பு போர்த்து கீசியர்களை ஆப்பிரிக்காவுக்கு விரட்டிய தங்கப் பசி அமெரிக்காவைக் கண்டுபிடிக்கக் காரணமாக இருந்தது. ஏனென்றால் 14 மற்றம் 15-ம் நூற்றாண்டுகளின் போது விரிவாக வளர்ச்சியடைந்திருந்த ஐரோப்பியத் தொழில்துறை மற்றும் அதனை ஒட்டிய வர்த்தகம் 1450 முதல் 1550 வரை மாபெரும் வெள் நாடாக இருந்த ஜெர்மனி கொடுக்கக் கூடியதற்கும் அதிகமான பரிவர்த்தனைச் சாதனத்தைக் கோரின,"

16ம் நூற்றாண்டின் பிற்பாதியில் ஐரோப்பாவில் அரிய உலோகங்களின் உற்பத்தி தீவிரமாகக் குறைந்தது. ஏனென்றால் அமெரிக்காவிலிருந்து ஏராளமான அளவில் வரத் தொடங்கியிருந்த மலிவான வெள்ளி, தங்கத்தோடு போட்டியிடுவதற்கு அதனால் முடியவில்லை. அரிய உலோகங்களை வெட்டியெடுக்கும் உலகக் கேந்திரங்கள் புதிய உலகத்துக்கு மாறின, அங்கே அவை வெளிப்படையான அல்லது போலியான முறையில் மறைக்கப்பட்டிருந்த அடிமை முறையை அடிப்படையாகக் கொண்டிருந்தன. ஸ்பானிஷ் மற்றும் போர்த்துகீசிய வெற்றியாளர்களும் அவர்கள் வழிவந்தவர்களும்அடுத்தடுத்து வந்த அரசர்களிடமிருந்து நிலத்தை அதில் குடியிருந்த சுதேசி மக்களோடு சேர்த்து–குத்தகைக்குப் பெற்றார்கள். அந்த சுதேசிகள் உண்மையில் அடிமைகளாக மாற்றப்பட்டார்கள். தங்க வயல்களிலும் வெள்ளிச் சுரங்கங்களிலும் அமெரிக்க இந்தியர்கள் கொடுமையான வகையில் சுரண்டப் பட்டதே தெற்கு மற்றும் மத்திய அமெரிக்காவில் இந்த மக்களினங்கள் மொத்தமாக அழிந்ததற்கு முக்கிய காரணமாகும். 16–ம் நூற்றாண்டிலே ஆப்பிரிக்கா விலிருந்து அடிமைகளை இறக்குமதி செய்வது ஆரம்பமாயிற்று. இவர்களில் பலர் சுரங்கங்களில் வேலை செய்ய அனுப்பப்பட்டனர். நீண்டகாலமாக இருந்து வரும் பழக்கப்படி உற்பத்தி செய்யப்பட்ட எல்லா உலோகத்திலும் ஐந்திலொரு பங்கை அரசருக்குக் கொடுக்க வேண்டும். இது பணமாகவும் பொருளாகவும் கொடுக்கப்பட்ட ஒருவகையான வரியாகும். உற்பத்தி செய்யப்பட்ட பொருளைக் கொடுத்ததால் அது பொருளாகக் கொடுக்கப்பட்ட வரி; அந்தப் பொருள் பணம் என்பதால் அது பணமாகக் கொடுக்கப்பட்ட வரி. 18–ம் நூற்றாண்டுவரை அரிய உலோகங்களின் உற்பத்தியில் முதலாளித்துவ உறவுகள் வளர்ச்சியடையத் தொடங்கவில்லை; குறிப்பாகப் 19–ம் நூற்றாண்டில் இவை வளர்ச்சியடைந்தன. எனினும் இந்தக் காலத்தில் அரிய உலோகங்களின் மொத்த உலக உற்பத்தியில் தெற்கு மற்றும் மத்திய அமெரிக்காவின் பங்கு குறையத் தொடங்கிவிட்டது.

அமெரிக்காவிலிருந்து கொண்டுவரப்பட்ட தங்கமக் ஸ்பெயினிலும் போர்த்துக்கீசியாவிலும் பல உயர்ந்த நிலப்பிரபுத்துவக் குடும்பங்களின் செல்வ வளத்துக்கு அடிப்படையாக இருந்தது. ஆனால் பெரும்பாலும் இந்த தங்கம் இக்கனவான்களின் மாளிகைகள் இருந்த எஸ்ட்ரேமடூராவில் பதுக்கி வைக்கப்படவில்லை. லண்டன் வங்கிகளின் பாதாள அறைகளில்தான் பத்திரப் படுத்தப்பட்டிருந்தது. துணி நெசவாலைகளும் இரும்பு உற்பத்தித் தொழிற்சாலைகளும் அமெரிக்கச் சுரங்கங்களிலிருந்து கிடைத்ததைக்

காட்டிலும் அதிகமான லாபத்தைக் கொடுத்தன. ஸ்பானியர்களும் போர்த்துகீசரியர்களும் பிடித்திருந்த பிரதேசங்களிலிருந்து கொண்டுவரப்பட்ட தங்கமே கிரேட்பிரிட்டன் 18ம் நூற்றாண்டிலேயே அநேகமாகத் தங்கஆதார அளவு கோலைப் பின்பற்றுவதற்கு உதவி செய்தது.

ரஷ்யாவில் அரசு தொடக்கத்திலிருந்தே தங்க உற்பத்தி யில் தீர்மானமான பாத்திரத்தை வகித்தது. 19ம் நூற்றாண்டு தொடங்கும்வரை அது அதிகாரபூர்வமாக அரசு ஏகபோகமாக இருந்தது. 1812–ல் வெளியிடப்பட்ட ஆணையின்படி தங்கச் சுரங்கத் தொழிலில் ஈடுபடு வதற்குத் தனிப்பட்ட தொழில் முனைவர்களுக்கு அனுமதி வழங்கப்பட்டது. ஆனால் அவர்கள் அதை நிர்ணயம் செய்யப்பட்ட விலைக்கு அரசிடம் விற்பனை செளிணிய வேண்டும் என்ற நிபந்தனை விதிக்கப் பட்டது. இதற்குப் பிறகும்கூட பெரும் பகுதி உலோகம் அரசு நிறுவனங்கள் அநேகமாகக் கூலி உழைப்பைப் பயன்படுத்தவில்லை. கடுந்தண்டனை விதிக்கப்பட்டவர்கள். தூர மாகாணங்களுக்குக் கடத்தப்பட்டவர்கள் அரசின் தங்க வயல்களுக்கும் சுரங்கங்களுக்கும் அனுப்பிவைக்கப்பட்டார்கள். இவை சிறைவாசத்துக்கும் தண்டனைக்கும் உரிய இடங்களாகக் கருதப்பட்டன.

1861–ல் பண்ணையடிமைகளின் விடுதலைக்கு முன்பு தனிப்பட்டவர்களுடைய தங்க வயல்களிலும் சுரங்கங் களிலும் கூலி உழைப்பு அபூர்வமாகத்தான் உபயோகிக்கப்பட்டது. அந்த வயல்கள் மற்றும் சுரங்கங்களோடு “பிணைக்கப்பட்டிருந்த” பண்ணை யடிமைகள் அல்லது பருவங்களின்போது அத்தக் கூலிக்கு வேலை செய்வதற்காக மற்ற இடங்களிலிருந்து கொண்டுவரப்பட்டிருக்கும் பண்மையடிமைகள் இவற்றில் வேலை செய்தார்கள். அரிய உலோகச் சுரங்கத் தொழிலில் பண்யைடிமைகளின் விடுதலைக்குப் பிறகுதான் முதலாளித்துவ உறவுகள் மெதுவாகவும் கஷ்டத்தோடும் வளர்ச்சியடையத் தொடங்கின. ஆனால் நிலப்பிரபுத்துவ பண்ணையடிமை உடைமைக் காலத்தின் எச்சங்களில் பல 1917–வரை அவற்றோடு இணைந்திருந்தன. இத்தொழிலில் ஈடுபட்டிருந்த தொழிலாளர்களுடைய வேலை செய்யும் நிலைமைகளும் வாழ்க்கை நிலைமைகளும் மிகவும் கடினமானவையாக இருந்தன. 20ம் நூற்றாண்டின் தொடக்கத்திலும்கூட நாளொன்றுக்குப் பன்னிரண்டு மணி நேரத்துக்கும் அதிகமான வேலை செய்வது வழக்கமாக இருந்தது. தொழிலாளர்களின் கூலிக்குப் பதிலாக பெரும்பாலும் சிட்டைகள்தான் தரப்படும். அவர்கள் இவற்றைக் கொண்டு சுரங்க வட்டாரத்திலுள்ள கடைகளில் தரக்

குறைவான ஆனால் அதிகமான விலைக்கு விற்பனை செய்யப்படும் பொருள்களையே வாங்க வேண்டும்.

யூராலில் தங்க உற்பத்தியில் இந்த ராணுவ அதிகார வர்க்க மற்றும் நிலப்பிரபுத்துவ, பண்ணையடிமை முறையின் எச்சங்கள் பலவற்றைக் கொண்டிருந்த புதிய, முதலாளித்துவ முறையின் உருவாக்கத்தைப் பற்றிய தத்ரூபமான வர்ணனையை டி.என்.மாமின்–சிபிரியாக்கின் நூல்களில் நாம் பார்க்கிறோம். நாங்கள் தங்கத்தைச் சுத்தம் செய்கிறோம். ஆனால் எங்கள் குரல்கள் வேதனையை வெளியிடுகி றோம்; அடிமைத்தனத்தால், முதுகொடியப் பாடுபட்ட உழைப்பினால், பசியினால், பட்டினியால், சவுக்கடியால் எங்கள் குரல்கள் வேதனையை வெளியிடுகின்றன என்ற நாட்டுப் பாடலோடு அவர் எழுதிய தங்கம் [1892] என்ற நாவல் தொடங்குகிறது.

இவர்களுடைய வேலை நிலைமைகளையும் வாழ்க்கை யையும் மாமின்–சிபிரியாக் ஊடுருவிக் பார்க்கின்ற அரிய திறனோடு வர்ணிக்கிறார். திருட்டுத் தங்கத்தை வாங்குபவர்களையும் அவர் சித்தரிக்கிறார். நிற்க, இவர்களுடைய நடவடிக்கையினால் ரஷ்யாவில் தங்க உற்பத்தியைப் பற்றிய புள்ளிவிவரங்கள் சிறிதளவு நம்பகமற்றவையாக இருக்கின்றன. ரஷ்யாவில் தொழில்துறையில் தங்கம் உற்பத்தி செய்யப்படத் தொடங்கியதிலிருந்து ஜாராட்சி தூக்கியெறிப்பட்டது வரையிலும் 2,754 டன்கள் தங்கம் உற்பத்தி செய்யப்பட்டதென்று அதிகாரபூர்வமான புள்ளிவிரவங்கள் கூறுகின்றன. தங்கத்தைப் பற்றி ஒரு சிறப்பான புத்தகத்தை எழுதிய ஜி.வி. ஃபோஸ் என்பவர் உண்மை யில் 3,000–3,100 டன்கள் உற்பத்தி செய்யப்பட்டிருக்கும் என்று நம்பக் காரணமிருப்பதாக எழுதுகிறார்.

தங்க வேட்டைக் குழுக்கள் சைபீரியா, அல்டாய், தூரகிழக்கின் முடிவற்ற சமவெளிகளில் தங்கத்தைத் தேடின; சில சமயங்களில் தங்கம் கண்டுபிடிக்கப்பட்டு சுத்தம் செய்யப்பட்டது. ஆனால் அவர்களுடைய வாழ்க்கை அதிர்ஷ்டத்தை நம்பியிருந்தது. இத்தங்க வேட்டைக்காரர்களின் பொருளாதார நிலை ஆரம்ப வருடங்களின்போது கலிபோர்னியாவிலும் ஆஸ்திரேலி யாவிலும் குளோன்டைக்கிலும் தங்க வேட்டையில் ஈடுபட்டவர்களின் நிலையைப் போன்றுதான் இருந்தது. அரசியல் பொருளாதாரத்தின் சொற்களில் அதைச் சிறு பண்ட உற்பத்தி என்று கூறமுடியும், அதாவது முதலாளியோ, கூலி உழைப்பாளியோ இல்லாத உற்பத்தி, அங்கே ஒரு நபர் தன்னுடைய சொந்தக் கருவிகளைக் கொண்டு

தன்னுடைய சொந்தப் பொறுப்பில் உழைக்கிறார். பண்படுத்தப்படாத, குடியமர்த்தப்படாத நிலங்கள் வழக்கமாகத் தனி நபர்களுக்குச் சொந்தமல்ல, அரசுக்கே சொந்தம் என்பதால் நாம் மேலே குறிப்பிட்ட பிரதேசங்களில் இது சாத்தியமாக இருந்தது.

ஆனால் உலோகத்தை வாங்குபவர்கள், சாதாரணமான ஆனால் அத்தியாவசியமான கருவிகளின் விற்பனை யாளர்கள், எல்லா வகையான சரக்குகளையும், குறிப்பாக மதுபானங்களை விற்பனை செய்பவர்கள் என்ற உருவத்தில் மூலதனம் தங்க வேட்டைக்காரர்களை எதிர்பார்த்துக் காகத்திருந்தது. தங்கம் மலிவான விலைக்கு வாங்கப்பட்டது. சரக்குகள் மும்மடங்கு விலைக்கு விற்பனை செய்யப்பட்டன. தங்கத்தை வெட்டியெடுப்பதும்கூட இந்த முன்னோடிகளிடம் நெடுங் காலம் நீடித்திருக்கவில்லை. தங்கம் கிடைத்த நிலத்தைத் தங்க வேட்டைக்காரர்களைப் பின்தொடர்ந்து வந்த பணக்காரத் தொழில் முனைவோர்கள் சீக்கிரத்தில் விலைக்கு வாங்கினார்கள். இவர்கள் முதலாளித்துவ அடிப்படையில் சுரங்கத் தொழிலை அமைத்தார்கள்.

இதற்குச் சிறந்த உதாரணமாக விட்வாட்டர்ஸ்ரேன்ட் பிரதேசத்தில் முதன்முதலில் தங்கத்தைக் கண்டுபிடித்த வர்களில் ஒருவர் என்று கருதப்படுகின்ற ஜியார்ஜ் ஹாரிஸன் வாங்கிய தங்க நிலத்தின் உரிமைக்கு ஏற்பட்ட கதியைக் கூறலாம். சுரங்கத் தொழிலுக்கு அவசியமான பணமோ திறமையோ அவரிடமில்லை. எனவே 1886ல் அவர் தன்னுடைய உரிமையைப் 10 பவுனுக்கு விற்பனை செய்தார். இதற்குப் பத்து வருடங்களுக்குப் பின் பல கைமாறிய பிறகு அது சுமார் 50,000 பவுன் மதிப்பை கொண்டிருந்தது.

தென்ஆப்பிரிக்கத் தங்கத் தொழிலில் மண்வெட்டியும் சட்டியும் வைத்திருக்கும் தங்க வேட்டைக்காரர்களுக்கு ஆரம்பத்திலிருந்தே இடமில்லாதிருந்தது. அந்த மலைப் பகுதிகளில் தங்கத்தை வெட்டியெடுப்பதற்கு மூலதனம், தொழில்நுட்பவியல் மற்றும் நிறுவன அமைப்பு தேவைப் பட்டன, முதலில் ஸ்தல மற்றும் அந்நிய நாடுகளை [குறிப்பாக இங்கிலாந்தைச்] சேர்ந்த முதலீட்டாளர்களிட மிருந்து பணம் திரட்டிய கூட்டுப் பங்குக் கம்பெனிகள் காளான்களைப் போல அதிகமாகத் தோன்றின. தங்கம் கண்டுபிடிக்கப்பட்டு மூன்று வருடங்களுக்குப் பிறகு 1889ல் 450 கம்பெனிகள் இருந்தன. ஆனால் அந்தக் காலத்திலும்கூட பெரிய முதலாளிகளால் ஆதரிக்கப்பட்ட நிறுவனங்கள் சிறு கம்பெனிகளைக் காட்டிலும் பிரம்மாண்டமான வையாக இருந்தன. இதற்குப் பிறகு

சாதகமான சூழ்நிலைகளின்போது சுயேச்சையான கம்பெனிகள் டஜன் கணக்கில் தோன்றின, பிறகு பங்குச் சந்தை வீழ்ச்சிகளின் தாக்குதல்களாலும் ஏராளமாகத் தங்கம் கிடைக்கும் இடத்தைக் கண்டுபிடிப்பதில் வெற்றி கிடைக்காததனாலும் டஜன் கணக்கில் மறைந்தன. இவை எல்லாவற்றையும் சுற்றி அதிகமான மோசடிகளும் நடைபெற்றன.

லாபவேட்டையின் சிகரத்திலிருந்து மேற்குடியினர் சிறு பங்குதாரர்களை மோசடி செய்தனர். இந்த பிரமிட் கோபுரத்தின் கீழே கல்வியறிவில்லாத, ஏழை ஆப்பிரிக்கச் சுரங்கத் தொழிலாளிகள் இருந்தார்கள். இவர்கள் எல்லா உரிமைகளையும் இழந்தவர்கள். 20ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பல்லாயிரக்கணக்கான சீனர்கள்கூட தங்கச் சுரங்கங்களில் வேலை செய்வதற்குக் கொண்டுவரப்பட்டார்கள்.

உற்பத்தி மற்றும் மூலதனக் குவிப்பு என்ற நிகழ்வுப் போக்கு தங்கச் சுரங்கத் தொழிலில் நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஒரு சில பெரிய கார்ப்பரேஷன்கள் உற்பத்தியில் மென்மேலும் அதிகரிக்கும் சதவீகிதத்தை நிறைவேற்றின; பெரும் நிதி முதலாளிகளடங்கிய சிறு குழுவினர் [இவர்களின் எண்ணிக்கை மென் மேலும் குறைந்துகொண்டு வந்தது] இவற்றை நடத்திவந்தனர். தற்பொழுது தென்ஆப்பிரிக்காவின் தங்கச் சுரங்கத் தொழில்துறையை ஏழு பெரிய கம்பெனிகள் நடத்திவருகின்றன. இந்த அமைப்பு பல பத்தாண்டுகளாகவே பெரிய அளவான எத்தகைய மாற்றமும் இல்லாமல் இருந்து வந்திருக்கிறது, இந்த "சகோதரிகளின்" கடைசித் தங்கை 1933–ல் பிறந்தாள்.

இந்தக் கம்பெனிகள் ஒவ்வொன்றுமே அதிகமான அளவுக்குப் பல அடுக்கான நிறுவனங்களாகும். அதிகமான மூலதனத்தைக் கொண்ட இந்த அமைப்பின் வகையை நாம் கார்ப்பரேஷன் என்று சொல்கிறோம். இவை தம்மைக் குழுக்கள் என்று குறிப்பிடுகின்றன. ஒவ்வொரு நிறுவனமும் பிரமிட் கோபுர அமைப்பில் நிர்மாணிக்கப் படுகிறது. அதிகமான உயரத்தில் மேலே இருக்கும் அமைப்பு கீழே இருக்கின்ற சில அமைப்புகளை நிர்வகிக்கிறது. பங்கு மூலதனத்தில் கட்டுப்படுத்தக்கூடிய அதிகாரத்தை வகிப்பதன் மூலம் அந்தக் கீழ் அமைப்பை நிர்வகிக்க முடிகிறது. அதிகாரம் மற்றும் நிர்வாகத்தின் நிர்ணயிக்கப்பட்ட அதிகார வரிசை முறையைக் கொண்ட கூட்டுப் பங்குக் கம்பெனிகளின் அமைப்பு கார்ப்பரேஷன் எனப்படும். அதன் மிக முக்கியமான மற்றொரு கூறு அதன் பல்வகைப்பட்ட அமைப்பே: அவை ஒவ்வொன்றும் தங்கச் சுரங்கங்களைத்

தவிர தொழில்துறை, வர்த்தகம் மற்றும் சேவைத் துறையின் இதர பிரிவுகளைச் சேர்ந்த கம்பெனிகளை நடத்துவதோடு நிதிக் கம்பெனிகளையும் வைத்திருக்கின்றன.

“ஆங்கிலோ-அமெரிக்கன் கார்ப்பரேஷன் ஆப் சௌத் ஆப்பிரிக்கா லிமிடெட்” என்பது தென் ஆப்பிரிக்காவின் மிகவும் சக்திவாய்ந்த நிறுவனமாகும். 1917ல் வைர முதலாளியான எர்னெஸ்ட் ஓப்பன்ஹேமர் இந்த நிறுவனத்தை ஏற்படுத்தினார். அவர் குடும்பம் இன்னும் இதை நிர்வகித்து வருகிறது. இன்று இந்த கார்ப்பரேஷன் சாராம்சத்தில் ஒரு பன்னாட்டு நிறுவனமாகும். அதன் தலைமையிடம் ஜோஹானஸ்பர்கில் இருக்கிறது. ஆனால் அதன் பரந்த ஈடுபாடுகள் பல முதலாளித்துவ நாடுகளின் தொழில்துறைகளில் இருக்கின்றன. நாம் முன்பு குறிப்பிட்ட ஃப்ரீ ஸ்டேட் கெடுல்ட் சுரங்கம் இந்த “ஆங்கிலோ-அமெரிக்கன் கார்ப்பரேஷனைச் சேர்ந்ததாகும். இதன் பொருள் என்ன?

இந்தச் சுரங்கம் “ஃப்ரீ ஸ்டேட் கெடுல்ட் மைன்ஸ்” என்ற சுதந்திரமான கூட்டுப் பங்குக் கம்பெனிக்குச் சொந்தமானது, அதனால் நடத்தப்படுகிறது என்பது பெயளரவில் மட்டுமே. இதில் கட்டுப்படுத்தக்கூடிய பங்குகள் “ஆரஞ்சு ஃப்ரீ ஸ்டேட் இன்வெஸ்ட் மென்ட் டிரஸ்ட் லிமிடெட்” என்ற உடைமைக் கம்பெனிக்குச் சொந்தமாக இருக்கின்றன. இந்தக் கட்டுப்படுத்தக்கூடிய பங்குகளின் துல்லியமன அளவு தெரியவில்லை. ஆனால் தென் ஆப்பிரிக்காவின் தங்க உற்பத்தித் தொழிலில் இருக்கும் வழக்கமான நடைமுறைப் பிரகாரம் 25-30 சதவீகிதப் பங்குகளே கட்டுப்படுத்தக் கூடிய உரிமையைப் பெறுவதற்குப் போதும், சில சமயங்களில் 10 சதவிகிதம் இருந்தால்கூடப்போதும். மீதமுள்ள பங்குகள் ஏராளமான பங்குதாரர்களிடம் பரவிக்கிடக்கின்றன. இவற்றில் பெரிய மீன்கள் என்று சொல்லப்படும் மற்ற கம்பெனிகளும் இருக்கலாம். உலக முழுவதிலுமிருந்து சிறு அளவுள்ள முதலீட்டாளர்களும் இருக்கலாம்.

உடைமைக் கம்பெனி என்பது கலப்பற்ற நிதி அமைப்பே. அது எதையும் உற்பத்தி செய்வதில்லை. பங்குகளை வைத்திருக்கிறது, அவற்றுக்கு லாப ஈவுகளை வசூல் செய்கிறது. “ஆரஞ்சு ஃப்ரீ ஸ்டேட்” முதலீட்டு டிரஸ்டின் சொத்துக்கள் அநேகமாக முழுவதுமே ஆரஞ்சு சுதந்திர அரசின் பிரதேசத்திலிருக்கும் சுரங்கங்களில் முதலீடு செய்யப்பட்டிருக்கிறது. ஆனால், அது “ஆங்கிலோ-அமெரிக்கன் கார்ப்பரேஷன் லிமிடெட்” என்ற தலைமைக் கம்பெனிக்கு உட்பட்ட துணைக் கம்பெனியே. அந்தத்

தலைமைக் கம்பெனி ஒரு பிரம்மாண்டமான உடைமைக் கம்பெனி என்பதைத் தவிர வேறில்லை.

கட்டுப்படுத்தக் கூடிய பங்குகளை வைத்திருப்பதோடு இணைந்துள்ள இயக்குநர் பொறுப்புகளை வகிப்பதன் மூலமாகவும் [சில கம்பெனிகளில் முக்கியமான பொறுப்புகளை ஒரே நபர்கள் வகிப்பது] மொத்த அமைப்புமே நெருக்கமாகப் பூசி வைக்கப்பட்டுவிடுகிறது. ஹேரி ஓப்பன்ஹேமர் [இந்தத் தொழில் சாம்ராஜ்யத்தை

நிறுவியவருடைய மகன்] தலைமைக் கம்பெனியில் இயக்குநர்கள் குழுவின் தலைவராவார். ஆனால் "ஆரஞ்சு ஃப்ரீ ஸ்டேட்" என்ற துணைக்கம்பெனி யின் இயக்குநர்கள் குழுவிலும் அவர் இடம் பெற்றிருக்கிறார். அந்தக் கம்பெனியின் அன்றாட நிர்வாகத்தை நடத்துகின்ற நபர் "ஆங்கிலோ-அமெரிக்கன் கார்ப்பரேஷன்" இயக்குநர் குழுவில் உறுப்பினராக இருக்கிறார்.

ஒவ்வொரு சுரங்கத்தின் நிர்வாகமும் சுரங்கத்தை நடத்துகிறது; ஆனால் அதன் அதிகாரங்கள் வரையறுக்கப்பட்டிருக்கின்றன. புதிய மூலதன முதலீடு, நிதி திரட்டுதல், தொழில் நுட்பவியல் கொள்கை, தொழிலாளர்களை வேலைக்கெடுத்தல் மற்றும் வர்த்தகம் பற்றிய பிரச்சினைகள் மையத்தில், உடைமைக் கம்பெனி மற்றும் மொத்த நிறுவனத்தின் தலைமையிடத்தில் முடிவு செய்யப்படுகின்றன.

சமீப வருடங்களில் "ஆங்கிலோ-அமெரிக்கன் கார்ப்பரேஷன்" தென்ஆப்பிரிக்காவின் மொத்த தங்க உற்பத்தியில் 40 சதவீகிதத்தை உற்பத்தி செய்கிறது. அதோடு போட்டியிடும் மற்ற கம்பெனிகள் வெகு தூரத்துக்குப் பின்னால் இருக்கின்றன. ஆனால் அந்த நிறுவனத்தைப் பொறுத்தவரை மூலதன முதலீட்டுத் துறை என்ற அளவில் தங்கத்தின் முக்கியத்துவம் குறைந்து வருகிறது. கடந்த இருபத்தைந்து வருடங்களில் தென் ஆப்பிரிக்காவில் புதிதாக தங்கச் சுரங்கங்கள் கண்டுபிடிக்கப்படவில்லை. 1970-க்களின் தொடக்கத்தி லிருந்தே தங்கச் சுரங்கத்தின் மூலம் கிடைக்கும் லாபம் வீழ்ச்சிய டைந்து வருகிறது. 1967-ல் ஹேரி ஓப்பன் ஹேமர் பின்வருமாறு கூறியதாக டி.கிரீன் எழுதுகிறார்.

"பணத்தை வைத்துக் கொண்டு புதிதாக தங்கச் சுரங்கம் கண்டுபிடிக்கட்டும் என்று காத்திருக்க முடியுமா?" ஒரு நிறுவனம் உயிரோடிருக்க வேண்டு மென்றால் அது வளர்ந்துகொண்டிருக்க வேண்டும். "ஆங்கிலோ-அமெரிக்கன் கார்ப்பரேஷன்" வேகமாக வளர்ச்சியடைந்துகொண்டிருக்கிறது.

அதன் மகள், பேத்தி, கொள்ளுப்பேத்தி கம்பெனிகள் தென் ஆப்பிரிக்கக் குடியரசிலும் மற்ற நாடுகளிலும் வைரங்கள், செம்பு, உரேனியம், நிலக்கரி முதலியவற்றை வெட்டியெடுக்கின்றன, இரும்பும் காகிதமும், ரசாயனப் பொருக்ளும் பீர் மதுபானமும் தயாரிக்கின்றன. மனை யிடங்களை வாங்கி விற்பனை செய்கின்றன. வங்கிக் கடன் கொடுக்கின்றன. மற்ற பெரிய கம்பெனிகளும் சமீப வருடங்களில் இதே கொள்கையைத்தான் பின்பற்று கின்றன.

மூன்று மிகப் பெரிய நிறுவனங்கள் [“ஆங்கிலோ–அமெரிக்கன்”, “கோல்ட் பீல்ட்ஸ்” மற்றும் “யூனியன் கார்ப்பரேஷன்”] மொத்தம் 27 தங்கச் சுரங்கங்களை வைத்திருக்கின்றன. தென்ஆப்பிரிக்காவின் மொத்த தங்க உற்பத்தியில் 70 சதவீகிதத்தை இவை உற்பத்தி செய்கின்றன. ஆனால் இவை ஒன்வொன்றும், குறிப்பாக “ஆங்கிலோ–அமெரிக்கன் கார்ப்பரேஷன்”, மற்ற கம்பெனிகளில் அல்லது அவற்றால் நிர்வகிக்கப்படுகின்ற கம்பெனிகளிலும் சுரங்கங்களிலும் அதிகாரத்தை வைத்திருக்கின்றன. ஏழு நிறுவனங்களும் பரஸ்பர நிர்வாக அதிகாரம் மற்றும் இயக்குநர் பதவிகள் என்ற அதிகச் சிக்கலான முறையில் மூலம் ஒன்றேடொன்று இணைப்புக் கொண்டிருக்கின்றன. இவை அனைத்தும் சாராம்சத்தில் தன்னுடைய சுற்று வட்டத்துக்குள் போட்டியைத் தீவிரமான அளவுக்குத் குறைக்கின்ற ஒரு கார்ட்டெல் எனலாம். தங்கம் அகப்படுகின்ற புதிய இடங்களைத் தேடுவதிலும் அத்தகைய இடங்களைத் தம்முடைய ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வருவதிலும் மட்டுமே உண்மையான போட்டி இருக்கிறது. இந்தத் துறையில் தங்களுடைய பணியையும் சாதனைகளையும் இரகசியமாக வைத்திருப்பதற்கு இந்த நிறுவனங்கள் தம்மால் இயன்ற எல்லாவற்றையும் செளிணிகின்றன. அதிகமான தங்கம் கிடைக்கின்ற புதிய இடத்தைக் கண்டுபிடித்தவுடன் அந்தப் பிரதேசம் முழுவதையும் வேகமாகவும் ரகசியமாகவும் வாங்கிவிட நிறுவனம் முயற்சி செய்கிறது.

தங்கத்தை ஆதாரமாகக் கொண்டு வளர்ச்சியடைந் திருக்கும் சுரங்கத் தொழில் மற்றும் நிதி நிறுவனங்கள் தென் ஆப்பிரிக்காவின் இளமையான, மூர்க்கத்தனமான ஏகபோக முதலாளித்துவத்தின் முதுகெலும்பாலும், இனக் கொடுமையை மிகவும் ஆர்ப்பாட்டமான வடிவங் களில் கடைப்பிடிக்கின்ற அரசின் பொருளாதார அடிப்படை இந்த ஏகபோக முதலாளித்துவமே. அந்நிய மூலதனம், குறிப்பாக பிரிட்டிஷ் மூலதனம் தென் ஆப்பிரிக்கக் குடியரசின் வளர்ச்சியில் முக்கியமான பாத்திரத்தை எப்பொழுமே

வகிகத்திருக்கிறது. ஆனால் வெளிநாடுகளைச் சேர்ந்த பங்குதாரர்களின் சதவீகிதம் படிப்படியாகக் குறைந்து கொண்டிருக்கிறது. நவீன தென் ஆப்பிரிக்கக் கார்ப்பரேஷன்கள் அமெரிக்க மற்றும் பிரிட்டிஷ் மூலதனத்தோடு நெருக்கமாக இணைக்கப்பட்டிருக்கின்றன என்றாலும் அவை சுயேச்சையான, முக்கியமான சக்தியாக இருக்கின்றன. தென் ஆப்பிரிக்காவின் தங்கச் சுரங்கத் தொழில் முதலாளிகளான ஒப்பன்ஹேமரையும் மற்றவர்களையும் தென் ஆப்பிரிக்க மூலதனத்துக்கு மட்டு பிரதிநிதிகள் என்று கூற முடியாது. அடிப்படையில் அது உலக மூலதனமே.

தென் ஆப்பிரிக்காவிலும் மற்ற நாடுகளிலும் பெரிய நிறுவனங்கள்தான் தங்க உற்பத்தியில் ஈடுபட்டிருக் கின்றன. சிறு சம்பெனிகள் மொத்த உற்பத்தியில் மிகவும் சொற்பமான பகுதியைத்தான் உற்பத்தி செய்கின்றன. ‘‘சுதந்திரமான தங்க வேட்டைக்காரர்களுடைய’’ பங்கு இதற்கும் குறைவாகும். தங்கச் சுரங்கத் தொழில் மற்ற தொழில்துறைகளோடு மென்மேலும் நெருக்கமாக இணைந்து வருகிறது, அந்த நிறுவனங்களின் நடவடிக்கைகளின் பல துறைகளில் ஒன்றாக மட்டுமே மாறிக்கொண்டிருக்கிறது.

# தங்கம் எங்கே போகிறது?

ஒரு பண்டத்தின் உற்பத்தி அதன் வாழ்க்கைப் பாதையில் ஆரம்பம் மட்டுமே. பண்டம் உற்பத்தி செய்யப்பட்ட பிறகு அது கைவரப் பெறவேண்டும் [விற்பனையாக வேண்டும்]. கைவரப் பெறுதலின் பல கட்டங்களையும் பண்டம் கடப்பது வழக்கமானதே. உதாரணமாக, உற்பத்தியாளர் பண்டத்தை மொத்த வியாபாரியிடம் விற்பனை செய்கிறார். மொத்த வியாபாரி சில்லறை வியாபாரியிடம் விற்பனை செளிணிகிறார். கடைசியில் அந்தப் பண்டம் நுகர்வோரிடம் வந்து சேருகிறது. அதன் இயற்கையான வடிவத்துக்கேற்ப நுகர்வு செய்யப்படுகிறது. உணவுப் பொருள் சாப்பிடப்படுகிறது. துணி நைந்து போகிறது. இயந்திரம் உற்பத்தியில் அல்லது வீட்டில் உபயோகப்படுத்தப்பட்டுப் படிப்படியாகத் தேய்ந்து போகிறது.

தங்கம் மற்ற பண்டங்களைப் போலவே இப்படிப்பட்ட எல்லாக் கட்டங்களையும் கடந்து வருகிறது. ஆனால் அதன் விசேஷமான சமூகப் பணிகள் இந்தக் கட்டடங்கள் எல்லாவற்றிலும் அவற்றின் முத்திரைகளைப் பொறிக்கின்றன.

இது உற்பத்தியில் எவ்வாறு வெளியிடப்படுகிறது என்பதை நாம் முன்பே பார்த்தோம். தங்கம் எப்படி விற்பனை செய்யப்படுகிறது. எவ்வாறு "நுகர்வு" செய்யப்படுகிறது என்பதை இங்கே ஆராய்வோம். நுகர்வு என்ற சொல் மேற்கோள் குறிகளுக்குள் கொடுக்கப்பட்டிருப்பதற்குக் காரணம் இந்த கட்டத்தில் தங்கத்துக்கும் மற்ற எல்லாப் பண்டங்களுக்கும் இடையே உள்ள வேறுபாடு குறிப்பான விதத்தில் புலப்படுவதே. பல பத்தாண்டுகளாக தங்கத்தின் வாழ்க்கை விட்டிற்பூச்சியைப் போல மிகக் குறுகியதாகவே இருந்தது. ஒரு தென் ஆப்பிரிக்கச் சுரங்கத்தில் அது வெட்டியெடுக்கப்பட்டுச் சூரிய ஒளியைப் பார்த்தது. ஆனால் அரசுக் கருவூலங்களின் பாதாள அறைகளுக்குள் அது மறுபடியும் மறைந்தது. அந்தப் பாதாள அறைகளில் மொத்தமாகவும் இயக்கமில்லாமலும் இருப்பதில் அதன் நுகர்வு அடங்கயிருந்தது. காகிதக் கடன் பணத்துக்கு இந்தத் தங்கம் நம்பகமான துணைப் பிணையம் என்று முதலில் கருதப்பட்டது. பிறகு தங்கக் கையிருப்புக்கும் உள்நாட்டில் பணச்செலாவணிக்கு மிருந்த சம்பிரதாயமான இணைப்பு அநேகமாக எல்லா நாடுகளிலுமே

துண்டிக்கப்பட்டது, இந்தப் பாத்திரத்தில் அதற்கு உண்மையான முக்கியத்துவம் ஒன்றுமில்லாமற் போய்விட்டது.

மத்திய தங்கக் கையிருப்புகளின் செயல்கள் அந்நியப் பொருளாதாரத் துறையில் குவிக்கப்பட்டன. தங்கம் அந்நியக் கடன் தீர்வுக் திறத்துக்கு உத்தரவாதமாக, பணவியல் தற்காப்பின் கடைசி அணியாகக் கருதப் பட்டது. தங்கக் கையிருப்புகளிலன் இந்தச்யெல் இன்றும் எஞசியிருக்கிறது, ஆனால் சில முக்கியமான, முரண்பாடான மாற்றங்ள் அதில் ஏற்பட்டு வருகின்றன. ஒரு பக்கத்தில், சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் [மிவிதி] அமைப்பில் 1970க்களில் தங்கம் பண உலோகமல்ல என்று சம்பிரதாயமாகச் செளிணிதது தங்கக் கையிருப்புக்களின் முக்கியத்துவத்தைக் குறைத்துவிட்டது போலத் தோன்றுகிறது. மறுபக்கத்தில், தங்கத்தின் விலை பன்மடங்கு அதிகரித்திருப்பது தங்கக் கையிருப்புக்களின் உண்மையான மதிப்பையும் செயல்திறத்தையும் பெருக்கியுள்ளது.

சமீப வருடங்களில் புதிதாக உற்பத்தி செய்யப்பட்ட தங்கம் மத்தியக் கையிருப்புக்களில் குறைந்தபோனவற்றை ஈடு செய்வதற்குப் பயன்படுத்தப்பட வில்லை. வகையில் மாறியிருக்கிறது. 20ம் நூற்றாண்டின் கடைசிப் பகுதியில் முதலாளித்துவத்தின் வளர்ச்சியில் ஏற்பட்டிருக்கும் மிக முக்கியமான போக்குகளை இந்த “நுகர்வு” பிரதிபலிக்கிறது.

# தங்கம் இப்பொழுது எங்கே இருக்கிறது?

பொருளாதாரத்திலும் வாணிகக் கணக்கு முறையிலும் அளவுகளை அளப்பதற்கு இரண்டு முக்கியமான முறைகள் இருக்கின்றன: குறிப்பிட்ட நாளில் ("கையிருப்புகள்") மற்றும் குறிப்பிட்ட காலப் பகுதி முழுவதும், வழக்கமாக ஒரு வருடத்துக்கு ("பாய்ச்சல்") என்பவை அந்த முறைகளாகும். முதல் முறையில் ஒரு குறிப்பிட்ட தருணத்தில் ஒரு நிறுவனத்தின், கம்பெனியின், நாட்டின், இதவை நிதி நிலைமை புகைப்படமெடுக்கப்படுகிறது என்று கூறலாம். இரண்டாவது முறையில் சொத்துக்களின் இயக்கத்தை பற்றிய சித்திரம் கிடைக்கிறது (அவை எங்கிருந்து வந்தன, எங்கே சென்றன).

முதலாளித்துவ உலகத்தில் தங்கத்தின் இயக்கத்தைப் பகுப்பாய்வு செய்வதற்கு இந்த இரு வகையான அணுகுமுறையை நன்கு பயன்படுத்தலாம். முதலில் திரட்டப்பட்ட தங்கம் (கையிருப்புகள்) எங்கே இருக்கிறது என்ற கேள்விக்குப் பதில் கூற முயற்சிப்போம்.

தற்பொழுது செலாவணியில் தங்கப் பணம் இல்லை என்பது நமக்குத் தெரியும். பணம் என்ற வகையில் தங்கத்தை உபயோகிப்பதற்கு மிகவும் நெருக்கமான ஒன்றை அரசாங்கங்கள் அல்லது மத்திய வங்கிகளுக்குச் சொந்தமான மத்தியக் கையிருப்புகளில் காண முடியும். இத்தங்கம் சில சமயங்களில் பொருளாதார நூல்களில் பணத் தங்கம் என்று சொல்லப்படுகிறது. எனினும் இது ஒருக்காலும் தங்க நாணயத்தைப் போன்றதல்ல. இதற்கு மாறாக, தற்பொழுது பணத் தங்கம் என்று சொல்லப்படுகிறது. எனினும் இது ஒருக்காலும் தங்க நாணயத்தைப் போன்றதல்ல. இதற்கு மாறாக, தற்பொழுது பணத் தங்கம் அதிகமான தூய்மையைக் கொண்ட ஆதார அளவுப் பாளங்களாகவே அநேகமாக முற்றிலும் இருக்கின்றது.

எப்பொழுதுமே இதே நிலை இருக்கவில்லை. 1913ல் பணத் தங்கத்தின் மொத்த அளவில் அநேகமாகப் பாதி (13,200 டன்களில் 5,900 டன்கள்) நாணயங்களாக செலாவணியாகிக்கொண்டிருந்தது. பாதிக்கும் அதிகமான அளவு (7,300 டன்கள்) மத்தியக் கையிருப்புகளில் குவித்து

வைக்கப்பட்டிருந்தன. இந்தக் கையிருப்புகளில் கணிசமான பங்கும் நாணங்களாகவே இருந்தது என்று நம்புவதற்குக் காரணமுண்டு. முதல் உலக யுத்தத்தின்போதுபோரில் ஈடுபட்டவர்கள் மட்டுமல்லாமல் போரில் ஈடுபடாதவர்கள் கூட செலாவணி யிலிருந்து தங்க நாணங்களை முன்பே கடைப்பிடித்தார்கள். 1920க்களின் கடைசியில் குறைந்த அளவு தங்க நாணயங்கள் இன்னும் செலாவணியிலிருந்து வந்த ஒரே நாடு அமெரிக்க ஐக்கிய நாடாகும்.

ரஷ்யாவின் தங்கக் கையிருப்பு 1918ல் வெண்படை யினரால் கஸானிலிருந்து அகற்றப்பட்டுக் கிழக்கே எடுத்துச் செல்லப்பட்டது. பிறகு செஞ்சேனை மற்றும் சைபீரியப் பார்ட்டிஸான்களின் வீரத்தின் விளைவாக சோவியத் ஆட்சி யதிகாரத்திடம் திரும்பக் கொண்டுவந்த சேர்க்கப்பட்டது. அந்தத் தங்க இருப்பு அநேகமாக முழுவதும் நாணயங்களாகவே இருந்தது. 1920 மார்ச்சில் இர்குட்ஸ்கிலிருந்த சோவியத் பிரதிநிதிகள் தங்கத்தைப் பெற்றுக்கொண்ட பொழுது “தங்க இரயில் வண்டியில்” பாளங்களாக 619 பூடுகளும் [10 டன்களுக்கும் அதிகம்] வெவ்வேறு சமயங்களில் அச்சிடப்பட்ட நாணயங்களாக 20,823 பூடுகளும் [341 டன்கள்] இருந்தன. இவை 409.6 மில்லியன் பழைய தங்க ரூபிள்கள் என்று மதிப்பிடப்பட்டன. அந்த ரயில் வண்டி இரண்டு வருட காலம் பல இடங்களுக்கும் போனபொழுது சுமார் 242 மில்லியன் ரூபிள்கள் கல்ச்சாக்கின் ஆட்களால் திருடப்பட்டன என்பது இன்னும் முக்கியமானதாகும். இந்தத் தங்கமும் பாளங்களாக இருந்திருக்காது, நாணங்களாகவே இருந்திருக்கும் என்று கருதுவது பொருத்தமே.

அண்மையில் முடிவடைந்த காலத்திலிருந்து மற்றொரு செய்தி, 1963ல் உருகுவே நாட்டின் மத்திய வங்கி தன்னுடைய தங்க இருப்புக்களிலிருந்து 60–80 மில்லியன் டாலர்கள் மதிப்புடைய நாணங்களுக்கு [அப்பொழுது அவற்றின் எடை 50–70 டன்கள்] பதிலாக தங்கப் பாளங்களைக் கொடுக்குமாறு தங்கம் சம்பந்தப்பட்ட வர்த்தக நடவடிக்கைகளில் அதிகமாக ஈடுபட்டிருந்த இரண்டு வெளிநாட்டு வங்கிகளைக் கேட்டுக்கொண்டது. இந்த நடவடிக்கையின்போது இந்த நாணயங்களில் பெரும்பகுதி அரிய நாணயங்கள் என்ற முறையில் மதிப்புக் கொண்டிருப்பது தெரியவந்தது. இதற்கு முன்பு உருகுவேயின் தங்கக் கையிருப்புகள் அசாதாரணமான, பழைய காலத்திய வடிவத்தில் இருந்த காரணத்தால் இந்தத் தகவல் அக்கறையைத் தூண்டியது.

சர்வதேச நிதி ஸ்தாபம் தொடர்ச்சியாக வெளியிட்டு வரும் புள்ளிவிவரங்களின் படி பணத் தங்கத்தின் மத்தியக் கையிருப்புகள் மொத்தம் 35,200 டன்களாகுமக். 1913ல் இருந்ததைக் காட்டிலும் இது ஐந்து மடங்கு அதிகம், ஆனால் 1967ல் இருந்ததைக் காட்டிலும் சிறிதளவு குறைவே, அந்த வருடத்தில் முதலாளித்துவ உலகத்தின் தங்க இருப்புக்கள் உச்சியை (36,900 டன்கள்) எட்டின (அட்டவணை 2ஐப் பார்க்கவும்). பதுக்கப்பட்டிருக்கும் தங்கத்தின் மொத்த அளவில் மத்திய இருப்புகளின் சதவீகிதம் சமீப வருடங்களில் கணிசமான அளவுக்குக் குறைந்துவிட்டது.

மிக அதிகமான தங்கம் வைத்திருப்பது அமெரிக்க ஐக்கிய நாட்டின் அரசாங்கமே. எனினும் இரண்டாம் உலக யுத்தம் முடிந்த பொழுதிருந்த காலகட்டத்கேதாடு ஒப்பிடும்பொழுது அதன் பங்கு குறிப்பிடத்தக்க வகையில் குறைந்துவிட்டது. மேலும் குறைந்து வருகிறது. 1979 கடைசியில் அமெரிக்காவின் தங்க இருப்புக்கள் 8,230 டன்களாக இருந்தன. இது சர்வதேச ஸ்தாபனங்களைச் சேர்த்துக கொஷீமீளாமல் மற்ற எல்லா மத்திய இருப்புக்களில் 28.5 சதவீகிதமாகும். இரண்டாவதாக அதிகமான தங்கம் வைத்திருப்பது ஜெர்மன் கூட்டாட்சிக் குடியரசாகும். அதன் ஸ்திரமான வழங்கீடுகளின் சமநிலையைப் பயன்படுத்தி அது ஐம்பதுக்களிலும் அறுபதுக்களிலும் தங்கத்தைப் பதுக்கியது. அதிகமான தங்க இருப்புக்கள் வைத்திருக்கும் நாடுகளின் பட்டியலில் தொழில் துறையில் மிகவும் வளர்ச்சியடைந்த மற்ற சில நாடுகள் இடம் பெற்றிருக்கின்றன. இது எல்லோருக்கும் நன்கு அறிமுகமான “செல்வந்தர்கள் கழகமாகும்”.

1979 கடைசியில் உலக மத்திய இருப்புக்களில் தொழில்துறை வளர்ச்சியடைந்த எல்லா நாடுகளும் மொத்தமாக 84.8 சதவீகிதத்தை வைத்திருந்தன. வளர்முக நாடுகளில் எண்ணெய் உற்பத்தி செய்கின்ற சில நாடுகள் நாடுகளின் எண்ணெய் உற்பத்தி செய்கின்ற சில நாடுகள் மட்டுமே குறிப்பிடத்தக்க தங்க இருப்புக்களை வைத்திருக்கின்றன. ஆனால் இந்தக் குழுவைச் சேர்ந்த நாடுகளின் மிக அதிகமான தங்க இருப்புக்கூட (இது வெனிசுலாவுக்குச் சொந்தம்) 1979 கடைசியில் 356 டன்கள் மட்டுமே இருந்தது. பெரும்பான்மையான வளர்முக நாடுகள் மிகக் குறைவான அளவுக்குத் தான் தங்கத்தை வைத்திருக்கின்றன.

சர்வதேச நிதி ஸ்தாபனத்தில் உறுப்பினராகும் ஒவ்வொரு நாடும் குறிப்பிட்ட பணத் தொகையைக் கட்ட வேண்டும். அதில் பகுதியளவைத் தங்கமாகக் கொடுக்க வேண்டுமு என்ற தொடக்க உடன்பாட்டின் ஷரத்துக்களுக்கு ஏற்ப அந்த ஸ்தாபனம் அதிக அளவில் தங்கம் வைத்திருக்கிறது. ஆனால்

சர்வதேச பணவியல் அமைப்புச் சீர்திருத்தம் பற்றி 1976–ம் வருட கிங்ஸ்டன் உடன்பாட்டின்படி தன்னுடைய தங்க இருப்புக்களில் ஆறில் ஒரு பகுதியை உறுப்பினர் நாடுகளுக்குகத் திருப்பிக் கொடுத்ததோடு மேலும் ஆறிலொரு பகுதியை உறுப்பினர் நாடுகளுக்குத் திருப்பிக் கொடுத்ததோடு மேலும் ஆறிலொரு பகுதியை சுதந்திரமான சந்தையில் விற்பனை செய்தது. ஆகவே 1976–1980–ல் இந்த ஸ்தாபனத்தின் தங்க இருப்புக்கள் மூன்றிலொரு பகுதியாகக் குறைந்தன. இந்த ஸ்தாபனத்தின் தங்கத்தைப் பற்றிய பிரச்சினையைப் பின்னர் எடுத்துக் கொள்வோம்.

1979ல் "பொதுச் சந்தை" நாடுகளை ஒன்றுசேர்த்து ஐரோப்பியப் பணவியல் அமைப்பைத் தோற்றுவிப்பதை ஒட்டி இந்த நாடுகள் ஒவ்வொன்றும் தங்களுடைய தங்க இருப்புக்களில் 20 சதவீகிதத்தை ஐரோப்பியப் பணவியல் ஒத்துழைப்பு ஸ்தாபனத்துக்கு மாற்றிக் கொடுத்தன. இதற்குப் பதிலாக விசேஷமான ஐரோப்பிய நாணய அலகுகள் (European Currency Unit–ECU) என்ற வடிவத்தில் இந்த ஸ்தாபனத்தின் மீது உரிமையைப் பெற்றுக்கொண்டன. இதன் விளைவாக, ஐரோப்பியப் பணவியல் ஒத்துழைப்பு ஸ்தாபனமும் கணிசமான தங்க இருப்பை வைத்திருக்கிறது. சர்வதேச வழங்கீடுகளுக்கான வங்கியும் தனது தலைமையிடமான பாஸெலில் ஓரளவுக்குத் தங்கம் வைத்திருக்கிறது. உலக முழுவதிலும் பல நாடுகளையும் சேர்ந்த மத்திய வங்கிகள் இதன் உறுப்பினர்களாகச் சேர்ந்திருக்கின்றன.

மத்திய இருப்புக்களில் இருக்கும் தங்கத்தின் அளவு லேசாகக் குறைந்து கொண்டிருந்த அதே சமயத்தில் ஒரு அவுன்ஸ் தங்கம் 35 டாலர்கள் என்ற அதிகாரபூர்வமான விலை இன்னும் நடைமுறையிலிருந்த, தங்கத்தின் சந்தை விலை இந்த விகிதத்திலிருந்து கணிசமான அளவுக்கு வேறுபடாமலிருந்த 1967–ம் வருடத்தோடு ஒப்பிடும்போழுது தங்கத்தின் பணவியல் மதிப்பு பரபரப்புடன் அதிகரித்துவிட்டது. 1979 கடைசியிலிருந்த சந்தை விலையின் பிரகாரம் எல்லா நாடுகள் மற்றும் ஸ்தாபனங்களின் தங்க இருப்புக்கள் 579 பில்லியன் டாலர்கள் என்ற மாபெரும் தொகையை எட்டிவிட்டன. சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் புள்ளிவிரவங்களின்படி, இவை 1979 கடைசியில் இதர எல்லா சர்வதேசப் பணவியல் இருப்புக்களின் மொத்தத் தொகையான 356 பில்லியன் டாலர்களையும் மிஞ்சிவிட்டன. மத்திய வங்கிகள் மற்றும் அரசாங்கங்களின் வெளிநாட்டுப் பரிவர்த்தனைச் சொத்துக்களுக்கு சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் கடனுதவி வளங்களுக்கு

நிபந்தனையற்ற உரிமைகளும் விசேஷ கடன் உரிமைகளும் Special Drawing Rights - SDR) இத்தொகையில் அடங்கும்.

உலகத்திலேயே நியூயார்க்கில்தான் மிகவும் அதிகமான தங்கம் திரட்டி வைக்கப்பட்டிருக்கிறது. அது மான்ஹாட்டன் பாறை நிலத்தின் கீழ் பெடெரல் ரிசர்வ் பாங்க் ஆப்நியூயார்க்கின் பாதாள அறைகளில் பத்திரமாக வைக்கப்பட்டிருக்கிறது. அமெரிக்காவில் மத்திய வங்கியின் பணிகளை நிறைவேற்றுகின்ற பெடெரல் ரிசர்வ் முறையில் சேர்ந்திருக்கும் பன்னிரண்டு வங்கிகளில் இது மிக முக்கியமானதாகும்.இந்தப் பிரம்மாண்டமான காப்பிடத்தில் அமெரிக்காவின் தங்கத்தில் ஒருபகுதி வைக்கப்பட்டிருப்பதோடு முதலாளித்துவ உலகத்தைச் சேர்ந்த எழுபதுக்கு அதிகமான நாடுகளுடைய தங்க இருப்புக்கள் முழுமையாகவோ அல்லது பகுதியாகவோ வைக்கப்பட்டிருக்கின்றன. சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் தங்க இருப்பும் இங்கேதான் வைக்கப்பட்டருக்கிறது. 1972 ஆகஸ்டில் சுமார் 13,000 டன்கள் இங்கே வைக்கப்பட்டிருந்தன. அதிகமான 112 அரசுகளில் பெரும்பான்மையானவை அவற்றில் பெரும்பகுதியை நியூயார்க்கில் வைத்திருக்கின்றன. பிரான்ஸ் மட்டும் இதற்கு விதிவிலக்காகும். நெடுங்கால மரபு மற்றும் கடந்த இருபதாண்டு களாக அந்த அரசாங்கம் பின்பற்றி வருகின்ற கொள்கையின் காரணமாகவும் பிரான்ஸ் தனது பிரசேதத்துக்குள்ளாகவே தன்னுடைய தங்க இருப்பை வைத்துக்கொள்கிறது.

பூமியின் கீழ் 85 அடி (சுமார் 30 மீட்டர்கள்) ஆழத்தில், 90 டன் எஃகினால் செய்யப்பட்ட கதவுக்குப் பின்னால் இவ்வளவு பெரிய செல்வம் இருக்கிறது. இதோடு ஒப்பிடும்பொழுது எல்லாக் காலங்களையும் சேர்ந்த உண்மையான மற்றும் கற்பனையான பொக்கிஷங்கள் முக்கியமில்லாதவையே. இத்தங்கம் வெவ்வேறு அளவுகளைக் கொண்ட 120 எஃகுப் பெட்டிகளில் வைக்கப்பட்டி ருக்கிறது. ஒவ்வொரு பெட்டிக்கும் மூன்று பூட்டுகள் உண்டு. பூட்டுகளின் சாவிகள் வங்கியின் வெவ்வேறு அதிகாரிகளிடம் இருக்கின்றன. ஒருவர் அவரிடமுள்ள தங்கத்தை மேற்பட்ட பெட்டிகளில் ஒன்றில் அல்லது சிலவற்றில் வைத்திருக்கலாம். இவற்றில் மிகப் பெரிய பெட்டியில் 1,10,000 ஆதார அளவுத் தங்கப்பாளங்கள் (சுமார் 1,400 டன்கள்) வைக்கப்பட்டிருக்கின்ற. வங்கி மரபுகளைப் பின்பற்றி இத்தங்த்தின் உடைமையாளரின் பெயரைச் சொல்ல அதிகாரிகள் மறுத்துவிட்டார்கள்.

ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டுக்குத் தங்கத்தை விற்பனை செய்வதும் (வாங்குவதும்) ஒரு பெட்டியிலிருந்து மற்றொரு பெட்டிக்குத்

தங்கப்பாளங்களை மாற்றுவதன் மூலம் நிறைவேற்றப்படுகின்றன. இவை சாதாரண ஊழியர்களால் எடுத்துவைக்கப்படுகின்றன அல்லது இயந்திரங்களின் மூலம் சுழலும் பட்டைகளால் கொண்டுசெல்லப்படுகின்றன. விற்பனை செய்யப்பட்ட தங்கம் ஒரு பெட்டியிலிருக்கும் தங்கத்துக்குச் சமமாக அல்லது அதிகமானதாக இருக்குமானால் அந்தப் பெட்டியின் எண் மாற்றப்படுகிறது. இப்படிக் காகித நடவடிக்கையின் மூலமே அந்தத் தங்கம் புதிய உடைமையாளருக்கு மாற்றப்படுகிறது.

அமெரிக்க ஐக்கிய நாடு தங்கத்தை விற்பனை செய்வதாகவும் வங்கியின் பாதாள அறைகளில் அதற்குப் போதுமான அளவு தங்கம் இல்லையென்றும் வைத்துக் கொண்டால் நியூயார்க்கின் மற்றொரு பகுதியிலிருக்கும் அமெரிக்க உலோக அலுவலகத்தின் கொண்டு வரப்படுகிறது. இந்தச் சேமிப்புக் கிடங்கு கென்டாக்கியிலுள்ள பிரபலமான பார்ட்–நாக்சின் ஒரு வகைப் பிரிவு.

1974ல் அமெரிக்கக் குடிமக்கள் தனிப்பட்ட முறையில் பணத் தங்கத்தை வைத்திருப்பதைத் தடுக்கம் சட்டம் ரத்துச் செய்யப்பட்ட பொழுது தங்கத்தைப் பற்றி அதிகமான விவாதம் நடைபெற்றது, அமெரிக்கக் கருவூல அறிக்கைகளில் குறிப்பிடப்படும் அளவு தங்கம் பார்ட்–நாக்சில் இல்லை என்ற வதந்திகளை அமெரிக்கப் பத்திரிகைகள் பரப்பத் தொடங்கின. நிதித்துறை இதற்குப் பதிலளிக்க வேண்டுமென்று சுறுசுறுப்பான உறுப்பினர்கள் அமெரிக்கக் காங்கிரசில் கோரினார்கள். 1974 செப்டம்பர் 23–ந் தேதியன்று காங்கிரசின் பத்து உறுப்பினர்களைக் கொண்ட குழுவும் பல டஜன் பத்திரிகையாளர்களும் 4,500 டன் தங்கம் வைக்கப்பட்டிருந்த இந்த மர்மமான “மஞ்சள் பிசாசு வீட்டுக்குள்” முதல் தடவையாக அனுமதிக்கப்பட்டார்கள்.

பழுப்பு நிறத்தில் குட்டையானஇ வெளித் தோற்றத்தில் குறிப்பிடத்தக்க அம்சம் எதுவுமில்லாத கட்டிடத்தைப் பற்றி, அங்கேயிருக்கும் காவலர் அணிகள், உள்ளே நுழைபவர்களுடைய பைகளைச் சோதனையிடுதல், ஆவணங்களைச் சரிபார்த்தல், ரகசிய எண்களைக் கொண்ட பூட்டுகள் ஆகியவற்றைப் பற்றி வெறுப்புக் கலந்த மகிழ்ச்சியோடு பத்திரிகையாளர்கள் எழுதிய கட்டுரைகள் எல்லா முக்கியமான பத்திரிகைகளிலுமே மறுநாள் வெளிவந்தன.

22 டன் எஃகுக் கதவு திறந்தது. பார்வையாளர்களுக்கு ஒரே நடுக்கம். தங்கம் வைக்கப்பட்டிருந்த பதிமூன்று அறைகளில் முதல் அறைக்குள்

நுழைத்தார்கள். கதவுகள் பூட்டப்படும்பொழுது பொறுப்புமிக்க கருவூல அதிகாரிகளின் தனிப்பட்ட முத்திரைகள் அவற்றில் வைக்கப்படும். சுமார் 500 டன் தங்கம் வைக்கப்பட்டிருந்த ஒரே ஒரு அறையைத்தான் பார்வையாளர்களிடம் காட்டினார்கள். 1968-க்குப் பிறகு அந்த அறைக்குள் யாரும் நுழையவில்லை. தங்கப்பாளங்கள் மங்கலாகப் பிரகாசித்தன. தங்க இருப்பைச் சோதிக்க வேண்டும் என்று மிகத்தீவிரமாக வாதாடிய ஜான் ரூஸ்ஸெலோட் [கலிபோர்னியாவைச் சேர்ந்தவர்] அங்கேயிருந்து தங்கப் பாளங்களை நோக்கிப் பார்வையைச் சுழற்றி "எல்லாம் சரியாக இருக்கிறது என்று தோன்றும்" என்றார். அவர் கூறியதை மற்றவர்கள் ஒத்துக்கொண்டார்கள். பார்ட்-நாக்சில் பத்திரமாக இருப்பதாகச் சொல்லப்படும் 3,67,500 தங்கப் பாளங்களும் அங்கே உண்மை யிலேயே இருக்கின்றன. அவை ஆதார அளவையும் தூய்மையையும் கொண்டிருக்கின்றன என்று காட்டுவதற்கு யாரும் முன்வரவில்லை. அதை சோதிக்க உத்தேசிக்கப்பட்டதென்றாலும் அதைச் செய்து முடிப்பதற்குப் பல வாரங்களாகும்.

பார்ட்-நாக்ஸ் அபூர்வமாகத்தான் திறக்கப்படும். சில டன்கள் தங்கத்தை எடுப்பதற்கு அல்லது வைப்பதற்கு மட்டுமே அது திறக்கப்படும். அம்மாதிரி சந்தர்ப்பங்களில் ஆயுதப் பாதுகாப்புக் கொண்ட கார்களில் விசேஷமான காவலர் படை அங்கிருந்து நியூயார்க்குக்குப் போகிறது அல்லது அங்கேயிருந்து வருகிறது.

சமீபத்திய புள்ளிவிவரங்களின்படி அமெரிக்காவில் 20,000 டன்களுக்கும் அதிகமான பணத் தங்கம் இருக் கிறது. இது முதலாளித்துவ உலகத்தின் மத்திய தங்க இருப்புக்களில் 56 சதவீகிதமாகும்.

முதலாளித்துவ உலகத்தில் மூன்றாவதாக அதிகமான தங்கம் பாரிசின் நடுப்பகுதியிலுள்ள பாங்க் டெ பிரான்ஸ் பாதாள அறைகளில் இருக்கிறதென்று கருதப்படுகிறது. தங்கத்தின் வரலாறு மற்றும் பிரச்சினைகளைப் பற்றிய விவகாரங்களில் முக்கியமான நிபுணரான ரெனே செடிய்யோ இந்த வங்கியின் பாதுகாப்பான பாதாள அறை களையும் அவற்றின் கனமான கதவுகளையும் வர்ணித்திருக்கிறார். இந்தத் தங்கக் கோயிலின் முக்கியமான தூண் மண்டபத்தைப் பார்த்த பொழுது மெம்பிசின் கோயில்கள் நினைவு அவருக்கு ஏற்றபட்டதாகக் கூறுகிறார். "பாரிஸ் மக்களே! உங்கள் பூமியின் அடியிலுள்ள மணல், களிமண் கற்களுக்கும் கீழே இந்தப் பாறை போகிறது, பிரான்ஸ் தன்னுடைய தங்கத்தை அடிவயிற்றில் மறைத்து வைத்திருக்கிறது என்பது உங்களுக்குத்

தெரியுமா? இந்த வங்கியின் பாதாள உலகம் பலே-ரொயாலுக்குப் பக்கத்திலுள்ள புதிய கட்டிடங்களுக்குக் கீழே இருக்கிறது. நான்கு கிணறுகள்தான் அதை மேற்பரப்போடு இணைக்கின்றன. எட்டுக் கோபுரங்கள் அவற்றைப் பாதுகாக்கின்றன. மனிதனுடைய ஆசைகளிலிருந்தும் யுத்தங்களால் ஏற்படும் கொந்தளிப்புகளிலிருந்தும் தங்கம் பாதுகாப்பாக இருக்கிறது.''

இரண்டாம் உலக யுத்தத்தின் ஆபத்துக்களைத் தவிர்ப்பதற்காக பிரெஞ்சுக்காரர்கள் மதிநுட்பத்தோடு தங்களிடமிருந்து தங்கத்தைக் கடலுக்கு அப்பாலிருக்கும் காலனிகளுக்கு அனுப்பினார்கள். அதனால்தான் அது நாஜிகளிடம் சிக்கவில்லை. பிரெஞ்சுத் தங்க இருப்பின் கதி மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது பிரெஞ்சுக் குடியரசுகளின் வரலாற்றைப் பிரதிபலிக்கிறது. 1930க்களின் தொடக்கத்தில் அது 5,000 டன்களை எட்டியது. ஆனால் யுத்தம் ஆரம்பித்தபொழுது அது கணிசமான அளவுக்குக் குறைந்துவிட்டது. யுத்தம் முடிந்த பிறகு நெருக்கடியான மிகுந்த வருடங்களின் போது அது சில நூறு டன்களாகக் குறைந்துவிட்டது. ஆனால் டெ கோலின் ஆட்சியில் [1958-1969] பிரான்ஸ் மறுபடியும் அதிகமான தங்க இருப்பைச் சேகரித்தது.

கடந்த பதினைந்து வருடங்களாக இந்தத் தங்கக் கோட்டைகளில் அமைதி ஆட்சி புரிந்திருக்கிறது. 1968ல் முக்கியமான முதலாளித்துவ நாடுகள் சுதந்திரச் சந்தையில் தங்கத்தை விற்பனை செய்வதில்லை. வாங்குவதுமில்லை என்று முடிவு செய்தன. மத்திய இருப்புக்களின் மொத்த அளவு நிலையாக வைக்கப்பட்டது. 1971ல் அமெரிக்கா வெளிநாட்டு மத்திய வங்கிகளுக்குச் சொந்தமான டாலர்களுக்குத் தங்கத்தைப் பரிவர்த்தனை செய்வதை ஒரு தலையாக மறுத்தது, அதன் மூலம் ''தங்கச் சன்னலை'' மூடியது. நாடுகளுக்கிடையே தங்கத்தின் மூலம் செய்யப்படும் வழங்கீடுகள் அநேகமாக நின்றுபோய்விட்டன ஒவ்வொரு நாட்டின் தங்க இருப்பும் நிலையாக வைக்கப்பட்டது என்று கூடச் சொல்லலாம். இவ்விரம் ''செத்துப் போய்விட்ட'' தங்கம் எவ்விதம் வாழத் தொடங்கியிருக்கிறது, அது எதைக் குறிக்கிறது என்பதையும் நாம் இனிவரும் அத்தியாயங்களில் விவரிப்போம்.

முதலாளித்துவ உலகத்தில் மிஞ்சியிருக்கும் தங்கம் தனியாரிடம் [நிறுவனங்கள், வங்கிகள் மற்றும் தனிநபர்கள்] இருக்கிறது. நாம் தரவிருக்கும் புள்ளி விவரங்கள் மிகவும் அரை குறையானவைதான், அதன் காரணங்கள் எல்லோருக்கும் தெரியும். தனியார் பதுக்கல் சுமார் 26,000 டன்

தங்கம் இருக்கும் என்று மதிப்பிடப்படுகிறது. இது பண மூலதனம் மற்றும் சேமிப்பை முதலீடு செய்யும் பிரத்யோகமான வடிவமாகும். சமீப வருடங்களில் பண வீகக்த்தினாலும் சமூக-பொருளாதாரக் கொந்தளிப்புகளினாலும் முதலாளி வர்க்கம் மற்றும் மக்கள் தொகையின் இதர குழுவினரின் வெவ்வேறு பகுதியினரிடம் தங்கத்தின் கவர்ச்சி அதிகரித் திருக்கிறது.

தனியாரிடம் தங்கப் பதுக்கல் பல வடிவங்களில் இருக்கிறது. சிறு பதுக்கல்காரர்கள் தங்க நாணயங்களை அதிகமாக விரும்புகின்றனர். அதனால் தான் சமீப வருடங்களில் தங்க நாணயத் தேவை அதன் உச்சத்தை எட்டியது. பெரிய முதலீடுக்காரர்கள் தற்பொழுது தங்கத்தை ஆதார அளவுள்ள பாளங்களாக (பெரும்பாலும் வங்கிகளில்) வைத்திருக்கிறார்கள். அல்லது தங்களுக்கு அவசியமேற்படும் பொழுது அவற்றைப் பெறுகின்ற உரிமையை வைத்திருக்கிறார்கள்.

பிரான்சில் தங்கம் மிகவும் அதிகமாகப் பதுக்கப் பட்டிருப்பதாகக் கருதப்படுகிறது. அங்கே குட்டி மற்றும் நடுத்தர முதலாளி வர்க்கம், நகர மத்தியதர வகுப்பினர் மற்றும் விவசாயிகளிடம் இந்தப் பழக்கம் பரவலாக இருக்கிறது. இது 5,000-6,000 டன்கள் இருக்கலாம் என்று நிபுணர்கள் ஒத்துக் கொள்கிறார்கள். இந்தியாவிலும் இதே அளவுக்குத் தங்கம் பதுக்கப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. இந்தியாவில் விவசாயக் குடும்பங்களில் இருக்கும் தங்க ஆபரணங்களும் நாணயங்களும் மோசமான அறுவடை அல்லது அதைப்போன்ற ஆபத்துக்களுக்கு எதிராக ஒரு வகையான காப்புறுதியாகும். இந்தியாவின் (அதே வகையைச் சேர்ந்த மற்ற நாடுகளிலும்) நடுத்தர மற்றும் பெரிய முதலாளி வர்க்கத்தினரிடம் தங்களுடைய பணம், அந்தஸ்து மற்றும் செல்வாக்கைக் காட்டுவதற்குத் தங்க ஆபரணங்களை அணிந்து கொள்வது வழக்கமாகும்.

அமெரிக்க ஐக்கிய நாட்டின் குடிமக்கள் ஆபரணங்கள் மற்றும் அரிய நாணங்களைத் தவிர தங்கம் வைத்திருக்கக்கூடாதென்று 1975 வரை தடை செய்யப்பட்டிருந்தனர். அமெரிக்கர்கள் இத்தடையைப் புறக்கணித்து வெளிநாட்டில், குறிப்பாக ஸ்விட்சர்லாந்து வங்கிகளில் 4,000-4,500 டன்கள் தங்கத்தை வைத்திருந்தனர் என்று சிலர் மதிப்பிடுகின்றனர்.

1975-க்குப் பிறகு பதுக்கலுக்காக அமெரிக்காவிற்குள் தங்கம் நீரோட்டத்தைப் போல தொடர்ச்சியாக வந்தது. அங்கே தனிப்பட்ட முதலாளிகள், கம்பெனிகள் மற்றும் நிதித்துறை ஸ்தாபனங்களிடம்

தங்களுடைய பண மூலதனத்தில் ஒரு பகுதியைத் தங்கமாக நிரந்தரமான முறையில் வைத்துக்கொள்கின்ற போக்கு வளர்ச்சியடைந்தது. தங்கத்தைக் கொண்டு செய்யப்படும் வர்த்தக சூதாட்டம் பிரம்மாண்டமான அளவில் அதிகரிகத்தபடியால் வர்த்தக நிறுவனங்களின் நடைமுறை வேலைகளுக்கு அவசியமான தொகையும் அதிகரித்தது. அமெரிக்காவில் தங்கத்தின் முதலீட்டின் வளர்ச்சி மூன்று வருடங்களில் மட்டும் [1976–1978] 515 டன்கள் என்று நிபுணர்கள் மதிப்பிடுகிறார்கள். ஒவ்வொரு வருடத்திலும் இந்தப் போக்கு மேலும் வளர்ச்சியடைந்தது.

நெடுங்க காலமாகவே மத்திய கிழக்கு மற்றும் தென் கிழக்கு ஆசிய நாடுகளில் கணிசமான அளவில் தங்கம் பதுக்கப்பட்டு வந்திருக்கிறது. சமீப வருடங்களில் எண்ணெய் விற்பனையின் மூலம் கிடைத்த வருமானம் அதிகரித்திருப்பதனால் இந்த நாடுகளில் சிலவற்றில் தங்கம் அதிகமாக வந்திருக்கிறது.

தங்கப் பதுக்கலின் மூன்றாவது வடிவம் ஆபரணங்கள், தங்கப் பற்கள், கருவிகளின் பாகங்கள், இதரவை யாகும். ஆபரணத்துக்கும் பதுக்கலுக்கும் இடையிலுள்ள வேறுபாடு மிகவும் சிறியதே; மேலும் அது சந்தர்ப்பங் களைப் பொறுத்திருக்கிறது. பல இனங்களில், குறிப்பாகக் கிழக்கு நாடுகளில் ஆபரணங்கள் நிலையான மதிப்பைச் சேமித்து வைக்கும் பணியைச் செய்கின்றன. மின்நுட்பச் சாதனங்களிலும் மற்ற கருவிகளிலும் பயன்படுத்தப்படும் தங்கத்தில் ஒரு பகுதி நிரந்தரமாக இழக்கப்படுகிறது. ஆனால் அதில் கணிசமான பகுதி இரண்டாம் நிலை மூலப்பொருளாகத் திரும்பக் கிடைக்கிறது. இந்த வடிவங்களில் 20,000–25,000 டன்கள் தங்கம் இருக்கக் கூடுமென்று சொல்லப்படுகிறது. ஆனால் இந்த மதிப்பீடுகள் மிகவும் உத்தேசமானவையே.

முதலாளித்துவ நாடுகளில் வெவ்வேறு வடிவங்களில் மொத்தம் 80,000–85,000 டன்கள் தங்கம் இருப்பதாக நாம் கருதலாம். நாம் முன்னர் குறிப்பிட்ட தங்கத்தின் மொத்த உற்பத்தி மற்றும் நிரந்தர இழப்புக்களைப் பற்றிய மதிப்பீடுகளுக்கு இந்த எண் ஒத்திருக்கிறது. பொருளாதார ரீதியில் சுறுசுறுப்பான தங்கத்தின் இந்த சேம இருப்பு தங்கச் சந்தையின் மீது முக்கியமான தாக்கத்தைச் செலுத்துகிறது. மற்ற பண்டங்கள் விற்பனை செய்யப்படும் சந்தையில் காணப்படாத கூறுகளை அதற்குத் தருகிறது.

# தங்கம் வாங்கப்படுவதும் விற்பனை செய்யப்படுவதும் எப்படி?

**நா**ம் வேகமாக மாறிக்கொண்டிருக்கும் உலகத்தில் வாழ்கிறோம். இருபது வருடங்களுக்கு முன்பு சர்வதேசப் பண உலோகம் என்ற நிலையிலிருந்து தங்கத்தை எடுத்துவிடுவதைப் பற்றி, அதாவது தங்கத்திடமிருந்து அதன் பணவியல் செயல்களை அதிகாரபூர்வமாக அகற்றுவதைப் பற்றிக் கல்வியாளர்களும் தத்துவாசிரியர் களும்தான் எழுதினார்கள். ஆனால் இன்று இது சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் உடன்படிக்கை ஷரத்துக்களில் ஒன்றாகிவிட்டது. இந்தச் சட்ட சம்பிரதாய நடவடிக்கை பொருளாதாரப் பிரச்சினையைத் தீர்க்க வில்லை என்பது உண்மையே. ஆனால் தங்கத் தின் அந்தஸ்தில் ஏற்பட்டிருக்கும் முக்கியமான, உண்மையான மாற்றங்களை இது பிரதிபலிக்கிறது. இந்த மாற்றங்கள் தங்கச் சந்தையிலேயே அதிகமான குறிப்பிடத்தக்கவை. பண உலோகத்தின் பிரத்யேகமான சந்தை என்ற கூறுகளை அது கணிசமான அளவுக்கு இழந்து விட்டது, மூலப்பொருள், பண்டச் சந்தையின் கூறுகளை அது பெற்றிருக்கிறது. முன்பு வெள்ளிக்கு என்ன நடைபெற்றதோ அது தங்கத்துக்கு நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

முன்பு அரசாங்கங்களும் மத்திய அரசு வங்கிகளும் புதிதாக உற்பத்தி செய்யப்படுகின்ற தங்கம் அனைத்தையும் வாங்கின, அதன் பிந்திய இயக்கத்தையும் ஒழுங்குபடுத்தின. அவர்களுடைய பணவியல் இருப்புக்களை பலப்படுத்தும் அவசியம் ஏற்பட்டபொழுது ஒருவருக்கொருவர் தங்கத்தை விற்பனை செய்துகொண்டார்கள். தொழில்துறையின் தேவைகளுக்காகத் தனிப்பட்ட நிறுவனங்களுக்கும் தங்கத்தை விற்பனை செய்தார்கள். 1968–ல் அரசாங்கங் களும் மத்திய வங்கிகளும் தங்கச் சந்தையிலிருந்து ஒதுங்கிக் கொண்டார்கள். இன்று எப்பொழுதாவது அந்தச் சந்தைக்கு வருகிறார்கள் என்றால் அது “சம அந்தஸ்து” என்ற நிலையில் மட்டும்தான், அதாவது நிர்ணயிக்கப்பட்ட பணவியல் விலைக்குத் தங்கத்தை வாங்குவதற்கோ விற்பனை செய்வதற்கோ அல்ல, சந்தையின் “பண்ட்” விலைக்கு அதை வாங்குவதற்கு அல்லது விற்பனை செய்வதற்கே.

இங்கே ஓரளவுக்குக் குழப்பத்தைத் தரக்கூடிய கேள்வி தோன்றும். அரசின் பொருளாதாரப் பாத்திரத்தை பலப் படுத்துவது நவீன முதலாளித்துவத்தின் மிக முக்கியமான போக்குகளில் ஒன்று என்பது நமக்குத் தெரியும். அரசு மென்மேலும் அதிகமான அளவில் உற்பத்தி செய்கிறது, வாங்குகிறது, விற்பனை செய்கிறது, ஒழுங்குபடுத்துகிறது, நிர்வகிக்கிறது.... தங்க விஷயத்திலோ முற்றிலும் எதிரான நிலைமையக் காண்கிறோம் போலும். இங்கே உண்மையில் ஒருவித மான முரண்பாடும் இல்லை. தங்கம் முன்னர் பண அமைப்புகளுக்கும் சர்வதேசப் பணவியல் அமைப்புக்கும் அடிப்படையாக இருந்தது என்பதுதான் முக்கியமான விஷயமாகும். பூர்ஷ்வா அரசுக்கு இவை மிகவும் ஜீவாதாரமான வகையில் முக்கியமான துறைகளாகும். ஆனால் தங்கத்தின் பணவியல் செயல்களைக் குறைந்தது. இந்தத் தலை யீட்டின் ஈர்ப்புமையம் பணம், கடன் வசதி, வழங்கீடு களின் சமநிலை, பரிவர்த்தனை விகிதங்கள் என்ற அதி முக்கியமான துறைகளை நோக்கி நகர்ந்துகொண்டிருக் கிறது.

உலகச் சந்தையில் தங்கத்தின் பணவியல் பாத்திரம் முடிந்துவிட்டது அல்லது உலோக மூலப்பொருளில் தங்கம் மற்றொரு வகை என்பதைத் தவிர வேறு ஒன்றுமில்லை என்று சொல்லிவிட முடியாது என்பது உண்மையே. இந்த முக்கியமான பிரச்சினையைப் பற்றி இனி வரும் கடைசி அத்தியாயங்களில் எழுதுவோம். இன்றைய கட்டத்தில் தங்கச் சந்தை பெரிய அளவிலுள்ள தனியார் மூலதனத்தின் கையில் இருக்கிறது என்று கூறுவதே போதும்.

தங்க ஆதார அளவுகோலின்படி தங்கம் பணமாக இருந்தது. ஆனால் விற்பனை என்றால் பணத்துக்கு ஒரு பண்டத்தைப் பரிவர்த்தனை செய்வதென்று பொருள். பண்டத்தின் விலை என்பது அதன் மதிப்பைப் பணத்தின் மூலமாக எடுத்துரைத்தல் என்று பொருள். ஆகவே அந்த சமயத்தில் தங்கத்தை வாங்குதல், விற்பனை செய்தல் மற்றும் தங்கத்தின் விலை என்பவை வெறும் சம்பிரதாயமான சொற்றொடர்கள். அல்லது மார்க்ஸ் குறிப்பிட்டதுபோல பகுத்தறிவுக்குப் புறம்பான கருதுகோள்கள்தான். தங்கத்தின் விலை என்பது பணவியல் அலகின் தங்க அடக்கத்தை வேறுவிதத்தில் எடுத்துக்கூறுவதே. அமெரிக்காவில் தங்கத்தின் விலை ஒரு டிராய் அவுன்சுக்கு 20.67 டாலர்கள் என்று மக்கள் கூறினார்கள். ஒரு டாலரின் தங்க அடக்கம் [1900ல் சட்டபூர்வமாக நிர்ணயிக்கப்பட்டது] சுமார் 0.048 அவுன்சுகளுக்கு அல்லது 1.505 கிராம்களுக்குச் சமமானது என்பதைத் தான் அவர்கள் அவ்வாறு சொல்கிறார்கள். ஒருவர் தங்கத்தை

விற்பனை செய்யும்பொழுது வெறும் பரிவர்த்தனை யில்தான் ஈடுபடுகிறார். உதாணமாக, ஒரு அவுன்ஸ் தங்கக் கட்டியை விற்பனை செய்து 20 டாலர்கள் 67 சென்ட்டுகளைத் தங்க நாணங்களாக அல்லது வங்கி நோட்டுகளாகப் பெற்றுக்கெள்கிறார். இந்த வங்கி நோட்டுகளை எப்பொழுதும் தங்கத்துக்கு மாற்றிக் கொள்ள முடியும். இது வடிவ மாற்றம் மட்டுமே என்று சொல்லலாம்.

ஆனால் டாலரைத் தங்கத்தில் மாற்றுவது நிறுத்தப்பட்ட பொழுது ஒரு அவுன்ஸ் தங்கம் 35 டாலர்கள் என்ற புதிய அதிகாரபூர்வமான விலைக்குத் தங்கத்தை விற்பனை செய்ய முடிந்ததே தவிர வாங்க முடியவில்லை. தங்கத்தை விற்பனை செய்பவர் (உதாரணமாக, ஒரு அமெரிக்கத் தங்க முதலாளி) தற்பொழுது அதை வேறு வடிவத்துக்கு மாற்றவில்லை; முற்றிலும் வேறுபட்டிருக்கும் காகித டாலர்களுக்கு அதைப் பரிவர்த்தனை செய்கிறார். அந்த நடவடிக்கைக்கு உண்மையான விற்பனை என்ற கூறுகளைக் கொடுத்தது இதுவே.

இரண்டாம் உலக யுத்தத்துக்குப் பிறகு எல்லாப் பண்டங்களின் விலைகளும் தீவிரமாக உயர்ந்தபொழுது ஒரு அவுன்ஸ் தங்கத்தை 35 டாலர்கள் விலைக்கு அமெரிக்க அரசாங்கத்துக்கு விற்பனை செய்வது லாபகரமானதாக இருக்கவில்லை. எல்லோரும் இயன்றவரை அதைத் தவிர்க்கத் தொடங்கினார்கள். அதிகாரபூர்வமில்லாத வகையில் அதிக விலைக்கு விற்பனை செய்வதில் ஈடுபட்டார்கள். தன்னுடைய சொந்த விலைகளைக் கொண்ட சுதந்திரமான தங்கச் சந்தை தோன்றியது; முதலாளித்துவப் பொருளாதாரத்தில் மற்ற பல பண்டங்களைப் போலவே தங்கத்தின் விலையும் தொடர்ச்சியான ஏற்றத்தாழ்வுகளுக்கு உட்பட்டிருந்தது.

1960–க்களில் அமெரிக்காவும் அதன் நேச நாடுகளும் தங்கத்தின் ஸ்திரமான அதிகாரபூர்வமான விலை, அதாவது டாலரின் தங்க அடக்கத்தின் ஸ்திரத்தன்மை என்ற கற்பனையை, டாலருக்கும் தங்கத்துக்குமிடையே கற்பனையான சமத்துவத்தை இயன்றளவுக்குப் பலப்படுத்துவது அவசியமென்று இன்னும் கருதின. இந்த நோக்கத்தோடு 1961ல் அமெரிக்க ஐக்கிய நாட்டையும் முக்கியமான மேற்கு ஐரோப்பிய நாடுகளையும் கொண்ட தங்கக் கூட்டிணைப்பு என்று சொல்லப்படுவது ஏற்படுத்தப்பட்டது. சுதந்திரமான சந்தையில் அதிகாரப்பூர்வமான மட்டத்தில் தங்கத்தின் விலையைத் தக்கவைப்பது இந்தக் கூட்டிணைப்பின் நோக்கமாகும். தங்க நடவடிக்கைகள் குவிக்கப்பட்டிருந்த லண்டன்

சந்தையில் தங்கத்தை வாங்கி விற்பனை செய்து சந்தையை ஒழுங்கு படுத்துவதன் மூலம் இந்த நோக்கத்தை நிறைவேற்ற உத்தேசிக்கப்பட்டது. சுதந்திரமான விலை குறையும்பொழுது இந்தக் கூட்டிணைப்பின் உறுப்பினர்கள் உபரித் தங்கத்தை வாங்கி அதை முன்பே அவர்கள் ஒத்துக்கொண்ட முறையின்படி தங்களுக்கிடையே பிரித்துக்கொண்டார்கள். தங்கத்தின் விலை அதிகரிக்கும் பொழுது அவர்கள் தங்கத்தை விற்பனை செய்து முறைப்பிரகாரம் செலவுகளைப் பிரித்துக்கொண்டார்கள். இந்தச் செலவுகளில் பாதியை அமெரிக்கா ஏற்றுக்கொண்டது. 1967–ம் வருடக் கோடைக்காலத்தில் இக்கூட்டிணைப்பிலிருந்து பிரான்ஸ் விலகிக் கொண்ட பிறகு அமெரிக்காவின் பங்கு மேலும் அதிகரித்தது.

1967–68–ல் இந்த அமைப்பு சீர்குலைந்தது. அப்பொழுது அமெரிக்காவிலும் மற்ற முதலாளித்துவ நாடுகளிலும் பண வீக்கம் அதிகரித்துப் பொருளாதார நிலைமை சீர்கேடடைந்து கொண்டிருந்தது. இந்த அமைப்பிலேயே மிகவும் பலவீனமான நாடாக இருந்த பிரிட்டன் பவுன் ஸ்டர்லிங்கின் மதிப்பைக் குறைத்தது. அதாவது அதன் தங்க அடக்கத்தையும் டாலருக்கும் மற்ற நாணயங்களுக்கும் தொடர்புடைய அதன் பரிவர்த்தனை விகிதத்தையும் குறைத்தது. சந்தையில் பீதியும் காய்ச்சல் வேகத்தில் வர்த்தக சூதாட்டமும் தொடர்ந்தன. பெரிய முதலாளிகளும் அதற்குக் குறைவான முதலாளிகளும் மிகவும் விரிவான அளவில் தங்கத்தைத வாங்கத் தொடங்கினார்கள். டாலர்களில் அதிகாரபூர்வமான தங்கவிலை அதிகரிக்கும் என்று அவர்கள் நம்பினார்கள். தங்கக் கூட்டிணைப்பு நூற்றுக்கணக்கான டன்கள் தங்கத்தைச் சந்தையில் கொட்டிச் கொண்டிருந்தது. அப்படியும் தேவையைப் பூர்த்தி செய்ய முடியவிடியவில்லை. தனிப்பட்ட வர்த்தக சூதாட்டக்காரர்கள் இயற்கையான வடிவத்தில் தங்கத்தைத் தேடினார்கள். நியூயார்க் வங்கி ரசீதுகளின் வடிவத்தில் தங்கத்தை நாடவில்லை. எனவே இந்த அரிய உலோகத்தை லண்டன் சந்தைக்கு வேகமாகக் கொண்டு வருவதற்காக அமெரிக்க அரசாங்கம் ராணுவ விமானங்களை உபயோகித்தது. லண்டனுக்கு அருகேயுள்ள ராணுவ விமான தளத்தையும் பயன்படுத்துவது அவசியமாயிற்று.

டாலருக்கும் தங்கத்துக்கும் இடையே உள்ள சமத்துவத்தை நிலைக்க வைக்கும் வீண் முயற்சியில் தங்கக் கூட்டிணைப்பின் உறுப்பினர்கள் 1967 நவம்பருக்கும் 1968 மார்ச்சுக்குமிடையே சுமார் 2,500 டன்கள் தங்கத்தைச் செலவிட்டார்கள். அநேகமாக எல்லா வர்த்தகமும் லண்டனில் நடைபெற்றது. 1968 மார்ச் 13–ந் தேதியன்று ஒரு நாளில் மட்டும்

லண்டனில் 175 டன்கள் விற்பனை செய்யப்பட்டன. மறுநாள் 225 டன்கள் விற்பனை செளிணியப்பட்டன. வர்த்தக சூதாட்ம் அதன் உச்சத்தை எட்டியது. வர்த்தக சூதாட்டக்காரர்களுக்கு நஷ்டம் ஏற்படக்கூடிய ஆபத்தே கிடையாது, ஏனென்றால் தங்கத்தின் விலை அதிகரிக்குமே தவிர குறையப்போவதில்லை. தங்கக் கூட்டிணைப்பில் சேர்ந்திருந்த அமெரிக்காவின் கூட்டாளிகள் கலகம் செய்தார்கள். அமெரிக்கத் தங்க இருப்பிலிருந்து வெளியே விடப்பட்ட தங்கத்தின் தாக்கமும் உணரப்பட்டது. இந்த விளையாட்டில் ஈடுபட்டிருந்தவர்கள் ஒருநாள் விதிகளைப் பின்பற்றி நடந்து கொண்டு பாதாள அறைகளில் இருக்கும் தங்கப்பாளங்கள் அத்தனையையும் விற்பனை செய்தா கிலும் தங்கத்தின் அதிகாரபூர்வமான விலையை [ஆகவே அதனோடு டாலருக்குள்ள சம மதிப்பை] காப்போம் என்று அறிவித்தார்கள். ஆனால் மறு நாளே தங்கக் கூட்டிணைப்பு கலைக்கப்பட்டுவிட்டது, சந்தையே ஒழுங்குப்படுத்துகின்ற எல்லா முயற்சிகளும் கைவிடப்பட்டுவிட்டன என்று அறிவித்தார்கள். இது நிதித்தறையில் வழக்கமாக நடப்பதுதானே!

தங்கத்தின் இரண்டு அடுக்குச் சந்தை, இரண்டு அடுக்கு விலை என்று சொல்லப்படுவது தோன்றியது. சுதந்திரத் சந்தையில் தங்கத்தை வாங்குவதோ விற்பனை செய்வதோ இல்லையென்று முக்கியமான முதலாளித்துவ நாடுகளின் மத்திய வங்கிகள் அறிவித்தன; வங்கிகள் சந்தையைத் தனியார் துறையின் விருப்பப்படி முற்றிலும் விட்டுவிட்டன. தங்கத்தின் அதிகாரபூர்வமான விலையின் முக்கியத்துவம் தீவிரமாகக் குறைந்தது, அதிலிருந்து சுதந்திர விலை வெட்டிக்கொண்டு கணிசமான அளவுக்கு அதிகரித்தது. வர்த்தகச் சூதாட்டக்காரர்கள் ஏராளமான அளவு தங்கத்தை முன்பே வாங்கியிருந்து இப்பொழுது அதை விற்பனை செய்வதன் மூலம் லாபமடைந்து கொண்டிருந்த காரணத்தால் 1968- 1970-ல் சுதந்திரச் சந்தை விலை அதிகாரபூர்வமான விலையிலிருந்து அதிகமான அளவுக்கு வேறுபட்டிருக்கவில்லை [10-15 சதவிகிதத்துக்கு அதிகமல்ல]. 1971-ல் தான் சந்தை விலை மிகக் கூர்மையாக அதிகரிக்கத் தொடங்கியது. தங்கத்தின் விலை காகிதக்கடன் பணத்தில் அளவிடப் படுகிறது. மற்ற எல்லாப் பண்டங்களின் விலைகளையும் போல இதுவும் அதே பொருளாதார யதார்த்தத்தையே கொண்டிருக்கிறது. தங்கத்துக்கும் மற்ற பண்டங்களுக்கும் உள்ள விகிதாச்சாரம் இந்த விலைகளின் மூலமாக மட்டுமே நிறுவப்படுகிறது; ஒரு அவுன்ஸ் தங்கம் 100 டாலர்கள் விலை என்றால், ஒரு டன் கோதுமையும் 100 டாலர்கள் விலை என்றால் தங்கத்தில் எடுத்துரைக் கப்படும் கோதுமையின் விலையை இதன் மூலமாக

மட்டுமே நாம் முடிவு செய்ய முடியும் (1 டன் கோதுடை = 1 அவுன்ஸ் தங்கம்).

தங்கம் உலக முதலாளித்துவச் சந்தைக்குள் மூன்று முக்கியமான பிறப்பிடங்களின் மூலம் வந்து சேர்கிறது. முதலாளித்துவ மற்றும் வளர்முக நாடுளின் நடப்பு உற்பத்தி, திரட்டிவைக்கப்பட்டிருக்கும் மத்திய இருப்புக்கள், சோஷலிஸ்ட் நாடுகளால் செய்யப்படும் விற்பனை உள்பட மற்ற வழிகள் ஆகியவை இந்த மூன்று பிறப்பிடங்களாகும் (அட்டவணை 3 பார்க்க). சமீப வருடங்களில் இந்த வழிகளின் மூலம் வருடந் தோறும் 1,300–1,800 டன்கள் தங்கம் சந்தைக்கு வருகிறது. ஒப்புநோக்கில் நடப்பு உற்பத்தி மெதுவாகவே மாற்றமடைகிறது, வருடா வருடம் அதிகமாக மாற்றமடைவ தில்லை. ஆனால் மற்ற இரண்டு வழிகளிலும் கிடைக்கம் தங்கத்தின் அளிப்பு அதிகமாக வேறுபடலாம். உலகச் சந்தையில் தென் ஆப்பிரிக்க ரிசர்வ் வங்கியே மிகப் பெரிய தங்க விற்பனையாளராக இருக்கிறது. தென் ஆப்பிரிக்காவில் உற்பத்தி செய்ப்படும் தங்கத்தை விற்பனை செய்வதில் இந்த வங்கி ஏகபோகத்தைக் கொண்டிருக்கிறது. நாம் மேலே சுட்டிக்காட்டியது சந்தைக்குள் வருகின்ற தங்கத்தின் அளவே. ஆனால் “நுகர்வோரை” வந்தடைவதற்குள் ஒரே தங்கப்பாளம் பல தடவைகள் செலாவணியாகக் கூடும் என்பது உண்மையே. ஆகவே தங்கச் சந்தைகளின் வருடாந்தர வியாபாரம் அங்கே வருகின்ற தங்கத்தின் அளவைக் காட்டிலும் பல மடங்கு அதிகமாக இருக்கலாம். தங்கத்தில் மிகக்குறைவான பகுதி மட்டுமே உற்பத்தியாளர்களிடமிருந்து நுகர்வோருக்கு, அதாவது அதை மூலப்பொருளாகப் பயன்படுத்தும் தொழில் நிறுவனங்களுக்கு நேரடியாகப் போய்ச் சேருகிறது. அநேகமாக எல்லாத் தங்கமும் முதலில் வியாபாரிகள் என்று சொல்லப்படும் இடைத்தரகர்களிடம் போய்வருவது நெடுங்காலப் பழக்கமாகும்.

தங்க வியாபாரிகள் நிநித்துறையின் உயர்வகுப்பினர். வர்த்தக உலகத்தின் பெருங்குடிமக்கள். தங்க வர்த்த கத்தில் உள்ள முக்கியமான கூறுகளான நிதி அதிகாரம், கௌரவம், ரகசியம் ஆகியவற்றோடு இவர்களுடைய பெயர்கள் இணைந்திருக்கின்றன. இது மரபு வழிப்பட்ட குழு. புதியவர்கள் உள்ளே நுழைய முடியாது. தங்கச் சந்தையிலுள்ள முக்கியமான நிறுவனங்களின் எண்ணிக்கை இருபதுக்கு மேல் போகாது. அவை அத்தனையுமே பெரிய வங்கிகஷீமீ அல்லது அத்தகைய வங்கிகளோடு மிக நெருக்கமான தொடர்பு வைத்திருப்பவை. தங்க வர்த்தகத்திகல் ஈடுபடுவ தென்றால் உங்களிடம் ஏராளமான பணம் இருக்க வேண்டும்.

இரண்டாம் உலக யுத்தத்துக்கு முன்பு உலகத்தில் தங்க வர்க்கத்தின் கேந்திரமாக லண்டன் அல்லது அதன் நிதிப்பகுதி இருந்தது. அதற்குப் பிறகு பல மாற்றங்கள் ஏற்பட்டிருந்தபோதிலும் இன்றும் லண்டன் மிக அதிகமான முக்கியத்துவத்தைக் கொண்டிருக்கிறது. சமீபத்திய மதிப்பீடுகளின்படி தென் ஆப்பிரிக்கத் தங்கத்தின் சுமார் பாதியளவு லண்டன் வர்த்தகர்கள் மூலமாக விற்பனை செளிணியப்படுகிறது, அதன் மறு பாதி சமீப வருடங்களில் "ஸுரிச்சின் கூள்கள்" என்று பிரபலமடைந்துள்ள ஸ்விட்சர்லாந்து வங்கிகளுக்குப் போகிறது. 1975க்குப் பிறகு தென் ஆப்பிரிக்கத் தங்கத்தில் ஒரு பகுதி அமெரிக்கக் கம்பெனிகள் மூலமாக அமெரிக்காவில் விற்பனை செய்யப்பட்டிருக்கிறது. லண்டன் தங்க வர்த்தகர்களின் பட்டியலில் 1804ல் நிறுவப்பட்ட ராத்ஷீல்டு குடும்ப வங்கி நிறுவனம் தலைமையிடத்தைப் பெறுகிறது. "என்.எம்.ராத்ஷீல்டு அன்ட் சன்ஸ் லிமிடெட்" என்பது அதன் அதிகாரபூர்வமான பெயர். ராத்ஷீல்டு குடும்பத்தையும் அதன் நிதிப் பேரரசையும் பற்றி ஏராளமான புத்தகங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. அவர்களுடைய பெயரே பல புனைகதைகளுக்குக் காரணமாக இருந்திருக்கிறது.

இரண்டு நூற்றாண்டுகளாக நடைபெற்றிருக்கும் பெரிய துணிச்சலான நடவடிக்கைகள், நம்ப முடியாத அளவு செல்வம், கணிசமான அளவுக்கு வெளிப்படையான, அதைக் காட்டிலும் அதிகமான அளவுக்கு மறைமுகமான சக்தி ஆகியவற்றின் சின்னமாக ராத்ஷீல்டுகள் இருக் கிறார்கள். இந்தப் பரம்பரையை நிறுவியர் 18ம் நூற்றாண்டின் பிற்பாதியில் ஜெர்மனியில் சிறு அளவில் பணம் மாற்றிக் கொடுக்கும் தொழிலைச் செய்தவர். அன்று முதல் இன்றுவரை ராத்ஷீல்டு என்ற பெயரே தங்கத்தோடு சம்பந்தப்பட்டிருக்கிறது. இவர்கள் விட்வாட்டர்ஸ்ரேன்ட் தங்கச் சுரங்கங்களில் முதலீடு செய்தார்கள். இப்பொழுது அநேகமாக ஒரு நூற்றாண்டு காலமாக அதிலிருந்து லாப ஈவுத் தொகையைப் பெற்று வருகிறார்கள்.

ராத்ஷீல்டு வங்கியில் பழைய பாணியில் அலங்கரிக்கப் பட்டு ஐரோப்பிய முடியரசர்களின் உருவப்படங்கஷீமீ [இவர்கள் ராத்ஷீல்டுகளின் வாடிக்கையாளராக இருந்தவர்கள்] தொங்கிக்கொண்டிருக்கும் அறையில் தங்க வர்த்தகம் நடைபெறுவதற்று அடிப்படையாக இருக்கும் தங்கத்தின் ஏறக்குறைய விலை நாள்தோறும் நிர்ணயிக்கப்படுகிறது. இந்த விலை உடனே நியூயார்க்க, ஸுரிச், டொரோன்டோ, சிங்கப்பூர் மற்றும் இதர தங்க வர்த்தக கேந்திரங்களுக்கு தொலைபேசி மற்றும் டெலெக்ஸ் முறை மூலம்

தெரிவிக்கப்படுகிறது. இது எல்லாச் சந்தைகளிலும் தங்க விலைக்கு ஆதாரமாக இருக்கிறது.

ஸ்விட்சர்லாந்தின் "முப்பெரும்" வங்கிகளும் தமக்கே உரிய சாதகங்களைக் கணிசமான அளவுக்குக் கொண்டிருக்கின்றன. ஆல்ப்ஸ் மலையுச்சியிலுள்ள அந்தக் குடியரசின் மரபுவழிப்பட்ட நடுநிலைமை, உலக முழுவதிலிருந்தும் அங்கே வந்த சேருகின்ற பணம், அங்கே புகலிடம் தேடி வந்திருக்கும் சர்வாதிகாரிகளும குற்றவாளிகளும் உள்பட எல்லா வாடிக்கையாளர்களுடைய கணக்குகளையும் பரம ரகசியமாக வைத்திரக்கும் நெடுங்கால மரபு ஆகியவை இந்த சாதங்களாகும். ஸ்விட்சர்லாந்தில் தங்கம் வைத்திருப்பதற்கு, வாங்குவதற்கு, விற்பனை செய்வதற்கு, ஏற்றுமதிக்கு, இறக்குமதிக்கு எத்தகைய தடைகளும் கிடையாது; தங்க பேரங்களுக்கு வரி விதிப்பும் இல்லை. லண்டன் சந்தையில் பெரும்பாலும் மொத்த வர்த்தகம். நடைபெறுகிறது; இதைத் தவிர ஸூரிச்சின் கண்ணிய மிக்க "கூள்கள்" கடத்தல்காகரர்களோடும் ஊழல் புரியும் அதிகாரிகளோடும் தொடர்பு வைத்துக் கொள்ளத் தயங்குவதில்லை. இவர்கள் பிரான்சிலும் அராபிய நாடுகளிலும் தெற்கு மற்றும் தென்கிழக்கு ஆசியாவிலும் சில்லறை வர்த்தகர்களைக் கொண்ட விரிவான அமைப்பை ஏற்படுத்தியிருக்கிறார்கள். அவர்களுக்கு சிறு பாளங்களாக, நாணங்களாகத் தங்கத்தைக் கொடுக்கிறார்கள். மத்திய கிழக்கில் மிகப் பெரிய தங்கச் சந்தை பீருட்டில் இருந்தது, ஆனால் சமீப காலத்தில் தங்க வர்த்தகம் குவெய்த்துக்கும் துபாய்க்கும் மாறிவிட்டது. தூரகிழக்கு ஆசியாவில் நெடுங்காலமாகவே ஹாங்காங்கும் மக்காவோவும் தங்க வர்த்தக கேந்திரங் களாக இருந்து வருகின்றன. சமீப வருடங்களில் சிங்கப்பூர் தங்கச் சந்தையில் கணிசமான வர்த்தகம் நடைபெறுகிறது. ஆசியாவில் தங்க வர்க்கத்தைப் பற்றிய வர்ணனைகளில் சூழ்ச்சிகள், லஞ்சம், கடத்தல், மர்மக் கொலைகள், கொலைகாரத்தனமான போட்டி ஆகியவை இடம் பெறுவதால் அவை துப்பறியும் கதைகள், மர்மக் கதைகளைப் போலவே சுவையாக இருக்கின்றன.

அமெரிக்க ஏகபோகங்கள் தங்க வர்த்தகத்கதிலிருந்து ஓதுங்கியிருக்கவில்லை, அவ்வாறு ஓதுங்கிவிடவும் முடியாது. அமெரிக்கக் குடிமக்களுக்குத் தங்கம் வைத்துக் கொள்ளும் உரிமை சட்ட வூர்வமாக இல்லாதிருந்தது சமீப காலம் வரையிலும் அவர்களுடைய நடவடிக்கைகளை மட்டுப்படுத்தி வைத்தது. 1930–க்களில் ஏற்படுத்தப்பட்ட இத்தடைகள் இன்று ரத்துச் செய்யப்பட்டுவிட்டன. லண்டன், ஸூரிச் தங்கச்

சந்தைகளை ஒரேயடியாகப் பின்னுக்குத் தள்ளிவிடுமோ என்று அஞ்சுகின்ற அளவுக்கு நியூயார்க்கிலும் சிக்காகோவிலும் தங்கச் சந்தைகள் இயங்கி வருகின்றன. அமெரிக்கத் தொழில்துறை உலகத்திலேயே அதிகமான அளவுக்குத் தங்கத்தை உபயோகிக்கும் ஒன்றாக எப்பொழுதுமே இருந்து வந்திருக்கிறது. தனிப்பட்ட முதலீடுகள், பதுக்கல் ஆகியவற்றிலும்கூட அமெரிக்கர்கள் சமீப வருடங்களில் பிரெஞ்சுக்காரர்களை மிஞ்சிவிட்டார்கள்.

"பிலிப் பிரதர்ஸ்" என்ற நிறுவனம் அமெரிக்காவில் மிகப் பெரியதாகும். இது "எங்கெல்ஹார்டு மினரல்ஸ் அன்ட் கெமிக்கல்ஸ் கார்ப்பரேஷன்" என்ற அமைப்புக்குள் இயங்குகிறது. தங்க வர்த்தகத் துறையில் ஓப்பன் ஹேமர் மற்றும் ராத்ஷீலுடுகளுக்கு இருக்கும் அதே மரியாதை எங்கெல்ஹார்டு என்ற பெயருக்கும் இருக்கிறது. இந்த நிறுவனத்தின் மற்றொரு கிளை அமெரிக்காவின் மிகப் பெரிய தங்கம் சுத்தப்படுத்தும் கம்பெனிகளை நடத்தி வருகிறது. இவை பாதிபூர்த்தியடைந்த பொருள்களை உற்பத்தி செய்கின்றன; ஆபரணத் தொழில், மின்நுட்பத் தொழில் மற்றும் இதர தொழில்களில் இவை வாங்கப்படுகின்றன. அங்கே தங்கம் தன்னுடைய இறுதி உபயோகத்தைஅடைகிறது. தங்கத்தின் இறுதி உபயோகத்தின் [நுகர்வின்] முக்கிய துறைகளுக்கிடையே தங்கத்தின் நடப்பு, வருடாந்தரப் பாய்ச்சல் எவ்வாறு பிரிக்கப்படுகிறது?

மத்திய வங்கிகளும் சர்வதேச நிதி ஸ்தாபனங்களும் சுதந்திரச் சந்தையில் தங்கத்தை வாங்குவது கொள்கை யளவில் சாத்தியமே, மேலும் இது அவ்வப்பொழுது நடைபெறுகிறது என்றபோதிலும் 1967க்குப் பிறகு மொத்தத்தில் இந்தத் துறை தங்கத்தை விழுங்கவில்லை என்பதோடு சில சமயங்களில் அதில் ஒரு பகுதியை வெளியே கக்கிவிடுகிறது என்பதை நாம் அறிவோம் [அட்டவணை 3 பார்க்க]. பண உலோகம் என்ற நிலையிலிருந்து தங்கம் அகற்றப்பட்டிருப் பதற்கும் புதைந்த செல்வங்களைப் பகுத்தறிவுக்குப் பொருத்த மான வகையில் பயன்படுதுவதற்கும் இது அறிகுறி என்று சிலர் கூறுகிறார்கள்.

வேறு சிலர் இது வைபத்தியக்காரத்தனமான, ஆபத்தான பரிசோதனை என்று கூறுகிறார்கள். நாம் இந்தப் பிரச்சினையைப் பின்னர் எடுத்துக் கொள்வோம். இங்கே சில தகவல்களையும் புள்ளிவிவரங்களையும் தருவதோடு நிறுத்திக் கொள்வோம்.

1968–1976 காலகட்டத்தின்போது வருடந்தோறும் சராசரியாக1,321 டன்கள் தங்கம் சந்தைக்கு வந்தது. அது தொழில் துறை மற்றும் தனிப்பட்ட

பதுக்கல் என்ற இரண்டு திசைகளில் தந்தையிலிருந்து வெளியே சென்றது. தொழில்துறை சராசரி 1,014 டன்களை [77 சதவீகிதம்] உபயோகித்துக் கொண்டது. இதில் ஆபரணத் தொழில் 791 டன்களையும் [60 சதவீதம்] மின்னுட்பத் தொழில் 93 டன்களையும் [7 சதவீதம்] பொய்ப்பல் தயாரிப்புத் தொழில் 67 டன்களையும் [5 சதவீதம்] உபயோகித்தன. தங்கத்தை உபயோகிக்கும் தொழில்துறையில் இவையே மூன்று பெரிய விரிவுகளாகும். மற்ற எல்லாப் பிரிவுகளும் சேர்ந்து எஞ்சியிருக்கும் 5 சதவீதத்தை உபயோகித்தன.

சந்தைக்கு வருகின்ற தங்கத்திலிருந்து வருடந்தோறும் சராசரியாக 307 டன்கள் [23 சதவீதம்] தனிப் பட்ட பதுக்கல்களுக்குச் சென்றன. இதில் சரி பாதி பாளங்களாகவும் மறுபகுதி பதுக்கிவைக்கப்பட்ட நாணயங்களாகவும் இருந்தன. இந்தப் புள்ளிவிவரங்கள் தனிப்பட்ட பதுக்கலில் திரட்டப்பட்டிருக்கும் தங்கத்தின் அளவைக் குறைத்து மதிப்பிடுவது போலத் தோன்றலாம். தங்கப் பொருள்களில் கணிசமான பகுதி [குறிப்பாக இந்தியாவிலும் மற்ற கிழக்கு நாடுகளிலும்] விசேஷமான நுகர்வுப் பொருள்களைக் கொண்ட திரட்டல் அல்ல. பணத்தின் சில கூறுகளைக் கொண்டிருக்கும் ஒரு பிரத்யேகமான பண்டத்தின், மதிப்பின் புற உருவத்தின் பதுக்கலே என்பது முக்கியமானதாகும். மத்திய கிழக்கிலும் இந்தியாவிலும் அதிகத் தூய்மையான தங்கத்தில் செய்யப்படும் ஆபணரங்களை மக்கள் விரும்புகிறார்கள். அந்த ஆபரணங்களின் விலையில் 80 சதவீதம் வரை உலோகத்துக்கும் [மூலப்பொருள்] சுமார் 20 சதவீதம் மட்டுமே ஆபரணத் தயாரிப்பாளருக்கும் கிடைக்கிறது. ஒப்பீட்டளவில் சொற்பமான இழப்போடு அவற்றை மறுபடியும் சுத்தமான உலோகமாக மாற்றுவது எளிது. ஆபரணங்களாக உபயோகிக்கப்படும் தங்கத்தின் கணிசமான அளவு உண்மையில் ஒரு வகையான பதுக்கலே. நாம் மேலே கொடுத்துள்ள புள்ளிவிவரங்கள் மதிப்பீடுகளே, அவை மிகத் துல்லியமானவை அல்ல.

இதற்குப் பிந்திய வருடங்களில் மதிப்பைப் பாதுகாக்கும் சாதனமாகவும் வர்த்தக சூதாட்ட இலக்கு என்ற முறையிலும் தங்க வேட்டை தீவிரமாக அதிகரித்த பொழுது, விலைகள் அதிகரிக்கக் கூடிய போக்கு தெளிவாக வெளிப்பட்டபொழுது, பதுக்கலின் தனி முதலான அளவும் பங்கும் கணிசமாக உயர்ந்தன. 1977ல் முதலாளித்துவ நாடுகளின் சந்தைகளுக்குள் வந்த 1,642 டன்கள் தங்கத்தில் 416 டன்கள் [ 25 சதவீதத்துக்கும் அதிகம்] பாளங்கள், நாணயங்ள், பதக்கங்களின் வடிவத்தில்

பதுக்கிவைக்கப்பட்டிருந் தவையே. இந்த உலோகத்தின் தொழில்துறை உபயோகத்தின் அடுக்கமைவில் முக்கியமான மாற்றங்கள் ஏதும் ஏற்படவில்லை. 1978ல் சந்தைக்கு வந்த தங்கத்தின் அளவு 1,751 டன்களாக உயர்ந்தது. இதில் 492 டன்கள் (30 சதவீதத்துக்கும் அதிகம்) பதுக்கலுக்காக வாங்கப்பட்டன. தீவிரமாக அதிகரித்த தங்க நாணய அளவை, குறிப்பாக தென்ஆப்பிரிக்க குருகர் நாணயங்களை சந்தைகள் ஏற்றுக்கொண்டன. இதைக் கீழ்வரும் பகுதியில் விவாதிப்போம். தங்கத்தின் விலை வேகமாக அதிகரித்த போதிலும் ஆபரணத் தொழிலில் உபயோகிக்கப்பட்ட தங்கத்தின் அளவு (தனிமுதலாகப் பார்க்கும்பொழுது) குறைந்துவிடவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும். மக்கள் முதலீடு என்ற நோக்கத்தோடு மென்மேலும் அதிகமாக ஆபரணங்களை வாங்கினார்கள் என்பதற்கு இது மறைமுகமான சான்றாகும். 1979ல் 1,704 டன்கள் தங்கம் சந்தைக்கு வந்தது. இதில் 712 டன்கள் (40 சதவீதத்துக்கும் அதிகம்) பதுக்குவதற்காக வாங்கப்பட்டன என்று புள்ளி விவரங்களிலிருந்து அறிகிறோம். தங்கச் சந்தையில் ஸ்திரமற்ற நிலை அதிகரித்துக் கொண்டிருந்தால் அது நிராகரிக்கப்பட்டதையும் இந்தப் புள்ளிவிவரங்கள் பிரதிபலிக்கின்றன. 1977–79ம் வருடங்களில் மிகவும் அதிகமான தங்கம், சுமார் 1,200 டன்கள் மத்திய இருப்புக்களிலிருந்து (இவை பிரதானமாக சர்வதேச நிதி ஸ்தாபனத்தையும் அமெரிக்க அரசாங்கத்தையும் சேர்ந்தவை) சந்தையில் விற்பனை செய்யப்பட்டன. அது தேவையில் கணிசமான அளவைப் பூர்த்தி செய்து தங்கத்தின் விலை மேலும் தீவிரமாக உயர்வதை இந்த விற்பனை தடுத்தது என்று தோன்றுகிறது.

ஆனால் மற்றொரு புதியகூறும் இதே சமயத்தில் தோன்றியது. சில நாடுகள் தங்களுடைய மத்திய இருப்புக் களுக்காகத் தங்கத்தை வாங்கின. 1978ல் சவூதி அரேபியா 45 டன்கள் தங்கம் வாங்கியது விசேஷமான கவனத்தை ஈர்த்தது. 1980ல் மத்திய வங்கிகள் 230 டன்கள் தங்கத்தை நிகரமாக வாங்கின. இம்மாதிரியான தேவை எதிர்காலத்திலும் குறிப்பிடத்தக்க அளவில் ஏற்படுமானால் அது தங்கத்தின் சந்தை மற்றும் விலை மீது கணிசமான தாக்கத்தைக் கொண்டிருக்கலாம்.

# தங்கக் கடத்தல்

யு த்தத்துக்குப் பிந்திய காலகட்டத்தில் தங்கக் கடத்தல் ஒரு தனித்தொழில் துறையாக மாறியது. அதற்கென்று தனியான முறைகள், தனியான அமைப்பும் தலைவர்களும், லாபம் மற்றும் ஆபத்துக் களும் இருக்கின்றன. தங்கக் கடத்தலைப் பற்றிப் புத்தகம் எழுதியிருக்கும் கிரீன், சந்தைக்கு வந்த தங்கத்தில் சுமார் பாதியளவு கடத்தல்காரர்களின் கரங்களின் வழியாக வந்தது, அவர்களுடைய பைகளில் பணத்தை நிரப்பியது என்று நம்புகிறார். இந்தக் கரங்களும் பைகளும் வெவ்வேறு ரகமான மனிதர்களுக்குச் சொந்தம். கரங்கள் கூலிக்காக ஓடிச் சென்று பாடுபடும் ஊழியர்களுக்குச் சொந்தமானவை; இவர்களுக்கு மிகக் குறைவான கூலியே கிடைக்குக்.

பைகள் சர்வதேச கடத்தல் சிண்டிகேட்டுகள் எனப்படும் முதலாளித்துவ கடத்தல் சிண்டிகேட்டுகள் எனப்படும் முதலாளித்துவ ஸ்தாபனங்களுக்குச் சொந்தமானவை. "உண்மையைச் சொல்வ தென்றால், கடந்த பல வருடங்களில் மிகவும் திறமையான சர்வதேச கடத்தல் சிண்டிகேட்டுகள் வளர்ச்சியடைந்துவிட்டன. அவற்றின் வர்த்தகத்தின் மொத்த பணத்தொகையை அறிவிப் பார்களானால் உலகத்தில் மிகப் பெரிய ஐந்நூறு கம்பெனிகளில் அவையும் இடம் பெறும்" என்று கிரீன் எழுதுகிறார். எனினும் இவர்கள் சில காரணங்களுக்காகத் திரைமறைவிலேயே இருக்க விரும்புகிறார்கள். பல நாடுகளின் சட்டங்களை மீறி அவர்களுடைய தொழில் நடைபெறுகிறது. அவர்களுடைய லாபம் வரிவிதிப்புக்கு உட்படாமல் மறைக்கப்பட்டது.

தங்கத்தின் இறக்குமதி, ஏற்றுமதியையும் உடைமையையும் வாங்குவதையும் விற்பனை செய்வதையும் பல நாடுகள் தடை செய்திருப்பதால் தங்கக் கடத்தல் தோன்றிப் பெருகியிருக்கிறது. 1970-ன் புள்ளி விவரங்களின் படி முதலாளித்துவ உலகத்தில் பத்து நாடுகள் மற்றும் பிரதேசங்களில்தான் இந்த "உரிமைகள்" வழங்கப்பட்டிருந்தன. மேற்கு ஜெர்மனி, ஸ்விட்சர்லாந்து? நெதர்லாந்து, கனடா, பராகுவே, லெபனான், சாவூதி அரேபியா, குவெய்த், துபாய் மற்றும் மக்காவோ இப்படியலில் அடங்கிய பத்து நாடுகளாகும். இந்த நாடுகளின் எண்ணிக்கை இப்பொழுது அதிகரித் திருக்கிறது என்பது உண்மையே. தடைகளை அகற்றி யிருக்கும் பெரிய நாடுகளில் அமெரிகக் ஐக்கிய நாடு, கிரேட் பிரிட்டன், ஜப்பான் ஆகியவற்றை நாம் குறுப்பிடலாம்.

ஆனால் தடைகளையும் கட்டுப்பாடு களையும் இன்னும் வைத்திருக்கும் நாடுகள் பல இருக்கின்றன. தங்கக் கடத்தல் அதன் திசையையும் வடிவங்களையும் மாற்றிக் கொண்டு வருகிறது. ஆனால் அது மறைந்துவிடவில்லை என்பது உறுதி.

தங்க நடவடிக்கைகள் எங்கே தடைசெய்யப் பட்டிருக்கின்றனவோ அல்லது கட்டுப்படுத்தப்பட்டிருக் கின்றனவோ அங்கே தங்கத்தின் விலை லண்டன் அல்லது ஸுரிச்சிலுள்ள சுதந்திரமான சர்வதேசச் சந்தைகளில் இருப்பதைக் காட்டிலும் அதிகமாக இருக்கும். லண்டனில் இருப்பதைக் காட்டிலும் அதிகமாக இருக்கும். லண்டனில் ஒருஅவுன்ஸ் தங்கம் 35 டாலர்கள் விலைக்கு [மேலே குறிப்பிடப்பட்ட தங்கக் கூட்டிணைப்பு 1968 வரையிலும் இந்த விலை நிலைக்கத் தேவையான ஆதரவைக் கொடுத்தது] விற்கப்பட்ட பொழுது இந்தியாவில் ஒரு அவுன்ஸ் தங்கம் 50-55 டாலர்களுக்கு விற்பனை செய்யப்பட்டது. இந்த வித்தியாசம் ஒரு கிலோகிராம் தங்கத்துக்கு 500 டாலர்கள் அல்லது அதற்கும் கூடுதலாகவே இருந்தது. இது ஒரு கிலோகிராமுக்கு 75-100 டாலர்களாக மட்டுமே இருக்கம் பொழுது கூட தங்கக் கடத்தல் லாபகரமானதாகக் கருதப்பட்டது. பொதுமக்கள் தங்கத்தை வாங்குவது செல்வப் பெருக்கத்தின் சின்னமல்ல. அதற்கு மாறாக அது வறுமை மற்றும் பொருளாதாரக் குழப்பத்தின் சின்னம் என்பதை நாம் முன்னரே அறிவோம். சமீப வருடங்களில் எகிப்தில் இந்த நிலை ஏற்பட்டிருக்கிறது. 1976ல் அங்கே 25 டன்கள் தங்கம் வரை வாங்கப்பட்டது என்று மேற்கத்திய நிபுணர்கள் மதிப்பிட்டிருக்கிறார்கள் [இவை பிரதானமாகப் பூர்விகமான ஆபரணங்களின் வடிவத்தில் இருந்தன]. அந்த வருடத்தில் சர்வதேச விலை சராசரியாக ஒரு அவுன்சுக்கு 125 டாலர்கள் இருந்தது. அங்கே தங்கத்தின் விலை இதைக் காட்டிலும் 20-30 டாலர்கள் கூடுதலாக இருந்தது. இந்தியாவோடு ஒப்பிடும்பொழுது இந்த விலை அதிகரிப்பு குறைவானதே. இதற்குக் கடத்தல் சிண்டிகேட்டுகளின் பேராசைக் குறைவு காரணமல்ல, தங்கக் கடத்தலை எகிப்திய அரசாங்கம் ஒழிக்க முடியாததே [அல்லது ஒழிக்க விரும்பாததே] காரணம்.

தங்க விலை மட்டத்தின் பொதுஅமைப்பு தெளிவாகப் புலப்படும். கட்டுப்பாடு எந்த அளவுக்கு பலவீனமாக இருக்கிறதோ அந்த அளவுக்குக் கடத்தல் எளிதாக இருக்கிறது, உள்நாட்டு விலையும் சர்வதேச விலைக்கு அதிகமாக நெருங்கி வருகிறது. பிரான்சுக்குள் தங்கத்தை இறக்குமதி செய்வது சட்ட ரீதியாகத் தடை செய்யப் பட்டிருக்கிறது. ஆனால் அங்கே தங்கக் கடத்தல், குறிப்பாக ஸ்விட்சர்லாந்திலிருந்து கடத்தி வருதல்

மிகவும் சுலபமாக இருக்கிறது. ஆகவே பாரிசில் தங்கத்தின் விலை லண்டன் மற்றும் ஸுரிச் விலைகளிலிருந்து மிகவும் குறைந்த அளவே வேறுபட்டிருக்கிறது.

தங்கக் கடத்தல் ஏராளமான வழிகள், சாதனங்கள் மூலமாக நடைபெறுகிறது. அதைப் பற்றிச் சொல்லப்படும் கதைகளைக் கொண்டு ஒரு பெரிய மர்ம நாவலை அல்லது திடுக்கிடும் சம்பவங்களின் தொகுப்புநூலை எழுதலாம். எனினும் அது மிகவும் கவனமாகச் செய்யப் படுகின்ற தொழில்; தங்கத்துக்கு ஏற்பட்டிருக்கும் அதிகமான தேவையைப் பூர்த்தி செய்யுமளவுக்குத் தங்கத்தைக் கொண்டுவருவதன் மூலம் சமூக ரீதியில் உபயோகமான காரியத்தைச் செய்து வருவதாகக் கூட கடத்தல் சிண்டிகேட்டுகள் கூறுவதுண்டு. மேற்கு ஐரோப்பாவிலிருந்து மத்திய கிழக்கின் வர்த்தக கேந்திரங் களுக்கு அருவியைப் போல தங்கம் ஓடிவருகிறது. இந்தக் கட்டத்தில் அதைக் கடத்தல் என்று சொல்ல முடியாது. ஏனென்றால் இந்தப் பிரதேசத்திலுள்ள பல நாடுகள் தங்க இறக்குமதியை அனுமதிக்கின்றன. இங்கிருந்து அது கள்ளச் சரக்காகப் பக்கத்து நாடுகளுக்கு (துருக்கி, இரான் மற்றும் எகிப்து) போகிறது அல்லது நெடுங்காலமாக உபயோகப்படுத்தப்பட்டு வரும் நீண்ட பாதையின் வழியாக இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் போகிறது. அதன் கிளைகள் சிங்கப்பூரை அடைகின்றன. இங்கிருந்து அது இந்தோனேஷியாவுக்கும் பக்கத்து நாடுகளுக்கும் கள்ளச் சரக்காகப் போய்ச் சேருகிறது.

தென்கிழக்கு ஆசியாவில் சீனப் பிரதேசத்தில் அமைந்திருக்கும் பிரிட்டிஷ் காலனியான ஹாங்காங் (லியாங்காங்) தங்கக் கடத்தலுக்கு மற்றொரு கேந்திர மான இடமாகும். அதற்குப் பக்கத்திலிருக்கும் சிறிய போர்த்துக்கீசிய காலனியான மக்காவோவிலிருந்து தங்கம் (அநேகமாக பகிரங்கமாகவே) ஹாங்காங்குக்குக் கடத்தப்பட்டு அங்கிருந்து மற்ற நாடுகளுக்குப் போய்ச் சேருகிறது. 1970–க்களில் தங்கம் சீனாவுக்குப் போய்ச் சேர்ந்தது. அங்கே அரசாங்க அதிகாரிகள், ராணுவ தளபதிகள், தொழிலதிபர்கள், வணிகர்கள் ஆகியோர் அதை வாங்கினார்கள். இவர்கள் நாட்டைவிட்டுத் தப்பியோடுவதற்குத் தயாரிப்புச் செய்துகொண்டிருந்தார்கள் அல்லது "நெருக்கடியான காலங்களைச்" சமாளித்துவிட முடியும் என்று நம்பிக்கொண்டிருந்தார்கள். 1970க் களின் தொடக்கத்தில் இது தெற்கு வியத்நாமில் மீண்டும் நடைபெற்றது. தாங்கள் திருடிய, கொள்ளையடித்த விலையுயர்ந்த பொருள்களைக் காப்பாற்றுவதற்கும் மக்களின் ஆட்சியதிகாரத்திலிருந்து தப்பிப்பதற்காகவும் ஆளும் வர்க்கத்தினரும் அவர்

களுடைய கைக்கூலிகளும் ஏராளமாகத் தங்கத்தை வாங்கினார்கள். ஹாங்காங்கிலிருக்கும் கடத்தல் சிண்டி கேட்டுகளிடமிருந்து ஏராளமான தங்கத்தை வாங்கும் வாடிக்கையாளர்களாக ஜப்பான், பிலிப்பைன்ஸ், தைவான், தென் கொரியா ஆகிய நாடுகள் வெவ்வேறு காலங்களில் இருந்திருக்கின்றன.

கடத்தல்காரர்களும் அவர்களுடைய தலைவர்களும் சுங்க அதிகாரிகளை எதிர்த்து நடத்துகின்ற தொடர்ச்சியான யுத்தத்தில் அதிசயமோ என்று கருதுகின்ற அளவுக்கு ஸ்தாபன அமைப்பையும் தந்திரத்தையும் சமயோசிதத்தையும் காட்டி வருகின்ற னர். இந்த யுத்தத்தில் கடத்தல்காரர்களே வழக்கமாக வெற்றியடைகிறார்கள். வருடந்தோறும் சட்ட விரோதமாகக் கடத்திக்கொண்டு வரப்படுகின்ற நூற்றுக்கணக்கான டன்கள் தங்கத்தில் மிகவும் சொற்பமான, ஒரு சதவீதத்துக்கும் குறைவான அளவு மட்டுமே அதிகாரிகளில் ஒரு டன் கடத்தல் தங்கத்தைக் கைப்பற்றினார்கள். ஆனால் வருடந்தோறும் பிரான்சுக்குள் 500 டன்கள் கடத்தல் தங்கம் கொண்டுவரப்படுவதாக மதிப்பிடப்பட்டிருந்தது. ஜப்பானிய அதிகரிகள் இவர்களைக் காட்டிலும் அதிகமான சுறுசுறுப்புடையவர் களாக இருக்கவேண்டும்; மிகவும் வெற்றிகரமான 1967–ம் வருடத்தில் நாட்டுக்குள் கடத்தப்பட்ட 30–40 டன்களில் 3 டன்களுக்கும் அதிகமான அளவைக் கைப்பற்றினார்கள். அதிகாரிகள் கைப்பற்றிய தங்கத்தில் பெரும்பகுதி போலியான அடிப்பகுதிகளைக் கொண்ட எண்ணெய்ப் பீப்பாய்களில் மறைத்து வைக்கப்பட்டிருந்தது. இவை கனடாவிலிருந்து ஜப்பானுக்கு அனுப்பப்பட்டவை.

தங்கக் கடத்திலின் வரலாற்றிலும் இன்றைய நடைமுறையிலும் ஏராளமான தந்திரங்கள் பின்பற்றப் படுகின்றன. இவற்றில் நெடுங்காலமாகப் பின்பற்றப்படும் வாடிக்கையான முறைகளும் உள்ளன. விமானப் பயணங்களில் கடத்தல்காரர்கள் தங்களுடைய வழக்க மான உடைகளின் கீழ் விசேஷமாகப் பைகள் வைத்துத் தைக்கப்பட்ட உடைகளை அணிந்திருப்பார்கள். இந்தப் பைகளின் 40 கிலோ தங்கம் வரை வைத்துக் கொள்ள முடியும். திடகாத்திரமான இளைஞர்கள்தான் இப்படித் தங்கம் கடத்த முடியும் என்பது தெளிவு. சமீப வருடங்களில் விமானப் பயணிகளை விசேஷமான பரிசோதனை களுக்கு உட்படுத்துவதன் மூலம் இதை நிறுத்திவிட்டார்கள். பாரசிக வளை குடாவிலிருக்கும் துறை முகங்களிலிருந்து மோட்டார் படகுகளின் மூலம் இந்தியாவுக்குத் தங்கம் கடத்தப் படுகிறது. சிங்கப்பூரிலிருந்து நாட்டுப் படகுகளின் மூலம்

இந்தோனேசியாவுக்குத் தங்கம் கடத்தப்படுகிறது. சில அசாதாரணமான, விசித்திரமான முறைகளும் பின்பற்றப்படுகின்றன. பக்கத்திலிருக்கும் நாடுகளிலிருந்து கால்நடைகளின் வயிற்றின் மூலம் துருக்கிக்குள் தங்கம் கொண்டு வரப்படுகின்றன. மத்திய கிழக்கிலுள்ள ஒரு நாடு இந்தியாவிலுள்ள தன்னுடைய தூதரகத்துக்கு மர நாற்காலிகள் என்ற பெயரில் அநேகமாக முழுவதும் தங்கத்தால் செய்யப்பட்ட பொருள்களை அனுப்பியது. மூலதனத்தை முதலீடு செய்வதில் தங்கக் கடத்தலும் ஒரு துறையாகும். இதில் ஆபத்துகள் அதிகம். ஆனால் லாபமும் மிகவும் அதிகமாகக் கிடைக்கிறது. எனவே சட்டங்களினாலோ போலீஸ் நடவடிக்கைகளின் மூலமாகவோ தங்கக் கடத்தலைத் தடுக்க முடியவில்லை.

# மறைத்து வைக்கப்படடிருக்கும் தங்கம்: பதுக்கல்

**18** –ம் நூற்றாண்டைச் சேர்ந்த பிரெஞ்சுத் தத்துவ ஞானியானமொன்டெஸ்க்யூ எழுதிய சட்டங்களின் ஆத்மா குறித்து என்னும் புத்தகத்தில் அடிமை முறையை ஆதரிப்பவர்களுக்குப் பதிலளிக்கும் சிறு பிரசுரத்தையும் சேர்த்திருந்தார். அடிமை முறைக்கு ஆதரவாக அவர்கள் செய்யும் “வாதங்களை” அவர் ஏளனம் செய்தார். அதில் ஒரு பகுதி கீழே தரப்படுகிறது: “நீக்ரோக்களுக்குப் பொது அறிவு கிடையாது. அறிவுமிகக் தேசங்களில் மிகவும் அதிகமாக மதிக்கப்படுகின்ற தங்கத்தினால் செய்யப்பட்ட கழுத்து மாலைக்குப் பதிலாக அவர்கள் கண்ணாடி மாலையை விரும்புவது அதற்கு ஒரு சான்றாகும்.” இதனையடுத்து வந்த நூற்றாண்டுகளில் “அறிவுமிக்க” தேசங்கள் தங்கத்தை மிக அதிகமாக மதிப்பது தொடர்ந்தது. அறிவு வளர்ச்சியின் முன்னேற்றத்தோடு அதிக நாகரிகமில்லாத தேசங்களுக்கும் தங்கத்தின் அதிகாரம் பரவியது. தங்கத்தை பொக்கிஷமாக நினைத்துப் பதுக்கும் பழக்கம் தொன்மைக் காலம் முதல் இருந்து வருகிறது, ஆனால் 20–ம் நூற்றாண்டின் பிற்பாதியில் முதலாளித்துவத்தின் கீழ் அதன் வடிவங்கள், நோக்கங்கள் மற்றும் விளைவுகளைப் பற்றி இங்கே எழுதுவோம்.

முதலாளித்துவ உலகத்தில் பதுக்கி வைக்கப்பட்டிருக்கும் தங்கத்தின் அளவு 26,000 டன்கள் என்று மதிப்பிடப் பட்டிருப்பதை முன்னர் குறிப்பிட்டோம். வருடந்தோறும் சராசரியாக 300 டன்களுக்குக் (ஒரு வேளை 400 டன்களுக்குக்) குறையாத அளவு தங்கம் இதோடு சேர்த்துக்கொள்ளப்படுகிறது. இதில் மிகவும் அதிகமாகத் தங்கத்தைப் பதுக்கிவைக்கும் நாடுகள் பிரான்சும் இந்தியாவுமாகும். இந்தப் பிரச்சினையை இன்னும் நுணுக்கமாக ஆராய்வோம்.

“பதுக்கல்” என்ற சொல் பணத்தை மறைவாக வைத்திருப்பத்தைக் குறிக்கிறது. ஆகவே காகிதப் பணத்தையும் இப்படிப் பதுக்கி வைக்கலாம். ஆனால் பண வீக்கம் தொடர்ச்சியாக அதிகரித்துக்கொண்டிருக்கும் பொழுது மிக மோசமான முட்டாள்கள்கூட இதைச் செய்யமாட்டார்கள். சமீப வருடங்களில் பெரும் பான்மையான நாடுகளில் காகிதப் பணத்தின் மதிப்புக்

குறைவு மிகவும் அதிகமாக இருக்கிறது. ஒருவர் பணத்தாளை ஐந்து அல்லது ஏழு வருடங்களுக்கு உபயோகிக்காமல் வைத்திருந்தால் அது தன்னுடைய வாங்கும் சக்தியில் பாதியை இழந்துவிடுகிறது. ஆகவே இன்று தங்கத்தைப் பதுக்குவதிலுள்ள முக்கியமான நோக்கங்களில் இதுவும் ஒன்றாகும். அதன் விலை காகிதப் பணத்தில் வழக்கமாக அதிகரிக்கிறது என்று அனுபவம் காட்டியுள்ளது.

பதுக்கலில் பல ரகங்கள் இருக்கின்றன. இதில் இந்திய பிரெஞ்சு ரகத்தைச் சேர்ந்த பதுக்கலை மரபு வழிப்பட்ட, "மூலச்சிறப்பான" பதுக்கல் என்று கூறலாம். இதைத் தவிர இன்னும் இரண்டு ரகங்கள் எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. தனிப்பட்ட உடைமையாளர்கள் பண மூல தனத்தை முதலீடு செய்கின்ற வடிவம் என்ற முறையிலும் வர்த்தகச் சூதாட்டச் சாதனம் என்ற வழியிலும் தங்கத்தைத் திரட்டுகிறார்கள். இந்த மூன்று வழிகளுக்கும் இடையில் தெளிவான பிரிவினை கிடையாது. ஆனால் அதே சமயத்தில் வேறுபாடுகளும் கணிசமானவையே.

மரபுவழிப்பட்ட பதுக்கல்காரர் மதிப்பைச் சேமித்து வைப்பதற்காகத் தங்கத்தை வாங்குகிறார். அதை விற்பனை செய்வது அவருடைய நோக்கமல்ல. அதன் மூலம் அவருக்கு லாபம் கிடைத்தாலும்கூட மிகமிக அவசியமாக இருந்தாலொழிய அவர் அதை விற்பதில்லை என்பது பொது முறையாகும். முதலீட்டுக்காரரும் வர்த்தகச் சூதாட்டக்காரரும் மதிப்பு அதிகரிக்கும் என்ற நோக்கத்தில் தங்கத்தை வாங்குகிறார்கள். அரசாங்கப் பத்திரங்கள், நிலம், தானியம் அல்லது செம்பு முதலிய பண்டங்களைப் போன்ற மற்ற வகையான முதலீடுகளிலிருந்து அடிப்படையில் சிறிதும் வேறுபடாத மூலதன முதலீடாகவே அது அவர்களுக்கு இருக்கிறது. முதலீட்டாளர் ஒப்பீட்டளவில் நீண்ட காலத்துக்கு மூலதனத்தை முதலீடு செய்கிறார். தங்கத்தின் விலை அதிகரிக்கும் பொழுது அதை விற்பனை செய்துவிட வேண்டும் என்ற நோக்கத்தோடு வர்த்தக சூதாட்டத்க்காரர் குறைவான காலத்துக்கே முதலீடு செய்கிறார். அவர்கள் இருவருக்கும் இடையிலுள்ள வேறுபாடு இது ஒன்று மட்டுமே.

ஆனால் இது அடிப்படையான வேறுபாடு அல்ல. புள்ளிவிவரங்கள் [அப்படி எதுவும் இருக்குமானால்] இந்த இரண்டு வடிவங்களையும் வழக்கமாக ஒன்றுசேர்த்து விடுகின்றன. தீவிரமான முறையில் தங்கத்தின் பண முதலீடு செய்வதும் தங்கத்தில் வர்த்தக சூதாட்டமும் 1968 வரையிலும் வளர்ச்சி அடையவில்லை. அப்பொழுதுதான் சுதந்திரச் சந்தை விலைகள் அதிகமான அளவுக்கு ஏறி இறங்கத் தொடங்கின. வெகு சீக்கிரத்தில் விலைகள்

மிகவும் அதிகமான ஏறிவிட்டன. இதற்கு முன்பு தங்கத்தின் அதிகாரபூர்வமான விலை (டாலர்களில்) பல பத்தாண்டுகளாக மாற்றமில்லாது இருந்ததும் சுதந்திரச் சந்தை விலை அதிலிருந்து சிறிதும் வேறுபடவில்லை என்பதும் நாம் அறிந்ததே.

தங்க முதலீட்டுக்காரரும் சூதாட்டக்காரரும் மரபு வழிப்பட்ட பதுக்கல்காரரிடமிருந்து வேறுபட்டிருக்கும் சமூக ரகங்களாகம். அவர்கள் பெரும்பாலான இனங்களில் பெரிய முதலாளிகளாக இருப்பார்கள் பங்குச் சந்தை, அசையாச் சொத்துக்கள் விற்பனைச் சந்தை மற்றும் வங்கிக் கடன்கள் ஆகியவற்றோடு நெஞ்கிய தொடர்புடையவர்களாக இருப்பார்கள். அவர்கள் தனிநபர்களாகக் கூட இல்லாதிருக்கிலாம். நிறுவனங்களையும் வங்கிகளையும் போல சட்ட ரீதியான உரிமை கொண்டவர்களாக இருக்கலாம்.

நவீன அமெரிக்க எழுத்தாளரான ஏ.ஹெளிணிலி எழுதியிருக்கும் பணம் மாற்றுபவர்கள் என்ற நாவலின் கதை எழுபதுக்களின் மத்தியில் அமெரிக்க வங்கிகள் மற்றும் பன்னாட்டுத் தொழில் நிறுவனங்களின் உலகத்கதில் நடைபெறுகிறது. அதில் ஒரு கதாபாத்திரம் எல்.டர்ஸி. அவர் குறைந்தத எண்ணிக்கையுள்ள செல்வந்தர்களுக்காகப் பங்குச் சந்தை, நிதி விவகாரங் களைப் பற்றிய தகவல்களைக் கொண்ட சிறு இதழை நடத்திவருகிறார். அவர் பழமைவாதி, பண உலோகம் என்ற நிலையிலிருந்து தங்கத்தை அகற்றிவிட வேண்டும் என்று சொல்லும் புது மாதிரியான தத்துவங்களை எதிர்ப்பவர். தன்னுடைய வாடிக்கையாளர்கள் தங்களுடைய மூலதனத்தில் 40 சதவீதம் வரை தங்கம் வாங்குவதிலும் தங்க உற்பத்திக் கம்பெனிகளின் பங்குகளை (தங்கத்தின் விலை அதிகரிக்கும்பொழுது அவற்றின் விலையும் அதிகரிபப்து வழக்கம்) வாங்குவதிலும் முதலீடு செய்யலாமென்று அவர் ஆலோசனை கூறுகிறார்.“ஏதாவது ஒரு ஆபத்தான சமயத்துக்குப் பாதுகாப்பாக, சிறிதளவு சேமிப்பையாவது தங்கமாக வைத்திருக்க விரும்பும் பன்னாட்டுத் தொழில் நிறுவனங்கள் அதிகமான இருக்கின்றன” என்று கிரீன் எழுதுகிறார். இன்று தங்கத்தைப் பதுக்கு பவர்களில் லத்தீன் அமெரிக்காவின் சிறிய நாடுகளின் சர்வாதி காரிகளையும் சமீப காலத்தில் பெரும் பணக்காரர் களாகியுள்ள எண்ணெய் ஷேக்குகளையும்”, மதத் தலைவர்களையும் பங்குச் சந்தை முதலைகளையும், திரைப்பட நடிகர்களையும் திட்டமிட்டுக் கொலை, கொள்ளை முதலியனவற்றை நடத்தும் தலைவர்களையும் காணலாம். கிரேக்க நாட்டுக் கப்பல் முதலாளியும் கோடீசுவரருமான ஓனாசிசிடம் “சிறிதளவு பணம்” மீந்த

பொழுது அவர் ஒரு மில்லியன் அவுன்ஸ் (31 டன்கள்) தங்கத்தை வாங்கினார். பிறகு "சுமாரான லாபத்துக்கு" இதை விற்றுவிட்டார்.

பணக்காரர்களும் நிறுவனங்களும் தங்கத்தை வாங்குவதற்கும் வைத்திருப்பதற்கும் விற்பனை செய்வ தற்கும் பல வழிகளை சமீப வருடங்களில் வங்கி களும் வர்த்தகங்களும் சந்தைகளும் ஏற்படுத்தி யிருக்கின்றன. தங்கத்கதை வைத்திருப்பது, அதிலும் அதிகமான அளவில் வைத்திருப்பது ஆபத்தானது, சிரமம் நிறைந்தது. ஆனால் இன்று இதற்கு அவசியமில்லை. மேற்கு ஐரோப்பாவிலும் வட அமெரிக் காவிலும் உலகத்தின் மற்ற பகுதிகளிலுமுள்ள பெரிய வங்கிகள் வாடிக்கையாளர்களுக்குச் சொந்த மான தங்கத்தைத் தம்முடைய கிட்டங்கிகளில் பாதுகாப்பாக வைத்திருக்கின்றன. அவற்றைக் கொண்டு உலக ரீதியான நடவடிக்கைகளைச் செய்கின்றன. தங்களிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கும் தங்கத்துக்கு ரசீது கொடுக்கிறார்கள்; அதன் விற்பனை என்பது அதை வங்கியிலிருந்து எடுத்துக் கொள்வதற்கான உரிமையை அங்கீகரிப்பதே. ஸூரிச், லண்டன் அல்லது நியூயார்க் வங்கியின் பாதாள அறையிலிருந்து வெளியே கொண்டுபோகப்படாமலேயே அந்தத் தங்கம் பல கைகளுக்கு மாறலாம். தகவல் தொடர்பு மற்றும் வங்கித் தொழில் முறைகளில் மிகவும் வளர்ச்சியடைந்த தொழில்நுட்பவியலைப் பயன்படுத்தி தங்கம் வாங்குவது அல்லது விற்பனை செய்கின்ற நடவடிக்கைகள் அந்தத் கணத்திலேயே முடிக்கப்படுகின்றன. பெரும் வர்த்தகச் சூதாட்டக்காரர்கள் வெவ்வேறு வர்த்தகக் கேந்திரங்களில் தங்கத்தை வாங்கி விற்பனை செய்கிறார்கள். அதன் விலையிலிருக்கும் சிறு வித்தியாசத்தையும் பயன்படுத்தி லாபமடைய முயற்சி செய்கிறார்கள். மேறகு ஐரோப்பாவிலும் அமெரிக்கா மற்றும் கனடாவிலும் சிங்கப்பூர் மற்றும் ஹாங்காங்கிலும் உள்ள வெவ்வேறு கேந்திரங்களின் தங்கச் சந்தைகள் காலப் பிரதேச வேறுபாடுகளின் காரணமாகப் பகலிலும் இரவிலும் வெவ்வேறு நேரங்களில் இயங்குகின்றன. வர்த்தக சூதாட்டக்காரர்கள் இதைப் பயன்படுத்தி இருபத்து நான்கு மணி நேரமும் தங்கள் தொழிலை நடத்துகிறார்கள்.

அந்நிய நாணயச் சந்தைகளைப் போலவே தங்கச் சந்தைகளிலும் சில சந்தைகளில் தொடர்ச்சியாக வாங்குவதும் வேறுசில சந்தைகளில் தொடர்ச்சியாக வாங்குவதும் வேறு சில சந்தைகளில் தொடர்ச்சியாக விற்பனையும் நடைபெறுகின்றன. அதன் பலனாக,க கட்டுப்பாடுகளும் வரிகளும் இல்லாத இடங்களில் சுதந்திரச் சந்தை விலைகள் பரவடைந்து

அநேக மாக ஒரு ஒற்றை உலக விலையாக உருப்பெறு கின்றன. தங்கம் டாலர்களுக்கு அல்லாமல் வேறு ஒரு நாணயத்துக்கு விற்பனை செய்யப்படுமானால், டாலருக்கும் அந்த நாணயத்துக்கும் உள்ள பரிவர்த்தனை விகிதம் விலையின் உருவாக்கத்தில் பங்கு வகிக்கிறது. கடன் வாங்கிய பணத்தைக்கொண்டு தங்கம் வாங்கப் படுமானால் கடனுக்குக் கொடுக்கப்பட வேண்டிய வட்டி விகிதம் முக்கியமான தாகும். இத்தகைய வியாபாரங் களில் சிக்கலான கணக்குகளை வேகமாகப் போட வேண்டும். இவை இன்று பெரும்பாலும் மின கணக்குப் பொறிகளால் செய்யப்படுகின்றன.

தங்கம் வங்கியில் வைக்கப்பட்டிருந்தால் அதன் உடைமையாளருக்கு சொத்துரிமைச் சான்றிதழ, தங்கச் சான்றிதழ் கொடுக்கப் படுகிறது. ஒரு வாடிக்கையாளர் வங்கியிலிருந்து தங்கத்தை வாங்கியிருக்கிறார், ஆனால் அந்தத் தங்கத்தை வங்கியிலிலே விட்டு வைத்திருக்கிறார் என்றால் அம்மாதிரியான சந்தர்ப்பத்திலும் இந்தச் சான்றிதழ் கொடுக்கப்படுகிறது. சமீப வருடங்களில் இப்படிப்பட்ட தங்க உடைமை வடிவம் அதிக வளர்ச்சி யடைந்த முதலாளித்துவ நாடுகளில் அதிகமாகப் பின்பற்றப்படுகிறது. ஒதுக்கப்பட்ட தங்கம். ஒதுக்கப்படாத தங்கம் என்று இரண்டு வகையான சான்றிதழ்கள் இருக்கின்றன. முதல் வகை வாடிக்கையாளர் தம்முடைய பெட்டகத்தில் தங்கத்தை வைத்திருப்பதைப் போன்றது. வங்கியின் தங்க இருப்பிலிருந்து அவருக்குச் சில பாளங்கள் ஒதுக்கப்படுகின்றன. அவர் வங்கிக்கு வந்து தம்முடைய தங்கத்தைப் பார்த்து மகிழ்ச்சியடைய முடியும். இரண்டாவது வகையில் வங்கியில் பணம் போட்டியிருப்பவருக்கு இருக்கும் அதே உரிமை வங்கிக்குச் சொந்தமான தங்கத்தின் மீது வாடிக்கையாளருக்கு இருக்கிறது. அதாவது அளவுரீதியில் மட்டுமே வரையறுக்கப்பட்ட தங்கத்துக்கு அவருக்கு உரிமையுண்டு. வங்கியில் இட்டு வைக்கப்பட்டிருக்கும் பண மூலதனத்தைச் செலாவணி செய்வதைப் போல அதே முறையில் தன்னிடம் இட்டு வைக்கப்பட்டிருக்கும் தங்கத்தையும் வங்கி செலாவணியில் ஈடுபடுத்துகிறது. குறிப்பிட்ட எண்ணிக்கையிலுள்ள வாடிக்கையாளர்கள் தங்கத்தை கேட்டும் பொழுது கொடுப்பதற்கு ஒரு குறிப்பிட்ட அளவு தங்கத்தை வங்கியின் கையிருப்பில் வைத்துக் கொண்டிருந்தால் அதுவே போதுமானதாகும். தங்கச் சான்றிதழை வைத்திருப்பவர் அதை இன்னொரு வருக்கு விற்பனை செய்யலாம். அப்பொழுது அதை வாங்கியவருக்கு வங்கியின் மீது கோரிக்கை உரிமை ஏற்படுகிறது. ஆகவே ஒரு குறிப்பிட்ட அளவு தங்கத்தை எப்பொழுதும்பிரதிநிதித்துவப்படுத்துகின்ற ஒரு கடன் பத்திரம் தோன்றி

வளர்ச்சியடைகிறது. பணவீக்கம் மற்றும் காகிதப் பணத்தின் மதிப்புக்குறைவின் நிலைமைகளில் தங்கத்துக்ப் பரிவர்த்தனை செய்யப்படக்கூடிய, நெடுங் காலமாக மறக்கப்பட்ட மூலச் சிறப்புடைய வங்கிப் பத்திரம் இத்தகைய பிரத்யோகமான வடிவத்தில் புத்துயிர் பெறுகிறது என்று கூறலாம்.

இந்த உதாரணத்தில், வங்கியில் உண்மையாகவே இட்டு வைக்கப்பட்டிருக்கும் தங்கம் அதைப் போல பல மடங்கில் தங்கச் சான்றிதழ்கள் செலாவணியாவதற்கு அடிப்படையாகிறத. ஏனென்றால் தன்னிடமிருக்கும் தங்க இருப்பைக் காட்டிலும் பல மடங்கு அதிகமான சான்றிதழ்களை வங்கி கொடுக்க முடியும். இத்தகைய நடவடிக்கைகள் 1975-க்குப் பிறகு கூர்மையாக அதிரிகத்தன. அவை மேலும் அதிகரிப்பது சாத்தியமே. இன்றுள்ள முதலீட்டு ஆலோசகர்கள் (இவர்கள் மெய்யானவர்கள்-ஹெய்லியின் நாவலில் வருகின்ற டர்ஸியைப் போல கற்பனைப் பாத்திரங்களல்ல) பண மூலதனத்தில் ஒரு குறிப்பிட்ட சதவீதத்தைத் தங்கம் அல்லது தங்கச் சான்றிதழ்களாக வைத்திருபது மிக அவசியமானதென்று ஆலோசனை கூறுகிறார்கள். பண வீக்கம் அதிகரித்து வருவதானல் டாலரின் நிலை சீர்கேடடைந்து வருவதனாலும் இந்த சதவீகிதம் அதிகரித்துக் கொண்டிருக்கிறது.

பெரும் முதலீட்டாளர்கள் மற்றும் வர்த்தக சூதாட்டக் காரர்களிடமுள்ள தங்கம் கலப்பற்ற சூதாட்டத்தன்மை யைக்கொண்ட முற்கூட்டிய விற்பனை நடவடிக்கைகளின் வளர்ச்சிக்கு அடிப்படையாகப் பயன்படுத்துகிறது. நிர்ணயிக்கப்பட்ட விலைக்கு எதிர்காலத்தில் (இது சில நாட்களிலிருந்து சில மாதங்கள் வரை போவதுண்டு) ஒரு குறிப்பிட்ட தினத்தன்று கொடுப்பதென்ற அடிப் படையில் நடைபெறும் தங்க விற்பனையே முற்கூட்டிய விற்பனையின் சாராம்சமாகும். அன்றுள்ள விலைக்குக் கூடுதலாக அல்லது குறைவாக இந்த விலை நிர்ண யிக்கப்படுகிறது.

உதாரணமாக, வர்த்தக சூதாட்டக்காரர் மூன்று மாதங் களுக்குப் பிறகு பத்து டாலர் அதிக விலைக்குத் தருவதற்காக ஒரு அவுன்ஸ் 300 டாலர்கள் என்ற விலைக்குத் தங்தக்தை வாங்குகிறார். மூன்று மாதங்களில் விலை 315 டாலர்களாக இருக்கு மானால் அவருக்கு அவுன்சுக்கு ஐந்து டாலர்கள் லாபம் கிடைக்கிறது. ஏனென்றால் தன்னிடம் 310 டாலர் களுக்குக் கொடுக்கப்படும் பண்டத்தை அவர் 315 டாலர்களாக இருக்குமானால் அவர் அவுன்சுக்கு ஐந்து டாலர்கள் இழக்கிறார். ஒத்துக்கொள்ளப்பட்ட நேரத்தில் உண்மையிலேயே தங்கத்தை ஒப்படைப்பது வழக்கமாக

நடைபெறுவதில்லை. இழந்தவர் வெற்றிபெற்றவரிடம் தங்க விலையின் வித்தியாசத்துக் கேற்ப பணத்தைக் கொடுக்கிறார். இதுதான் நடக்கிறது. சந்தையில் விளையாடுவதென்று இதற்குப் பெயர் கொடுக்கப் பட்டிருக்கிறது.

தங்கச் சந்தையில் சமீப வருடங்களில் ஏற்பட்டிருக்கும் முக்கியமான கூறுகளில் முற்கூட்டிய விற்பனையில் ஏற்பட்டிருக்கும் பிரம்மாண்டமான வளர்ச்சியும் ஒன்றாகும். இந்த வர்த்தகத்தின் முக்கியமான கேந்திரங்கள் அமெரிக்காவில் இருக்கின்றன. நியூயார்க் கிலும் சிக்காகோவிலும் உள்ள பண்டச் சந்தைகளின் தங்கப் பிரிவுகளில் மற்ற நாடுகளில் நடைபெறும் வியாபாரத்தைக் காட்டிலும் மிகவும் அதிகமான அளவில் வியாபாரம் நடைபெறுகிறது. தங்கத்தைத் தனி உடைமையாக வைத்திருப்பதைத் தடை செய்த 1930-களைச் சேர்ந்த சட்டம் 1975-ல் ரத்துச் செய்யப்படும்வரை அமெரிக்காவில் இந்த நடவடிக்கை கள் தொடங்கவில்லை. பிறகு சில வருடங்களிலேயே வர்த்தகம் இந்த மாபெரும் அளவுக்கு வளர்ச்சியடைந்தது. 1978-80ம் வருடங்களில் இதன் அளவு மிகவும் அதிகமாக விரிவடைந்தது. தங்கத்தில் முற்கூட்டியே விற்பனை நடைபெறும் சந்தைகள் வின்னிபெக், லண்டன், ஸுரிச், சிங்கப்பூர், ஹாங்காங் ஆகிய இடங்களில் இருக் கின்றன. ஆனால் அமெரிக்காவின் தங்கச் சந்தை களோடு ஒப்பிடும்பொழுது இவை இரண்டாந்தர முக்கியத் துவத்தையே கொண்டிருக்கின்றன.

தங்கத்தின் முற்கூட்டிய விற்பனை பங்குச் சந்தைகளில் பங்குகளின் முற்கூட்டிய விற்பனை மற்றும் இதர சில பண்டங்களின் அதேபோன்ற விற்பனையைப் போலவே பிரதானமாக வர்த்தக சூதாட்டத்தின் ஒரு துறையே. சமீப வருடங்களில் தங்கத்தின் விலையில் ஏற்பட்ட தீவிரமான ஏற்ற இறக்கங்கள் (எழுபதுக்களுக்கு முன்பு இப்படி அநேகமாக நடைபெறவேயில்லை) வர்த்தக சூதாட்டக்காரர்கள் விரும்புகின்ற பொருளாகத் தங்கத்தை மாற்றிவிட்டன. 1979-80ம் வருடக் குளிர்காலத்தில் ஏற்பட்ட தங்க வேட்டையின் உச்ச கட்டத்தில் தங்கத்தின் விலை நாள்தோறும் 50-60 டாலர்கள் ஏறி இறங்கிக்கொண்டிருந்தது.

தங்க பேரங்கள் நடைபெறுகின்ற பண்ட பரிவர்த்தனை நிலையங்கள் எனப்படுபவை உண்மை யில் கூட்டுப் பங்குக் கம்பெனிகள்தான். பங்குதாரர் களால் தேர்ந்தெடுக்கப்படுகின்ற நிர்வாகக் குழு இக்கம்பெனிகளை நடத்துகின்றது. பரிவர்த்தனை நிலையங்களில் நடைபெறும் பேரங்கள் அவற்றின் உறுப்பினர்களால் (பெரும்பாலும் பெரிய வர்த்தக

நிறுவனங்களால்] மட்டும் செய்யப்படுகின்றன. அவர்கள் தங்களுக்காகவோ அல்லது தங்களுடைய வாடிக்கைக் காரர்களுக்காகவோ பேரங்களைச் செய்கிறார்கள். முற்கூட்டிய தங்க விற்பனை ஆதார அளவைக் கொண்ட ஒப்பந்த அலகின் பெருக்கங்களில் நடைபெறுகிறது. சிக்காகோவிலுள்ள சர்வதேசப் பணவியல் சந்தையில் [பண்டச் சந்தையின் ஒரு பிரிவு] விற்பனையின் ஆதார அலகு 100 தூய்மையான டிராய் அவுன்சுகளாகும். உதாணரமாக, ஒவ்வொன்றும் 100 அவுன்சுகளைக் கொண்ட 20 ஒப்பந்தங்களை மூன்று மாதகாலத்தில் கொடுப்பதாக விற்பனை நடைபெறலாம். சந்தைகளின் மற்ற விதிகளும் இந்த நடவடிக்கைகள் சம்பந்தப்பட்ட மற்ற நிபந்தனைகளை ஒழுங்குப்படுத்துகின்றன.

முற்கூட்டிய விற்பனைச் சந்தைகளில் மிகப் பெரும் அளவில் வர்த்தகம் நடைபெறுகிறது. 1978ல் நியூயார்க் சந்தையில் மொத்தம் 20,600 டன்களுக்கு முற்கூட்டிய விற்பனை நடைபெற்றது. இது முதலாளித்துவ நாடுளின் மொத்த தங்க உற்பத்தியைப் போல இருபது மடங்கு அதிகமாகும். விலைகள் ஏறியிருப்பதையும் அவை வேகமாக அதிகரித்துக்கொண்டிருப்பதாக மதிப்பிட வேண்டும். 1978–ல் மதிப்பைக் கொண்டிருப்பதாக நினைக்கும் பொழுது இவை பல்லாயிரக்கணக்கான மில்லியன் டாலர்கள் பண மதிப்பைக் கொண்டிருப்பதாக மதிப்பிட வேண்டும். 1978ல் நிலைமை ஒப்பீட்டளவில் நிதானமாக இருந்தபொழுதுஇத்தகைய விற்பனைகளில் 2 சதவீதத்துக்கு மட்டுமே விற்பனையாளர் வாங்கு பவரிடம் உண்மையாகவே தங்கத்தைக் கொடுக்க வேண்டியிருந்தது. மற்ற 98 சதவீதத்திலும் விலை வித்தியாசத்தின்படி பணத்தைக் கொடுத்து முடிக்கப் பட்டன. இப்படி ஒரு வருடத்தில் இத்தகைய விற்பனை களினால் 400 டன்கள் கைமாறின. இந்த மாற்றமும்கூட தங்கத்கதை ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்துக்குக் கொண்டு போகாமலேயே செய்வதுதான் வழக்கம். தங்கச் சந்தைகளின் விசேஷமாக கிட்டங்கிகளில் வர்த்தகர்களின் தங்க இருப்புக்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. அங்கேயுள்ள தங்கப் பாளங்களின் மீது உடைமையாளர்களின் பெயர்களைத் தாங்கிய வில்லைகள் உண்டு. இவை மாற்றப்படுகின்றன. அவ்வளவுதான், இந்த இருப்புக்களின் மொத்த அளவு கணிசமானதாகும். 1978 இறுதியில் நியூயார்க் மற்றும் சிக்காகோ தங்கச் சந்தைகளில் அது 90 டன்களாக இருந்தது. அதற்குப் பிறகு அதிகரித்திருக்க வேண்டும்.

முற்கூட்டிய தங்க விற்பனைச் சந்தை 1979-1980ம் வருடக் குளிர்காலத்தின் போது ஏற்பட்ட தங்க நெருக்கடி யில் முக்கியமான பாத்திரத்தை வகித்தது. அந்த நெருக்கடி பின்வரும் விதத்தில் ஏற்பட்டது. 1979ல் பல மாதங்களாகவே தங்கத்தின் விலை அதிகரித்துக் கொண்டிருந்தது. இலையுதிர்காலத்தின்போது தங்க விலை இறங்கிவிடும் என்று பெரிய வர்த்தக சூதாட்டக் காரர்கள் எதிர்பார்த்தார்கள். ஆகவே டிசம்பர் அல்லது ஜனவரி மாதத்தில் குறைவான, அதாவது நடப்பு சந்தை விலைகளைக் காட்டிலும் குறைந்தவிலைக்குத் தங்கம் தருவதாக ஒப்பந்தம் செய்துகொண்டார்கள். அமெரிக்கக் கருவூலத் துறை தன்னுடைய வழக்கமான 144 மஞ்சள் பிசாசு ஏல வியாபாரங்களில் அதிகமான தங்கத்தை விற்பனை செய்யுமென்றும் அதன் மூலம் தங்க விலைகள் தீவிரமாகக் குறைந்துவிடுமென்றும் எதிர்பார்த்தார்கள். அன்று ஒரு அவுன்ஸ் தங்கம் சுமார் 400 டாலர்கள் என்ற மிகவும் அதிகமான விலைக்கு விற்பனையாகிக் கொண்டிருந்தது. இப்படி நடைபெற்றிருக்குமானால் ஒப்பந்தத விலைக்கும் ஒப்பந்தம் நிறைவேறும் நேரத்தில் நிலவிய உண்மையான சந்தை விலைக்கும் உள்ள வித்தியாசத்தை வாங்குபவர்கள் சூதாட்டக்காரர்களுக்குக் கொடுக்கின்ற அவசியம் ஏற்பட்டிருக்கும். ஆனால் அமெரிக்கக் கருவூலத் துறை ஏல வியாபாரங்களை ரத்து செய்தது. Econmist பத்திரிகை ‘‘சூதாட்டக்காரர்களின் கால்சராய் கீழே விழுந்துவிட அவர்கள் நிர்வாணமாக நின்று கொண்டிருந்தனர்’’ என்று எழுதிய பொழுது தங்கத்தின் விலை குறையவில்லை. அது மேலும் அதிகரித்தது.

எங்கும் நடைபெற்ற தங்க வேட்டையில் தங்கம் வாங்கியவர்கள் பலரும் ஒப்பந்தத் தேதியில் உண்மை யாகவே தங்கத்தை ஒப்படைக்க வேண்டு மென்று கோரினார்கள். 1979 டிசம்பரில் நியூயார்க் தங்கச் சந்தையில் 9,000 ஒப்பந்தங்களுக்கு உண்மையாகவே தங்கம் கொடுக்கப்பட்டது. நவம்பர் மாதத்தோடு ஒப்பிடும்போது இது மும்மடங்காக அதிகரித்துவிட்டது. சிக்காகோ சந்தையில் ஒப்பந்தங் களில் 7 சதவீதத்துக்குத் தங்கம் கொடுக்கவேண்டியிருந்த இது 1-2 சதவீதமாக இருப்பதே வழக்கம். எந்தச் சந்தையிலிருந்தாவது தங்கத்தை வாங்கிக் கொடுத்து ஒப்பந்தங்களை கௌரவிக்க வேண்டிய அவசியம் வர்த்தக சூதாட்டங்காரர்களுக்கு ஏற்பட்டது. தங்க வேட்டை என்ற நெருப்பில் எண்ணெய் ஊற்றியது போல இது இருந்தபடியால் தங்க விலைகள் மேலும் உயர்ந்தன.

மரபு வழிப்பட்ட பதுக்கல்காரர் எனப்படுபவர் இதைக் காட்டிலும் எளிமையானவராக இருப்பது வழக்கம். அவருக்கு சந்தையைப் பற்றி

அநேகமாகத் தெரியாது. அவர் நிதி விவகாரச் செய்திகளைப் படிப்பதில்லை. முற்கூட்டியே விற்பனையில் அவர் ஈடுபடுவதில்லை. நகரங்களைச் சேர்ந்த குட்டி முதலாளித்துவ மற்றும் நடுத்தர முதலாளித்துவ வர்க்கத்தனர், பணக்கார விவசாயிகள், அறிவுத் துறை ஊழியர்களின் சில பகுதியினர் மற்றும் மேல் தட்டுத் தொழிலாளி வர்கத்தினர்–தங்களுடைய சேமிப்பில் ஒரு பகுதியைத் தங்கமாக வைத்துக் கொள்வது இவர்களுயைய வழக்கம். இவர்களுடைய எண்ணிக்கை ஏராளமாக இருந்தபோதிலும் இவர்களில் மிகவும அதிகப் பெரும்பான்மையினர் சில அவுன்ஸ் தங்கத்தைச் சிறு கட்டிகளாக, நாணங்களாக அல்லது பொருள்களாக வைத்திருக்கிறார்கள். இவற்றைப் பெட்டிகளில், தலையணைகளின் கீழ் அல்லது வேறு எங்காவது ஒளித்து வைத்திருகிறார்கள்.

இந்தியாவில் பதுக்கி வைக்கப்பட்டிருக்கும் தங்கத்தில் 90 சதவீதம் மக்கள் தொகையில் 3 சதவீதத்தினரிடம் இருக்கிறதென்று மதிப்பிடப்படுகிறது. ரெனி செடிய்யோ பின்வரும் அழகான ஆனால் அர்த்தமில்லாத கருத்தைக் கூறியுள்ளார். ‘‘பிரான்சில் தங்கத்தைப் பதுக்குவது யார்? அனுபவம் நிறைந்த முதலாளிகளைக் காட்டிலும் மிகவும் அடக்கமான, அதிகமான கல்வித்தகுதி பெற்றிராத சேமிப்பாளர்களே பதுக்குகிறார்கள். நகரங் களில் வசிப்பவர்களைத் காட்டிலும் விவசாயிகள், நிபுணர்களைக் காட்டிலும் தொழிலாளர்களே. இந்த விஷயத்தைப் பொறுத்தவரை பொது மக்களின் கருத்தை அறியும் பேட்டி முயற்சிகளுக்கு நாம் அதிகமான முக்கியத்துவம் கொடுக்ககூடாது. பிரெஞ்சுக்காரர்கள் எல்லாவற்றையும் ரகசியமாக வைத்துக்கொள்ள விரும்புபவர்கள். எனவே பேட்டி காண்பவரிடம் தங்களுடைய உண்மையான ஆசைகளைச் சொல்ல மாட்டார்கள்.’’

தங்கம் வைத்திருப்பவர்களில் மிக அதிகமான பெரும் பான்மையினர் அதை வெளியே தெரியாமல் மறைத்து வைத்திருக்கவே விரும்புகிறார்கள். இவ்வாறு தங்கம் வைத்திருப்பது பல நாடுகளில் சட்ட விரோத மானதாக அல்லது முற்றிலும் சட்டபூர்வமானதாக இல்லாமல் இருக்கிறது. அதோடு தங்கத்தைத் திருடிவிடுவார்கள் அல்லது பயமுறுத்திப் பணம் பிடுங்குவார்கள் என்ற பயம் இருப்பதும் இயற்கையே. இவற்றைத் தவிர மற்றொரு முக்கியமான காரணமும் உண்டு. வரி விதிப்பிலிருந்து தப்புவதற்குத் தங்கம் மிகச்சிறந்த சாதனமாக இருக்கிறது. ஒரு நபர் பல காரணங்களுக்காகத் தன்னுடைய உண்மையான வருமானத்தைத் தெரிவிக்க விரும்பாதிருக்கலாம். அப்படிப்பட்ட நிலைமைகளில் வருமானத்தை வைத்திருப்பதாகும். இன்று பல நாடுகளில் மரணவரிகள்

விதிக்கப்படுகின்றன. அவற்றி லிருந்து தப்புவதற்கு அசையாத சொத்துக்களை அல்லது சிறந்த ஓவியங்களை வாங்குவதைக் காட்டிலும் தங்கம் நல்ல பாதுகாப்பாக இருக்கிறது.

தங்கத்தைப் பற்றி சிறு பதுக்கல்காரருடைய அணுகு முறையில் பகுத்தறிவுக்குப் புறம்பான, தர்க்கத்துக்கு விரோதமான அம்சங்கள் அதிகமாக இருக்கின்றன. பணத்தையும் தங்கத்தையும் பற்றி அதிகமாக இருக் கின்றன. பணத்தையும் தங்கத்தையும் பற்றி அதிகமாக எழுதிய ஆங்கிலப் பொருளியலாளரான ஜான் மேனார்டு கெய்ன்ஸ் மனிதனுடைய ஆழ்மனத் திலேயே தங்கத்தின் மீது ஆசை இருக்கிறது என்று சிக்மன்ட் பிராளிணிடு கூறியதை மேற்கோள் காட்டுகிறார்.

பணத்தையும் தங்கத்தையும் திரட்ட வேண்டுமென்று மக்களுடையே முயற்சிகளின் பிறப்பிடங்களை மனித னுடைய உடலியல் தன்மையிலிருந்து, அவன் உளவியலிலிருந்து வருவிக்க முடியாதென்பது நம் கருத்து. தங்கம் எல்லாக் காலத்திலுமே பணமாக இருக்கவில்லை. அவ்வாறு இருக்கப்போவதுமில்லை. இந்த சமூக அமைப்பின் சில ஸ்தூலமான வடிவங்களுக்கு மட்டுமே பணம் குறியடையாளமாக இருக்கிறது. பண ஆசை இயற்கையில் சமூகத் தன்மையைக் கொண்டிருக்கிறது. பணம் மூலதனமாக மாற்றமடைந்து எல்லாப் பொருள்களுக்கும்–மனிதனுக்கும் கூட– அளவு கோலாக உபயோகப்படுகின்ற சமூகத்தின் இயற்கையோடு அது நெருக்கமான இணைப்பைக் கொண்டிருக்கிறது. இந்த சமூகத் தன்மைகள் தங்கத்தை வழிபாட்டுக்குரிய பொருளாக்கி விடுகின்றன. எங்கே வழிபாடு வந்துவிடுகிறதோ அங்கே பகுத்தறிவுக்கும் தர்க்கத்துக்கும் அநேகமாக இடமில்லாமற் போய் விடுகிறது. பதுக்கல் சம்பந்தமான பல புதிர்களையும் விசித்திரங்களையும் இதன் மூலமாகவே விளக்கமுடியும்.

அரபு நாடுகளில் இங்கிலாந்தில் வெளியிடப்படும் தங்க நாணயங்கள் சவரன்கள்] மக்களால் பெரிதும் விரும்பப்படுகின்றன. அரசர்களின் தலைகள் பொறிக்கப்பட்ட நாணயங்களைக் காட்டிலும் விக்டோரியா அரசி அல்லதுஇரண்டாம் எலிஸபெத் அரசியின் தலைகள் பொறிக்கப்பட்ட நாணயங்கஷீமீ குறைந்த விலைக்கு விற்பனையாகின்றன. பிரான்சில் ஒரு கிலோ எடையுள்ள தங்கப்பாளங்களை பணம் படைத்த பதுக்கல்காரர்கள் மிகவும் விரும்புகிறார்கள். அவை சோப்புக் கட்டியின் உருவத்தையும் அளவையும் கொண்டிருப்பதால் அவற்றை ‘‘சாவோனெட்டுகள்’’என்று மிகவும் பிரியத்தோடு சொல்கிறார்கள்.

பெரும் பணக்காரராக இல்லாத பதுக்கல்காரர்கள் தங்க நாணங்களை விரும்புகிறார்கள். அவை பழக்கமானவை, சுலபமாக எங்கும் எடுத்துச் செல்லக்கூடியவை, மிகவும் கவர்ச்சியானவை. தங்க நாணங்களில் கள்ள நாணயங்கள் என்ற ஆபத்து அதிகமில்லை. அவசியம் ஏற்படும்பொழுது அவற்றைச் சுலபமாக விற்பனை செய்ய முடியும். இந்த குணாம்சங்களுக்கு சற்று அதிகமான விலை கொடுப்பது இயற்கையே. தங்கப் பாளங்களைக் காட்டிலும் நாணங்களின் விலை அதிகம் (அவை அதிக விலை குறித்து விற்பனை செய்யப்படுகின்றன). தங்க ஆதார அளவுகோல் அமுலாகிய காலத்தில் அச்சிடப்பட்ட பழைய, உண்மையான நாணயங்கள் குறைந்த அளவில்தான் இருக்கின்றன. ஆகவே நாணயங்களுக்குத் தரப்படும் அதிக விலையினால் லாபமடைவதற்காக இன்று பல நாடுகளிலும் புதிய நாணயங்கள் அச்சிடப்படுகின்றன. இவை பழைய காலத்து நாணயங்களைப் போன்ற துல்லியமான மறுபதிப்பாக இருக்கின்றன அல்லது தங்க உள்ளடக்கத்தில் அவற்றை ஒத்தவையாகவும் ஆனால் வேறு சித்திரமும் வெளியிடப்படுகின்ற வருடமும் கொண்டிருப்பதாகவும் இருக்கின்றன. இவை அதிகாரபூர்வமான நாணயங்கள் என்று சொல்லப் படுகின்றன.

சமீப வருடங்களில் தங்கத்தின் தேவையும் அதன் விலையும் தீவிரமாக அதிகரித்திருக்கும் பொழுது, அதிகாரபூர்வமான நாணயங்களை அச்சிடுவதும் அதிகரித்துவிட்டது. மூன்று வருடங்களில் (1974–1976) இதற்கு மட்டும் 700 டன்களுக்கும் அதிகமான தங்கம் உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது. இதற்கு முந்திய வருடங்களைப் போலன்றி, இந்தப் புதிய நாணயங்களில் மிகவும் அதிகமான எண்ணிக்கை பிரான்சிலும் இந்தியா விலும் வாங்கப்படவில்லை. அமெரிக்காவிலும் கிரேட் பிரிட்டனிலும் வாங்கப்பட்டன. அங்கே பதுக்கல் இன்றைய நாகரிக மரபாகிக் கொண்டிருக்கிறது.

தென் ஆப்பிரிக்கக் குடியரசு உலகத்தில் தங்க நாணயங்களை அச்சிடுவதில் முதலிடம் பெறுகிறது. அது சில வருடங்களுக்கு முன்பு உலகச் சந்தையில் குரூகர்ரேனட் என்ற புதிய நாணயத்தை அறிமுகம் செய்தது. போயர் யுத்தத்தின்போது டிரான்ஸ்வாலின் ஜனாதிபதியாக இருந்த குரூகர் என்பவருடைய பெயரோடு தென் ஆப்பிரிக்காவின் இன்றைய பணவியல் அலகாகிய ரேன்ட் என்பதைச் சேர்த்து இந்தச் சொல் உருவாக்கப்பட்டிருக்கிறது (தென் ஆப்பிரிக்கா வின் முக்கியமான தங்க உற்பத்திப் பிரதேசத்தைக் குறிக்கின்ற "விட்வாட்டர்ஸ்ரேன்ட்" என்ற போயர் வார்த்தையின் சுருக்கமே "ரேன்ட்" என்பதாகும்). குரூகர்ரேன்ட் சுத்தமான

தங்கத்தில் ஒரு டிராய் அவுன்சைத் துல்லியமாகக் கொண்டிருக்கிறது. ஆகவே வாங்குவதற்கும் விற்பனை செளிணிவதற்கும் இது மிகவும் வசதியானதாக இருக்கிறது. அதற்கு எடை மட்டுமே இருக்கிறது. பெயர் மதிப்பு இல்லை என்றுகூடச் சொல்லலாம். குரூகர்ரேன்டுகளில் ஒரு அவுன்ஸ் தங்கத்தின் விலை அதன் கட்டி விலையைக் காட்டிலும் சில சதவீதம்தான் அதிகம். ஆனால் ஏராளமான அளவில் வெளியிடப்படுவதால் இதன்மூலம் தென் ஆப்பிரிக்காவுக்கு எளிதில் லாபம் கிடைக்கிறது. 1978–1979ல் அமெரிக்காவின் தங்கச் சந்தையில் குரூகர்ரேன்ட் அநேகமாக முழு ஆதிக்கம் செலுத்தியது. 1978–ல் தென் ஆப்பிரிக்கா விற்பனை செய்த 6.1 மில்லியன் நாணயங்களில் பாதிக்கு மேல் அமெரிக்காவுக்குச் சென்றன. அதாவது குரூகர்ரேன்டு நாணங்களாகவே சுமார் 100 டன் தங்கத்தை அமெரிக்கர்கள் வாங்கினார்கள் என்பது இதன் பொருளாகும். தென் ஆப்பிரிக்கா தன்னுடைய வருடாந்தர உற்பத்தியில் 27 சதவீதத்தை (194 டன்கள்) இந்த வடிவத்தில் விற்பனை செய்தது. டாலர் மதிப்புக் குறைந்ததும் பணம் வைத்திருந்தவர்கள் அதை முதலீடு செளிணிவதற்கு ஒரு நம்பகமான வழியைத் தேடியதும் இவ்விதம் அதிகமான தேவை ஏற்பட்டதற்கு முக்கியமான காரணங்களாகும். அதே சமயத்தில் குரூகர்ரேன்டுகளை விற்பனை செளிணித கம்பெனிகள் நடத்திய விரிவான விளம்பரமும் அதற்கு ஒரு காரணமே.

குரூகர்ரேன்டுள் அதிகமான அளவில் உற்பத்தி செய்யப்பட்டபோதிலும் 1979–1980ன் குளிர்காலத்தில் ஏற்பட்ட “மாபெரும் கிறிஸ்துமஸ் நெருக்கடியின்” போது அவை கிடைக்கவில்லை. வழக்கமான அளவில் நாணயங்கள் விற்பனைக்குக் கிடைக்கும் என்ற உத்தரவாதத்தைக் கொடுத்துவிட்டு தென்ஆப்பிரிக்க நாணயச் சாலை வழக்கம்போல கிறிஸ்துமஸ் மற்றும் புதுவருட விடுமுறைகளுக்கு மூடப்பட்டது. ஆனால் எல்லா மதிப்பீடுகளைக் காட்டிலும் அதிகமான, யாரும் எதிர்பார்த்திராத அளவுக்கு அதிகமான தேவை ஏற்பட்டது. இருப்பிலிருந்த நாணங்கள் தீர்ந்துவிட்டன. இதன் விளைவாக, தங்கக் கட்டி விலையைக் காட்டிலும் குரூகர்ரேன்டுகளின் உபரிவிலை அதிகரித்தது.

தென் ஆப்பிரிக்காவைத் தவிர இன்னும் பல நாடுகள் அதிகாரபூர்வமான தங்க நாணயங்களை வெளியிடு கின்றன. ஆனால் உற்பத்தியின் அளவில் நாணங்களை வெளியிடுகின்றன. ஆனால் உற்பத்தியின் அளவில் அவற்றில் ஒன்றுகூட தென்ஆப்பிரிக்காவுக்குச் சற்றுத் தொலைவாகக் கூட வர முடியாது. 1978ல் மெக்சிகோ இரண்டாவது இடத்தைப் பெற்றிருந்தது;

அது நாணயம் அச்சிடுவதில் சுமார் 23 டன்கள் நாணயங்கள் பிரான்சில் பிரபல மடைந்திருந்திருக்கின்றன, அமெரிக்காவிலும் அவை நன்றாக விற்பனையாகின்றன. பிரிட்டனில் சவரன் நாணயங்கள் கணிசமான அளவில் அச்சிடப்படுகின்றன. மற்ற நாடுகளின் தேசிய நாணயங்களை அச்சிட்டுத் தருவதற்கான ஒப்பந்தபங்களும் அங்கே ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

1979-ம் வருட இலையுதிர்காலத்தின் போது கனடா எல்லா அம்சங்களிலும் குரூகர்ரேன்டுக்குச் சமமான, அதாவது துல்லியமாக ஒரு அவுன்ஸ் சுத்தமான தங்கம் இருக்கின்ற நாணயங்களை அச்சிடத் தொடங்கியது. கனடாவின் தேசியச் சின்னம் அதன் மீது பொறிக்கப் பட்டிருப்பதால் தங்கச் சந்தையில் அதற்கு "மேப்பிள் இலை" என்று பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆஸ்திரேலியாவும் இப்படி ஒரு அவுன்ஸ் சுத்தமான தங்கத்தைக் கொண்ட நாணங்களை வெளியிட்டு விற்பனை செய்யப்போவதாகச் செய்திகள் கூறுகின்றன. தென் ஆப்பிரிக்கா குரூகர்ரேன்டில் கால் பங்கு மதிப்புடைய, அதாவது 7.7 கிராம் சுத்தமான தங்கம் இருக்கும் நாணயத்தையும் வெளியிடடிருக்கிறது. இன்றுள்ள விலைகளின்படி ஒரு அவுன்ஸ் தங்க நாணயத்தை வாங்க முடியாத சிறு பதுக்கல்காரர்களை உத்தேசித்து இந்த நாணயம் வெளியிடப்பட்டிருக்கிறது. ஸ்விட்சர்லாந்துக் கிரெடி சுயிஸ் வங்கி 5 கிராம் மட்டுமே எடையைக் கொண்ட தபால் தலை அளவுள்ள தங்கத் தகடுகளை விற்பனை செய்கிறது. தங்க விற்பனையாளர்கள் இம்முறைகளின் மூலம் "சாதாரணமாகத் தெருவிலே போகும் மனிதனிடம்" போக விரும்புகிறார்கள்; நடுத்தரமான அல்லது அதற்கும் குறைவான வருமானங்களை உடைய நபர்களும் தங்கத்தை வாங்குமாறு செய்ய விரும்புகிறார்கள்.

நாணயங்களை அச்சிடுவதும் விற்பனை செய்வதும் ஒரு லாபகரமான தொழிலாக இருக்கிறது. எனவே தனியார் மூலதனம் அதைப் புறக்கணிக்க முடியாதென்பது இயற்கையே. பல நாடுகளில், குறிப்பாக மத்திய கிழக்கு நாடுகளில் மக்களினால் விரும்பப்படுகின்ற நன்கு பிரபலமான நாணயங்களின் பிரதிகள் அச்சிடப் படுகின்றன. இவை மத்திய காலத்தைச் சேர்ந்த துருக்கியின் நாணயங்களிலிருந்து புதிய சவரன்கள் வரை இப்படி வெளியிடப்படுகின்றன. இவற்றிலுள்ள தங்கம் அதிகாரபூர்வமான அளவோடு பெரும்பாலும் ஒத்திருப்பது வழக்கமாகும். சுத்தமான தங்கம் குறைந்த அளவில் இருக்கும் கள்ள நாணங்களும் தயாரிக்கப்படுகின்றன.

சில முக்கிய விழாக்களின் போது தங்கப்பதக் கங்கள் வெளியிடப்படுகின்றன. சமீபகாலம் வரை இதற்காக மிகக்குறைவான அளவு தங்கம்தான் உபயோகிக்கப்பட்டது. கலைத்துறையில் பிரபலமான அமெரிக்கர்களின் உருவங்களைத் தாங்கிய தங்கப் பதக்கங்களை வெளியிடுவதற்காக் கருவூலத்துறை வருடந்தோறும் ஒரு மில்லியன் அவுன்ஸ் [31 டன்கள்] தங்கத்தை ஐந்துவருட காலத்துக்கு ஒதுக்கீடு செய்ய வேண்டுமென்று அமெரிக்க காங்கிரஸ் 1978ல் முடிவு செய்திருக்கிறது. இந்தப் பதக்கங்களைத் தயாரிக்க 150 டன்களுக்கு அதிகமான தங்கம் உபயோகிக்கப்படும். இவை குருகர்ரேன்டுகளுக்குப் போட்டியாக இருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. ஒலிம்பிக் விளையாட்டுப் போட்டிகள் நடைபெறும் நாடுகள் விசேஷ நாணங்களை வெளியிடுவது மரபுவழிப்பட்ட பழக்கமாகும். நாணயங்களைச் சேகரிப்ப வர்கள் அரும்பாடுபட்டு அவற்றைச் சேகரிக்க முயற்சிப்பதுண்டு. இந்த நாணயங்கள் அடிக்கடி தங்கத்தில் தயாரிக்கப்படுகின்றன. 1976ல் மாண்ட்ரியலில் நடைபெற்ற கோடைகால ஒலிம்பிக் போட்டிகளை ஒட்டி கனடாவில் நாணயச்சாலை 100 மற்றும் 150 கடிய டாலர்கள் மதிப்பைக் கொண்ட ஒரு மில்லியன் நாணயங்களை வெளியிட்டது. இதற்கு 10.5 டன்கள் தங்கம் உபயோகிக்கப்பட்டது. இந்த நாணயங்கள் வெகு சீக்கிரத்திலேயே கட்டித் தங்கத்தின் விலையைக் காட்டிலும் கணிசமான கூடுதல்மதிப்பைப் பெற்றன.

1980-ல் மாஸ்கோவில் நடைபெற்ற ஒலிம்பிக் போட்டிகளை முன்னிட்டு சோவியத் யூனியன் விசேஷ நாணங்களை வெளியிட்டது- செம்பு-நிக்கல், வெள்ளி மற்றும் பிளாட்டினம் நாணயங்களைத் தவிர, 100 ரூபிள்கள் மதிப்புக்கொண்ட விசேஷ மான தங்க நாணயங்களும் வெளியிடப்பட்டன. இவற்றின் மதிப்புக்கேற்ப வாங்கும் சக்தியைக் கொண்ட அதிகாரபூர்வமான நாணயங்கள் இவை. கோட்பாட்ட ளவில் 100 ரூபிள்கள் வழங்கீட்டுக்கு இந்த நாணயத்தைப் பயன்படுத்த முடியும். நாணயங்களைச் சேகரிப்பவர்கள் இந்த நாணயத்தைப் பெறுவதற்கும் தீவிர முயற்சி செய்கிறார்கள்.

# தொழில்துறையும் கலையும்

நமக்குத் கிடைத்துள்ள மிகப்பழமையான தங்கப் பொருள்கள் கி.மு. நான்காவது ஆயிரமாண்டைச் (எகிப்து, மெஸபொடேமியா) சேர்ந்தவை என்று தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் மதிப்பிடுகிறார்கள். சிலவருடங்களுக்கு முன்பு சோவியத் யூனியனில் அஸ்ட்ரகான் பிரதேசத்தில் கி.மு.மூன்றாவது ஆயிர மாண்டைச் சேர்ந்த சில தங்கப் பொருள்கள் கண்டுபிடிக்கப்பட்டன. இவை கிழக்கு ஐரோப்பாவில் கிடைத்திருப்பனவற்றிலேயே அதிகத் தொன்மை யானவையாகும். லெனின்கிராடிலுள்ள ஹெர்மிடேஜ் அரும்பொருட் காட்சியிலுள்ள கிரேக்க-சித்திய கலைப் பொக்கிஷங்கள் உலகப் புகழ்பெற்றவை. உக்ரேனிய சோவியத் சோஷலிஸ்ட் குடியரசின் வரலாற்றுச் செல்வங்களின் அரும் பொருட்காட்சியகம் 1969ல் கீவின் மலைக்குகைகளிலுள்ள முன்னாள் துறவி மடத்தில் திறக்கப்பட்டது. அதில் கிரேக்க சித்திய மற்றும் தொடக்ககால ஸ்லாவோனிக் தங்கப் பொருட் கள் இருக்கின்றன. உக்ரேனியாவில் சமீபத்தில் கண்டு பிடிக்கப்பட்ட மிகச்சிறப்பான பொருள்களும் அங்கே உள்ளன. பண்டைய மற்றும் மத்திய கால ஆபரணங்கள் உலக அரும் பொருட் காட்சியகங்கள் அனைத்திலும் சிறப்பான இடம் வகிக்கின்றன.

நவீன காலத்திலும் மிகவும் திறமை மிக்க கலைஞர் கள் தங்க ஆபரணங்கள் செய்திருக்கிறார்கள். அதே சமயத்தில் ஆபரணத்தொழில் முதலில் கைத்தொழிலாகவும் பிறகு தொழிற்சாலை ரீதியிலும் படிப்படியாக வளர்ச்சியடைந்தது. 19 மற்றும் 20ம் நூற்றாண்டுகளில் ஆபரணத் தொழில் முதலாளித்துவ அடிப்படையில் வளர்ச்சியடைந்து பெருந்திரளான மக்களின் தேவையைப் பூர்த்தி செய்யத் தொடங்கியது.

இருபதாம் நூற்றாண்டுவரை பணவியல் அல்லாத முறையில் தொழில்துறைக்குத் தங்கத்தைப் பயன் படுத்துகின்ற ஒரே துறையாக ஆபரணத் தொழில் இருந்தது. 1860-1913ம் வருடங்களுக்கிடையில் உற்பத்தி செய்யப்பட்ட மொத்த தங்கத்தில் 22 சதவீதம் ஆபரணத் தொழிலில் உபோகிக்கப்பட்டதென்று உத்தேசமாக மதிப்பிடப்பட்டிருக்கிறது.

ஆபரண வடிவத்தில் தங்கத்தை நுகர்வு செய்வது ஓரளவுக்கு சிக்கலான சமூகப் பொருளாதார மற்றும் உளவியல் நிகழ்வாகும். மனிதனுடைய அழகு நுகர்ச்சியின் தேவைகளைத் தங்கம் பூர்த்தி செய்கிறது; ஆனால் நினைவுக்கு முந்திய காலந்தொட்டே தங்கம் சமூக ஏற்றத்தாழ்வுகளின் கண்கூடான வெளிப்பாடாக இருந்து வருகிறது. மேன்மக்கள், பணக்காரர்களிடம் தங்க ஆபரணங்கள் இருக்கின்றன. தாழ்ந்த குலத்தில் பிறந்தவர்கள். ஏழைகளிடம் அவை கிடையாது. மத்திய காலத்தில் சமூகப் பிரிகளுக்கிடையே உள்ள பிரிவினைக் கோடுகள் தெளிவாக வரையறுகுகப்பட்டு மக்களுடைய வாழ்க்கை கண்டிப்பான முறையில் ஒழுங்குபடுத்தப்பட்டிருந்தபோது, ஒரு குறிப்பிட்ட சமூகப் பிரிவைச் சேர்ந்த குடும்பம் எவ்வளவு தங்கத்தை எந்த வடிவத்தில் வைத்திருக்கலாம் என்று விதிகள் வகுக்கப்பட்டிருந்தன. ஒரு நபருடைய உருண்டையான தங்ககடிகாரம், அதன் சங்கிலியின் பருமன், அவருடைய கழுத்துடை ஊசி மற்றும் சட்டைக் கைப் பொத்தான்களிலிருக்கும் விலையுயர்ந்த கற்கள் மற்றும் தங்கத்தைக் கொண்டு அவருடைய செல்வமும் சமூக அந்தஸ்தும் சமீபகாலம் வரையிலும் கூட நிர்ணயிக்கப்பட்டு வந்தன. தற்பொழுது நிலைமை ஓரளவுக்கு மாறியிருப்பது உண்மையே. இன்று ஒரு கோடீசுவரர், ஒரு மாபெரும் தொழில் நிறுவனத்தின் தலைவர் அணிந்திருக்க வேண்டியதில்லை. சமூக அந்தஸ்தின் புதிய பொருளாயதக் குறியீடுகள் தோன்றிவிட்டன. இக்கால உணர்ச்சியை ஒட்டி தங்கம் “ஜனநாயகப்படுத்தப்பட்டுவிட்டது”, தங்கத்தில் செய்யப்பட்ட திருமண மோதிரங்கள், கை வளையல்கள், தோடுகள் இலட்சக் கணக்கில் தயாரிக்கப்படுகின்றன.

ஆனால் இது பிரச்சினையின் சாராம்சத்தை மாற்ற வில்லை. முதலாவதாக, மேற்கு நாடுகளில் சில சமூக வட்டாரங்களில் தங்கம் இன்னும் ஆடம்பர நுகர்வுப் பொருளாக, புகழ தரும் நுகர்வுச் சின்னமாக இருக்கிறது. பணக்காரர்களின் மாளிகைகளில் உள்ள தங்கக் குளியல் தொட்டிகளையும் கதவுக் கைப்பிடிகளையும் தங்கத்தால் செய்யப்பட்ட நாய்ப்பட்டிகளையும் பற்றி அவ்வப்பொழுது நாம் கேள்விப்படுகிறோம். அதைப் போல ஒரு சாதாரண வணிகர் வர்த்தகப் பேச்சுவார்த்தை களின்போது தங்கத்தாலான சிகரெட் டப்பியை அல்லது சிகரெட் பற்றவைக்கும் கருவியைப் பயன்படுத்துகிறார். இதனால் அவருக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது. அங்கே இருப்பவர்களுக்கு அவரைப் பற்றி மரியாதை ஏற்படுகிறது. பெரிய நிறுவனங்களில் இருபத்தைந்து வருடங்கள் விசுவாசமாக வேலை செய்த ஊழியருக்குத் தங்க கைக் கடிகாரத்தைப் பரிசளிப்பது வழக்கமாக

இருக்கிறது. இரண்டாவதாக, மேற்கு நாடுகளைத் தவிர பல கிழக்கு மற்றும் தெற்கு நாடுகளில் திடீர்ப் பணக்காரர்கள், நில உடைமையாளர்கள், நிறையப் பணம் சேர்த்திருக்கும் அதிகாரிகள், வழக்கறிஞர்கள் மிகவும் ஆசையோடு தங்கத்தைத "நுகர்வு" செய்கிறார்கள். ஒரு காலத்தில் இந்திய மகாராஜாக்கள் ஐரோப்பாவின் ஆபரணக் கடைகளின் மிகச் சிறந்த வாடிக்கையாளர்களாக இருந்தார்கள். இப்பொழுது அவர்களுடைய இடத்தைக் கோடீசுவர்களான எண்ணெய் ஷேக்குகள் எடுத்துக்கொண்டிருக்கிறார்கள்.

ஆனால் தங்க ஆபரணங்கள் சில சமயங்களில் மட்டுமே பகிரங்கமாக வெளியே காட்டப்படுவதுண்டு. அதற்கு மாறாக அவை பெரும்பாலும் மறைத்தே வைக்கப்பட்டிருந்திருக்கின்றன. நாம்முன்னர் குறிப் பிட்டது போல ஆபரணத்துக்கும் தங்கப் பதுக்கலுக்கு மிடையே கறாரான வித்தியாசம் கிடையாது. ஒரு இந்திய விவசாயியின் குடும்பத்தில் மனைவி அல்லது மகளுடைய தங்க வளையல் மோசமான அறுவடை அல்லது நோய் ஏற்படும் பொழுது உதவக்கூடிய பாதுகாப்பு இன்சூரன்சே, இந்தியாவில் நூற்றாயிரக்கணக்கான குடிசை தொழிலாளர்கள் தங்கம், வெள்ளி ஆரபணங் களைத் தயாரிப்பதிலும் அவற்றை விற்பனை செய்வதிலும் ஈடுபட்டிருக்கிறார்கள். இவர்களில் அதிக பணக்காரர்களாக இருப்பவர்கள் ஆபரணங்களை ஈடாக வைத்துக்கொண்டு கடன்கொடுக்கும் வட்டித் தொழிலிலும் ஈடுபடுகிறார்கள். இங்கே தங்க ஆபரணங்கள் சாராம்சத்தில் பதுக்கலின் ஒரு வடிவமே. அதைப்போல பதுக்கல் தங்கம் ஆபரணமாக மாறுவது முண்டு. சவுதி அரேபியாவில் ஏராளமான அளவில் தங்க நாணயங்கள் வாங்கப்படுகின்றன. அங்கே பெண்கள் சவரன்களைச் சங்கிலியில் கோர்த்து மாலைகளாக அணிந்து கொள்கிறார்கள்.

1950, 1960-க்களில் இரண்டு முக்கியமான கூறுகளின் தாக்கத்தினால் ஆபரணத் தொழிலில் தங்க நுகர்வு மிகவும் வேகமாக வளர்ச்சியடைந்தது. முதலாவதாக, பொருளாதாரம் மற்றும் வருமானங்களின் வளர்ச்சி; இரண்டாவதாக, விலைகளின் பொது மட்ட் அதிகரித்துக்கொண்டிருந்த நேரத்தில் தங்கத்தின் விலை ஸ்திரமாக இருந்தது. ஆகவே அது ஒப்புநோக்கில் மலிவான மூலப் பொருள் வடிவமாக இருந்தது. 1972-1974ல் தங்கத்தின் டாலர் விலை ஐந்து மடங்கு அதிகரித்தபொழுது தேவை குறைந்தது. 1974-1975ம் வருடங்களில் ஏற்பட்ட பொருளாதார மந்தமும் இதே விளைவை ஏற்படுத்தியது.

இந்த இரண்டு காரணிகளின் விளைவாக ஆபரணத் தொழிலின் தங்க நுகர்வு தீவிரமாகக் குறைந்தது. எழுபதுக்களின் தொடக்கத்தில் அது 1,000 டன்களை நுகர்வு செய்ததாக மதிப்பிடப்பட்டிருந்தது. ஆனால் 1974–1975ல் சராசரி வருடாந்தர நுகர்வு 350 டன்களுக்குச் சற்றுக் கூடுதலாக மட்டுமே இருந்தது. எனினும் இந்தத் தொழில் அதன் முக்கியமான மூலப் பொருள் வகையின் புதியவிலைமட்டங்களுக்குத் தன்னைத் தகவமைத்துக் கொண்டு செலவுகளில் ஏற்பட்ட தீவிரமான அதிகரிப்பை நுகர்வோர் மீது சுமத்துவதில் வெற்றியடைந்தது. 1976–1978ல் பெரும்பான்மையான தொழில்துறை நாடுகளின் பொருளாதாரத்தில் ஏற்பட்ட கிடுகிடு வளர்ச்சியும் இதற்கு உதவியாக இருந்தது. ஆனால் இதைக் காட்டிலும் முக்கியமானது பண வீக்கத்தில் புதிதாக ஏற்பட்டிருந்த அதிகரிப்பாகும். இதன் விளைவாக மக்கள் நம்பிக்கையான விலையுயர்ந்த பொருள்களை வலை போட்டுத் தேடினார்கள். கிழக்கு நாடுகளில் மட்டுமல்லாமல் மேற்கு நாடுகளிலும் ஆபரணங்களை வாங்குவதில் இருக்கின்ற முதலீடு மற்றும் பதுக்கல் கூறு அதிகரித்தது. இதன் விளைவாக இந்தக் காலகட்டத்தின் போது ஆபரணத் தொழில் மறுபடியும் வருடத்துக்குச் சுமார் 1,000 டன்கள் தங்கத்தை நுகர்வு செளிணியத் தொடங்கியது. 1980–ல் விலைகள் தீவிரமாக அதிகரித்த பொழுது இந்த அளவு திடீரென்று இறங்கியது.

1977–1978ம் வருடங்களில் டாலர் அதைக் காட்டிலும் அதிக நிலையான நாணயங்களோடு குறிப்பாக மேற்கு ஜெர்மன மார்க், ஸ்விட்சர்லாந்தின் பிராங்க், ஜப்பானியயென் ஆகியவற்றோடு ஒப்பிடும்பொழுது நெடுங்கால மற்றும் குறிப்பிடத்தக்க அளவில் வீழ்ச்சி யடைந்தது. இதன் காரணமாக டாலர்களில் தங்கத்தின் விலையைக் காட்டிலும் மேலே குறிப்பிட்ட நாணயங்களில் அதன் விலை மிகக் குறைவாகவே உயர்ந்தது. சில சமயங்களில் குறைவாகவும் இருந்தது. இந்த நாடகளின் ஆபரணக் கடைகளுக்குத் தங்கம் மிகவும் விலையுயர்ந்த பொருளாக மாறிவிடவில்லை. ஆனால் மற்ற பண்டங்களின் விலைகள் தொடர்ச்சியாக அதிகரித்த அளவுக்குதக் தங்கம் உண்மையிலேயே மலிவான பொருளாயிற்று. கடைசி அத்தியாத்தில் இந்தப் பிரச்சினையை விரிவாக ஆராய்வோம். இந்த நாடுகளின் ஆபரணத் தொழில் துறை மிகவும் அதிக அளவில் தங்கத்தை வாங்கியதில் இந்தக் காரணி முக்கியமான பாத்திரத்தை வகித்தது என்பதை மட்டும் இங்கே குறிப்பிடுவோம். தொழில் துறையில் தங்கத்தை உபயோகப்படுத்தும் மற்ற பிரிவுகளுக்கும் இது பொருந்தக்கூடியதே. ஜப்பானில் தொழில் துறை 1975–ல் 75 டன்களையும் 1978ல் 100 டன்களுக்கும் அதிகமாகவும் நுகர்வு செய்தது (இதில்

ஆபரணத் தொழில் துறையின் பங்கு முறையே 39,57 டன்களாக இருந்தது]. மேற்கு ஜெர்மனியில் தொழில்துறையில் தங்கத்தின் உபயோகம் 58 டன்களிலிருந்து 92 டன்களாகவும் ஸ்விட்சர்லாந்தில் 18 டன்களிலிருந்து 33 டன்களாகவும் அதிகரித்தது.

ஆபரணத் தொழிலில் தங்கத்தை உபயோகிப்பதில் இத்தாலி நிச்சயமாக முதலிடத்தை வகிக்கிறது. எல்லா முதலாளித்துவ நாடுளிலும் உபயோகிக்கப்படும் தங்கத்தின் மொத்த அளவில் இத்தாலியின் பங்கு வழக்கமாகவே 20-25 சதவீகிதமாக இருக் கிறது. அதிகமான அளவுக்கு இயந்திரங்களைப் பயன் படுத்துவதோடு சேர்ந்த பெரிய அளவு உற்பத்தி மற்றும் நவீனமான நிர்வாக முறையின் மற்ற நாடுகளைக் காட்டிலும் முன்னதாகவும் அதிகத் திறமையோடும் அமுலாக்கப்பட்டன. இத்தாலியிலுள்ள "கோரி இ ஸுச்சி" [Gorie e Zucci] என்ற நிறுவனம் இத்தாலியிலும் முதலாளித்துவ உலகம் முழுவதிலுமே மிகப்பெரிய ஆபரணத் தயாரிப்பு உலகம் முழுவதிலுமே மிகப் பெரிய ஆபரணத் நிலையம் பிளாரென்சுக்கு அருகிலுள்ள அரெஸ்ஸோ என்ற நகரத்தில் இருக்கிறது. 1970-க்களின் தொடக்கத்தில் இந்த நிறுவனம் கிரேட் பிரிட்டன, பிரான்ஸ் மற்றும் ஸ்விட்சர்லாந்து ஆகிய நாடுகளின் ஆபரணத் தொழில்களில் உபயோகிகப்படுத்தப்பட்ட தங்கத்தின் மொத்த அளவைக் காட்டிலும் அதிகமாக உபயோகித்தது. இந்த நிறுவனத்துக்குச் சொந்தமான தூய்மைப்படுத்தும் தொழிற்சாலை இருக்கிறது. அங்கே நிர்ணயிக்கப்பட்ட தரத்துக்குத் தங்கம் தயாரிக்கப்படுகிறது. ஆபரணத் தொழிலில் உபயோகிக்கப்படுகின்ற பாதி பூர்த்தியான பொருள்களை அதுவே தயாரிக்கிறது. இங்கே மிகவும் நவீனமான இயந்திர சாதனங்கள் இருக்கின்றன. புதிய ஆபரணங்களைத் தயாரிப்பதற்காக முப்பது வரைவாளர்கள் இதில் பணியாற்றுவதால் இந்த நிறுவனம் ஆபரணத்தொழிலில் நவீன பாணியின் முன்னோடியாக இருக்கிறது. கோரி இ ஸுச்சி"யும் மற்ற இத்தாலிய நிறுவனங்களும் பெருந்திராளன நுகர்வோருக்கென்று மிகவும் அதிகமான அளவில் ஆபரணங்களை உற்பத்தி செய்கின்றன. இவற்றில் சிறு பகுதி மட்டுமே இத்தாலியில் நுகாவு செய்யப்படுகிறது, பெரும் பகுதி மற்ற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது. இத்தாலியில் தயாரிக்கப்படும் தங்கப் பொருள்மீகள் எத்தகைய போட்டிக்கும் ஈடு கொடுக்கக்கூடியவை. மேற்கு ஐரோப்பிய நாடுகளிலும் அமெரிக்காவிலும் கிழக்கு நாடுகளிலும் இவற்றை ஏராளமானவர்கள் வாங்குகின்றனர்.

ஆபரணத் தொழிலில் உபயோகிக்கப்படும் மொத்த தங்கத்தில் சுமார் மூன்றில் ஒரு பகுதி துருக்கி உள்பட மத்திய கிழக்கு நாடுகளில் நுகர்வு செய்யப்படுகிறது. இந்த நாடுகளில் உள்நாட்டுக் கைவினைஞர்ளின் மரபு வழிப்பட்ட, சிறு அளவு உற்பத்தியோடு சேர்ந்து இத்தாலிய, மேற்கு ஜெர்மன் மற்றும் இதர மேற்கத்திய கம்பெனிகளால் நிர்மாணிக்கப்பட்ட நவீன நிறுவனங்கள் சமீப வருடங்களில் ஏற்பட்டுள்ளன. இங்கே மலிவான உழைப்பு, ஒப்புநோக்கில் குறைந்த வரிகள் என்ற சாதங்கள் இருப்பதால் இவை அடிக்கடி உள்நாட்டுக் கைவினைஞர்களையும் தொழில்துறையில் வளர்ச்சியடைந்த நாடுகளின் இறக்கு மதிகளையும் ஒழித்து விட்டன.

மேற்கு நாடுகளை உள்ளிட்ட அதிகமான பல நாடுகளில் கையால் தயாரிக்கப்படும் ஆபரணத் தொழில் நீண்ட மரபைக் கொண்டிருக்கிறது. இந்த மரபு விடாப்பிடியாக நீடித்து வந்திருக்கிறது. இன்றும்கூட தங்க ஆபரணங்களில் மிகப்பெரிய சதவீதம் சிறு பட்டறைகளில் கைகளால் தயாரிக்கப்படுகின்றன. ஆனால் அந்த சிறு ஆபரணக்கடைக்காரருக்குப் பாதி பூர்த்தியடைந்த பொய்களை [தங்கத் தகடு, கம்பி இதரவை] பெரிய தொழில்துறை நிறுவனங்கள் [அமெரிக்காவிலுள்ள எங்கெல்ஹார்ட் கம்பெனியைப் போன்றவை] கொடுக்க வேண்டிய நிலை இருக்கிறது. பெரிய ஆபரணக் கம்பெனிகளின் அளிப்பாணைகளை இந்தச் சிறு ஆபரணப் பட்டறைகள் அடிக்கடி நிறைவேற்றுகின்றன. ஆகவே ஆபரணத் தொழிலில் சிறு அளவு உற்பத்தியின் சுதந்திரம் முடிந்துவிட்டது, அது பெரும் மூலதன அமைப்பின் ஒரு பகுதியாகிவிட்டது.

ஓவியர்கள் ஓவியங்கள் வரைவதைப்போல, சிற்பிகளைப் போல தனிப்பட்ட ஆபரண வரைவாளர் அற்புதமான ஆபரணங்களுக்கு வரைபடம் தயாரிக்கிறார். ஆனால் ஆபரண உற்பத்தி அநேகமாக அவரை இக்காலத்துக்குத் தேவையில்லாதவராக்கி விட்டது. எனினும் இந்த மகத்தான கலை மறைந்துவிட்டதென்று சொல்லிவிட முடியாது. பெரிய நிறுவனங்களுக்கு வரைவாளர்கள் பாடுபடுவதைப் போலவே சிறு பட்டறைகளில் திறமை மிக்க பொற்கொல்லர்கள் அற்புதமான ஆபரணங்களைத் தயாரிக்கின்றார்கள். இந்தப் பொற்கொல்லர்களையும் அவர்களுடைய பணியின் பொருளாதார அம்சத்தையும் டி.கிரீன் தம்முடைய புத்தகத்தில் விவரிக்கிறார். அவர்கள் தயாரிக்கும் ஆபரணங்கலும் கிடைப்பதில்லை. அவை கோடீசுவரர்களின் தனிப்பட்ட சேகரிப்புகளில் மறைந்துவிடுகின்றன என்பது துரதிர்ஷ்டவசமானதே. ஆபரணங்களுக்கு மட்டுமல்ல, எல்லாக் கலைப் பொருள்களுக்குமே இதுதான் நிலை.

ஆபரணத் தயாரிப்பில் வெவ்வேறு அளவில் தூய்மையைக் கொண்டிருக்கும் தங்கம் உபயோகிக்கப்படுகிறது. இது 8 காரட்டிலிருந்து (333 தூய்மை) 23 காரட் (958 தூய்மை) வரை இருப்பதுண்டு. பெரும்பாலான நாடுகளில் ஆபரணத் தொழிலில் உபயோகிக்கப்படும் தங்கத்தின் தூய்மையை அரசு ஒழுங்குபடுத்துகிறது. அந்தப் பொருள்களின் தூய்மையைச் சோதிக்கின்ற அரசு இலாகாக்களைக் கொண்ட அமைப்பு இருக்கிறது. கிழக்கு நாடுகளில் ஆபரணங்களை வாங்குவதில் கணிசமான பதுக்கல் கூறு எப்பொழுதுமே இருந்து வந்திருக்கிறது. அங்கே மிக அதிகமான (வழக்கமாக 21 அல்லது 22 காரட்) தூய்மையைக் கொண்ட பொருள்கள் விற்பனையாகின்றன, வாங்கப்படுகின்றன. மேற்கு நாடுகளில் விற்பனை செய்யப்படும் பொருள்களில் 14 அல்லது 18 காரட் தூய்மையை நாம் மிகச்சாதாரணமாகப் பார்க்க முடியும். கிரேட் பிரிட்டனினும் மேற்கு ஜெர்மனியிலும் அமெரிக்காவிலும் குறைவான (8 அல்லது 10 காரட்) தூய்மையைக் கொண்ட பொருள்கள் அதிகமாக விற்பனை செய்யப்படுகின்றன.

வெவ்வேறு அளவில் தூய்மையைக் கொண்டிருக்கும் தங்கத்தையும் வெள்ளி, செம்பு, நிக்கல், பல்லாடியம் ஆகிய பொருள்களை வெவ்வேறு சதவீதத் தில் கொண்டிருக்கும் கலப்பு உலோகங்களையும் உபயோகிப் பதற்கு விரிவான வர்ணவரிசையைக் கொண்ட பொருள்களைத் தங்கத்திலிருந்து தயாரிக்க முடியும் என்பதே காரணமாகும். சிகப்பு நிறத்திலிருந்து (75 சதவீதம் தங்கத்தையும் 25 சதவீதம் செம்பையும் கலப்பதன் மூலம் கிடைக்கும்) வெள்ளைகளில் தங்கத்தோடு கலப்பதன் மூலம் கிடைக்கும்) வரை நாம் பெற முடியும். அதிகமான ரகங்களைக் கொண்ட ஆபரணங்களைத் தயாரிக்க இது உதவுகிறது.

உலகத்திலேயே முதன்முறையாகப் பழங்கால எகிப்திலும் சுமேரியாவிலும் பிரபுக்களுக்காக தங்கப் பற்கள்கள் கூறுகிறார்கள். தங்கத்தை இப்படி உபயோகிக்க முடியும் என்பது பண்டைய ரோமானியர்களுக்கும் தெரியும். 18ம் நூற்றாண்டைச் சேர்ந்த பிரெஞ்சு மருத்துவர்கள் இதைப் பற்றிப் புத்தகங்கள் எழுதினார்கள். 20ம் நூற்றாண்டில் துருப்பிடிக்காத எஃகும் பிளாஸ்டிக்கும் இதர பொருள்களும் ஓரளவுக்குத் தங்கத்தின் இடத்தைப் பிடித்துக்கொண்டிருந்தாலும், பல் கட்டும் தொழிலில் பெரும் அளவுகளில் அது உபயோகிகப்படுகிறது. தங்கப் பற்கள் அழகாக இருப்பதாகவும் கௌரவம் தருவதாகவும் கருதப்படுகின்றன. 1940ம் வருடப் புள்ளிவிவரங்களின்படி அமெரிக்க ஆண்களில் 76 சதவீதத்தினரும் பெண்களில் 56 சதவிதத்தினரும் உச்சி, இடை மற்றும் குழிநிரப்பல்கள்

என்ற வடிவங் களில் வாயில் தங்கத்தை வைத்திருந்தார்கள். இந்தத் துறையில் தங்க உபயோகத்தில் அமெரிக்கா இன்னும் முதலிடத்தை வகிக்கிறது (வழக்கமாக வருடந்தோறும்) 20 டன்களுக்கும் அதிகமான தங்கம் உபயோகிக்கப்படுகிறது). ஆனால் ஒவ்வொரு தனிநபருடைய நுகர்வில் ஸ்விட்சர்லாந்து முந்திவிட்டது. சமீப வருடங்களில் மேற்கு ஜெர்மனியும் ஜப்பானும் முன்னேறிக் கொண்டிருக்கின்றன.

பல் மருத்துவர்கள் உபயோகப்படுத்துகின்ற தங்கத்தின் மொத்த அளவு மெதுவாக ஆனால் தொடர்ச்சியாக அதிகரித்து வருகிறது. தங்கத்துக்குப் பதிலாக வேறு புதிய பொருள்கள் கண்டுபிடிக்கப் பட்டிருந்த போதிலும் அது இந்த நிகழ்வுப் போக்கில் அநேகமாக சிறிதளவு மாற்றத்தைக் கூட ஏற்படுத்தவில்லை. சமீப வருடங்களில் வருடந்தோறும் இதற்காக 80–90 டன்கள் தங்கம் உபயோகிக்கப்படுகிறது. இது முதலாளித்துவ நாடுகளின் வருடாந்தரத் தங்க உற்பத்தியில் 8–9 சதவீதமாகும். இது கணிசமான அளவு என்பது நிச்சயம்.

வாழ்க்கையின் இதர பலதுறைகளிலும் தங்கம் உபயோகிக்கப்படுகிறது. சில சமயங்களில் விசித்திர மாகவும் வேடிக்கையாகவும் கூட உபயோகிக்கப் படுகிறது. யுத்தத் வேடிக்கையாகவும்கூட உபயோகிக்கப் படுகிறது. யுத்தத்துக்குப் பிந்திய வருடங்களில் ஜப்பான் (அது இப்பொழுது முதலாளித்துவ உலகத்தில் இரண்டா வது தொழில்துறை வல்லரசு) அதிகமான அளவில் தங்கத்தை நுகர்வு செய்யும் நாடாக வளர்ச்சியடைந்திருக்கிறது. டோக்கியோவின் புறநகர்ப் பகுதியிலுள்ள ஒரு பயணிகள் விடுதியின் நிர்வாகம் தங்கத்தில் குளிக்கும் தொட்டியை அமைத்திருக்கிறது. இந்தத் தொட்டி 143 கிலோ தங்கத்தைக் கொண்டு ஒரு பறவையின் வடிவத்தில் செய்யப்பட்டிருக்கிறது. எழுபதுக்களின் தொடக்கத்தில் இந்தத் தொட்டியில் இரண்டு நிமிடங்கள் குளிப்பதற்கு 1,000 யென் (சுமார் 3 டாலர்கள்) கட்டணம் வசூலிக்கப்பட்டது. அதற்குப் பிறகு பணவீக்கத்தின் காரணமாகக் கட்டணம் பல மடங்கு உயர்த்தப்பட்டிருக்கலாம்.

தங்கத் தொட்டியில் குளிப்பதன் மூலம் நோளிணிகள் குணமடையும் என்று ஏராளமானவர்கள் நம்புவதால் இது மிகவும் பிரபலமடைந்திருக்கிறது. தங்கம் நோய்களைக் குணப்படுத்தும் என்ற நம்பிக்கை மிகப் பழமையானது. மத்திய காலத்தைச் சேர்ந்த ரசவாதிகள் இந்த நம்பிக்கையை வளர்த்தனர். கிழக்கு நாடுகளில் நாட்டு வைத்தியர்களும் அரைகுறையாகக் கற்ற

மருத்துவர்களும் ஆண்மைக் குறைவு, கர்ப்பம் ஏற்படாமை போன்ற நோய்களுக்குத் தங்க பஸ்பம் சாப்பிட வேண்டுமென்று கூறுகின்றனர்.

நவீன கால மருத்துவத்திலும் தங்கம் உபயோகிக்கப் படுகிறது. ஆனால் விஞ்ஞான அடிப்படையில் செய்யப்படுகிறது. புற்று நோயைக் குணப்படுத்த தங்கம் உபயோகிக்கப்படுகிறது. மிகவும் மோசமான நிலைமையில் கரைந்த நிலைமையிலுள்ள கதிரியக்கத் தங்கத்கதை ஊசியின் மூலம் மருத்துவத்தில் உபயோகிக்கப்படும் தங்கத்தின் அளவு மிகவும் சொற்பமாகும். நவீன தொழில்துறையில் தங்கம் உபயோகிக்கப்படுகிறது. அதில் மின் நுட்பவியல் துறை மிக முக்கியமானதாகும். இதில் ஜப்பான் மிகவும் சிறப்பான பாத்திரத்தை தங்கத்தின் அளவில் அமெரிக்காவைக் காட்டிலும் சிறிது மட்டுமே பின்தங்கியிருக்கிறது. அமெரிக்காவில் மின நுட்பத் தொழில்துறையில் ராணுவ தளவாடங்களின் உற்பத்தி அதிகமான சதவீதத்தைக் கொண்டிருப்பதைக் கணக்கிலெடுத்துக்கொண்டால் மின் நுட்பவியல் துறையில் சிவிலியன் உற்பத்தியில் தங்கத்தை உபயோகிப்பதால் ஜப்பான் அமெரிக்காவை விஞ்சிவிட்டது என்று நாம் கருத முடியும். முதலாளித்துவ நாடுகளின் மின் நுட்பவியல் தொழில்துறையில் உபயோகிகப்படுகின்ற தங்கத்தின் மொத்த அளவில் மூன்றில் இரண்டு பங்கை இந்த இரண்டு நாடுகளும் சேர்ந்து செலவிடுகின்றன.

மற்ற உலோகங்களிடம் இல்லாத பௌதிக குணாம் சங்கள் தங்கத்தில் இருக்கின்றன. அது மின்சாரக் கடத்தியாகவும் அரித்தலுக்கு ஆளாகாததாகவும் வளையும் தன்மை கொண்டதாகவும் இருக்கிறது. இவை மின் நுட்பவியலுக்கு மிகவும் அவசியமானவையாகும். மின் கணக்குப் பொறிகளில், வானவெளிப் பயண இயந் திரங்களில், ஆழ்கடல் தகவல் தொடர்புக் சாதனங் களில் நிலையான, நீடித்து உழைக்கின்ற அடர்த்தியான பொருளை உபயோகிக்கப்படுகிறது. ‘‘எதிர்காலம் தங்க மூளைகளைக் கொண்ட இயந்திரங்களுக்குச் சொந்த மானது’’ என்று செடிய்யோ வேடிக்கையாகக் குறிப்பிடு கிறார். பல நூற்றாண்டுகளாகவே சாதாரணப் பேச்சில் ‘‘தங்கம்’’ என்ற சொல் ‘‘மிகச் சிறப்பானது’’ ‘‘முதல் தரமானது’’ என்ற அர்த்தத்தில் கையாளப்படுவதை இது நினைவுபடுத்துகிறது.

1974–ல் அமெரிக்காவில் மின் நுட்பவியலில் தங்க உபயோகத்தைப் பற்றிப் பின்வரும் புள்ளிவிவரங்கள் கிடைத்திருக்கின்றன. மொத்தம் 44 டன்கள் மின் நுட்பவியல் துறையில் உபயோகிக்கப்பட்டன. இதில் 21 டன்கள் கான்டாக்ட்களுக்கு 5 டன்கள் பிரின்டெட் சர்க்யுட்களுக்கும் 7 டன்கள் செமி கன்டக்டர்களுக்கும் 4 டன்கள் கதோட் கதிர் குழாள்களுக்கும் 4

டன்கள் ஸ்விச்சுகளுக்கும் பயன்படுத்தப்பட்டன. இதனை யடுத்த இரண்டு வருடங்களில் இந்தத் துறையில் உபயோகிக்கப்பட்ட தங்கம் இந்த அளவில் பாதிக்கும் குறைவாயிற்று. தங்கத்தின் விலை அதிகரித்தபடியால் அதற்குப் பதிலாக வேறு பொருள்களை உபயோகித்ததும் பொருளாதார நடவடிக்கை குறைந்ததும் தேவையில் குறைவு ஏற்பட்டதும் தங்கத்தின் உபயோகம் இவ்வாறு குறைந்ததற்குக் காரணமாகும்.

ஆனால் மின்நுட்பவியல் துறையில் தங்கத்தை இதற்கும் சிக்கன மாகும். உபயோகிப்பதென்பது அநேகமாக முடியாது, அதற்குப் பதிலாக வேறு பொருள்களை இதற்கு மேல் உபயோகித்தால் அதிகமான தரக்குறைவு ஏற்படும் என்று நிபுணர்கள் கூறுகிறார்கள். மேலும் மின்நுட்பவியல் தொழில்துறையில் அமெரிக்காவும் ஜப்பானும் கடந்து வந்திருக்கும் கட்டங்களைப் பல நாடுகள் இனி மேல்தான் கடக்க வேண்டும். முதலாளித்துவ நாடுகளின் பொருளதாதரம் அடிக்கடி அதிகரிக்கும் எண்ணெய் விலை உயர்வுகளுக்குத் தன்னைத் தகவமைத்துக் கொண்டிருப்பதுபோல நிறுவனங்கள் விலைகளின் உயர்ந்த மட்டத்துக்குத் தக்கவாறு அனுசரித்து கொள்கின்றன. மேற்கூறிய எல்லாக் காரணங்களாலும் மின்நுட்பவியல் தொழில்துறை வருடந்தோறும் 100 டன்கள் தங்கத்தைத் தொடர்ச்சியாக நுகர்வு செய்யும் என்று கருதப்படுகிறது. அதற்கு மேலும் கூட நுகர்வு செய்யப்படலாம். தங்கம் தொழில் வகையாகவும் கலைப் பண்புக்காகவும் உபயோகிக்கப்படுகின்ற வேறு பல துறைகளும் இருக்கின்றன. மாதாகோயில் குவிமாடங் களுக்கும் ஸ்தூபிகளுக்கும் தங்கத் தகடு போடுவது, தங்கத்தில் சித்திர வேலை செய்வது முதலியன இதில் அடங்கும். சமீப வருடங்களாக பவுன்டன் பேனா முனைகள் மற்றும் மூக்குக்கண்ணாடி வளையங்கள் தங்கத்தில் செய்யப்படுகின்றன. இது தொழில்நுட்ப ரீதியில் மிக எளிமையானது. மின்நுட்பவியலைப் போன்ற முற்றிலும் புதிய துறைகளும் உபயோக முறைகளும் இருக்கின்றன. இவை விஞ்ஞான தொழில்நுட்பப் புரட்சி யோடு தொடர்புடையவை.

தங்கம் அரிக்கப்பட முடியாதது. வளையக்கூடியது என்பவற்றைத் தவிர வெப்பம் மற்றும் ஒளிக் கதிரை மிகவும் அதிகமாகப் பிரதிபலிக்கும் தன்மை என்ற மற்றொரு முக்கியமான குணாம்சத்தையும் கொண்டிருக்கிறது. ஒலியைக் காட்டிலும் வேகமாகச் செல்லும் “கன்கார்ட்” விமானத்தில் பொருத்தப்பட்டிருக்கும் “ரோல்ஸ்–ராய்ஸ்” இயந்திரங்களின் புகையை வெளியே விடுகின்ற குழாய்கள் அதிக வெப்பமடைவது இதன் மூலம்

தடுக்கப்படுகிறது. அமெரிக்க "ஸ்கைலாப்" என்ற வானவெளி இயந்திரத்தில் சூரியனை நோக்கியுள்ள பகுதியில் வெப்பப் பாதுகாப்புக்காக விசேஷமான பகுதியில் வெப்பம் பாதுகாப்புக்காக விசேஷமான தடுப்பு வைக்கப்பட்டிருக்கிறது. இது அலுமினியம் மற்றும் தங்கம் தடவப்பட்ட பிளாஸ்டிக்கினால் செய்யப்பட்டதாகும்.

1978-ல் முதலாளித்துவ நாடுகளில் தொழில்துறை மற்றும் அலங்கார (மின்னுட்பவியலைச் சேர்க்கமாமல்) உபயோகங்களுக்கு மொத்தம் சுமார் 75 டன்கள் தங்கம் உபயோகிக்கப்பட்டன. ஆபரணத் தொழில் மற்றும் மின்னுட்பவியல் துறையின் தேவையைக் காட்டிலும் இது அதிக நிலையானதாக இருக்கிறது. விலைகள் மற்றும் வர்த்தக நடவடிக்கையில் மாற்றங்கள்ஏற்பட்ட போதிலும் வருடந்தோறும் இதில் மிகக்குறைந்த மாற்றமே ஏற்படுகிறது. பொருளாதாரத்தில் தேவையின் குறைவான நெகிழ்ச்சி என்று இதைச்சொல்கிறோம். தொழில்துறை உற்பத்தியின் வளர்ச்சி வேகத்தோடு சுமாராக ஒட்டியபடி இதுவும் அதிகரிக்குமென்று நிபுணர்கள் கருதுகிறார்கள்.

# பணமாகவும் பணமாக இல்லாமலும்

இந்த அத்தியாயத்தை முடிப்பதற்கு முன்னர் இரண்டு முக்கியமான பிரச்சினைகள் விவாதிப்போம். முதலாவது பிரச்சினை தங்கத்தின் உபயோகத்திற்குள்ள வாய்ப்புக்களையும் உலகச் சந்தையில் அதற்குள்ள தேவையையும் பற்றியது. இரண்டாவது பிரச்சினை பணம் என்ற வகையில் தங்கத்துக்கு ஏற்படும் தேவைக்கும் பண்டம் [பணம் அல்லாதது] என்ற வகையில் தங்கத்துக்கு ஏற்படும் தேவைக்கும் உள்ள உறவைப் பற்றியது.

சென்ற நூற்றாண்டில் தங்கத்தைப் பற்றி எழுதியவர்கள் தங்கம் பணம் என்ற நிலையிலிருந்து அகற்றப்பட்டுவிட்டால் அதன் தேவை குறைந்துவிடும். அது காகிதப் பணத்தில் அதன் விலையிலும் மற்ற பண்டங்களோடு சம்பந்தப்பட்ட விதத்தில் அதன் பரிவர்த்தனை மதிப்பிலும் தீவிரமான வீழ்ச்சியை ஏற்படுத்தும் என்று அடிக்கடி குறிப்பிட்டார்கள். அப்படிப்பட்ட ஒரு கருத்தை [பால் எய்ன்சீக்] நாம் முன்னர் குறிப்பிட்டோம். இன்று தங்கம் பணமாகப் பயன்படுவது உண்மையிலேயே முடிந்துவிடவில்லை [இது விவாதத்துக்குரிய கருத்தாகும்] என்றாலும் குறைந்த பட்சம் கடந்த பதினைந்து வருடங்களில் பணவியல் துறை அதற்கு மிகக் குறைவான தேவையைத்தான் கொண்டிருந்திருக்கிறது. எனினும் அதன் விலை பல தடவை அதிகரித்தது; இன்னும் தீவிரமான ஏற்ற இறக்கங்களுக்கு உள்ளாகிறது என்றாலும் அது தெளிவான இறங்கும் போக்கை வெளிப்படுத்துகிறதில்லை.

சமீபத்திய விலை மட்டங்களில், தொழில்துறை மற்றும் கலைத்துறை நுகர்வுப் பகுதி இந்த உலோகத்தின் இன்றைய உலக உற்பத்தியை நுகர்வு செய்யும் நிலையில் இருக்கிறது. சமீப வருடங்களில் தங்கப் பிரச்சினையை ஆராய்ந்த எல்லா நிபுணர்களும் இந்த முடிவுக்குத்தான் வருகிறார்கள். நடப்பு உற்பத்தி இன்றைய பதுக்கலுக்குப் போதுமானதாக இருக்கவில்லை. பதுக்கல்காரர்களின் தேவையைப் பூர்த்தி செய்யவேண்டுமென்றால் மத்திய பணவியல் இருப்புக்களிலிருந்து தங்கத்தை வெளியே கொண்டுவருவது அவசியம் என்பது இதன் அர்த்தம். இது மிகக் குறைந்த அளவுகளில் இன்று செய்யப்பட்டு வருகிறது. உற்பத்தியை அதிகப்படுத்துவது மற்றொரு

தீர்வாகும். ஆனால் முதலாளித்துவ உலகம் அதைச் செய்யப்போகிறதில்லை என்று எல்லா நிபுணர்களும் ஒரே விதமாகச் சொல்கிறார்கள். இத்தகைய சூழ்நிலையில் அளிப்பையும் தேவையையும் சமநிலைப்படுத்துகின்ற "பொறுப்பு" விலையின் மீது சுமத்தப்பட்டிருக்கிறது.

தங்கம் என்பது பணம், தங்கம் என்பது பணமல்ல. மேற்கூறிய இரண்டு கருத்துக்களும் ஒன்றையொன்று மறுப்பதாகத் தோன்றலாம். ஆனால் அது உண்மையல்ல. உண்மையான வாழ்க்கையில் நிகழ்வுகளை அவற்றின் கலப்பற்ற வடிவத்தில் பார்க்க முடியாது, எதிர்நிலைகள் ஒன்று சேர்கின்றன. ஒவ்வொன்றுமே அதன் வளர்ச்சி மற்றும் மாற்றம் என்ற நிலையில் மட்டுமே இருக்கிறது. யதார்த்ததைப் பற்றி இத்தகைய பார்வையை அறிதலைப் பற்றிய இயக்கவியல் வலியுறுத்துகிறது. ஆகவே தங்க ஆதார அளவு கடைப் பிடிக்கப்பட்ட காலத்தில் இருந்த அதே அளவில் தங்கம் இன்னும் பணமாக இருக்கிறது. தங்கம் இனிமேல் பணமே அல்ல என்ற இரண்டு தீவிரமான கருத்துக்களுமே தவறானவையே.

தங்கம் பணமாக மாறுவதற்கு முன்பு அது சாதாரணப் பண்டமாக, பணம் அல்லாததாக இருந்தது. அது பணமாக மாறிய பிறகு சில உபயோகமான குணாம்சங்களைக் கொண்ட பண்டம் என்ற நிலையைத் தக்க வைத்துக் கொண்டிருந்தது. மார்க்ஸ் இக்கருதுகோளைப் பின்வருமாறு விளக்கினார். "பணப் பண்டத்தின் பயன் மதிப்பு இரண்டு வகையாக இருக்கிறது. பண்டம் என்ற வகையில் அதன் விசேஷமான பயன் மதிப்பைத் தவிர (உதாரணமாக, தங்கம் பல்கட்டுவதற்குப் போகப் பொருள்களைத் தயாரிக்கும் மூலப்பொருளாகவும் இதர வகைகளிலும் பயன்படுத்துகிறது) அதன் பிரத்யோகமான சமூகச் செயல்களிலிருந்து தோன்றும் சம்பிரதாயமானபயன் மதிப்பைப் பெறுகிறது."

இத்தகைய இரண்டு பயன் மதிப்புக்களும் உபயோகத்தின் இரண்டு வடிவங்களும் தங்கத்தின் இரண்டு (பண்டம் மற்றும் பணம்) செயல்களும் தனித்தனியாக இருக்க வில்லை, நெருக்கமான ஒற்றுமை யில் இருக்கின்றன. அவை தொடர்சியாக ஒன்றோடொன்று இணைந்தும் ஒன்றின் மீதொன்று செயலாற்றிக் கொண்டு மிருக்கின்றன. குறிப்பாக, போகப் பொரு களின் உபயோகமே அவை பணப் பண்டமான ஒரு உலோகத் தைக் கொண்டு செய்யப்பட்டவை என்ற உண்மையினால் பெரும் அளவுக்கு நிர்ணயிக்கப் படுகிறது.

ஒரு பண்டத்தின் பயன் மதிப்பு [உபயோகம்] பல்வகையானது. வரலாற்று ரீதியான வளர்ச்சியில் அது மாறாதிருப்பதில்லை. ஒரு காலத்தில் எண்ணெய் நாடோடி தன்னுடைய பூர்விகமான அடுப்பை எரிப்பதற்கு மட்டுமே பயன்பட்டது. அதிலும் அந்த நாடோடி தன்னுடைய கால்நடைகளை மேய்க்கின்ற இடங்களில் அது இயற்கையாகவே பூமியின் மேற்பரப்பில் அகப்பட்டால்தான் உண்டு. 19-ம் நூற்றாண்டின் கடைசி யில் அது அதிகத் தொலைவிலுள்ள இடங்களுக்குக் கூட எடுத்துச்செல்லப்பட்டது. மண்ணெண்ணெய், எரிபொருள் மற்றும் மசகுப் பொருள் களின் வெவ்வேறு வடிவங்களாகப் பிரிக்கப்பட்டது. மிக உபயோகமுள்ள ஆயிரக்கணக்கான பண்டங்களின் தயாரிப்பில் பிரதான மூலப்பொருளாக இன்று எண்ணெய் இருக்கிறது.

தங்கத்தின் பயன் மதிப்பும் அதன் சமூக உபயோகமும் மாறாதிருக்கவில்லை. இங்கே உபயோகம் என்ற வார்த்தையை அதன் அறவியல், உயிரியல் அர்த்தத்தில் அல்ல. அதன் பொருளாதார அர்த்தத்திலேயே பயன்படுத்துகிறோம். இந்தக் கருத்து நிலையில் போதைப்பொருள்களுக்கும் ஒரு "உபயோகம்" இருக்கிறது என்றால் புகையிலையைப் பற்றிச் சொல்லத் தேவையில்லை. போதைப் பொருள்களைப் போலவே தங்கமும் ஒரு மனிதன், அவனது குடும்பத்தினுடைய தார்மிகச் சீரழிவுக்கும் நாசத்துக்கும் காரணமாவதுண்டு. எனினும் ஒரு பொருள் ஒரு தேவையை-அது உண்மையானதோ, கற்பனையானதோ, இயற்கை யானதோ அல்லது இயற்கைக்கு மாறானதோ-பூர்த்தி செய்யுமானால் அதற்குப் பொருளதார உபயோகம் இருக்கிறது.

தங்கத்தின் இரண்டு பயன் மதிப்புக்களும் சேர்கின்ற பொழுது பணம் அல்லாத பயன் மதிப்புக்குச் சாதகமான முறையில் ஒரு மாற்றம் ஏற்படுகிறது தெரிந்திருக்கும். இது மட்டுமல்லாமல் இந்த மதிப்பு வெளிப்பாடுகள் ஒவ்வொன்றின் உள்ளடக்கமும் வடிவங்களும் மாற்றமடைகின்றன. தங்கத்தின் பணச் செயல் பிரதானமாக உலகச் சந்தையில், சர்வதேச நிதி உறவுகளின் துறையில் குவிந்திருக்கிறது; ஆனால் அங்கும் அது மாறிவிட்டது என்பதைப் பின்வரும் பகுதிகளில் விரிவாக எடுத்துக் கூறுவோம்.

பதுக்கல் ஒரு காலத்தில் பண அளிப்பின், தங்கத்தின் பணவியல் உபயோகத்தின் சேம இருப் பாகச் செயல்புரிந்தது. இன்று அது பணவியல் உபயோகத்துக்கு எதிரிடையாக இருக்கிறது. இன்று தங்கம் பதுக்கல் உலகத்தைவிட்டு வெளியே வருவதில்லை. பணவியல் துறைக்குத்

திரும்புவதில்லை. இந்தக் குவியல்களில் தங்கம் ஒரு விசேஷமான பதுக்கல் பண்டாமாக, பணவீக்கம் மற்றும் சமூகப் பொருளாதாரக் கொந்தளிப்புகளுக்கு எதிரான காப்புறுதிச் சாதனமாக ஒரு பிரத்யேகமான புதிய உபயோகத்தைப் பொருளாதாரக் கொந்தளிப்புகளுக்கு எதிரான காப்புறுதிச் சாதனமாக ஒரு பிரத்யேகமான புதிய உபயோகத்தைப் பெற்றுவிட்டதென்றுகூடக் கூறலாம்.

பணப் பதுக்கல்கள் எந்த அளவுக்குத் தமது பணவியல் தன்மையைத் தொடர்ந்து கைக்கொண்டிருக்கின்றன என்பது விவாதத்துக்கரிய சிக்கலான கேள்வியாகும். நாம் பணத்தை எப்படி வரையறுக்கிறோம், இந்தக் குவியல் களின் எந்த அம்சத்துக்கும் அழுத்தம் கொடுக்கிறோம் என்பது மிக முக்கியமானதாகும். தங்கத்தைச் சேகரிப்பது வைரங்களை, புகழ்மிக்க ஓவியங்களை அல்லது அபூர்வமான புத்தகங்களை வாங்கிச் சேர்ப்பது மாதிரியே என்பது ஒரு கருத்தோட்டம். இந்தப் பொருள்களைப் பணம் என்று எந்த உண்மையான அர்த்தத்திலும் சொல்ல முடியாது. ஆனால் குவியலின் இலக்கு என்ற முறையில் தங்கமும் பத்திரங்களை அல்லது வங்கிக் கணக்குகளைப் போன்றதே. அந்த வகையில் இது பணத்துக்கு நெருக்கமானது.

எனினும் நாம் பின்வரும் அம்சத்தை நினைவிலிறுத்த வேண்டும். பணம் அல்லாதது என்ற வகையில் மேலே குறிப்பிடப்பட்ட எல்லாப் பொருள்களிலிருந்தும் தங்கம் வேறுபட்டிருக்கிறது. ஏனென்றால் அது பிரிக்கப்படக்கூடியது. ஓரே சீரான தன்மையைக் கொண்டது, சுலபமாக விற்பனை செய்யப்படக் கூடியது. எல்லாவற்றுக்கும் முக்கியமானது என்னவென்றால், மதிப்பைத் திரட்டுவதற்கும் காப்பாற்றுவதற்கும் உகந்த சாதனமாக அதைச் செய்திருக்கும் நீண்டகால மரபின்படி அது செல்வமாகும். வேறு வார்த்தைகளில் சொல்வ தென்றால், பணம் அல்லாதது என்ற வகையிலும்கூட அது இன்னும் பணத்துக்கு நெருக்க மானதாக இருக்கிறது. ஆனால் மறுபக்கத்தில் பணம் என்ற வகையில் மேலே சொல்லப்பட்ட காகிதக் கடன் விலையுயர்ந்த பொருள்களிலிருந்து அதன் பிரகாசமான சடத்தன்மையினால் வேறுபடுகிறது. இந்தப் பிரகாசமான சடத் தன்மையைப் பணத்தோடு சேர்த்துக் கருதுவதற்கு இனிமேல் நவீன மனிதனால் முடியாது.

இந்த வாதங்கள் சிக்கலானவையாகத் தோன்றும். ஆனால் யதார்த்தமும் சிக்கல் மிகுந்ததுதானே! அதை “ஆம்” அல்லது “இல்லை” என்ற

நிலைமைக்கு எளிமைப் படுத்துவது அதன் சாராம்சத்தையே மறந்து விடுகின்ற ஆபத்தைக் கொண்டிருக்கிறது.

# தங்கத்தால் ஏற்பட்ட பேரழிவு

**த**ங்க யுகத்தைப் பற்றி நினைக்கும்பொழுது மகிழ்ச்சி நிரம்பிய உன்னதமான காலத்தைப் பற்றிய சித்திரம் தோன்றுகிறது. தங்கம் ஆட்சி செய்யாத காலம்தான் தங்கயுகம் என்று அறிவுமிக்க பிரெஞ்சுக்காரர் ஒருவர் சுமார் இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்பு கூறினார். ஆனால் வர்க்க சமூகத்தின் உண்மையான வரலாற்றில் (எழுதப் பட்டிருக்கும் வரலாற்றுக்கு அத்தகைய சமூகத்தைப் பற்றி மட்டுமே ரியும்) தங்கமும் கொலையும் கைகோர்த்துச் செல்கின்றன. தனி மனிதர்களைக் கொலை செய்தல், பெருந்திரளான மக்களை ஒழித்தல், மக்களினங்களையே மொத்தமாக அழித்தல் (சமீப காலத்தில் இதை genocide என்று சொல்கிறோம்).

வெட்டியெடுக்கப்பட்ட மற்றும் திரட்டப்பட்ட தங்கத்தைப் பற்றியது. தங்கத்தை வெட்டியெடுக்குமாறு மக்களை நிர்ப்பந்திப்பது, உயிர்போகும் வரை உழைக்குமாறு அவர்களைக் கட்டாயப் படுத்துவது. வரலாற்றுக்குத் தெரிந்த தங்கத்தால் ஏற்பட்ட பேரழிவின் இரண்டு பிரதான வடிவங்கள் இவை. நாகரிகமான 19,20ம் நூற்றாண்டுகளில் இந்தத் தீவிரமான வடிவங்களை நாம் அடிக்கடி சந்திப்பதில்லை. ஆனால் இந்தக் காலகட்டத்திலும் தங்கம் மக்களுக்கு மரணத்தையும் தேசிய மற்றும் இன ஒடுக்கமுறையையும் கலாச்சாரப் பண்புகளை வேரறுப்பதையும் கொண்டு தருகிறது.

தங்கத்தை ஏன் தனியாகக் குறிப்பிட வேண்டும் என்று நீங்கள் கேட்கலாம். வெற்றியாளர்கள் தோல்வியடைந்தவர்களிடமிருந்து நிலத்தையும் கால் நடைகளையும் மற்ற உடைமைகளையும் எல்லாக் காலங்களிலுமே பறித்திருந்தார்கள். ஈவிரக்கமற்ற அடிமை உடைமையாளர்கள் கரும்பு, புகையிலை மற்றும் காபித்தோட்டங்களில் உழைக்கமாறு மக்களை நிர்ப்பந்தித்திருந்தார்கள். ஆனால் தங்கம் என்பது கால்நடை அல்ல, அது கரும்பு அல்லது புகையிலை யுமல்ல. மற்றும் காபித் தோட்டங்களில் உழைக்குமாறு மக்களை நிர்ப்பந்தித்திருந்தார்கள். ஆனால் தங்கம் என்பது கால்நடை அல்ல, அது கரும்பு அல்லது புகை யிலையுமல்ல. அது செல்வம், செல்வத்தின் நேரடியான, தனிமுதலான வடிவம், தங்கத்தில்,

பணத்தில் மற்ற எல்லாப் பண்டங்களும் எல்லா வாய்ப்புக்களும் பொருள்கள் மற்றும் மக்கள் மீது எல்லா அதிகாரமும் இருக்கின்றன.

பூஷ்கினுடைய மணிச்செறிவான கவிதையின் பின்வரும் பகுதியைக் காண்கிறோம்.

''எல்லாம் என்னுடையது'' என்றது தங்கம்.

''எல்லாம் என்னுடையது'' என்றது வாள்.

''என்னால் எல்லாவற்றையும் வாங்க முடியும்'' என்றது தங்கம்.

''என்னால் எல்லாவற்றையும் பறிக்க முடியும்'' என்றது வாள்.

இந்த வாதத்துக்கு முடிவு என்ன? எல்லாவற்றையும் வாங்குவதற்காக வாள் பலத்தைக் கொண்டு தங்கத்தைப் பறித்துக்கொள்; இது ஒன்றே இந்த வாதத்துக்கு இயற்கையான சமரசமாகும். வெற்றியாளர்களும் இதையே செய்ய முயற்சித்தார்கள்.

அவர்களில் பலருக்கு நிலம், கால்நடை, அடிமைகள்கூட திருப்தியளிக்கவில்லை. இவற்றுக்கு நேரம், உழைப்பு ஆகியவற்றைச் செலவிட்டு மேற்பார்வை செய்தால்தான் வருமானம் கிடைக்கும். யுத்தத்தில் தங்கத்தைக் கொள்ளையடிப்பது இவற்றைக் காட்டிலும் மிகவும் வசதியானதாக இருக்கிறது. பழங்காலம் மற்றும் மத்திய காலத்தைச் சேர்ந்த வெற்றியாளர்கள் அரிய உலோகங்கள், வைரங்கள், இதர எளிதில் எடுத்துச் செல்லப்படக்கூடிய செல்வங்களைக் கைபற்றிக்கொண்ட பிறகு மிச்சமிருக்கும் எல்லாவற்றையும் நெருப்புக்கும் வாள்முனைக்கும் இரையாக்குவார்கள்.

பட்டினி கிடக்கும் மனிதன் ஒரு ரொட்டித் துண்டுக்காகக் கொலை செய்த சம்பவங்கள் நடைபெற்றிருக்கின்றன. நன்றாகச் சாப்பிட்டுக் கொழுத்த, நன்றாக உடையணிந்த ஒரு நபர் ஒரு சாக்கு (அல்லது நூறு சாக்குகள்) ஜீனிக்காகக் கொலை செய்வதாகக் கற்பனை செய்வது கூட சுலபமல்ல. ஆனால் தங்கத்துக்காகக் கொலை செய்வது எல்லாக் காலங்களிலுமே அநேகமாக இயற்கையானதாகவே கருதப்பட்டது.

# பழங்காலம்

**ப** ழங்காலத்தில் எகிப்தில் மிகவும் அதிகமான தங்கம் இருப்பதாகக் கருதப்பட்டது. பல தலைமுறைகளாக அடிமைகளின் கடுமையான உழைப்பினாலும் ஆப்பிரிக்காவின் உள்நாட்டிற்குள் நடத்திய இரத்தக் களரியான போர்களிலும் பரோவா அரசர்களும் மதகுருக்களும் ஏராளமான தங்கப் பொக்கிஷங்களைத் திரட்டி வைத்திருந்தார்கள். ஆகவே கி.மு.மூன்றாவது, இரண்டாவது, முதலாவது ஆயிரமாண்டுகளின்போது எல்லா வெற்றி வீரர்களுக்குமே எகிப்து ஒரு கவர்ச்சியான இலக்காக இருந்தது. கி.மு.24–ம் நூற்றாண்டைச் சேர்ந்த மாபெரும் வீரரான சார்கோன் மெஸபொடேமியாவில் ஒரு அரசாக இருந்த அக்காடின் அரசரவார். அவர் தங்கத்தையும் செம்பையும் பெறுவதற்காக நடத்திய போர்ளில் முழு மெஸபொடேமியாவையும் கிழக்கு மத்தியதரைக் கடல் பிரதேசத்தையும் வெற்றிகொண்டார். ஆனால் அவரால் எகிப்தைப் பிடிக்க முடியவில்லை. எகிப்து தொடர்ந்து தங்கத்தைத் திரட்டியது. கி.மு.7–ம் நூற்றாண்டில் அஸ்ஸிரியாவின் அரசரான அசார்ஹாட்டன் பலவீனமடைந்த எகிப்தை முறியடித்து அதன் செல்வங்களைக் கொள்ளையடித்தார்.

அசார்ஹாட்டனுடைய செல்வங்கள் அஸ்ஸிரியாவின் தலைநகரமான நினேவியாவில் சேமித்து வைக்கப் பட்டிருந்தன. ஒரு நூற்றாண்டுக்குப் பிறகு இவை பாபிலோனியர்களால் கைப்பற்றப்பட்டன. ஆனால் இந்தச் செல்வங்களை நீண்ட காலத்துக்கு வைத்திருக்க அவர்களாலும் முடியவில்லை. கி.மு.6ம் நூற்றாண்டின் பிற்பாதியில் பாரசீகத்தின் அரசரான சைரஸ் பாபிலோனைக் கைப்பற்றிக் கொள்ளையடித்தார். அவருடைய மகன் கம்பைசஸ் இதோடு திருப்தியடைய வில்லை. அவர் பரோவா அரசர்களுடைய செல்வங்களை மீண்டும் கொள்ளையடித்தார். பிறகு எகிப்துக்குத் தெற்கேயுள்ள தங்கம் அதிகமாகக் கிடைக்கும் பிரதேசங் களைக் கைப்பற்ற முடிவு செய்தார். அங்கே அவர் தன்னுடைய ராணுவத்தோடு அழிந்தார்.

பாபிலோனிலிருந்த பாரசீகர்களைப் பற்றி ஹெரடோடஸ் பின்வரும் கதையைக் குறிப்பிட்டிருக்கிறார். நகரத்தின் முக்கியமான பகுதியில் ஒரு பாபிலோனிய அரசியின் கல்லறை இருந்தது. அதன்மீது பின்வரும் வாசகம் பொறிக்கப்பட்டிருந்தது. “பாபிலோனில் சிம்மானத்தில் அமர்ந்திருக்கும்

என்னுடைய வாரிசுகளில் யாருக்காவது செல்வங்கள் தேவைப்பட்டால் அவர் என்னுடைய கல்லறையைத் திறந்து தனக்கு விருப்பமுள்ள அளவுக்கு எடுத்துக்கொள்ளட்டும். ஆனால் உண்மையிலேயே அவசியம் ஏற்பட்டாலொழிய அவர் இதைச் செய்யக் கூடாது. அது அவருக்கு நன்மையைத் தராது.'' பாரசீகத்தின் அரசரான டரையஸ் பாபிலேனுக்கும் அரசராக இருந்தார். அவருக்கு இது ஆசையைக் கொடுத்தது. ஆனால் கல்லறையைத் திறந்த பொழுது அதில் அரிய செல்வங்கள் இல்லை. அதிலிருந்த கல்லில் பின்வரும் வாசகம் பொறிக்கப்பட்டிருந்தது: ''உனக்குப் பணத்தாசை அதிகம். அந்தப் பணம் எப்படிக்கிடைக்கிறதென்பதைப் பற்றியும் நீ கவலைப்பட வில்லை. இல்லையென்றால் நீ செத்துப்போனவர்களின் சமாதிகளைத் திறந்திருக்க மாட்டாள்.''

கி.மு.4ம் நூற்றாண்டில் ''உலகத்திலிருக்கும் தங்கம் அனைத்துமே'' பாரசீக அரசர்களின் கருவூலங்களில் திரட்டப்பட்டிருந்தது. பாரசீகத்தை முறியடித்த பிறகு மாபெரும் அலெக்சாந்தர் நம்பவும் முடியாத அளவு தங்கத்தையும் வெள்ளியையும் கைப்பற்றினார். பழங்காலத்தில் இதைப் பற்றி ஏராளமான கதைகள் தோன்றின. பாரசீகத்தின் மூன்று தலைநகரங்களிலிருந்து [பெர்ஸிபோலீஸ், சூஸா மற்றும் எக்பதானா] 3,40,000 டேலன்டுகள் தங்கமும் வெள்ளியும் கைப்பற்றப்பட்டன. இதை 10,000 டன்கள் என்று மதிப்பிடலாம். அலெக்சாந்தரின் பேரரசு வீழ்ச்சியடைந்தன பிறகு, எண்ணற்ற யுத்தங்களும் வெற்றிகளும் ஏற்பட்டகாலத்தில் இந்த பிரம்மாண்டமான செல்வம் அன்றைக்கிருந்த நாகரிக உலகம் முழுவதிலும் சிதறிக் கிடந்தது. கிரேக்கப் பரம்பரையைச் சேர்ந்த அரசர்களில் ஒருவர் பாக்டிரியாவில் [மத்திய ஆசியாவில் ஒரு அரசு] ஆட்சி செய்தார். அவர் மிகப் பெரிய தங்க நாணயத்தை வெளியிட்டார். அதன் எடை 168 கிராம்கள், குறுக்களவு 58 மில்லிமீட்டர்கள்.

ரோமில், குறிப்பாக ஸ்பெயினை வெற்றி கொண்ட பிறகு [கி.மு.3ம் நூற்றாண்டு], கால்லியா மற்றும் எகிப்தை வெற்றிகொண்ட பிறகு [கி.மு.1ம் நூற்றாண்டு] தங்க இருப்பு ஏற்படுத்தப்பட்டது. அலெக்சாந்தரைப் போல ஜூலியஸ் சீசர் அதிர்ஷ்டாசலியல்ல; ஆனால் அவரும் ஒவ்வொரு படையெடுப்புக்குப் பிறகும் ரோமுக்குத் தங்கத்தை அனுப்பிக் கொண்டிருந்தார். கால்லியாவிலிருந்து மிக அதிகமான அளவில் தங்கம் வந்தபடியால் வெள்ளியோடு ஒப்பிடும்பொழுது தங்கத்தின் விலை கால்பங்கு குறைந்தது. ஜூலியஸ் சீசர் கால்லியாவில் ''ஏராளமான காணிக்கைகளை வைத்திருந்த கடவுளின் ஆலயங்களையும் மடங்களை யும்

கொள்ளையடித்தார்; நகரங்களை தவறு செய்ததற் காகத் தண்டித்தைக் காட்டிலும் பெரும்பாலும் கொள்ளையடிப்பதற்காகவே அவற்றை அழித்தார்" என்று ஸ்ட்டோனியஸ் எழுதுகிறார்.

அரிய உலோகங்கள் வெட்டியெடுக்கப்படும் சுரங்கங்கள் எப்பொழுதுமே மனிதர்கள் கட்டாய உழைப்பில் ஈடுபடுத்தப்படுகின்ற இடங்களாக இருந்திருக்கின்றன. அங்கே மனிதனுடைய உயிருக்கு எந்த மதிப்பும் இல்லா திருந்தது என்பதை வரலாறு எடுத்துக் காட்டுகிறது. மாபெரும் பிரமிட் கோபுரங்கள் கட்டப்பட்டதைப் போலவே எகிப்தில் பெரிய அளவில் தங்கத்தை வெட்டியெடுப்பதும் அடிமை உழைப்பின் மூலமாக மட்டுமே சாத்தியமாயிற்று. ரோமானியர்கள் ஸ்பெயினுக்கு ஆயிரக்கணக்கான அடிமைகளை அனுப்பிய பிறகுதான் அங்கே தங்கச் சுரங்கத்தொழில் வளர்ச்சியடைந்தது.

குடும்ப, விவசாய மற்றும் கைவினைஞர்களது அடிமைத்தனம் இத்தகைய பயங்கரமான சுரண்டலை ஒருபோதும் கண்டதில்லை. ஆனால் எங்கே பணம் நேரடியாக உற்பத்தி செய்யப்படுகிறதோ அங்கே பேராசையும் கொடுமையும் தனது தனிமுதலான வடிவங் களில், அதாவது மனிதத் தன்மை முற்றிலும் அகற்றப்பட்ட நிலையில் தோன்றிவிடுகின்றன. மார்க்ஸ் பின்வருமாறு கூறுகிறார். "பழங்காலத்தில் பரிவர்த்தனை மதிப்பை அதன் பிரத்யேகமான, சுயேச்சையான பண வடிவத்தில் தங்கம் மற்றும் வெள்ளியின் உற்பத்தியில் அடைவது நோக்கமாகும் பொழுது மட்டுமே அதிக உழைப்பு கோரமானதாகிறது. உயிர்போகும் வரை உழைக்க வேண்டுமென்று கட்டாயப்படுத்துவது இங்கே அதிக உழைப்பின் அங்கீகரிக்கப்பட்ட வடிவமாக இருந்தது. இதை அறிந்து கொள்ள டியொடோரஸ் சிசிலியனைப் படித்தால் போதும்.

கி.மு.முதல் நூற்றாண்டைச் சேர்ந்த கிரேக்க வரலாற்றாசியரும் திறமைமிக்க வர்ணனையாளருமான டியொடோரஸ் பிடாலமிகளின் ஹெல்லெனிக் மரபின்போது எகிப்தின் சுரங்கத் தொழிலைப் பற்றியும் தங்க உற்பத்தியின் தொழில்நுட்ப முறையைப் பற்றியும் நுணுக்கமான வர்ணனைகளை எழுதியிருக்கிறார். கூட்டம் கூட்டமாக ஆண்கஷீமீ, பெண்கள், குழந்தைகள் அநேகமாக உடைகளே இல்லாமல் மேற்பார்வையாளரின் சவுக்கடிகளைத் தாங்கிக் கொண்டு உழைக்கும் காட்சியை அவர் வர்ணித் திருக்கிறார். களைப்பாலும் நோயாலும் சீக்கிரத் திலேயே மரணமடைவதைத் தவிர அவர்கள் எதிர்நோக்கக் கூடியது வேறு ஒன்றுமில்லை.

கிரேக்க மற்றும் ரோமானியக் காலங்களின்போது குற்றவாளிகளுக்குத் தங்கச் சுரங்கங்களில் முதுகொடியப் பாடுபடுமாறு தண்டனை விதிப்பது வழக்கமாக இருந்தது. வட்டரங்குகளில் மூர்க்கத்தனமான மிருகங் களால் கிழித்துக் கொல்லப்பட்ட தொடக்கால கிறிஸ்தவர் களைக் காட்டிலும் பல மடங்கு அதிகமான வர்கள் முதலில் சொல்லப் பட்டதில் நாடகக் கவர்ச்சி இருபத்தனால் எழுத்தாளர்களும் கலைஞர்களும் அதைப் பற்றியே அதிகமான எழுதுகிறார்கள். பிற்காலக் கிறிஸ்தவர்கள் புறச்சமயிகளை இதைப் போலவே தங்கச் சுரங்கங்களின் பாடுபடுமாறு கொடுமைப்படுத்தினார்கள்.

ஸ்பெயினில் தங்கம் உற்பத்தி செய்யப்பட்ட முறைகளை மூத்தபிளினி வர்ணித்திருக்கிறார். டியொடோரஸின் வர்ணனையோடு ஒப்பிடும்பொழுது அவருடைய வர்ணனை உணர்ச்சிக்குறைவானதே. ஆனால் அவரும் சாராம்சத்தில் அதே அளவுக்குப் பயங்கரமான சித்திரத்தைத்தான் தீட்டுகிறார். அவர் எழுதியுள்ள பின்வரும் பகுதியை உதாரணமாகக் கூறலாம். பூமியின் கீழ் பாடுபட்டவர்கள் பல மாதங்களுக்கு நேரத்திலும் உயிருக்கு ஆபத்து ஏற்படும், ஆயிரக்கணக்கானவர்கள் அங்கே மடிந்தார்கள் என்று அவர் எழுதிகிறார். சுரங்கத் தொழிலாளிகள் பூர்விகமான கருவிகளை உபயோகித்து கடினமான கற்பாறைகளை வெட்டுவதை வர்ணிக்கும் பொழுது இந்தப் பாறையைக் காட்டி லும் அதிக கடினமானது தங்கஆசை என்று கூறுகிறார். நிச்சயமாக, அவர் அடிமைகளின் ஆசையைக் குறிப்பிடவில்லை. உடைமையாளர்களின் பேராசையைத்தான் குறிப்பிட்டார்.

# வெள்ளையர்களின் கடவுள்

**ஸ்** பானிஷ்காரர்கள் எஸ்பனியோலா தீவைப் பிடித்த பொழுது ஹாடுவே என்ற கசிக் [இனக் குழுவின் தலைவருக்கும் நிலப்பிரபுத்துவ அரசருக்கும் இடைப்பட்ட நிலை] கியூபாவுக்குத் தப்பியோடினார். அவர் அங்கேயிருந்த சுதேசி இந்தியர்களிடம் தங்கம்தான் வெள்ளையர்களுக்குக் கடவுள் என்று கூறினார். சுதேசிகள் தங்களிடமிருக்கும் எல்லாத் தங்கத்தையும் ஆற்றில் எறிந்துவிட வேண்டும். அப்போதுதான் வெள்ளையர்களால் தங்களுடைய கடவுளைக் கண்டுபிடிக்க முடியாது. சுதேசிகளுக்கும் நிம்மதிகிடைக்கும் என்றார்.

பார்த்தலோமி டெலாஸ் கஸாஸ் என்ற ஸ்பானிஷ் பாதிரியார் இவ்வாறு எழுதுகிறார். அவர் ஒரு தொடக்கக் கால மனிதாபிமானி, இந்தியர்களுக்கு அறிவூட்டப் பாடுபட்டவர். தங்கத்துக்காக லட்சக்கணக்கானவர்கள் கொல்லப்பட்ட ஸ்பானியர்களின் வெற்றியின் முதல் சில பத்தாண்டுகளைப் பற்றி அவர் முக்கியமான குறிப்புகளை எழுதியிருக்கிறார்.

கொலம்பஸ் புதிய நாடுகளைக் கண்டுபிடித்தார் [இவை பிறகு ஏற்பட்ட ஒரு தப்பெண்ணத்தினால் அமெரிக்கா என்று கூறப்பட்டன]. தங்கத்தை அடைவது தான் அந்தப் பிரயாணத்தின் முக்கிய நோக்கமாக ஒருவேளை இருந்திருக்கலாம். இன்று இதை நம்புவது கூடக் கடினமே. அவர் புதிதாகக் கண்டுபிடித்த எஸ்பனியோலாவிலிருந்து எழுதிய முதல் கடிதத்தில் முதலிலிருந்து கடைசிவரை இடம் பெற்றிருப்பது தங்கமே. அந்த தீவின் நதிகளில் தங்கம் இருக்கிறது. ஆகவே மலைகளிலும் தங்கம் இருக்கும் என்பது நிச்சயம் என்று பரபரப்பாக எழுதினார்.

அவர் பத்து வருடங்கள் கடலில் பயணம் செய்து புதிய நாடுகளைக் கண்டுபிடித்த பிறகு 1503ல் ஜமாய்காவிலிருந்து அரசர் பெர்டினான்டுக்கம் அரசி இசபெல்லாவுக்கும் எழுதிய கடிதத்தல் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட நாடுகளில் [இது ஒரு கண்டம்-மத்திய அமெரிக்க பூசந்தி- என்பது பின்னால் தெரிய வந்தது] உள்ள செல்வங்களைப் பற்றி மிகவும் ஆர்வ மூட்டுகின்ற வகையில் வர்ணித்தார். “தங்கம் எல்லாப் பண்டங்களிலும் மிகவும் விலையுயர்ந்தது. தங்கம் தான் செல்வம். அதை வைத்திருப்பவர்கள் உலகத்தில் தங்களுக்கு வேண்டிய எல்லாவற்றையும் அதோடு

நரகத்திலிருந்து உயிர்களைக் காப்பாற்றி அவர்களுக்கு சுவர்க்கத்திலிருக்கும் சுகபோகத்தை அனுபவிக்கும் சாதனங்களையும் அடைய முடியும்.'' கசிக் ஹாடுவேயின் வெகுகுளித்தனமான கருத்துக்களுக்கும் இவற்றுக்கும் அதிக வித்தியாசமில்லை என்பதைக் காண முடியும்.

ஹாய்தியிலும் மற்ற ஆன்டில் தீவுகளிலும் பூசந்தியிலிருந்த பிரதேசங்களிலும் தங்க இருப்புக்கள் அதிகமில்லை என்பது பின்னர் தெரியவந்தது. கொலம்பஸ் வேகமாக வீழ்ச்சியடைந்ததற்கு இதுவும் ஒரு காரணமாகும். 1493–1520ம் வருடங்களுக்கிடையில் மேற்கு இந்தியத் தீவுகளில் [பிரதானமாக ஹாய்தியில்] 22 டன்கள் தங்கமே வெட்டியெடுக்கப்பட்டன என்று சேத்பெர் மதிப்பிடுகிறார். இந்தத் தங்கத்தைப் பெறுவதற்காக அநேகமாக ஹாய்தி யின் தீவின் மக்கள் தொகை அனைவருமே அழிக்கப்பட்டார்கள். அந்த தீவின் மக்கள் தொகை முதலில் 10 முதல் 30 லட்சமாக இருந்ததென்று பல மதிப்பீடுகள் உள்ளன. 1514–ம் வருடத்தில் 13,000 மக்கள் மட்டுமே எஞ்சியிருந்தார்கள் என்று லாஸ் கஸாஸ் கூறுகிறார். இந்தக் காலகட்டத்தின்போது ஸ்பானிஷ்காரர்களின் தங்க வேட்டையின் விளைவாக மத்திய அமெரிக்காவின் வேறு பகுதிகளிலிருந்த ஏராளமான மக்களும் அழிந்தார்கள் என்பதை நினைவு படுத்திக்கொண்டால் இந்த 22 டன்கள் தங்கத்தின் விலை என்று சொல்வது தவறல்ல. மஞ்சள் உலோகத் தின் இரத்தக் கறை படிந்த வரலாற்றில் இது மிகக் குரூரமான சாதனையே. மக்களை அழிப்பதற்குச் செய்யப்பட்டிருந்த அரக்கத்தன முறை, சுரங்கங்களில் முதுகொடியப் பாடுபடுதல், ஆயிரக்கணக்கானவர்கள் பட்டினி கிடந்து மடிதல் –ஸ்பானிஷ் வெற்றியாளர்கள் செய்த இப்படிப்பட்ட காட்டுமிரண்டித்தனமான கொடுமை களை லாஸ்கஸாஸ் வர்ணித்திருக்கிறார் [பல பார்வையாளர்களுடைய எழுத்துக்களும் இவற்றை உறுதிப்படுத்துகின்றன] இதைப் படிக்கும்பொழுது நமக்கு உடல் நடுக்க மேற்படுவது இயற்கையே.

''அவர்கள் கைகளில் சிலுவைகளையும் இயதங்களில் தங்கத்தின் மீது தணியாத ஆசையையும் வைத்துக் கொண்டு முன்னேறினார்கள்'' என்று லாஸ் கஸாஸ் தன்னுடைய நாட்டு மக்களைப் பற்றி எழுதினார்.

பழைய அமெரிக்காவில இரண்டு நாகரிகங்கள் அதிகமான வளர்ச்சியடைந்தவை யாக, சுவாரசியம் நிரம்பியவையாக இருந்தன. அவை இன்று மெக்சிகோ என்று பெயரிடப்பட்டிருக்கும் பிரதேசத்திலிருந்த அஸ்டெக் அரசு மற்றும் பெருவிலிருந்த இன்கா அரசே. எல்லா

இடங்களிலும் சம்பவங்களின் போக்கு ஒரே மாதிரியாகவே இருந்தது. முதலில் ஸ்பானிஷ்காரர்கள் தாங்கள் கைப்பற்றிக் கூடிய எல்லாத் தங்கத்தையும் பறித்துக்கொள்வார்கள். பிறகு தாங்கள் அடிமைப்படுத்திய இந்தியர்களை தங்க, வெள்ளிச் சுரங்கங்களிலும் வயல்களிலும் பாடுபடுமாறு கட்டாயப்படுத்துவார்கள் மெக்சிகோவிலும் பெருவிலுமிருந்து இந்தியர்களுக்குத் தங்கம் அநேகமாக சிறிதும் பணமாகப் பயன்படவில்லை. மதச் சடங்குகளின் போதும் மதச் சார்பில்லாத விழாக்களின்போது ஆபரண மாக அணிந்துகொள்ளும் உலோகம் என்ற அளவில் மட்டுமே அதை உபயோகித்து வந்தார்கள். கொலம்பஸைப் போலவே மெக்சிகோவை வெற்றி கொண்ட கோர்டசும் பெருவைக் கைப்பற்றிய சிசார்ரோவும் உணர்ந்தோ, உணராமலோ கூறினார்கள். அவர்களுடைய படையெடுப்புகளுக்கு ஆட்கள் சேர்ப் பதற்காக, அரசரின் தயவைப் பெறுவதற்காக, வங்கி முதலாளிகளிடமிருந்தும் வணிகர்களிடமிருந்தும் பணம் வாங்குவதற்காக அவர்கள் இவ்வாறு மிகைப்படுத்திக் கூற வேண்டியிருந்தது. உண்மையில் இந்த இரண்டு அரசுகளிலுமிருந்த தங்கப் பொருள்களின் அளவு அவ்வளவு அதிகமல்ல; ஆற்றுப் படுகைகளிலிருந்து கிடைத்த வருடாந்தர உற்பத்தியும் அற்பமாகவே இருந்தது.

அஸ்டெக்குகளின் தலைநகரமான டெனேச்டிட்லனை முற்றுகையிட்டுக் கைப்பற்றியபொழுது அங்கே வசித்த 3,00,000 மக்களில் 2,40,000 பேர்கள் கொல்லப் பட்டதாகவும் வெற்றியாளர்கள் 600 கிலோ தங்கத்தையே கைப்பற்றியதாகவும் பழைய சுவடிகள் கூறுகின்றன. அடுத்த 24 வருடங்களில் மெக்சிகோவில் 5 டன்கள் தங்கத்துக்கு மேல் உற்பத்தி செய்யப்படவில்லை என்று சேத்பெர் மதிப்பிடுகிறார்.

ஸ்பானிஷ்காரர்கள் தங்கவெறியினால் குறிப்பிடத்தக்க சாதனைகளையும் பயங்கரமான கொடுமைகளையும் செய்தார்கள். இவை அங்கே வசித்த சுதேசி மக்களுக்குத் திகைப்பைக் கொடுத்தன. ஸ்பானிஷ்காரர்கள் தங்கத்தை மட்டுமே தேடினார்கள். ஸ்பானிஷ் காரர்கள் தங்கத்தை அரிய செல்வங்களை பச்சை நீலக் கற்களைப் போன்ற டெனோச்டிட்லன் நகரத்தின் அழிவைப் பற்றிய இந்தயிக் கதைகளில் ஒன்று கூறுகிறது. “அவர்கள் குரங்குகளைப் போல தங்கத்தைக் கைகளால் பற்றினார்கள். அந்தத் தங்கம் அவர்களுடைய இதயங்களை ஒளியினால் பிரகாசமாக்கி மாற்றிவிட்டதைப் போல மகிழ்ச்சியினால் நடுங்கினார்கள். அவர்கள் வர்ணிக்க முடியாத பசியோடு தங்கத்தைத் தேடு அவர்களுடைய வயிறுகள் வீங்கியிருக்கின்றன. ஆனால் இன்னும் பட்டினியாக இருப்பதைப் போல

தங்கத்தைத் தேடுகிறார்கள். பசியால் துடிக்கும் பன்றிகளைப் போல அவர்கள் தங்கத்துக்காகத் துடிக்கிறார்கள்'' என்று மேலும் எழுதப்பட்டிருக்கிறது.

பிசார்ரோவும் அவருடைய கோஷ்டியினரும் இன்கா அரசை முறியடித்தபொழுது இவை அனைத்தும் இன்னும் மிகக் குரூரமான சம்பவங்களோடு திரும்பவும் நடைபெற்றன. இன்கா அரசரான அடௌவால்பாவை விடுவிப்பதற்காக பிசார்ரோ மிகக் கேவலமான முறையில் 5.5 டன்கள் தங்கத்தையும் 11.8 டன்கள் வெள்ளியையும் மீட்புப் பணமாக வாங்கிக் கொண்டார் [எனினும் அவர் கொல்லப்பட்டார்]. இன்கா அரசின் தலைநகரமான குஸ்கோவைப் பிடித்தபொழுது ஸ்பானிஷ்காரர்கள் 1.1 டன்கள் தங்கத்தையும் 15 டன்கள் வெள்ளியையும் கைப்பற்றினார்கள். இன்கா அரசு படுநாசமாக்கப்பட்டது, அவர்களுடைய கலாச்சாரம் அழிக்கப்பட்டது.

ஸ்பெயின் நாட்டின் முதல் வெற்றியாளர்கள் அமெரிக்காவில் சிலுவை மற்றும் தங்கத்தின் மதத்தை நெருப்பினாலும் வாள் வலிமையினாலும் பரப்பிக் கொண்டிருந்த நேரத்தில் ஸ்பெயினில் அராபியர்களும் யூதர்களும் இனப்படுகொலை செய்யப்பட்டுக்கொண்டிருந்தார்கள். இதிலும் தங்கம் கொடிய பாத்திரத்தை வகித்தது. ஸ்பெயினிலிருந்து ''புறச் சமயங்களை'' நாடு கடத்தியபொழுது அவர்கள் அரிய உலோகங்களைத் தம்மோடு எடுத்துச் செல்லக்கூடாதென்று அதிகாரிகள் தடை செய்திருந்தனர். ஆனால் சிலர் தங்கத்தைத் தங்களுடைய வயிற்றுக்குள் மறைத்துக்கொண்டு போக முயற்சி செய்தார்கள். இவர்கள் தங்க நாணயங்களை உடைத்துப் பொடியாக்கி அதை விழுங்கினார்கள். ஸ்பெயினைச் சேர்ந்த யூதர்கள் பெஸ்ஸுக்கு [இன்றைய மொரொக்கோவுக்குத்] தப்பியோடினார்கள். ஆனால் இதைப் பற்றிக் கேள்விப்பட்டதும் பெஸ்ஸின் அராபியர்கள் தங்கத்தை அடைவதற்காக சில சமயங்களில் யூதர்களைக் கொன்று அவர்களுடைய வயிறுகளையும் அறுத்துப் பார்த்தார்கள்.

வெவ்வேறு காலங்களையும் மக்களினங்களையும் பற்றிய வரலாற்றிலும் நாட்டுக் கதைகளிலும் தங்கத்தை விழுங்கியதைப் பற்றி கதைகள் சோகமான மற்றும் வேடிக்கையான வடிவங்களின் திரும்பத்திரும்பச் சொல்லப்படுகின்றன. தன்னுடைய வாரிசுகளுக்கு ஆத்திரமூட்டுவதற்காக மரணமடைவதற்கு முன்பாக தன்னுடைய தங்கத்தை தேனோடு சேர்த்து விழுங்கிய பணக்காரரைப் பற்றி சேகவ் எழுதிய கதை இவற்றில் ஒன்றே.

# கடற்கொள்ளைக்காரர்கள்

**1512** –ல் அமெரிக்காவிலிருந்து தங்கத்தையும் வெள்ளியையும் கொண்டு வந்த ஸ்பானியக் கப்பல்கள் முதல் தடவையாகக் கடற்கொள்ளைக்காரர்களால் தாக்கப்பட்டன. இவர்கள் பிரான்ஸ் நாட்டைச் சேர்ந்த தனியார்கள். இதற்குப் பிறகு அநேகமாக மூன்று நூற்றாண்டுக் காலம் வரையிலும் அட்லாண்டிக் மாக்கடலில் எதிரிகளின் ராணுவக் கப்பல்களும் கடற்கொள்ளைக்காரர்களும் விலைமதிப்பற்ற பொருள் களைக் கொண்டுவரும் கப்பல்களை வேட்டையாடி னார்கள் ஸ்பானிய மற்றும் போர்த்துகீசிய யுத்தக் கப்பல்களும் கடற்கொள்ளைக்காரர்களை வேட்டையாடின. கடல் திருடர்களிடம் தங்கம் அகப்பட்டால்கூட அது இன்னும் பல கைகள் மாறிப் போகும். அதிலும் ரத்தத்தைக் கொட்டாமல் அது அநேகமாக நடைபெறவில்லை. இந்தப் போர்களிலும் கைகலப்புக்களிலும் (இவற்றைப்பற்றி எழுதப்பட்ட ஏராளமான நாவல்களில் சிறப்பானவையுமுண்டு. மோசமானவையுமுண்டு) எவ்வளவு பேர்கள் மடிந்தார்கள் என்பதை யாராலும் சொல்ல முடியாது.

ஸ்பானிய வைசிராளிணிகள் தங்கத்தைக் கொண்டு போகும் கப்பல்கள் புறப்படும் தேதிகளை முக்கியமான ரகசியமாக வைத்திருந்தார்கள். ஆனால் ஆங்கில, பிரெஞ்சு மற்றம் டச்ச ஒற்றர்கள் அந்தத் தேதிகளைக் கண்டு பிடிக்கத் தங்களாலியன்ற எல்லாவற்றையும் செய்ணிதார்கள். இங்கிலாந்தின் அரசியான முதலாம் எலிசபெத்துக்கு ரகசியத் தகவல் கிடைத்ததும் காப்டன் பிரான்சிஸ் டிரேக்கை பசிபிக் மாக்கடலுக்கு மகெல்லான் ஸ்ட்ரெயிட் வழியே அனுப்பினாள். பெருவிலிருந்து புறப்பட்டு பனாமாவை நோக்கிச் செல்லும் ஸ்பானியக் கப்பலை அங்கே தாக்கினால் எதிரிகள் தம்மை ஒன்றும் செய்ய முடியாது என்று கருதப்பட்டது. டிரேக் தம்முடைய பணியை வெற்றிகரமாக முடித்தார். ஸ்பானியர்களிடமிருந்து பல டஜன் டன்கள் தங்கம், வெள்ளி மற்றும் விலை மதிப்பற்ற வைரங்களைக் கைப்பற்றினார். 1850ல் கிழக்கேயிருந்து இங்கிலாந்துக்கு வெற்றிகரமாகத் திரும்பினார். உலகத்தைக் கப்பலில் சுற்றிவந்த இரண்டாவது நபர் என்று பிரபலமடைந்தார். ஸ்பானிய அரசரான இரண்டாம் பிலிப் 1588ல் இங்கிலாந்துக்கு எதிராக நடத்திய கடற் போர் மாபெரும் ஆர்மடாவின் வீழ்ச்சியோடு தோல்வியடைந்தது. தங்கம் மற்றும் வெள்ளி கொண்டுவரும்

பாதைகளில் இங்கிலாந்து நடத்தி வந்த கடற்கொள்ளையை ஒழிப்பது அந்தப் போரின் நோக்கங்களில் ஒன்றாக இருந்தது.

தங்கத்துக்காக நடைபெற்ற போராட்டத்தில் மிகவும் இரத்தக்களரியான, திடுக்கிடக் கூடிய சம்பவங்களில ஒன்று 1702–ல் ஸ்பானிய வாரிசுரிமைப் போரின்போது நடைபெற்றது. ஸ்பெயினின் வடமேற்குக் கரையோரத்தில் விகோ வளைகுடாவில் ஸ்பானிய–பிரேஞ்சுக் கப்பல்கள் தங்கத்தோடு மறைந்திருந்தன. ஆங்கில–டச்சுக் கப்பல்கள் அவற்றை வளைத்துக் கொண்டன. ஸ்பானிய –பிரெஞ்சுக் கப்பல்களில் 60 மில்லியன் பவுன் ஸ்டர்லிங் மிதிப்புள்ள தங்கம் இருந்தது. அது அந்தக் காலத்தில் மிகப் பெரிய தொகையாகும். அங்கே நடைபெற்ற போரில் சுமார் 3,000 நபர்களும் அநேகமாக மொத்தத் தங்கமுமே அழிந்தன. ஏனென்றால் எதிரிகளிடம் தங்கக் சிக்கிவிடக் கூடாதென்பதற்காக ஸ்பானியர்கள் கப்பல்களை வெடிவைத்துத் தகர்த்து விட்டார்கள். துரதிர்ஷ்டவசமாக அந்தத் தங்கம் கடலில் மிக ஆழமான பகுதியில் புதைந்துவிட்டது. அந்தத் தங்கத்தை எடுப்பதற்கு ஸ்பானியர்கள் செய்த முயற்சிகள் வெற்றியடையவில்லை. 19–ம் நூற்றாண்டில் ‘‘ஸ்பானியத் தங்கத்தை’’ மீட்பதற்காகத் கூட்டுப் பங்குக் கம்பெனிகள் நிறுவப்பட்டன. அதைப்பற்றி புத்தகங்களும் எழுதப்பட்டன. 20–ம் நூற்றாண்டிலும்கூட இச்செல்வத்தை மீட்பதற்கு முயற்சிகள் செய்யப்பட்டன. ஆனால் இதுவரையிலும் இச்செல்வத்தில் ஒரு சிறு பகுதி மட்டுமே மீட்கப்பட்டிருப்பதாகத் தோன்றுகிறது.

ஆர்.ஸ்டீவென்சன் எழுதிய பொக்கிஷத் தீவு என்ற பிரபலமான நாவல் இனிமையாக முடிவது நாம் அறிந்ததே. அதில் ஜிம்மு அவருடைய நண்பர்களும் கடற்கொள்ளைக்காரர்களின் தலைவனான காப்டன் பிளின்ட் மறைத்து வைத்திருக்கும் பொக்கிஷத்தைக் கண்டுபிடித்துவிடுகிறார்கள்: ‘‘அங்கே [அந்த குகையின்] தொலைவாக இருந்த மூலையில் தீப்பந்தத்தின் இருண்ட வெளிச்சத்தில் மாபெரும் குவியல்களாகக் கிடந்த நாணயங்களையும் நாற்கோணங்களாக அடுக்கப் பட்டிருந்த பாளங்களையும் பார்த்தேன்... அவற்றைத் திரட்டுவதற்கு எவ்வளவு பேர் உயிரிழந்திருப்பார்கள், எவ்வளவு ரத்தம் கொட்டப் பட்டிருக்கும்! எவ்வளவு துயரம்!’’ ஆசிரியருக்கு நாணயத் தொகுப்புக்களில் அக்கறை இருந்திருக்க வேண்டும். ஏனென்றால் அங்கே என்ன நாணயங்கள் இருந்தன என்று அவர் விவரிக்கிறார்: கினியாக்கள், லுயீடோர்கள், டுப்ளோன்கள், இரட்டை கினியாக்கள், மொய்டோர்கள் மற்றும் ஸெஹின்கள்....

மேற்கு ஐரோப்பாவின் மத்திய காலத் தங்க நாணய களைப் பற்றி ஒரு சில சொற்கள் எழுத வேண்டும். நவீனகாலத் தங்க நாணயம் பிறந்த வருடம் 1252 என்பது எல்லோராலும் அங்கீகரிக்கப்படுகிறது. அந்த வருடத்தில் பிளோரென்சில் 3.5 கிராம் தங்கத்தைக் கொண்ட பிளோரின் என்ற நாணயத்தை அச்சிடத் தொடங்கினார்கள். அந்த நாணயத்துக்கு நகரத்தின் பெயர் கொடுக்கப்பட்டது. 13ம் நூற்றாண்டில் அதே அளவு தங்கத்தைக் கொண்ட நாணயங்களை ஜெனோவாவிலும் வெனிசிலும் அச்சிடத் தொடங்கினார்கள். ஸெஹின்கள் அல்லது டுக்காட்டுகள் என்று பெயரளிக்கப்பட்டிருந்த லெனிஸ் நாணயங்கள் மிகவும் பிரபலமடைந்தன.

பல அரசுகளும் இதே பெயர்களில் நாணயங்களை அளவு தங்கத்தைக் கொண்ட நாணயம் குல்டென் என்று சொல்லப்பட்டது. இந்த நாணயங்கஷீமீ 17,18ம் நூற்றாண்டுகள் வரை மேற்கு ஐரோப்பா வின் பொருளாதார வளர்ச்சியில் தொடர்ந்து வருகின்றன. பிரதானமாக சர்வதேசச் செலாவணிக்காக வெளியிடப்பட்ட தங்க நாணயம் வெள்ளி நாணயத்தைக் காட்டிலும் குறைவாகவே சேதமடைந்தது. மதிப்புக் குறைந்தது. சில சமயங்களில் தங்க நாணயங் களிலிருக்கும் தங்கம் பல நூற்றாண்டுகள் வரை சேதமடையாதிருந்தது.

ஸ்டீவென்சன் குறிப்பிட்டிருக்கும் மற்ற நாணயங்கள் பிரதானமாக 17,18ம் நூற்றாண்டுகளின்போது அச்சிடப் பட்டன. லுயீடோர் (அதாவது “தங்க லுயீ”) பதிமூன்றாம் லுயீயின் காலத்தில் 1640ல் தோன்றியது. அதன் பிறகு 18ம் நூற்றாண்டின் கடைசியில் ஏற்பட்ட பிரெஞ்சுப் புரட்சி வரை (மூன்று லுயீ அரசர்களின் ஆட்சியின் கீழ்) அதன் தங்க உள்ளடக்கமும் தூய்மையும் மாறிக்கொண்டேயிருந்தன. கினியா என்ற நாட்டின் பெயரால் ஏற்பட்ட கினியா என்ற நாணயம் லுயீடோரை மாதிரியாகக் கொண்டிருந்தது. இது 1661ல் முதன் முதலாக அச்சிடப்பட்டது. லுயிடோர் மற்றும் கினியாவின் தங்க அடக்கம் 6.5க்கும் 8 கிராமுக்கும் இடையே மாறிய வண்ணமிருந்தது.

டுப்ளோன் (“இரட்டை எஸ்குடோ” மற்றும் “பிஸ்டோல்” என்றும் சொல்லப்படுவதுண்டு) 16 முதல் 18ம் நூற்றாண்டுவரை ஸ்பெயின் நாட்டின் முக்கியமான தங்க நாணயமாக இருந்தது. இதில் சுமார் 6.2 கிராம் தங்கம் இருந்தது.★ இந்த நாணயம் பிரான்சிலும் செலாவணியாயிற்று. மூன்று துப்பாக்கிவீரர்கள் என்ற பிரபலமான பிரெஞ்சு நாவலைப் படித்த பலரும் இதைப்பற்றி அறிந்திருப்பார்கள். உதாரணமாக, பிரெஞ்சு அரசியின் கௌரவத்தைக் காப்பாற்றுவதற்காக அர்ட்டஞான் என்ற வீரன் முந்நூறு பிஸ்டோல்களைப் பையி இரண்டு கிலோ எடை இருந்திருக்கலாம். தங்கச்

சந்தை விலைப்படி இன்றைய நாணயத்தில் 1,50,000–2,00,000 பிராங்குகள் மதிப்புக் கொண்டிருந்திருக்கலாம்.

# தங்க வேட்டைகள்

செ ன்ற நூற்றாண்டில் தோன்றிய இந்தச் சொல்லுக்கு சமீபகாலத்தில் வேறொரு அர்த்தம் கொடுக்கப் பட்டிருக்கிறது. 1968-ன் தொடக்கத்தில் வர்த்தக சூதாட்டக்காரர்கள் தங்கத்தின் டாலர் விலை அதிகரிக்கும் என்று எதிர்பார்த்து லண்டன் மற்றும் இதர சந்தைகளில் அதிகமான அளவுகளில் தங்கத்தை வாங்கியபொழுது அது தங்கவேட்டை என்று சொல்லப் பட்டது. 19ம் நூற்றாண்டில் நடைபெற்ற தங்க வேட்டைகளுக்கும் இதற்கும் ஒரு அம்சம் பொதுவாக இருக்கிறது. அதிர்ஷ்டத்தை, நம்ப முடியாத லாபத்தைத் தேடுவது அந்தப் பொது அம்சமாகும். ஆனால் என்னதான் மோசமான நிலை ஏற்பட்டாலும் வர்த்தக சூதாட்டக்காரர்களுக்கு இருந்தது [அல்லது பணத்துக்கு வட்டியை இழக்கும் ஆபத்து மட்டுமே இருந்தது. ஏனென்றால் தங்கத்தின் விலை குறையப்போவதில்லை]. 19-ம் நூற்றாண்டின் தங்க வேட்டைகள் பல்லாயிரக்கணக்கான மக்களுடைய உயிர்களைக் குடித்தன.

கலிபோர்னியாவிலும் ஆஸ்திரேலியாவிலும் அலாஸ்கா விலும் தங்கம் கண்டுபிடிக்கப்பட்டதும் இந்தப் பிரதேசங் களில் மக்கள் குடியேறும்பொழுது கடைப்பிடித்த காட்டுமிராண்டித்தனமான முறைகளின் விளைவாக அங்கே தொடக்கத்திலிருந்து வசித்தவர்கள் படிப்படியாக அழிந்தார்கள். "சுதந்திரமான தொழில் முயற்சியின்" மிகவும் அருவருக்கத்தக்க கூறுகளான சுரண்டுவதற்கும் ஏமாற்றுவதற்கும் சுதந்திரம், பணத்தின் கட்டுப்பாடில்லாத சக்தி, தன்னங்காரம் மற்றும் ஈவிரக்கமற்ற தன்மை, இனவெறி, வன்முறை மற்றும் குற்றங்களைச் செய்தல் ஆகியவை இக்கதைகள் ஒவ்வொன்றிலும் முழுமையாக வெளிப்பட்டன.

1849-1850ல் அமெரிக்காவின் கிழக்குப் பகுதி யிலிருந்தும் ஐரோப்பாவிலிருந்தும் பல்லாயிரக் கணக்கான மக்கள் கலிபோர்னியாவுக்குப் புறப்பட்டார் கள். அவர்களில் பலர் பிராயணத்தின்போது அன்று பண்படுதப்படாத, மனிதர்கள் கால்படாதிருந்த பிரதேசத் தில் அவர்களுடைய நீண்ட பயணத்தின்போது ஐந்தாயிரத் துக்கும் குறையாத எண்ணிக்கையினர் உயிரிழந்தார்கள் என்று மதிப்பிடப்பிட்டிருக்கிறது. கலிபோர்னியாவில் சீதபேதி மற்றும் ஊட்டக்குறைவு நோய்கள் பெருகின. தங்க வேட்டைக்காரருக்குக் கோடாலியையும் சட்டியை யும் போலவே துப்பாக்கியும் அவசியமான ஆயுதமாக இருந்தது.

கலிபோர்னியாவின் மக்கள் தொகை சில நூறு ஆயிரம் மட்டுமே என்றபோதிலும் 1849 முதல் 1854 வரை 4,200 கொலைகள் பதிவு செய்யப்பட்டன. புலன் விசாரணையோ, நீதிவிசாரணையோ இல்லாமல் கூட்டமாக மக்கள் சேர்ந்துகொண்டு பலரைக் கொலை செய்வது சாதாரணப் பழக்கமாக இருந்தது. நோயாளிகள், மூப்படைந்தவர்களுக்கு எந்த உதவியும் கொடுக்கப்பட வில்லை. அங்கே நடந்த சம்பவங்களை நேரில் பார்த்த ஒருவர் பின்வருமாறு எழுதினார். "வாழ்க்கைப் போராட்டத்தைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள்- அதை இங்கே கண்கூடாகப் பார்க்கலாம். யாராவது கீழே விழுந்துவிட்டால் அவரை மண்ணோடு சேர்த்து மிதித்துத் துவைத்து விட்டு பூமியும் வானமும் அவருக்கு இரக்கம் காட்டட்டும் என்று கருதிப்போய்விடுவார்கள். பணம், பணம் -அதுதான் இங்கே எல்லோர் கவனத்துக்கும் உரிய பொருள்."

தங்க வேட்டைக்காரர்களிடமிருந்து தங்கத்தை வாங்குபவர்கள் தங்கத்தின் அதிகாரபூர்வமான டாலர் விலைக்கு இரண்டு அல்லது மும் மடங்கு குறைந்த விலையையே கொடுத்தார் கள். அங்கேயிருந்த வியாபாரிகளும் பொழுது போக்கும் இடங்களின் உடைமையாளர்களும் தங்கவேட்டைக் காரர்களிடமிருந்து எல்லாவற்றையும் பறித்தார்கள். கலிபோர்னியாவில் சுலபமாகத் தங்கம் கிடைக்கிறது. புறப்படுங்கள் என்று மக்களைக் கூப்பிடும் விளம்பரப் பிரசுரம் 1849-ல் வெளியிடப்பட்டது. பெர்க்லியிலுள்ள கலிபோர்னிய பல்கலைக்கழக நூலகத்தில் இருக்கிறது. அதில் ஆசிரியர் பெயர் இல்லை. டி.எல். என்ற புனைபெயர் மட்டுமே அச்சிடப்பட்டிருக்கிறது. அது முழுப்பொய்யன் (Damn Liar) என்பதன் சுருக்கம் என்று துரதிர்ஷ்டவசமாக எல்லாவற்றையும் இழந்த ஒருவர் கூறினார்.

இத்தங்க வேட்டையில் வெள்ளையர் அல்லாதவர்களும்- இந்தியர்கள், மெக்சிக்கர்கள், சீனர்கள் -ஈடுபட்டார்கள். அவர்களுடைய நிலைமை மகிவும் மோசமகக இருந்தது; அவர்களில் தங்க வேட்டைக்கு பலியானவர்களின் எண்ணிக்கை கண்டுபிடித்தால் அதற்கு "உரிமை" கொண்டாட முடியாது. அவர்கள் வெள்ளையர் களிடம் வேலை பார்க்கலாம் அல்லது தங்கம் எடுக்கப்பட்ட பிறகு அந்தப் பாறைகளைக் சுரண்டலாம். வெள்ளையர்களின் இனவெளியினால் அவர்கள் பாதிக்கப்பட்ட பல சம்பவங்கள் பதிவு செய்யப்படடிருக்கின்றன. அங்கே யிருந்த வெள்ளை ஆங்கிலோ-சாக்ஸானியர்கள் ஸ்தலசுய நிர்வாக முறைகளை ஏற்படுத்திக் கொண்டார் கள். அந்த முறைகள் ஏழைகளுக்கும் மற்ற தேசியங்கள்,

இனங்களைச் சேர்ந்தவர்களுக்கும் எதிராகவே இயங்கின. இதைப் பற்றி ஒரு ஆங்கில எழுத்தாளர் பின்வருமாறு எழுதுகிறார். ‘‘ஜனநாயகத்தின் மகத்தான வெளிப்பாடு என்று 19-ம் நூற்றாண்டின் எழுத்தளார்கள் அடிக்கடி கூறுவார்களே, அது இதுதானா? அல்லது இருபதாம் நூற்றாண்டு விமர்சகர்கள் சுட்டிக்காட்டுகின்ற பாசிசத்தின் கரு வடிவம் என்பது இதுதானா?’’

ஆஸ்திரேலியாவில் நியூசவுத்வேல்ஸ் மற்றும் விக்டோரி மாற்றியது. அதற்கு முன்பு அது ஆங்கிலக் குற்றவாளிகள் கடுந் தண்டனை செளிணிவதற்கு அனுப்பப்படுகின்ற இடமாகவும் விரிந்த பரப்பைக் கொண்ட மேய்ச்சல் நிலமாகவுமே இருந்தது. இங்கே அதிகாரிகளின் கண்காணிப்பின் காரணமாக கலிபோர்னியாவைக் காட்டிலும் குறைவான கொலைகளும் அதிகமான ஒழுங்குமுறையும் இருந்தன. ஆனால் மொத்தத்தில் இங்கும் வரலாறு திரும்ப நடைபெற்றது.

ஆஸ்திரேலியத் தொழிலாளர்களின் முதல் ஸ்தாபன ரீதியான எதிர்ப்ப் நடவடிக்கை தங்கத்தோடு சம்பந்தப்பட்டிருக்கிறது. தங்கம் கண்டுபிடிக்கப்பட்ட ஒவ்வொரு ‘‘உரிமை’’ மீதும் அரசாங்கம் மிக அதிகமாக வரிவிதித்தது. இதனால் ஏற்பட்ட அதிருப்தியே உடனடியான காரணம் என்ற போதிலும் தொழிலா ளர்கள் இங்கிலாந்தின் சாஸனவாதிகளைப் போல வாக்குரிமையை விரிவுபடுத்துதல், நாடாளுமன்றத்தை ஜனநாயக்கபடுத்துதல் மற்றும் இதர அரசியல் கோரிக்கைகளை முன்வைத்தார்கள். 1854 இலையுதிர்காலத்தின்போது பல்லராட் [மெல்பர்னுக்கு வெகு தொலைவு அல்ல, பக்கத்திலேயே இருப்பது] என்ற தங்கம் கிடைக்கும் மாவட்டத்தில் தொழிலாளர்களுக்கும் போலீசாருக்கு மிடையே ஆயுதந் தாங்கிய மோதல் நடைபெற்றது, இதில் பல டஜன் பேர்கள் கொல்லப்பட்டார்கள். இது நடைபெற்ற ஹோட்டலனி பெயரால் ‘‘யூரேக்கா’’ என்று கூறப்படுகின்ற இப்படுகொலை பல பத்தாண்டுகளாக ஆஸ்திரேலிய தொழிலாளர் இயக்கத்தின் கோஷமாக, திக்கற்றவர்களின் போர்க்குணத்தைப் பற்றி ஆளும் வர்க்கத்தினருக்கு எச்சரிக்கையாக இருந்தது.

கடைசியாக நடைபெற்ற ‘‘மூலச் சிறப்பான’’ தங்க வேட்டை சென்ற நூற்றாண்டின் கடைசியில் வடக்கு கனடாவிலும் அலாஸ்காவிலும் தங்கம் கண்டுபிடிக்கப்பட்டபொழுது நடைபெற்றது. 1898ன் பருவ காலத்தின்போது கடற்கரைப் பகுதியிலிருந்து தங்கம் கிடைத்த இடமான குளோன்டைக் நதிப் பிரதேசத்துக்குச் சுமார் ஒரு லட்சம் பேர்கள் வந்தார்கள். தங்கத்

“தலைநகரமான” டாஸன் நகரத்துக்கு சில்க்கூட் கணவாயிலிருந்தும் யுகோன் வழியாகவும் கீழே இறங்கிப் போகும் பாதை நீளமானது. கடினமானது, ஆபத்தானது. முப்பதாயிரம் அல்லது நாற்பதாயிரம் பேர்கள்தான் அங்கே போய்ச் சோந்ததாக மதிப்பிடப்பட்டிருக்கிறது. வழக்கம் போல அவர்களிலும் சில டஜன் பேர்கள்தான் பணக்காரர்களானார்கள்.

கலிபோர்னியாவிலும் ஆஸ்திரேலியாவிலும் நடைபெற்ற தைப்போல இந்தத் தொலைதூரத்திலுள்ள ஆர்க்டிக் பிரதேசங்களில் தங்கம் புது வாழ்க்கையை ஏற்படுத்தவில்லை. வண்டற்படிவுகளில் தங்க வேட்டை ஓய்ந்த பிறகு இந்தப் பிரதேசத்தை மறந்துவிட்டார்கள். டாஸனில் [கனடாவைச் சேர்ந்த யுகோன் பிரதேசத்தின் மையம்] இன்று 750 பேர்கள்தான் வசிக்கிறார்கள்; தங்கவேட்டையின் உச்சகட்டத்தில் அங்கே 25,000 பேர்கள் வசித்தார்கள். உல்லாசப் பிரயாணம் வருபவர் களை நம்பி அந்த நகரத்தின வாழ்க்கை நடைபெறுகிறது. அவப்பெயர் பெற்ற கேளிக்கை விடுதிகள் மறுபடியும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. பழைய தங்க வேட்டைக்காரர்கள் உபயோகித்த கருவிகளைக் கொண்டு நடைபெறும் “தங்க வேட்டை விழாவும்” இன்னும் சில விழாக்களும் நடைபெறுகின்றன.

இன்று அவ்வப்பொழுது புதிதாகக் தங்கம் கண்டுபிடிக்கப் பட்ட செய்திகள் வருவதும் அவற்றினால் தங்க வேட்டைகள் சிறு அளவில் நடைபெறுவதும் உண்டு. ஆனால் இவற்றுக்குப் பொருளாதார முக்கியத்துவம் கிடையாது. தங்கம் அகப்படக்கூடிய மண்ணியல் இருப்புக்கள் பெரிய நிறுவனங்களின் இரும்புப் பிடியில் இருக்கின்றன.

# பாசிசமும் தங்கமும்

ஹிட்லர் ஜெர்மனி தங்கத்தின் பால் கடைப்பிடித்த கொள்கை ஐரோப்பாவின் மக்களினங்களின் மீது நாஜிகள் பயங்கரமான போலித்தனத்தில் மறைத்துக் கடைப்பிடித்த இனப்படுகொலைக் கொள்கையின் பிரிக்க முடியாத பகுதியாகும்.

ஜெர்மனி அநேகமாகத் தன்னிடமிருந்த எல்லாத் தங்க இருப்புக்களையும் யுத்தத் தயாரிப்புகளில் செலவிட்டது. யுத்தம்தொடங்கிய முற்பொழுதில் அதிகார பூர்வமாக ஜெர்மனியிடம்அநேகமாகத் தங்கம் கிடையாது. குறிப்பிட்ட அளவு தங்கம் ரகசிய இருப்புக்களில் வைக்கப்பட்டிருந்திருக்கலாம்.

1938–1939ல் ஐரோப்பிய நாடுகள் அவசரமாகத் தங்களுடைய தங்கத்தை அமெரிக்காவுக்கு அனுப்பி வைத்தன. அதில் ஒரு பகுதியை டாலர்களுக்கு விற்பனை செய்தன. மறு பகுதியை நாம் முன்னர் குறிப்பிட்ட நியூயார்க் மத்திய ரிசர்வ் வங்கியின் பாதாள அறைகளில் பாதுகாப்பாக வைத்தன. தங்கத்தின் பொருளாதாரப் பிரச்சினைகளைப் பற்றி பல பத்தாண்டுகளாக ஆராய்ந்து வந்திருக்கும் சோவியத் நிபுணரான எப்.மிகலேவ்ஸ்கி பின்வருமாறு நகைச் சுவையோடு எழுதுகிறார். ‘‘திருடர்கஷீமீ அடுத்தபடியாக ஒரு வீட்டைக் கொள்ளையடிக்க வேண்டுமென்று குறிவைத்திருக்கும் பொழுது, அதிலிருந்து விலையுயர்ந்த பொருள்களெல்லாம் அப்புறப்படுத்தப் படுவதைப் பார்ப்பதைப் போல ஐரோப்பாவிலிருந்து தங்கம் போய்க் கொண்டிருப்பதைப் பார்த்த பாசிஸ்டுகள் உணர்ந்திருக்க வேண்டும்.

நாஜி பிரச்சாரமும் அதிகாரபூர்வமான பொருளியலும் தங்கத்துக்கு எதிராக, முக்கியமான பொருளாதாரச் செயல்களைத் தங்கம் நிறைவேற்றுவதற்கு எதிராக இருந்தன. தங்கமும் தங்க நாணயமும் உளுத்துப்போன ‘‘மிதவாத முதலாளித்துவத்தின்’’ உற்பத்தியாகவும் அதனுயைய காப்பரணாகவும் வர்ணிக்கப்பட்டன. உலக முழுவதிலும் பரப்புவதற்காக ஐரோப்பாவில் நாஜிகஷீமீ ஏற்படுத்த எண்ணியிருந்த ‘‘புதிய பொருளாதார அமைப்பில்’’ தங்கத்துக்கு இடம் கிடையாது. ரைஹ்ஸ் மார்க்குகளைக் கொடுத்து

எல்லாமே வாங்கப்படும், எல்லோரும் ஜெர்மனிக்கு இலவசமாகக் கடன் கொடுப்பார்கள்.

ஆனால் பிரச்சாரமும் தத்துவமும் ஒரு விதமாக இருக்கும், ரசியலும் உண்மையான வாழ்க்கையும் வேறு விதமாக இருக்கும். நாஜித் தலைவர்கள் தங்களுடைய செல்வாக்கின்கீழ் வந்த பிரதேசங்களிலிருந்து ஒவ்வொரு குந்து மணித் தங்கத்தையும் கைப்பற்ற முயற்சி செளிணிதார்ள். அவர்கள் வெற்றி கொண்ட ஒவ்வொரு நாட்டிலிருந்தும் மத்திய வங்கியின் தங்க இருப்புக் களை –அவை முன்னரே முழுமையாக ஏற்றுமதி செய்யப் பட்டிராவிட்டால் –கைப்பற்ற முயற்சி செய்தார்கள். அங்கேயுள்ள மக்களுக்குச் சொந்தமான தங்கத்தைப் பறிமுதல் செளிணிதார்கள், மாதா கோயில்களையும் ரும பொருளகங்களையும் கொள்ளையடித்தார்கள். நாஜி காவல்முகாம்களில் இந்த அரக்கர்கள் லட்சக் கணக்கானவர்களைக் கொலை செய்தபொழுது அவர்களுக்குச் சொந்தமான தங்கப் பொருள்களை (பற்களிலிருந்த தங்கம் உள்பட) கவனமாகப் பறித்துக்கொண்டார்கள் என்ற தகவல் முக்கியமான ஜெர்மன் யுத்தக் குற்றவாளிகள் மீது நியூரென்பர்க்கில் நடைபெற்ற விசாரணையிலும் மற்ற விசாரணைகளிலும் தெரிவிக்கப்பட்டது.

நாஜிகளிடம் தங்கம் சிக்கிவிடாமல் பாதுகாப்பது மிகவும் துணிச்சலான தேசபக்தக் கடமையாகக் கருதப்பட்டது. நாஜிகள் நார்வேயைப் பிடித்தபொழுது சாதாரண மக்கள் நார்வே வங்கியின் தங்க இருப்பை மறைத்து வைத்திருந்து பிறகு நாஜி கட்டுக்காவலை மீறி ரகசியமாக வெளிநாட்டுக்கு அனுப்பிய வீரக் கதையை உலகப் பத்திரிகைகள் வெளியிட்டன

நாஜிகள் திருடிச் சென்ற தங்கம் என்னவாயிற்று என்பது பெரும்பாலும் தெரியாது. ஜெர்மனி முறியடிக் கப்பட்டபொழுது அதில் ஒரு சிறிய பகுதி மட்டுமே கண்டுபிடிக்கப்பட்டதுபோலும், குறிப்பிட்ட அளவு தங்கம் நடுநிலைமை நாடுகளுக்கு ரகசி யமாகக் கடத்தப்பட்டிருக்க வேண்டும் அல்லது ஜெர்மனியில் புதைத்து வைக்கப்பட்டிருக்க வேண்டும். தொலைதூரத்திலுள்ள இடங்களில் நாஜிகள் புதைத்து வைத்திருந்த உண்மையான அல்லது கற்பனையான புதையல்களைப் பற்றி நினைக்கும்பொழுது பலருக்கும் கற்பனை பெருக ஆரம்பிக்கிறது. 160 மில்லியன் தங்க மார்க்குகளின் மதிப்புடைய செல்வம் கோர்சிக்காவின் கடலோரத்தில் பாஸ்தியா என்ற நகரத்துக்குப் பக்கத்தில் கடலின் கீழ் புதைக்கப்பட்டிருக்கிற தென்று ஒரு ஆசிரியர் எழுதுகிறார். மேற்கு

ஆஸ்திரியாவில் ஆல்பைன் ஏரிகளில் மறைக்கப்பட்டிருக்கும் புதையல்களைப் பற்றி இன்னும் அதிகத திட்டவட்டமான தகவல்கள் கூறப் படுகின்றன. கோர்சிக்க புதையலை இத்தாலியக் கொள்ளைக் கூட்டம் தேடிக்கொண்டிருக்கிறது. மர்மமான பல கொலைகளும் முன்பே நடைபெற்றிருக்கின்றன. ஆல்பைன் புதையல்கள் ஒரு ரகசிய நாஜி ஸ்தாபனத்தின் பாதுகாப்பில் இருக்கின்றன. அந்த ஸ்தாபனம் கொலை செளிணிவதற்குத் தயங்குவதில்லை என்று வதந்திகள் கூறுகின்றன. தங்கம் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து விட்டாலும் அதன் பெயரில் கொலைகள் தொடர்ந்து செய்யப்படுகின்றன.

# இன ஒதுக்கல் முறை

தெ ன் ஆப்பிரிக்காவிலுள்ள போயர்கள் ஹாலந்தி லிருந்து வந்து அங்கே குடியேறியவர்களுடைய மரபைச் சேர்ந்தவர்கள். அவர்களுடைய மொழியில் apartheid என்றால் பிரிவினை, தனியான வாழ்க்கை என்று பொருள், 1950க்களிலிருந்தே தென் ஆப்பிரிக்கக் குடியரசின் இனவெறி ஆட்சியின் அதிகாரபூர்வமான கொள்கையாக இன ஒதுக்கல் முறை இருக்கிறது. ஆனால் இந்த முறை அதற்கு முன்பே தோன்றி வளர்ச்சி யடைந்தது.

போயர் தேசியவாதிகள்தான் இன ஒதுக்கல் முறையை ஏற்படுத்தினார்கள். இங்கிலாந்திலிருந்து வந்து அங்கே குடியேறியவர் களுக்கும் அதற்கும் சம்பந்த மில்லை என்று மேற்கு நாடுகளில் பொதுவாகக் கருதப் படுகிறது. உண்மையில் வெள்ளை இனத்தைச் சேர்ந்த பிற்போக்காளர்கள் மற்றும் இனவெறியர்கள், வெள்ளையர்கள் அல்லாதவர்கள் எல்லோரிடமும் குறிப்பாக ஆப்பிரிக்கர்களிடமும் கடைப்பிடிக்கும் பொது நிலைதான் அது. தங்கச்சுரங்கத் தொழில் பெருமளவுக்கு “ஆங்கிலத்” தொழில்துறையாகவே வளர்ச்சிய டைந்தது; சமீபகாலத்தில்தான் போயர் மூலதனம் அதில் ஒரு பாத்திரத்தை வகிக்கத் தொடங்கியிருக்கிறது, ஆனால் இந்தப் பிரிவில்தான் இன ஒதுக்கல் மற்றும் வேற்றுமை யின் அருவருக்கத்தக்க கூறுகளில் பல 19–ம் நூற்றாண் டின் கடைசியில் வளர்ச்சியடையத் தொடங்கின. தென் ஆப்பிரிக்காவின் தங்கச் சுரங்கங்களில் (யுரேனியம் மற்றும் நிலக்கரிச் சுரங்கங்களிலும்) தொழிலாளர்களின் வேலை நிலைமைகளுக்கு நவீன உலகத்தில் வேறு உதாரணம் கிடையாது. ஆப்பிரிக்கத் தொழிலாளர்களை நிரந்தரமானவர்களாக்க, தொழில்நுட்பத்திறன் கொண்ட வர்களாக்கக் கம்பெனிகள் முயற்சி செய்யாதது மட்டுமல்ல, அதற்கு எதிராக எல்லாக் காரியங்களையும் செய்கின்றன. நாட்டின் தொலைதூரப் பகுதிகளிலிருந்தும் பக்கத்திலுள்ள ஆப்பிரிக்கப் பிரதேசங்களிலிருந்தும் (இப்பொழுது சுதந்திர நாடுகள்) தொழில்நுட்பத் திறன் இல்லாத மலிவான உழைப்புச் சக்தியைக் குறுகிய காலத்துக்கு (இரண்டு வருடங்களுக்கு மிகாமல்) வேலைக்கு வைத்துக் கொள்கின்ற முறையை இக் கம்பெனிகள் உருவாக்கியிருக்கின்றன.

வேலைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டவர் ஜோஹானஸ் பர்குக்குக் கொண்டுவரப்பட்டு சுரங்கங் களுக்கு ஒதுக்கப் பட்டுகிறார்கள். அவர்கள் எழுத்தறி வில்லாதவர்களாக, ஆங்கிலம் பேசத் தெரியாதவர்களாக இருப்பது வழக்கம். எங்கே வேலை செய்யப்போகிறோம், வேலை எப்படிப்பட்டதாக இருக்கும் அல்லது என்ன ஊதியம் கொடுக்கப்படும் என்பதுகூட அவர்களுக்கு முன்னதாகவே தெரியாது. மூன்று அல்லது நான்கு நாட்களுக்குப் “பயிற்சி” கொடுக்கப்படும். அதன்பிறகு அவர்கள் பூமியின்கீழ் வேலை செய்யுமாறு அனுப்பப் படுவார்கள். பெரும்பாலும் இரண்டு அல்லது மூன்று கிலோமீட்டர் ஆழத்தில் அவர்கள் வேலை செய்ய வேண்டியிருக்கும். ஆப்பிரிக்கர்களுக்குக் கடினமான உடலுழைப்பு வேலை மட்டுமே தரப்படும். அவர் களுக்குப் பதவி உயர்வு கிடையாது; சற்று வசதியான நிலைமைகளில் வேலை செய்வதற்கான வாய்ப்பு கிடையாது. ஆப்பிரிக்கத் தொழிலாளர்கள் தொழிற் சங்கங்களை அல்லது வேறு வகையான ஸ்தாபனங்களை அமைப்பது தடை செய்யப் பட்டிருக்கிறது.

ஆப்பிரிக்கத் தொழிலாளர்கள் சுரங்கங்களுக்குப் பக்கத்திலேயே பாசறைகளைப் போன்ற அறைகளைக் கொண்ட கட்டிடங்களில் வசிக்கிறார்கள். இந்த அறை களில் தூங்குவதற்க இரண்டு அடுக்குப் பலகைகள் இருக்கும். ஒரு அறையில் 10–20 தொழிலாளர்கள் வசிப்பார்கள். அவர்கள் நினைத்தபடி எங்கும் போக முடியாது. அதற்குக் கண்டிப்பும் கட்டுப்பாடுகளும் அதிகம். அங்கே குடும்பத்தோடு வசிக்க முடியாது. இன ஒதுக்கல் முறையின் மொத்த அமைப்பையும் போல ஆப்பிரிக்கச் சுரங்கத் தொழிலாளர்களின் வேலை மற்றும் வாழ்க்கையை ஒழுங்குபடுத்தும் விதிகள் ஈவிரக்கமற்ற, நாகரிகமான காட்டுமிராண்டித்தன முத்திரைகளைக் கொண்டிருக்கின்றன. மனிதனுடைய மேன்மையை அவமதிப்பதே இங்குள்ள வழக்கம். அதுதான் இனங்களுக்கிடையிலான உறவுகளின் நிலைநாட்டப் பட்ட முறை.

தங்கச் சுரங்கங்கள் தொழிலாளர்களைக் கொலை செய்கின்றன. 1936–1966ம் வருடங்களுக்கிடையே தங்கச் சுரங்கங்களில் ஏற்பட்ட விபத்துக்களின் விளைவாக 19,000 பேர்களுக்குக் குறையாத எண்ணிக்கையினர் இறந்திருப்பார்கள், அவர்களில் 93 சதவீதத்தினர் ஆப்பிரிக்கர்கள் என்று தென் ஆப்பிரிக்க அறிஞரான பி.வில்ஸன் மதிப்பிட்டிருக்கிறார். அதனைத் தொடர்ந்து வந்த காலகட்டத்தில் வருடந்தோறும் 500–600 மரணங்கள் ஏற்படுவது “வாடிக்கையான தாகும்”.

ஆப்பிரிக்க சுரங்கத் தொழிலாளர்களைப் போல இரண்டு மடங்காகும். இதன் காரணங்கள் எல்லோருக்கும் தெரிந்தவையே:

சுரங்கத்திலேயே அதிக ஆபத்தான பகுதிகளில் ஆப்பிரிக்கத் தொழிலாளர்கள் வேலை செய்கிறார்கள். மேலும் அவர்களுக்குப் போதுமான பயிற்சி தரப்படுவ தில்லை. மரணமடைகின்ற தொழிலாளி யையும் போல சராசரியாக நாற்பது பேர்கள் நிரந்தரமாக ஊனமடைகிறார்கள் அல்லது மிக மோசமகக் காயமடைகிறார்கள். தொழிலாளி உயிரிழக்கின்ற அல்லது நிரந்தரமாக ஊனமடைகின்ற விபத்துக் களைத் தவி ஆயிரக்கணக்கான இனங்களில் ஆப்பிரிக்கத் தொழிலாளர்கள் தங்களுடைய வேலை நிலைமைகளின் காரணமாக சார்ந்த வியாதிகளுக்கு ஆளாகிறார்கள். அவர்களில் பெரும்பான்மை யானவர்கள் க்ஷயரோகத்துக்கு ஆளாவதையும் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

வார்த்தைகளைக் காட்டிலும் புள்ளிவிவரங்கள் நிலைமையை நன்குவிளக்குகின்றன. 1972ல் ஆப்பிரிக்க சுரங்கத் தொழிலாளியின் ஆபத்தான, முதுகொடியப் பாடுபடும் உழைப்பிற்கு சராசரியாக 24 ரேன்டுகள் கூலி தரப்பட்டது. ஆனால் வெள்ளைத் தொழிலாளிக்கு சராசரியாக 391 ரேன்டுகள் கூலி, அதாவது பதினாறு மடங்கு அதிகமாகக் கொடுக்கப்பட்டது. வேறு எந்தத் தொழிலிலும் இவ்வளவு அதிகமான வேறுபாடு கிடையாது. உலகத்தில் வேறு எந்த நாட்டிலும் இவ்வளவு அதிகமான வேறுபாடு இருக்காது என்பது உண்மை. ஊதியம் தவிர ஒவ்வொரு தொழிலாளிக்கும் இருப்பிடம், உணவு, மருத்துவ வசதி ஆகியவற்றுக்காக சராசரியாக மாதமொன்றுக்கு 20 ரேன்டுகளுக்கும் அதிகமான தொகை செலவிடப்படுவதாகக் கம்பெனிகள் கூறு கின்றன. ஆனால் இது பிரச்சினையின் அடிப்படையை மாற்றவில்லை.

இங்கே அடிமை உழைப்பு என்ற கருதுகோளைக் காண முடியும். ஒரு தொழிலாளி ஒரு வருடம் அல்லது 18 மாதங்கள், கம்பெனிக்குத் தேவையாக இருக்கும் வரை உயிரோடிருப்பதற்கும் வேலை செளிணிவதற்கும் மட்டும் அவசியமான ஊதியம் கொடுக்கப்படுகிறது. இந்த ஊதியம் ஒரு குடும்பத்தைக் காப்பாற்றப் போதுமானதல்ல என்பது தெளிவு. சுரங்கத்திலிருந்து நூற்றுக்கணக்கான மைல்களுக்கு அப்பால் எங்கோ ஒரு இடத்தில் தன் குடிசைக்குப் பக்கத்திலுள்ள சிறிய நிலத்தில் தொழிலாளியின் குடும்பம் பாடுபட்டால்தான் உயிர் வாழ முடியும். தொழிலாளர்களை வேலைக்கு எடுத்துக்கொள்ளும் ஒரு ஸ்தாபனத்தின் தலைவர் டி.கிரீனிடம் பச்சையாகவே தெரிவித்திருக்கிறார். “அவன்

[ஆப்பிரிக்கத் தொழிலாளி] கைச்செலவுக்குப் பணம் வாங்கத்தான் இங்கே வருகிறான். நாங்கள் கொடுக்கும் ஊதியம் அவனும் அவன் குடும்பமும் வாழ்க்கை நடத்துவதற்குப் போதுமானதென்று நாங்கள் ஒருபோதும் சொன்னதில்லை. அவன் வேறு வசதிகளுக்கப் பணம் தேடவே இங்கே வருகிறான்.''★ இங்கே சொல்லப்படும் வேறு ''வசதிகள்'' புகையிலையும் சாராயமும்தான் என்பது எல்லோருக்கும் தெரிந்த உண்மையாகும்.

உழைப்புச் சக்தியின் மதிப்பு என்ற கருதுகோள் மார்க்சிய அரசியல் பொருளாதாரத்தில் முக்கியமான பாத்திரத்தை வகிக்கிறது. ஒரு தொழிலாளி ''மனிதனைப் போல'' வாழ்வதற்கு, குடும்பம் நடத்துவதற்கும் குழந்தைகளை வளர்ப்பதற்கும் அவசியமான செலவு களைக் கொண்டு அது நிர்ணயிக்கப்படுகிறது. கோட் பாட்டளவில் கூலி உழைப்புச் சக்தியின் மதிப்புக்கு நெருங்கி யிருக்கிறது. முதலாளிகள் இந்த அளவிலிருந்து மிகவும் குறைத்துக்கொடுப்பதற்குத் தொழிலாளர்கள் அனுமதிக்கமாட்டார்கள், அவர்கள் அதை எதிர்த்துப் போராடுவார்கள். எனினும் தென் ஆப்பிரிக்காவில் உழைப்புச் சக்தியின் மதிப்பைக் கொடுக்க மாட்டோம் என்று முதலாளிகள் பகிரங்கமாகக் கூறுகிறார்கள். இது முதலாளித்துவத்தின் பகிரங்கமாகக் கூறுகிறார்கள். இது முதலாளித்துவத்தின் ''வழக்கமான'' பொருளாதார விதிகளை மீறுவதாகும். இது இன ஒதுக்கல் கொள்கை யின் விளைவே.

இனவெறியர்கள் எல்லாவிதமான முயற்சிகளையும் செய்த போதிலும் சமீப வருடங்களில் இன ஒதுக்கல் முறை குடியரசைச் சூழ்ந்துள்ள எதிர்ப்பும் போராட்ட அலைகளும் தங்கச் சுரங்கங்களையும் விட்டுவைக்கவில்லை. 1973 செப்டம்பரில் கார்ல்டன்வில் என்ற இடத்தில் ''ஆங்கில-அமெரிக்கரிக்கன் கார்ப்பரேஷன்'' சுரங்கங்களில் ஒன்றில் வேலை நிறுத்தம் செய்த தொழிலாளர்கள் மீது போலீஸ்காரர்கள் துப்பாக்கிப் பிரயோகம் செய்தனர். பதினோரு தொழிலாளர்கள் கொல்லப்பட்டனர். இந்த சம்பவங்களை உலகமே கண்டனம் செய்தது. கடந்த சில வருடங்களில் தங்கச் சுரங்கங்களில் நிலைமை கள் மாறத் தொடங்கயிருக்கின்றன. இந்த அமைப்பு என்றைக்கும் நிரந்தரமாக இருக்க முடியாது. அது படீரென வெடித்துவிடும் என்பதை மிக மோசமான இனவெறியர்கள் கூட உணர்ந்திருக்கிறார்கள். உழைப்புச் சக்தி பக்கத்திலிருக்கும் அரசுகளிலிருந்து நம்ப முடியாத அளவுக்கு மலிவாகக் கிடைப்பது குறைந்து வருகிறது. குறிப்பாக மொசாம்பிக் மக்கள் காலனி ஆட்சியைத் தூக்கியெறிந்து விட்டபடியால் இது குறைந்துவிட்டது. மறு பக்கத்தில் தங்கத்தின் விலை பல மடங்கு அதிகரித்திருப்பதால் கம்பெனிகள் அதிகமாக லாபமடைந்திருக்

கின்றன. எனவே கம்பெனிகளுக்கு நஷ்டமில்லாமலேயே தொழிலாளர்களின் கூலி உயர்வு களுக்கு இசைய முடிகிறது. கம்பெனிகள் சுகாதாரப் பாதுகாப்பு, பயிற்சியளிப்பது ஆகிய துறைகளில் தமது “சாதனைகளை” ஒன்றோடொன்று போட்டியிட்டு விளம்பரம் செய்கின்றன. இப்பொழுது ஆப்பிரிக்கத் தொழிலார்கள் குழுத் தலைவர்களாகவும் கீழ் நிலையில் மேலாளர்களாகவும் முன்னைக் காட்டிலும் அதிகமாக நியமிக்கப்படுகிறார்கள்.

எனினும் இன ஒதுக்கல் முறை தங்கச் சுரங்கங்களின் வாழ்க்கை முறையின் ஆதார வடிவமாக இன்னும் இருந்துகொண்டிருக்கிறது. அதன் வடிவங்கள் மேலும் கொடுமையாக மாறிக்கொண்டிருக்கின்றனவே தவிர சிக்கலைத் தீர்க்கவில்லை.

# அழிக்கப்பட்ட கலை

“மூ வாயிரம் வருட கால கட்டத்தில் எகிப்தில் எண்ணற்ற தங்கப்பொருள்கள் உற்பத்தி செய்யப் பட்டிருக்க வேண்டும். ஆனால் சுமார் ஒரு டஜன் அரசர்களுடைய சவப்பெட்டிகளில் உள்ள பொருள்கள் தான் இன்று நமக்கு எஞ்சியிருக்கின்றன. அவற்றிலும் மிக முக்கியமானவை எல்லாமே மத்திய மற்றும் புதிய ராஜ்யங்களைச் சேர்ந்தவையாக இருக்கின்றன. எகிப்தியக் கலைஞர்களின் உள்ளார்ந்த பழமை வாதம் மற்றும் ஓவியங்கள், சிற்பங்களிலிருந்து கிடைக்கும் அதிகமான தகவல்கள் தான் தங்கத்தின் பொருள்களை உற்பத்தி செய்வதில் எகிப்தின் வளர்ச்சியை- இந்த ஆதாரங்கள் குறைவானவை என்ற போதிலும்-மதிப்பிடுவதை சாத்தியமாக்குகின்றன. இது அடிக்கடி ஏற்படும் பிரச்சினையாகும். ஊர் (Ur)இலிருந்து நமக்குக் கிடைத்திருப்பவை மிக மிகக் குறைவு. மினோவன் கிரிட் தீவிலிருந்து மிகமிகக் குறை வாகத்தான் கிடைத்திருக்கிறது. மூலச்சிறப்புடைய மற்றும் ஹெல்லெனிஸ்டிக் கிரேக்கத்திலிருந்துகூட மிகக் குறைவாகவே கிடைத்திருக்கிறது.”

ஆபரணத் தயாரிப்பில் தங்கம் உபயோகிகப்பட்டதன் வரலாற்றைப் பற்றிய ஒரு புத்தகத்திலிருந்து இந்த மேற்கோள் தரப்பட்டிருக்கிறது. தங்கம் பணமாக வும் செல்வத்தின் சொரூபமாகவும் ஆனதன் விளைவாக அது மனிதர்களை அழித்ததோடல்லாமல் கலைப் பொருள்களையும் அழித்துவிட்டது. பழங்காலத்திலிருந்தே மத சம்பந்தமான மற்றும் மரச் சார்பு இல்லாத ஆபரணங்கள்- இவை பெரும் பாலும் அதிகமான கலை, வரலாற்று மற்றும் கலாச்சார முக்கியத்துவத்தைக் கொண்டிருப்பவை- தங்கத்திலும் (மற்றும் வெள்ளியிலும்) செய்யப்பட்டு வந்தன. எனினும் ஆயிரக்கணக்கான வருடங்களாகவே அவற்றின் கலாரீதியான முக்கியத்துவத்தைக் காட்டிலும் அவற்றிடலங்கிய உலோகத்தின் மதிப்பு முக்கியமானதாக இருந்தது. டுடன்காமனின் சவக்குழி 20ம் நூற்றாண்டு வரையிலும் கண்டுபிடிக்கப்படாமலிருந்தது நமது அதிர்ஷ்டமே.

ஏனென்றால் அங்கே கண்டுபிடிக்கப்படும் பொருள்கள் உருக்கப்பட்டுவிடும் ஆபத்து இனி மேல் கிடையாது. ஆனால் டுடன் இளம்வயதிலேயே

மரணமடைந்துவிட்டார். மாபெரும் சக்கரவர்த்திகளான இரண்டாம் ரம்சேஸ் அல்லது மூன்றாம் டுத்மோஸ் ஆகியோரின் சவக்குழிகளைத் திருடர்கள் கொள்ளை யிட்ட பொழுது எத்தகைய செல்வங்கள் அழிந்து போயிருக்கும் என்பதை நாம் கற்பனை செளிணிது கொள்ளலாம். டுடன் எடை சில கிலோகிரகாம்களாகும். இன்று அதன் மதிப்பு கணிசமானதாகவே இருக்கும். எனினும் கி.மு.14ம் நூற்றாண்டைச் சேர்ந்த எகிப்தியக் கலைஞர்களின் இந்த மகத்தான படைப்பின் வரலாற்று சொல்ல வேண்டும். முன்னர் அது ஒன்றுமில்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

எகிப்திய பரோவாக்கள், சித்திய மற்றும் திரேசிய அரசர்கள், கொலம்பசுக்கு முந்திய அமெரிக்காவின் கல்லறைகள் ஆகியவை பழங்காலத்திலிருந்து இன்று வரை எப்பொழுதுமே திருடர்களைக் கவர்ந் திழுத்திருக்கின்றன. மிக அபூர்வமான சில உதாரணங்களில்தான் இந்தக் கொள்ளை முடிவில் அரும் பொருளகங்களை வந்தடைதிருக்கின்றன. மிக அபூர்வமான சில உதாரணங்களில்தான் இந்தக் கொள்ளை முடிவில் அரும் பொருளகங்களை வந்தடைந்திருக்கிறது. தங்கத்திலும் வெள்ளியிலும் செய்யப்பட்டிருக்கும் பொருள்கள் உருக்கப்பட்டுப் பணமாக மாற்றப்படுவது வழக்கம். அரசர்கள் மற்றம் மதத் தலைவர்களின் பொக்கிஷங்களில் உள்ளே வைக்கப்பட்டிருக்கும். மிகவும் நெருக்கடியான நேரங் களில் அல்லது அவ்வளவு நெருக்கடியாக இல்லாத காலங்களிலும் கூடஇவை உலோகமாக உருக்கப்படும். இந்த நிகழ்வு தங்கக் கலை பாழாக்கப்படுதல் எனப்படலாம்.

இது நாடுபிடித்தல் மற்றும் ரத்தக்களரி, மதவெறியோடு நெருக்கமான தொடர்புடையதாகும். டாட்டார்-மங்கோலியப் படையெடுப்பின் போது கீவ், ரியஸான், விளாதிமீர் மற்றும் இதர நகரங்களின் வீழ்ச்சியைப் பற்றி எழுதும் பழைய ரஷ்ய வராÈற்றாசிரியர்கள் அமைதியாக வாழ்ந்த மக்கள் ஆயிரக்கணக்கில் கொல்லப்பட்டதைப் பற்றிக் கண்ணீர் வடிக்கும் அதே நேரத்தில் இந்தக் கடவுள் நம்பிக்கையற்றவர்கள் மாதாகோயில் தட்டுக்களைத் திருடியதையும் கண்களில் பட்ட தங்கத்தையெல்லாம் பறித்துக் கொண்டதையும் தங்கம் எங்கே மறைத்து வைக்கப்பட்டிருக்கிறது என்று தெரிந்து கொள்வதற்காக அகப்பட்டவர்களைச் சித்திரவதை செய்ததையும் சொல்லாமல் விடுவதில்லை.

நம்முடைய அரும் பொருளகங்களில் பழைய ரஷ்யக் கலைஞர்களால் செய்யப்பட்ட ஆபணரங்களில் மங்கோலியர்களுக்கு முந்திய காலகட்டத்தைச் சேர்ந்தவை மிகச் சில மட்டுமே இருப்பதற்கு இதுவே முக்கியமான காரணம். 1520-ல் மாபெரும் ஜெர்மன் ஓவியரான

ஆல்பிரெக்ட் டூரெர் அமெரிக்காவைச் சேர்ந்த அஸ்டெக் செல்வங்களை பிரஸ்ஸெல்ஸிலிருக்கும் ஸ்பானிஷ் வைஸ்-ரீஜென்ட்டின் மாளிகையில் பார்த்தார். அங்கேயிருந்த பொருள்களில் ஒன்று "சுத்தமான தங்கத்தில் செளிணியப்பட்ட சூரியன் அதன் விட்டம் கையை நீட்டினால் உள்ள அளவுக்கு இருந்தது." "இவை என் இதயத்துக்குக் கொடுத்த அதே மகிழ்ச்சியைத் தருகின்ற எந்தப் பொருளையும் என் வாழ்க்கை முழுவதிலும் நான் பார்க்கவில்லை. ஏனென் றால் இவற்றில் அற்புதமான, கலையழகு நிரம்பிய பொருள்களைப பார்த்தேன். வெளிநாட்டு மக்களின் நுண்ணிய கைத்திறனைக் கொண்டு வியந்தேன்"என்று அவர் எழுதுகிறார்.

மற்றொரு சிறந்த கலைஞரான பென்வெனுடோ செல்லினியும் இச்செல்வங்களைப் பார்த்து வியந்து பாராட்டினார். டூரெர் வர்ணித்த சூரியன் உட்பட இந்த அஸ்டெக் கலைப் பொருள்கள் போன சுவடு தெரியாமல் மறைந்துவிட்டன. அவற்றை வைத்திருந்தவர்கள் பூர்விகக் கலையை நுட்பமாக ரசிக்கின்ற அளவுக்குத் தெரிந்தவர்கள் அல்ல. அவர்கள் இவற்றை அரண்மனைகளின் உட்பகுதிகளில் செய்யப்பட்டிருந்த தங்க வேலைப்பாடுகளைப் பற்றி வர்ணனைகளிலிருந்துதான் நாம் தெரிந்து கொள்கிறோம்.

செல்லினி 16-ம் நூற்றாண்டைச் சேர்ந்த பிரபலமான ஆபரணத் தயாரிப்பாளர், அவர் மறுமலர்ச்சிக் காலத்தைச் சேர்ந்தவர். அந்தக் காலத்தில் மக்கள் கலையை மதிக்கக் கற்றுக்கொண்டிருந்தனர் என்று நினைக்கத் தோன்றும். அவருடைய படைப்புகளிலும் பிரெஞ்சு அரசரான முதலாம் பிரானசிசுக்குச் சொந்தமான ஒரே ஒரு தங்க உப்புக்குப்பி மட்டும் தான் நமக்குக் கிடைத்திருக்கிறது. அது வழக்கமான விதியிலிருந்து ஒரு அதிசயத்தின் மூலம் தப்பியது. கடவுள், தொல்கதைகளில் வரும் விலங்குகள் ஆகியவற்றின் உருவங்களைக்கொண்ட சிக்கலான சிற்ப வேலைப்பாட்டை இந்த உப்புக்குப்பியில் பார்க்கிறோம். அந்த மாபெரும் கலைஞர் உபயோகித்த மூலப்பொருள் அவருடைய படைப்புக்களையே அழித்துவிட்டது. அறிவு வளர்ச்சி ஏற்பட்டிருந்த 19-ம் நூற்றாண்டில் போப்பரசரின் ரோமாபுரியில் நெப்போலியனுக்கு நட்ட ஈட்டுப் பணம் கொடுப்பதற்காகக் கலைப்பொருள்கள் உருக்கப்பட்டன.

தங்க ஆதார அளவு பின்பற்றப்பட்ட காலத்தில் "அழகுச் செல்வங்கள்", அதாவது தங்கத்தில் செய்யப்பட்ட பொருள்கள் பணச் செலாவணியின் சேம இருப்பாக இருந்தன. பொருளாதார நிலைமைகள் பணப் புழக்கத்தைக் குறைக்குமானால் தங்க நாணயத்தில் ஒரு பகுதி உருக்கப்பட்டு ஓரளவுக்குக்

கரடு முரடான பொருள்களாகச் செய்யப்படும். இந்த வடிவத்தில் அதை வைத்திருப்பார்கள். நிலைமைகள் மாறியவுடன் தங்கம் மறுபடியும் செலாவணியில் புகுத்தப்படும். அதற்காகத் தட்டு, பூச்சாடிகள், உருவச் சிலைகள் முதலியன பாளங்களாக மாற்றப்பட்டு நாணயங்களுக்குப் பரிவர்த்தனை செய்யப்படும். இது தானாகவே நிகழ்கின்ற பொருளாதார இயந்திர நுட்பமாகும். ஆனால் சில சமயங்களில் கரடு முரடான பொருள்களோடு-பொற்கொல்லரின் உழைப்பு அவற்றின் மதிப்பில் ஒரு சிறு பகுதி மட்டுமே விலை மதிப்பற்ற பொருள்களும் உருத்தெரியாத உலோகமாக மாற்றப்படவில்லை என்று யாரால் உத்தரவாதமாகக் கூற முடியும்?

தங்கக் கலை பாழாக்கப்படுதல் இன்றும்கூட நடைபெறுகிறது. அந்த உலோகத்தின் அதிகமான விலையாலும் தங்கத்தில் செய்யப்பட்டிருக்கும் கலைப் பொருள்களைச் சுலபமாக எடுத்துக்கொண்டு போக முடியும் என்பதாலும் அவை திருடுவதற்கும் கடத்துவதற்கும் மறறப்பதற்கும் ஏற்றவையாக இருக்கின்றன. உலோகம் என்பதைக் காட்டிலும் கலைப்பொருள்கள் என்ற முறையில் அவை அதிகமான லாபத்தைத் தரக்கூடியவை என்பதைத் திருடர்கள், வர்த்தகக சூதாட்டக்காரர்கள் அல்லது கலைப் பொருள் “சேகரிப்பவர்கள்” உணர்ந்து அவற்றை உருக்கவில்லையென்றால் பெட்டகங்களில் மறைத்து வைத்திருக்கிறார்கள், மாபெரும் கொந்தளிப்பு களின்போது பூமியில் புதைத்து வைத்திருக்கிறார்கள்.

பழங்காலத்துக் கலைப் பொருள்களைத் திருடுவதும் கடத்துவதும் இன்று மேற்கு நாடுகளில் பெரிய அளவில் நடைபெறும் தொழிலாக இருக்கின்றன. இக்கலைப் பொருள்கள் தங்கத்தில் செய்யப்பட்ட வையாக இருந்தால் இந்தத் தொழில் இன்னும் பெரிய அளவில் நடைபெறுகிறது. அதிகமான லாபத்தைக் கொடுக்கிறது.

# தங்கத்தின் சக்தி

**த** ங்கத்தின் சக்தியைப் பற்றி எல்லாக் காலங்களையும் மக்களையும் சேர்ந்த எழுத்தாளர்கள் எழுதியிருக்கும் கருத்துக்கள் அனைத்தையும் எடுத்துக்கூற இயலாது. அவை மிக மிக அதிகமானவை. மக்கள் மீது தங்கத்தின் சக்தி திகைப்பைக் கொடுக்கிறது. தங்கத்தைச் சபித்திருக்கிறார்கள், போற்றிப் புகழ்ந்திருக்கிறார்கள். ஆனால் ஒருவருமே இந்த மஞ்சள் உலோகத்தைப் பற்றி அலட்சியமாக இருந்ததில்லை. தங்கத்தின் சக்தி என்பது உண்மையில் என்ன, அதன் தன்மை என்ன, பல நூற்றாண்டுகளாகவே சமூக உணர்வின் ஒரு கூறாக அது எப்படி வளர்ச்சியடைந்தது என்பதை ஆராய்வதற்கு நேரம் வந்துவிட்டது.

இத்தகைய கொந்தளிப்பான உணர்ச்சிகள் எங்கே யிருந்து வருகின்றன? இரும்பு அதைக் காட்டிலும் மிகவும் பயனுள்ள உலோகம். ஆனால் மக்களுடைய அறிவியல் இல்லாவிட்டாலும் அவர்களுடைய உணர்ச்சிகளில் அதுமிகவும் அடக்கமான இடத்தைத்தான் பெற்றிருக் கிறது.

# தங்கம், பணம், மூலதனம்

மா பெரும் ரஷ்ய எழுத்தாளரான மாக்சிம் கோர்க்கி எழுதிய மஞ்சள் பிசாசின் நகரம் என்ற பிரசுரத்தில் இரும்பு தங்கத்தின் அடிமை என்ற குறியீட்டைப் பார்க்கிறோம். 1906ல் கோர்க்கி நியூயார்க்கு முதல் தடவையாகச் சென்ற பொழுது ஏற்பட்ட எண்ணங்களை அவர் வர்ணிக்கிறார். பல லட்சம் மக்கள் வாழ்கின்ற இந்த மாபெரும் நகரத்தை முதலாளித்துவ நாகரித்தின் அரக்கத்தனமான உற்பத்தியாக கோர்க்கி பார்க்கிறார்.

மஞ்சள் பிசாசு பயங்கரமான இரக்கத்தன்மையற்ற நகரத்தில், உண்மையில் முதலாளித்துவ உலகத்தில் தலைமையான சக்தியாக ஆட்சி செய்கிறது. மக்களை அது ஆட்டிப் படைக்கிறது. தொழிலாளர்கள் அதன் குருட்டுக் கருவிகள் என்றால் பணக்காரர்கள் மஞ்சள் பிசாசின் அடிமைகளாக இருக்கிறார்கள். விளம்பரங்களின் மஞ்சள் ஒளி தங்கத்தைப் போலவே பிரகாசிக்கிறது. இரவு வரப்போகிறது. ஆனால் "திருப்தியடை முடியாத தங்கப் பசியினால் தூண்டப்பட்டுத் தெருக்களில் எங்கே பார்த்தாலும் ஒலிக்கின்ற இரும்புச் சத்தம் ஒருபோதும் நிற்பதில்லை... உருக்கப்பட்ட தங்கத்தின் கண்ணைக் கூச வைக்கும் பிரகாசம் வீடுகளின் சுவர்களிலிருந்து, கடைகளின் பெயர்ப்பலகைகளிலிருந்து, சிற்றுண்டிச் சாலைகளின் சன்னல்களிலிருந்து கீழே வழிந்தோடுகிறது. அது எல்லா இடங்களிலும் அகம்பாவத்தோடும் ஆர்ப்பாட்டத்தோடும் வெற்றியடைகிறது, கண்களை உறுத்துகிறது, அதன் குளிர்ச்சியான பிரகாசத்தின் மூலம் முகங்களுக்கு அருவருப்பான தோற்றத்தைக் கொடுக்கிறது."

தங்க ஆசை, தங்க வேட்டை மற்றும் தங்கத் தின் ஆதிக்கம் மக்களுடைய வாழ்க்கையில் நிரம்பி யிருக்கின்றன. "எங்கோ நகரத்தின் மையத்தில் ஒரு மாபெரும் தங்கக்கட்டி மற்றவர்களைக் கவர்ந் திழுக்கும் சத்தத்தோடு பயங்கரமான வேகத்தில் சுழன்று கொண்டிருப்பது போலத் தோன்றுகிறது. தெருக்களில் மிகத் தூய்மையான தங்கத் தூசிகள் சிதறி விழுகின்றன. நாள் முழுவதும் மக்கள் அதற்காக காத்துக் கொண்டிருக் கிறார்கள் அல்லது அதைக் கைகளில் பிடிப்பதற்கு ஆர்வத்தோடு ஓடுகிறார்கள். கடைசியில் மாலை நேரம் வந்துவிட்டது. தங்கக் கட்டி இப்பொழுது எதிர்த்திசையில் சுழல்கிறது, அதிலிருந்து வருகின்ற இரக்கமற்ற அன்றகாற்று மக்கள்

பகலில் சேகரித்த தங்கக் தூசிகளைத் திருப்பிக் கொடுக்கச் செய்வதற்காக அவர்களை உள்ளே இழுக்கிறது. அவர்கள் எப்பொழுதுமே தாங்கள் சேகரித்ததைக் காட்டிலும் அதிகமாகவே திரும்பக் கொடுக்கிறார்கள். மறுநாள் தங்கக்கட்டி இன்னும் பெரியதாக இருக்கிறது, இன்னும் வேகமாகச் சுழல்கிறது. அதன் அடிமையான இரும்பின் ஆனந்தக் கூக்குரல், அது அடிமைப்படுத்தியிருக்கும் எல்லா சக்திகளின் ஓசை இன்னும் பலமாகக் கேட்கிறது.''

பல் கட்டும் தொழிலிலும் மின்நுட்பவியலிலும் உபயோகப் படுத்தப்படும் பொருளுக்கும் இதற்கும் எவ்வளவு வேறுபாடு! இங்கே தங்கம் ஒரு குறியீடாக, பணத்தின் குறியீடாக அல்லது இன்னும் துல்லியமாகச் சொல்ல வேண்டுமென்றால் மூலதனத்தின் குறியீடு என்ற அருள் வெளிப்பாட்டின் வலிமையைப் பெறுகிறது. ஏனென்றால் மூலதனம்தான் மக்களை அடிமைப்படுத்துகிறது, மக்களை அதன் கருவிகளாக, அடிமைகளாக, ஏவலர்களாகச் செளிணிகிறது. ஒவ்வொரு நாளும் தங்கக் கட்டி மென்மேலும் பருமனடைவது மூல தனம் உழைப்பைச் சுரண்டுவதை, தொடர்ச்சியாக உபரி மதிப்பைத் திரட்டி அதை மறுபடியும் மூலதனமாக மாற்றுவதைப் பற்றிய குறியீடே.

அமெரிக்காவில் அதிகமான அமெரிக்கத் தன்மையைக் கொண்ட நகரம் நியூயார்க்க என்று சிலர் கூறுகிறார் கள். அதை அமெரிக்காவின் சாரம் என்று எந்தக் காரணத்துக்கும் கருதக்கூடாதென்று மற்றவர்கள் கூறுகிறார்கள். இது அவரவர்களுடைய கருத்தோட்டத்தைப் பொறுத்தது. ஆனால் கோர்க்கி இந்த நகரத்தை அமெரிக்க முதலாளித் துவத்தின் குறியீடாகப் பார்த்தார் என்பதில் சந்தேகமில்லை.

தங்கம் பணத்தின் அன்றைய வடிவமாக, பணத்தின் மறுபெயராக இருந்த பொருளாதார உண்மையின் பிரதி பலிப்பே கோர்க்கியின் தங்கத்தைப் பற்றிய படப்பிடிப்பு, பணம்தான் எப்பொழுதுமே மூலதனத்தின் தொடக்க நிலை வடிவம், அதிகமான அளவுக்குப் புலன்களால் அறியப்படக் கூடிய வடிவம். முதலாவதாகவும் முதன்மை யாகவும் இயந்திரங்களையும் மூலப்பொருளையும் வாங்கு வதற்கு, தொழிலாளர்களைக் கூலிக்கு அமர்த்த, உற்பத்திப் பொருளை விற்பனை செய்வதன் மூலம் அவர் தொழிலில் முதலீடு செய்ததைக் காட்டிலும் அதிகமான பணத்தைப் பெறுகிறார்.

இன்று பணமும் மூலதனமும் இனியும் தங்கத்தோடு அவ்வளவு நேரடியாக இணைந்திருக்கவில்லை. ஆனால் சாராம்சத்தின் மூலதனம் அப்படியேதான் இருக்கிறது. அதன் திரட்டலின் பரிமாணங்களும் பன்மடங்கு அதிகரித்திருக்கின்றன. நியூயார்க் இன்று பெரும் மூலதனத்தின், முதுகொடியப் பாடுபடும் உழைப்பின், வெகுஜன வேலையில்லாத் திண்டாட்டத்தின், இனக் கலவரங்கள் மற்றும் அதிகமான குற்றங்கள் நடைபெறும் நகரமாக இருக்கிறது. ஒரு நவீன எழுத்தாளர் நியூயார்க்கை வர்ணிப்பதற்கு வேறு வார்த்தைகளையும் வேறு குறியீட்டையும் உபயோகிப்பார். ஆனால் கோர்க்கி உபயோகித்த மஞ்சள் பிசாசு என்னும் குறியீடு அவர் விரும்பியபடியே –முதலாளித்துவத்தின் ஈவிரக்க மற்ற தன்மையின் குறியீடாக –இன்னும் புரிந்துகொள்ளப் படுகிறது.

முதலாளித்துவ நாகரிகத்தைப் படைப்பின் சிகரமாகக் கருதுபவர்களிடம் தங்கத்தின் சக்தி முற்றிலும் வேறு வகையான எண்ணங்களை ஏற்படுத்துகிறது. அவர்களுக்குத் தங்கமே கடவுள். அதைத் துதிப்பவர்கள் அவர்கள். 1943ல் சிக்காகோவில் உலகத்தின் உண்மை யான அரசன் தங்கமே என்ற தலைப்போடு ஒரு புத்தகம் வெளியிடப்பட்டது. அதன் தலைப்பே புத்தகத்தைப் பற்றி நன்கு விளக்கிக் கூறுகிறது. அமெரிக்காவில் தங்க ஆதார அளவு கைவிடப்பட்டது ஒரு தற்காலிகமான தங்க ஆதார அளவு கைவிடப்பட்டது ஒரு தற்காலிகமான பின்னடைவு, யுத்தத்துக்குப் பிறகு தங்கம் மறுபடியும் அரியாசனத்தில் அமரும் என்ற அதை எழுதிய ஆசிரியர் கருதினார். அவர் பெயர் பிராங்க்ளின் ஹாப்ஸ். ‘‘லொவியாத்தான் என்ற புத்தகத்தை எழுதி உலக்குக்கு அளித்ததன் மூலம் அதிகமான புகழுக்கும் கண்டனத்துக்கும ஆளாகிய என் முன்னோராகிய தாமஸ் ஹாப்சுக்கு இந்நூலைக் காணிக்கையாக்குகிறேன்’’ என்று அவர் எழுதியிருக்காவிட்டால் அவர் பெயர் வாசகருக்கு எந்த முக்கியத்துவத்தையும் கொண்டிருக்காது.

17–ம் நூற்றாண்டின் மாபெரும் தத்துவஞானியான ஹாப்சின் வழிவந்த ஆசிரியர் கிறுக்குத்தனமானவர் என்பதில் சந்தேகமில்லை. இப்புத்தகத்தில் ஏராளமான கருத்துக்களும் மூதுரைகளும் பெரிய எழுத்தில் அச்சிடப்பட்டிருக்கின்றன. உதாரணமாகச் சிலவற்றைத் தருகிறோம். ‘‘தேசங்களின் தலைவிதியின் திறவுகோல் தங்கமே’’, ‘‘உடலுக்கு ரத்தத்தைப்போல வர்த்தகத்துக்குத் தங்கம் அவசியம்’’, ‘‘தொழில் மற்றும் நிதியின் மொத்த அமைப்பின் அடிப்படைக் கல் தங்கமே’’. பைபிள் நூலில் எழுதப்பட்டிருப்பனவற்றை அவர் அப்படியே நேர்ப்பொருளில்

புரிந்துகொள்கிறார். உலகம் சில ஆயிரம் வருடங்களுக்கு முன்னர் படைக்கப்பட்டது என்பதில் அவருக்குச் சந்தேகமில்லை.

“உலக வரலாற்றின் தொடக்கத்தில், படைப்பு முடிந்த உடனே தங்கம் தோன்றியது, அதன் சக்தி வெளிப் பட்டது,” அவர் மேலும் எழுதுகிறார்: “பைபிளின் சொற்களில் பல நூற்றாண்டுகளாகப் பொருள் விளக்கம் கூறப்பட்டிருப்பதற்கேற்ப தங்கம் என்றால் சக்தி, உண்மை யில் கடவுளின் கருவி என்று அர்த்தம்.”

20-ம் நூற்றாண்டில் ஒருவர் தங்கத்தை இப்படிக் கடவுள் நிலைக்கு உயர்த்தி வழிபாடு செய்வது வேடிக்கையாகத் தோன்றினாலும், அது சில விசித்திரமான காட்சிப் பதிவுகளோடும் கருத்துக்களோடும் சேர்ந்திருக்கிறது. அவருடைய தப்பெண்ணங்கள் கூட சுவாரசியமான வையாக இருக்கின்றன. உதாரணமாக ஒரு பகுதியை மேற்கோள் காட்டுவோம்: “தங்கம் தான் உலகத்திலேயே மிகவும் அதிகமாகப் பழிக்கப்படுகின்ற, தவறாகப் புரிந்துகொள்ளப்படுகின்ற (மிகவும் வெறுக்கப்படுகின்ற என்றுகூடச் சொல்லலாம்) சடப்பொருள். எழுத்தாளர் களும் பேச்சாளர்களும் அரசியல்வாதிகளும் வங்கி முதலாளிகளும் தங்கத்தைப் பற்றிப் பேசும் பொழுது ஏன் கோபமடைகிறார்கள் என்பதைப் புரிந்து கொள்வது உண்மையில் கடினமாகவே இருக்கிறது. தங்கம் என்ற பெயரைக் கேட்டதும் அவர்கள் புலம்புகிறார்கள். கதறுகிறார்கள். திட்டுகிறார்கள்... ஒரு சாதாரண உலோகம் இவ்வளவு பகைமை உணர்ச்சியைத் தூண்டக் காரணத்தைப் புரிந்துகொள்ள முடியவில்லை.”★

தங்கம் “ஒரு சாதாரண உலோகம்” அல்ல என்பது திண்ணம். தங்கமானது பணம் மற்றும் மூலதனம். மக்களுக்கிடையே உள்ள சொத்து உறவுகளில், தனிநபர்கள் மற்றும் சமூகக் குழுக்களின் தனிப்பட்ட நலன்களில் அது இணைந்திருக்கிறது. மார்க்ஸ் குறிப்பிட்டதுபோல, இங்கே தனியான நலன்களின் கோபாவேசங்கள் சம்பந்தப் பட்டிருக்கின்றன. அப்படிப்பட்ட பொருளைப் பற்றி அமைதியாக, பாரபட்ச மின்றி விவாதிக்க வேண்டு மென்று எதிர்பார்ப்பது வெகுளித்தனமே.

வரலாற்று ரீதியாகத் தங்கம் பொதுவான வகையில் மூலதனத்தின் சொரூபமாக இருந்ததோடல்லாமல் ஒரு குறிப்பிட்ட வகையான மூலதனத்தின், முதலாளி வர்க்கக் கோஷ்டியின் கருவியாகவும் அதன் பதாகையாகவும் இருந்து வந்திருக்கிறது. 19-ம் நூற்றாண்டின் கடைசியில் தங்கப் பிரச்சினை அமெரிக்க அரசியல் வாழ்க்கையில் மையமாக இருந்தது.

தொழில்துறை மற்றும் வங்கி மூலதனத்தின் நலன்களை எடுத்துக்கூறிய குடியரசுக் கட்சி முழுமையான தங்க ஆதார அளவைப் பின்பற்றுவதையும் வெள்ளியைப் பண உலோகம் என்ற நிலையிலிருந்து நீக்குவதையும் ஆதரித்தது. விவசாயிகளால் ஆதரிக்கப்பட்ட ஜனநாயகக் கட்சி வெள்ளியையும் இரு உலோக நாணயக் கொள்கை யையும் ஆதரித்தது. தங்கத்துக்குச் சமமாக வெள்ளி நாணயங்களைப் பெரும் அளவில் வெளியிடுவது விலைகளின் மட்டம் உயருமாறு செளிணியும், இது பெரிய விவசாயிகளுக்கே உதவியாக இருக்கும் என்ற நம்பிக்கையே இந்த நிலைமைக்கு உண்மையான காரணமாகும். ஜனநாயகக் கட்சியினரின் தலைவரான வி.பிரையன் தன்னுடைய எதிரிகளை நோக்கிக் கூறினார்.

''.... தங்க ஆதார அளவு வேண்டும் என்று அவர்கள் கோருகிறார்கள். அவர்களுக்கு நாம் சொல்லும் பதில் இதுதான். தொழிலாளர் களுடைய நெற்றியில் நீங்கள் இந்த முட்கிரீடத்தை வைப்பதற்கு நாங்கள் அனுமதிக்க மாட்டோம். மனிதகுலத்தைத் தங்கச் சிலுவையில் அறைவதற்கு நாங்கள் விடமாட்டோம்.''

இந்தச் சொற்களில் மேடைக் கலை பலமாக இருக்கிறது. உழைக்கும் மக்களின் உண்மையான நலன்கள் தங்கம் அல்லது வெள்ளியோடு சம்பந்தப்பட்டிருக்கவில்லை. ஆனால் இந்த நலன்கள் அந்தக் காலத்தில் அரசியல் ரீதியில் வெளிப்பட முடியவில்லை. 1896-ல் ஜனாதிபதி தேர்தலின் பிரையன் தோற்கடிகப்பட்டார். 1900-ல் தங்க ஆதார அளவைப் பற்றிய சட்டம் நிறைவேற்றப்பட்டது, பண உலோகம் என்ற நிலையிலிருந்து வெள்ளியை அகற்றுவது அதன் இறுதிக் கட்டத்தை அடைந்தது.

தங்கம் பெரிய அளவு மூலதனத்தோடு சேர்ந்திருப்பதற்கு, பணக்காரர்களுடைய பணம் என்ற பிரதிநிதித்துவத்துக்க ஒரு நீண்ட வரலாறு இருப்பதைக் குறிப்பிட வேண்டும். சில சமயங்களில் வெள்ளியும் செம்பும் அதற்குச் சவால் விடுகின்றன; வேறு சமயங்களில் ''சாதாரண மக்களின் பணம்'' என்ற முறையில் காகிதப் பணம் அதற்குச் சவால் விடுகிறது. காகிதப் பணத்தைக் ''கண்டுபிடித்த'' ஜான் லோ என்ற பிரபலமான ஸ்காட்லாந்துக்காரர் 18ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அதை வைத்துச் சூதாட்டம் நடத்தினார். செலாவணியில் தங்கத்துக்குப் பதிலாகக் காகிதப் பணத்தை உபயோகிப்பதன் மூலம் சாதாரண மக்களுக்கு அதிகமான பணம் கிடைக்கச் செய்ய முடியும். அதன் மூலம் அவர்களுடைய பொருளாதார சுபிட்சத்தை உறுதிப்படுத்த முடியும் என்று அவர் நம்பினார்.

பிரான்சில் நடைபெற்ற இந்தப் பரிசோதனை வரலாற்றில் பெரிய அளவில் முதன் முதலாக நடைபெற்ற காகிதப் பணத்தின் பணவீக்கத்தில் முடிவில்லை, ஒரு சில வர்த்தகர்களையும் வர்த்தக சூதாட்டக்காரர்களையும் லாப வேட்டைக்காரர் களையுமே பணக்காரர்களாக்கினார்.

தங்கத்தின் சக்தியைப் பற்றிய கருத்து எல்லாக் காலங்களிலும் ஒரே மாதிரியாக இருக்கவில்லை. பூஷ்கின் எழுதிய பேராசைக்கார வீரன் என்ற கவிதை யில் வருகின்ற பிரபுவுக்குத் தங்கம் மக்கள் மீது கொண்டிருக்கும் உள்ளார்ந்த சக்தியை, தங்கத்தைக் கொண்டு அவர்களுடைய உழைப்பை வாங்க முடியும் என்பதைக் காட்டுகிறது. ஆடல் அழகிகள், பாடகர்கள், சுதந்திரமான மேதைகள் (கவிஞர்கள், இசைவாணர்கள் மற்றும் கலைஞர்கள்), கூலிக்காகக் கொலை செய்பவர்கள் ஆகிய அயற்பண்புடைய நபர் களின் சேவைகளைப் பெறுவதையே இது குறித்தது. நிலப்பிரபத்துவ சமூகத்தைச் சேர்ந்த பிரபுவுக்குத் தங்கத்தின் சக்தி இன்னும் மூலதனத்தின் சக்தியாகவில்லை. அவர் தன்னுடைய தங்கத்தை யாருக்கும் கொடுக்க (வட்டிக்குக்கூட) விரும்பவில்லை. இது அடிப்படையில் தங்கத்தின் சக்தியைப் பற்றிய முதலாளித்துவத்துக்கு முற்பட்ட கருத்தாகும். இது இன்றுள்ள பூர்விகமான பதுக்கலைப் போன்ற கலப்பற்ற திரட்டலெ.

நிலப்பிரத்துவ காலத்தில் தங்கம் இன்னும் அரசியல் உரிமைகள் இல்லாதிருந்த இளம் முதலாளி வர்க்கத்தின் விருப்பார்வங்கள், அவர்களுடைய செல்வம் ஆகிய இரண்டின் சொரூபமாக இருந்தது. இந்த வகையில் அது நிலப்பிரபுக்களுடைய நிலத்துக்கும் வாளுக்கும், அதாவது நிலவுடைமைக்கும் ராணுவ வலிமைக்கும் எதிராக இருந்தது. முதலாளி வர்க்கத்தினருக்குத் தங்கம் முதலாவதகாகவும் முதன்மை யாகவும் பண மூலதனமே. தொடக்க மூலதனத்தை அதிகப்படுத்து வதற்கு அதைச் செலாவணியில் ஈடுபடுத்த முடியும். அவ்வாறு செய்வதும் அவசியம். பூஷ்கின் வீரப்பண்பு யுகத்திலிருந்து சில காட்சிகள் என்ற தலைப்பில் எழுதிய பூர்த்தியடையாத நாடகத்தில் மதத் துறவி யும் ரசவாதியுமான பெர்த்தோல்ட்டுக்கம் பணக்கார முதலாளி யான மார்ட்டினுக்குமிடையே பின்வரும் உரையாடல் காணப்படுகிறது.

**பெர்த்தோல்ட்:** எனக்குத் தங்கம் தேவையில்லை. நான் உண்மையைத் தேடுகிறேன்.

**மார்ட்டின்:** உண்மையைப் பிசாசு கொண்டுபோகட்டும். எனக்குத் தங்கம்தான் வேண்டும்.

அதிகமான விவாதத்துக்குப் பிறகு மார்ட்டின் 150 குல் டென்களை பெர்த்தோல்ட்டிடம் கொடுப்பது கூட மூலதனத்தின் முதலீடுதான். அந்த ரசவாதி தங்கத்தைத் தயாரிக்கும் ரகசியத்தைக் கண்டுபிடிப்பார் என்று நம்புவதால் அவருடைய மூலதனத்துக்கு அதிகமான லாப ஈவு அவருக்குக் கிடைக்கும்.

முதலாளித்துவம் தங்கத்தின் சக்தியின் எல்லா அம்சங்களையும் அதிகப்படுத்தி வளர்க்கிறது. எந்தப் பண்டத்தையும் (அல்லது சேவையையும்) வாங்குவதற்கு, எந்தக் கடனையும் தீர்ப்பதற்குரிய சக்தி தங்கத்திடம் இருக்கிறது. ஒவ்வொரு நாட்டிற்குள்ளாகவும் காகிதக் கடன் பணம்– குறிப்பாக அது தங்கத்துக்குப் பரிவர்த் தனை செய்யப்படக்கூடியதாக இருந்தால் –இதே விதமான சக்தியைக் கொண்டிருக்கும். ஆனால் உலகச் சந்தையில் தேசிய நாணயங்கள் மிகவும் குறைவான செலாவணியையே கொண்டிருக்கின்றன அல்லது உலகச் சந்தையில் தேசிய நாணயங்கள் மிகவும் குறைவான செலாவணியையே கொண்டிருக்கின்றன அல்லது அவை அங்கீகரிக்கப்படுவதே இல்லை. அங்கே தங்கம் மட்டுமே பொதுக் கொள்வினை மற்றும் வழங்கீட்டுச் சாதனம் என்ற கூறுகளைக் கொண்டிருக்கிறது. பொருளாதாரம் மற்றும் வர்த்தகம் வளர்ச்சி அடைகின்றபொழுது தங்கத்தைக் கொடுத்துப் பெறக்கூடிய பொருள்கள் மற்றும் சேவைகளின் வரிசை பிரம்மாண்டமான அளவுக்கு அதிகரித்துக் கொண்டிருக்கிறது.

முதலாளித்துவ நாடுகளின் உள்நாட்டுப் பொருளா தாரத்தில் தங்கம் இனியும் செலாவணியில் இல்லை, அது பணச் செயல்களையும் நிறைவேற்றுவதில்லை என்பது நமக்கத் தெரியும். தங்கம் கொள்வினை மற்றும் வழங்கீட்டுச் சாதனமாகப் பயன்பட வேண்டமென்றால் காகிதக் கடன் பணத்துக்கு அது விற்பனை செய்யப்பட வேண்டும். இதன் மூலம் தங்கம் மற்ற பண்டங்களைப் போலாகிறது. எனினும் தங்கத்தைப் போல விற்பனைக்கு உத்தரவாதமான சந்தையையும் சுலபமாக விற்பனை செய்யப்படும் தகுதியையும் கொண்ட வேறொரு பண்டத்தைக் கண்டுபிடிப்பது கடினமே. பதுக்கலின் அளவு மென்மேலும் பெருகிக்கொண்டிருப்பது பொதுக் கொள்வினை மற்றும் வழங்கீட்டுச் சாதனம் என்ற முறையில் தங்கத்தின் பாத்திரம்–அது மாறியிருந் தாலும்கூட குறைந்துவிடவில்லை என்பதைக் காட்டு கிறது. இன்றைய நிலைமையில்

சர்வதேசப் பணவியல் அமைப்பிலும் உலகச் சந்தையிலும் தங்கத்தின் பாத்திரமும் மாறிவிட்டது. உலகச் சந்தையிலும் தங்கத்தின் பாத்திரமும் மாறிவிட்டது. ஆனால் இன்றும்கூட தங்க இருப்பு ஒரு நாட்டின் சர்வதேச அந்தஸ்தின் மிக முக்கியமான குறியீடாக, உலகச் சந்தையில் அதன் வளவாளிணிப்புக்களின் அளவுகோலாக இருக்கிறது.

முதலாளித்துவத்தின்கீழ் தங்கம் செல்வத்தின் தனிமுதலான சமூகப் பொருள்மயமாக்கலின் செல்வத் தின் அதிகப் பயனுள்ள, மறுக்கப்பட முடியாத, நிபந்தனையற்ற வடிவமாகிக்கொண்டு வருகிறது. எந்தப் பண்டத்தையுமே அளவு மட்டும் முக்கியமானதாக இருந்தால் உறைந்திருக்கும் மனித உழைப்பின் சூக்குமமான வடிவமாக, உழைப்பின் ஸ்தூலமான வடிவங் களுக்கிடையே உள்ள வேறுபாடுகள் மறைந்துவிட்ட வடிவமாகக் கருத முடியும். ஆனால் தங்கத்தில் பண்டத்தின் இக்குணாம்சம் அதன் எல்லைகளை அடைந்துவிட்டது. ஏனென்றால் பணத்தின் செயல்களை நிறைவேற்றுவதற்குத் தங்கம் தன்னுடைய பளபளப்பான சாராம்சத்தை முன் வைக்கிறது.

“பண்டைச் செலாவணியின் பெருக்கத்தோடு சேர்ந்தே எப்பொழுதுமே உபயோகத்துக்குத் தயாராக இருக்கின்ற செல்வத்தின் தனிமுதலான சமூக வடிவமாகிய பணத்தின் சக்தியும் அதிகரிக்கிறது” என்கிறார் மார்க்ஸ். தங்கமாக இருக்கும் செல்வமும் பணமும் மார்க்ஸ் காலத்தில் அநேகமாக ஒன்றாகவே இருந்தது. பணம் “எப்பொதுமே உபயோகத்துக்குத் தயாராக” இருப்பதைப் பற்றி மார்க்ஸ் பேசும்பொழுது அவர் தனிமுதலான பணமாக மாற்றப்படும் தன்மை என்ற குணாம்சம் இல்லாத மற்ற பண்டங்களிலிருந்து தங்கத்தை வேறுபடுத்திக் காட்டுகிறார். நம் காலத்தில் தங்கம் இம்முறையில் மற்ற பண்டங்களிலிருந்து வேறுபட்டிருப்பது மட்டுமல்லாமல், காகிதக்கடன் பணத்தோடும் வேறுபடுகிறது. காகிதக் கடன் பணத்தின் செயல் தேசிய அரசின் எல்லைகளோடு நின்றுவிடுகிறது; மேலும் பணவீக்கத்தினால் மதிப்புக் குறைகின்ற அழிக்க முடியாத போக்கையும் கொண்டிருக் கிறது. சர்வதேச வழங்கீட்டுச் சாதனம் என்ற பாத்திரத்தை நிறைவேற்றுகின்ற தேசிய நாணயங்கள், முதலாவதாகவும் முதன்மையாகவும் அமெரிக்க டாலர்கள் இத்தகைய பிறவிக் குறைகளிலிருந்து தப்ப முடியாது. இவற்றோடு டாலரின் “அடைந்திருக்கும் குறைகளையும்” [இவை சமீப வருடங்களில் குறிப்பிடத்தக்க விதத்தில் வெளிப்படுகின்றன] நாம் சேர்த்துக் கொண்டால் உலகப் பணம் என்ற வகையில் தங்கத்தின் சாதகங்கள் முற்றிலும் தெளிவாகப் புலப்படுகின்றன.

கடந்த இருபதாண்டுகள் முழுவதும் மேற்கு நாடுகளில் சர்வதேசப் பணமாக மாற்றப்படுவது என்ற பிரச்சினையில அதிகமான கவனம செலுத்தப்பட்டிருக்கிறது. உலக வர்த்தகம் மற்றும் வழங்கீடுகள் ஒப்புநோக்கில் சிக்கலின்றி இயங்குவதை உறுதிப்படுத்த சர்வதேசச் செலாணியில் தங்கம் மற்றும் அவற்றின் அங்கீகரிக்கப்படக்கூடிய பதிற்பொருள்களின் இருப்புக்களின் போதுமான அளவைப் பற்றிய பிரச்சினையே இது. சர்வதேச வழங்கீடுகள் என்ற கருத்தில் ஒரு நாட்டின் தங்கம் மற்றும் அந்நிய நாணய இருப்புக்கள் அந்த நாட்டின் தேசியச் செல்வத்தில் உலகப் பணம் என்ற வடிவத்தில், எப்பொழுதும் பணமாக மாற்றப்படக்கூடிய வடிவத்தில் இருப்பவையே. ஒரு நாட்டில் அறுவடை மோசமாகி விட்டால் அல்லது வேறு வகையான இயற்கை அழிவுகள் ஏற்படும் பொழுது இந்த இருப்புக்கள் அந்த நாட்டுக்கு உதவியாக இருக்கின்றன; பொருளாதாரத்தின் ஏற்றுமதித் துறைகளில்ஏற்படும் தற்காலிகமான நெரக்கடி களைச் சமாளிக்க உதவுகின்றன. மற்ற எல்லா அம்சங்களும் சரிசமமாக இருக்கும் பொழுது, டாலர் இருப்புக்கள் உபயோகமானவை. சர்வதேச நிதி ஸ்தாபனத்தி லிருந்துகடன் பெறுவதற்குரிய உரிமைகள் பயன்தரக் கூடியவையே. ஆனால்தங்க இருப்புக்களைக் காட்டிலும் நம்பிக்கையானது வேறு எதுவுமில்லை என்று பல நாடுகள் கருதுவதற்குக் காரணங்கள் இருக்கின்றன. தங்க இருப்புக்களின் பணமாக மாற்றப்படக் கூடிய தன்மை, உபயோகத்துக்குத் தயாரான நிலை வேறு எந்த இருப்புக்களைக் காட்டிலும் மிகவும் அதிகமாகும். எல்லா நாடுகளிலும் தங்கம் சர்வதேசப் பணமாக மாற்றப்படும் தன்மையின் அடிப்படையாக, அச்சாக இன்னும் இருக்கிறது, மொத்த முதலாளித்துவப் பணவியல் அமைப்பிலும் முக்கியமான பாத்திரத்தை நீடித்துக் கொண்டிருக்கிறது.

பொதுவாக, தங்கத்தின் பாத்திரத்தையும் சக்தியையும் கையிருப்புக்கள், கையிருப்புப் பண மூலதனம் என்ற பொருளாதார இனம் மற்றும் பிரச்சினையோடு தொடர்பாகப் பார்க்க வேண்டும். சில சமயங்களில் ஒரு துணிகரமான தாக்குதலின் மூலம் சண்டையில் வெற்றி பெற்றுவிடலாம்; ஆனால் அதிகமான கையிருப்புப் படைகளும் மிகவும் அதிகமான அளவுக்கு வேகமாகப் படைகளை வைத்திருப்பவர்கள்தான் யுத்தத்தில் வெற்றி பெறுவார்கள் என்பது நமக்குத் தெரியும். இது முதலாளித்துவத் தொழில் நிறுவனத் தின் நடவடிக்கைக்கும் இரசின் பொருளாதாரப் போர்த் தந்திரத்துக்கும் பொருந்துவதே. எல்லா மூலதனமும் வெற்றிகரமான

முறையில் பயன்படுத்தப் படுவதை உறுதிப்படுத்துவதற்கு அதன் ஒரு பகுதி சேம இருப்பாக வைக்கப் பட்டிருக்க வேண்டும்.

ஒரு நாட்டின் தங்க இருப்பு அந்த தேசத்தின் பண மூலதனக் கையிருப்பாகும். ஒரு அரசின் பலம் அதன் தங்க இருப்பின் அளவைக் கொண்டு நிர்ணயிக்கப்படுவதாகக் கருதுவது தவறாகும். அதன் பொருளாதாரம், உற்பத்தி, தொழில்நுட்பத் திறன் கொண்ட உழைப்புச் சக்தி மற்றும் விஞ்ஞான, தொழில் நுட்பவியல் வளவாளிணிப்புக்களே இந்த பலத்தின் அடிப்படையாகும். மூலப்பொருள் மற்றும் எரிபொருளின் முக்கியமான ரகங்களின் இயற்கை வளங்களும் அவற்றின் திரட்டப்பட்ட கையிருப்புக்களும் வங்கிகளின் பாதாள அறைகளில் வைக்கப்பட்டிருக்கும் தங்கப்பாளங்களின் குவியல்களைக் காட்டிலும் ஒப்பிடக்கூட முடியாத அளவுக்கு அதிக முக்கியமானவை யாக இருக்கலாம். ஆனால் ஒரு நாட்டின் பிரம்மாண்டமான பொருளாதார இயந்திரத்தின் மொத்த இயக்கமுமே சில சமயங்களில் இந்தத் தங்கப்பாளங்கள் இருப்பதையும் அவற்றை உபயோகிக்க முடிவதையும் முற்றிலும் பொறுத்திருந்த உதாரணங்களை வரலாற்றில் காண முடியும். இன்றும் தங்கத்தின் இந்தப் பாத்திரம் முடிந்துவிடவில்லை. முதலாளித்துவ நாடுகளின் பொருளாதாரம் மற்றும் நிதிகளின் நிலையற்றதன்மை இதை அதிகப்படுத்தக்கூடும்.

# வழிபாட்டுப் பொருள்

இயற்கையை மிஞ்சிய சக்தி இருப்பதாகக் கூறி ஒரு பொருளைக் குருட்டுத்தனமாக வணங்கும் பொழுது அதை வழிபாட்டுப் பொருள் என்கிறோம். தங்கத்தைப் பற்றி நமக்குத் தெரிந்த எல்லாமே அது ஒரு வழிபாட்டுப் பொருள் என்பதை உறுதிப்படுத்துகிறது. அது வழிபாட்டுப் பொருளாக மாறியது ஏன், எப்படி என்பதைக் காண்போம்.

ரெனே செடிய்யோ இதைப் பின்வருமாறு விளக்குகிறார். மக்களின் தங்க வழிபாடு அவர்கள் இயற்கைச் சக்திகளை வழிபடுவதைப் போன்றதே. தங்கத்தின் சமூகச் செயல்களோடு அதற்குச் சம்பந்தமில்லை. “மனிதன் தங்கத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளத் தொடங்கியதிலிருந்தே அது அவனைக் கவர்ந்து விட்டது... அதன் அழகு கவரும் தன்மை உடையதே என்பதை நாம் ஒத்துக்கொள்ள முடியும்.

ஏனென்றால் ஆதியிலிருந்தே எல்லா இடங்களிலும் மனிதன் தங்கத்தால் கவரப்பட்டிருக்கிறான். தங்கம் மந்திர சக்தியைக் கொண்ட உலோகம். இந்தக் கருத்தில் தங்கத்தின் வரலாற்றின் முதலும் முடிவுமே அடங்கியிருக்கிறது.... மண்ணியலாளர்கள் அதைக் கனிப் பொருள் என்றும் பொருளியலார்கள் அதைப் பண்டம் என்றும் பார்க்க விரும்பலாம். ஆனால் சமூகவியலாளரும் வரலாற்றாசிரியரும் அதை ஒரு மாதம் என்று பார்க்க வேண்டும்.” இதற்குப் பிறகு பல்வேறு மதங்களிலும் தங்கம் வகித்திருக்கும் பாத்திரத்தைப் பற்றி விரிவான தகவல்களை அவர் தருகிறார். சீனர்களைத் தவிர அநேகமாக மற்ற எல்லா மதங்களிலுமே தங்கம் ஏதாவதொரு விதத்தில் கடவுளாகக் கருதப் பட்டிருக்கிறது என்று நாம் பார்க்கிறோம். பழங்காலத்தில் சீனர்கள் தங்கத்தைத் தீமை செய்கின்றன பாதாளப் பேய்களோடு சம்பந்தமுடையதாகக் கருதினார்கள். ஆகவே சீனர்கள் தங்கத்தை வழிபாடு செய்யாததற்கும் குருட்டு நம்பிக்கையே காரணம்.

இத்தகைய வரலாற்றுச் செய்திகள் தங்கம் வழிபாட்டுப் பொருளானதற்குரிய காரணத்தை விளக்குகின்றனவா? இல்லை என்பது என் கருத்து, ஒரு வகையான வழிபாட்டு நோய்க்கு ஆசிரியரும் பலியாகிவிட்டார். தங்கத்தின்

“மந்திர” குணாம்சங்கள் அதில் உள்ளூறையாகவே இருக்கின்றன. ஆகவே அவற்றை விளக்க முடியாத என்று கூறுகிறார்.

பூர்விக மதங்களில் வழிபாடு செய்யப்பட்ட இயற்கைச் சக்திகளோடு தங்கத்தை ஒப்பிடுவதற்குச் சிறிதளவு காரணம் இருக்கலாம். தங்கத்தைச் சூரியனோடு தொடர்புபடுத்தவது மிகவும் பழமையானது. எகிப்திய மதத்தில் அதைப் பார்க்கலாம். ரசவாதத்தில் நவீன காலம் வரை அது இருந்து வருகிறது. ஆனால் தங்கம் வழிபாட்டுப் பொருளானதை இதனால் மட்டுமே விளக்க முடியாது. ஏனென்றால் தங்க வழிபாடு அதன் உச்சகட்டத்தை பூர்விக சமூகங்களில் அடையவில்லை; ஓரளவுக்கு முன்னேற்றமான வளர்ச்சிக் கட்டத்தில், சமூக உணர்வில் கலப்பற்ற மதக் கருத்துக்கள் [குலமரபுக் கருத்துக்களைப் பற்றிச் சொல்லத் தேவை யில்லை] அத்தகைய விரிவான பாத்திரத்தை இனியும் வகிக்காத பொழுது அடைந்தது. அமெரிக்காவை வெற்றி கொண்ட காலகட்டத்தில் வெகுளித்தனமான இந்தியர்கள் மத்தியில் தங்கம் வழிபாட்டுப் பொருளாக இருக்கவில்லை. அறிவு வளர்ச்சியடைந்த கிறிஸ்தவ ஐரோப்பியர்கள் மத்தியிலேயே அது வழிபாட்டுப் பொருளாக இருந்தது.

தங்கம் வழிபாட்டுப் பொருளானது பிரதானமாக சமூகத்தன் மையினால்தான் எல்லாவற்றுக்கும் மேலாக தங்கத்தின் சமூகச் செயல்களே அதை நிர்ண யிக்கின்றன. அதன் இயற்கையான செயல்கள் அதை நிர்ணயிக்கவில்லை. மதரீதியில் தங்கத்தை வழிபடு வதற்கும் இயற்கைச் சக்திகளை வழிபடுவதற்கும் இடையிலே இணைப்பு இருக்கின்ற சாத்தியத்தை மறுக்காமலேயே. மத உணர்வில் அதன் விசேஷமான சமூக அந்தஸ்து ஏற்படுத்துகின்ற பிரதிபலிப் பாகவே நாம் அதைப் பார்க்க வேண்டும்.

பழைய ஏற்பாட்டில் தங்கம் வகிக்கின்ற மகத்தான பாத்திரம் என்பது அது தொகுக்கப்பட்ட காலத்தில், அதாவது சுமாராக கி.மு.இரண்டாவது ஆயிரமாண்டு களின் கடைசியிலும் முதல் ஆயிரமாண்டுகளின் தொடக்கத்திலும் அதற்குப் பிந்திய நூற்றாண்டுளிலும் இருந்த உண்மையான பண்டப் பண உறவுகள் தொல்கதையிலும் தொல்கதையான வரலாற்றிலும் பாதி தொல்கதையான வரலாற்றிலும் உருமாறி வெளிக் காட்டப்படுவது என்பதில் அநேகமாக சந்தேகம் இருக்க முடியாது. இந்தக் காலத்தில் தங்கம் பாலஸ்தீனத்தில் முக்கியமான சமூக–பொருளாதாரப் பாத்திரத்தை வகித்த தென்பதில் சந்தேகமில்லை.

பழைய ஏற்பாட்டில் தங்கம் என்ற சொல் 415 இடங்களில் குறுப்பிடப்ப டுகிறதென்று நாம் முன்னர் மேற்கோள்காட்டிய பிராங்க்ளின் ஹாப்ஸ் கணக் கிட்டிருக்கிறார். முதல் குறிப்பிலேயே தங்கத்தின் ‘‘மந்திர சக்தியைப்’’ பற்றித்தான் சொல்லப்படுகிறது. உலகத் தோற்ற நூலின் இரண்டாம் அத்தியாத்தில் கடவுள் தான் படைத்த மனிதனை வாழ விட்டிருந்த ஈடன் தோட்டத்தின் வர்ணனை இடம் பெற்றிருக்கிறது. ஆதாம் முன்பே படைக்கப்பட்டுவிட்டான். ஆனால் ஏவாள் இன்னும் படைக்கப்படவில்லை. ‘‘ஈடனிலிருந்து சென்ற நதி தோட்டத்துக்கு நீர் பாய்ச்சியது; அங்கே அது நான்கு கிளை நதிகளாகப் பிரிந்தது. முதல் நதிக்குப் பிஸோன் என்று பெயர். அது தங்கம் கிடைக்கம் ஹவிலா தேசம் முழுவதும் பாய்கிறது. அந்த தேசத்தில் தரமான தங்கம் கிடைக்கிறது’’ என்று அதில் எழுதப்பட்டிருக்கிறது.

இந்தப் பகுதியில் குறிப்பிடப்படும் பூகோள ரீதியான உண்மைகள் இன்னும் முழுமையாகக் கண்டுபிடிக்கப் படவில்லை. ஹவிலா தேசம் அராபிய தீபகற்பத்தின் மத்தியப் பகுதி. அதுதான் இன்றைய சாவூதி அரேபியா, அங்கே பழங்காலத்தில் உண்மையிலேயே தங்கம் வெட்டியெடுக்கப்பட்டது என்று சில நிபுணர்கள் கூறுகிறார்கள். அங்கே அத்தகைய நதி கிடையாது என்பது உண்மையே. ஆனால் பைபிளை எழுதியவர்களிடம் பூகோளரீதியில் துல்லியமான விவரங்களை எதிர்பார்க்க முடியுமா? எப்படி இருந்தாலும் இது நமக்கு முக்கியமல்ல. இங்கே தங்கம் ஒரு கனிப்பொருள் என்ற முறையில் தோன்றுகிறது. நிர்வாண ஆதாமின் கருத்தில் இல்லா விட்டாலும் அதன் மதிப்பை முன்னரே நன்கு உணர்ந் திருந்த ஆசிரியரின் கருத்தில் அது முக்கியமானது என்பது உண்மையே.

ஆபிரகாமின் செல்வத்தைப் பற்றிப் பின்வருமாறு எழுதப்பட்டிருக்கிறது. ‘‘ஆபிரகாம் கால்நடையிலும் வெள்ளியிலும் தங்கத்திலும் மிகவும் பணக்காரராக இருந்தார்.’’ இங்கே மந்திரத்தின் சுவடுகூடக் கிடையாது. ஆனால் பழங்காலத்திய ஹீப்ரு சமூகத்தில் செல்வத்தின் விசேஷமான வடிவம் என்ற முறையில் அரிய உலோகங்களின் பாத்திரத்தைப் பற்றி மிகவும் சுவாரசியமான ஆதாரம் இங்கே இருக்கிறது. பணத்தின் முழு அர்த்தத்தில் தங்கமும் வெள்ளியும் இன்னம் இங்கே பணமாகவில்லை என்றாலும் அவை ஏற்கெனவே அதை நெருங்கிவிட்டன.

இனி மிச்சமுள்ள 413 குறிப்புகளையும் எழுதி நாம் வாசகருக்கு அலுப்பை ஏற்படுத்தப் போவதில்லை. பைபிள் நூல் தங்கத்தின் தெளிணிவிகமான பிறப்பை யல்ல, அதன் சமூக அந்தஸ்தையே குறிப்பிடுகிறது என்பதை

மட்டு இங்கே கூறுவோம். கிறிஸ்தவ மதம் உள்பட பல மதங்களையும் சேர்ந்த ஆலயங்களில் உள்ள ஆபரணங்களில் தங்கம் முக்கியமான இடத்தைப் பெற்றிருக்கிறது. இந்த மதங்களில் பின்பற்றப்படும் வழிபாட்டில் தங்கம் ஒரு கூறாக இருப்பதே இதற்குக் காரணம் என்று செடிய்யோ கூறுகிறார். ஆனால் வேறு வகையான வாதம் அதிக யதார்த்தமாக இருக்கம். தங்கத்தின பிரகாசமான புகழ் மதத்துக்கு வெளியே, அதன் சமூக –பொருளாதார யதார்த்தத்தில் "சந்தையில்" ஏற்படுகிறது. மதத்தால் புனிதமடைவதால் தங்கம் மதிப்பைப் பெறவில்லை. அதற்கு மாறாக, தங்கம் மதிப்பைக் கொண்டிருப்பதால் மதம் அதை ஏற்றுக் கொள்கிறது.

ஆகவே தங்க வழிபாடு சமூகத்தன்மையைக் கொண்டிருக் கிறது. அதனால்தான் நாகரிகம் மற்றும் கல்வி வளர்ச்சி ஏற்படும்பொழுது தங்க வழிபாடு குறைந்து விடவில்லை. அது மிகவும் வளர்ச்சியடைந்த, நயமான வடிவங்களை மேற்கொண்டு அதிகரிக்கிறது. இயற்கையால் கொடுக்கப் படும் பொருள் "இயற்கைக்கு மிஞ்சிய" குணாம்சங்களைப் பெறுகிறது–அது பணமாகிறது. மக்கள் தனிநபர்கள் என்ற முறையில் அல்லாமல் சில பண்டங்களை உற்பத்தி செளிணிபவர்கள் மற்றும் உடைமையாளர்கள் என்ற முறையில் ஒருவருக்கொருவர் உறவு கொள்கின்ற சமூக அமைப்பின் உற்பத்தியே பணம்.

முதலாளித்துவ வளர்ச்சியின்போது மக்களுக்கிடையில் இந்த வகையான உறவு பலப்பத்தப்படுகிறது. தனக்காக, தன்னுடைய சொந்த நுகர்வுக்காகப் பொருள்களை உற்பத்தி செய்வது அபூர்வமாகிவிடுகிறது. எல்லாமே பரிவர்த்தனைக்காக, சந்தைக்காக, பணத்துக்காக மட்டுமே உற்பத்தி செய்யப்படுகிறது. மக்கள் ஒருவருக் கொருவர் சார்ந்திருப்பது எப்பொபதுமே மனித சமூகத்தின் அவசியமான கூறாக இருந்து வந்திருக்கிறது. ஆனால் சமூக வளர்ச்சியின் ஒரு குறிப்பிட்ட கட்டத்தில் தான் இந்தச் சார்புநிலை சந்தை, பணவியல் வடிவத்தை அடைகிறது. முதலாளித்துவத்தின் ஆரம்பக் கட்டங்களில் ஒரு மனிதனின் வாழ்க்கை, தான் உற்பத்தி செய்கின்ற பண்டத்தை அவனால் விற்பனை செய்ய முடியுமா என்பதையே பிரதானமாகப் பொறுத்திருக்கிறது. பிறகு மென்மேலும் அதிகரிக்கும் எண்ணிக்கையினருக்கு அவர்களுடைய உழைப்புச் சக்தியை, உழைப்பதற்குரிய திறமையை விற்பனை செய்வது முக்கியமான விஷயமாக இருக்கிறது. வெளியுலகம், இதர மக்களின் உலகம் பண்டங்களின் மொதத்திரள் என்ற வடிவத்தில் மனிதனை எதிரிடுகிறது. இந்தப்

பண்டங்கள் விற்பனை செய்யப்படுகின்ற பணத்தின் வடிவமாகிய தங்கத்தில் மென்மேலும் குவிக்கப்படுகின்றன.

தங்கம் மனிதனுடைய உணர்வில் எல்லாப் பண்டங் களின் சூக்கும வடிவமாக, அவற்றின் விசேஷமான பிரதிநிதியாக, ஒரு அர்த்தத்தில் அவற்றுக்கு அரசனாக இருக்கிறது. எல்லாவற்றையும் வாங்க முடியும் என்பதால் அது சர்வவல்லமை உடையதாக இருக்கிறது. அது எப்பொழுதுமே அப்படித்தான் இருந்திருக்கிறது. அப்படித்தான் இருக்கவேண்டும் என்று மக்கள் நினைக்கிறார்கள். இந்த நிலைமை சமூக வளர்ச்சியின் ஒரு குறிப்பிட்ட மட்டம் மற்றும் வடிவத்தின் விளைவு என்று புரிந்துகொள்ளாமல் அது ஒரு இயற்கை விதி என்று மக்கள் நினைக்கிறார்கள். எனவே இயற்கையே தங்கத்தைப் பணமாகக் படைக்கிறது. தங்கம் மனிதர்களின் விதிகளை ஆட்டிப்படைப்பது முன்பே முடிவு செய்யப்பட்டிருக்கிறதென்று கருதப்படுகிறது. இந்தக் கட்டத்திலிருந்து வழிபாட்டுக்கு ஒரே ஒரு காலடி வைத்தால் போதும். இத்ன தொடர்பாக மார்க்ஸ் பின்வருமாறு எழுதுகிறார்: “இந்தப் பொருள்கள்–தங்கமும் வெள்ளியும்–பூமியின் அடிவயிற்றிலிருந்து வெளியே வருகின்ற பொழுதே மொத்த¬ மனித உழைப்பின் நேரடியயான சொரூபமாக இருக்கின்றன. அது தான் பணத்தின் மந்திரச் சக்தி.”

இத்தகைய தங்க வழிபாட்டுக்கு உதாரணத்தை மேலே குறிப்பிட்ட ஹாப்சிடம் பார்கக்லாம். “தங்கம் எப்பொழுதுமே பணமாக இருந்திருக்கிறது; அது எப்பொழுதுமே பணமாக இருக்கும். இது இயற்கை விதியால் ஏற்படுவது, மனிதனால் உருவாக்கப்பட்ட விதியால் அதை மாற்ற முடியாது” என்று அவர் எழுதுகிறார். இந்தத் கருத்தின் சிறப்பு அதன் எளிமையே. பெரும்பாலான பொருளாதார நிபுணர்கள் தங்கத்தைப் பற்றி வழக்கமான சொல்லலங்காரத்தோடும் துல்லியமற்ற வகையிலும் எழுதுகிறார்கள். அவற்றோடு ஒப்பிடும் பொழுது இது சிறப்பானது என்றுதான் சொல்ல வேண்டும். வேறொரு பகுதியில் அவர் பின்வரும் மூதுரையை மேற்கோள் காட்டுகிறார். “தங்கம் உலோகங்களுக்கு அரசர், பண்டங்களுக்கு மன்னர்.”

முதலாளித்துவத்தின் கீழ் பணம் தங்க நாணயத்தில் தொடங்கி வங்கியின் கணக்குப் புத்தங்களுக்குப் போய்ச் சேருகிறது. தற்பொழுது மின்கணக்குப் பொறிகளின் நினைவில் சமிஞ்ஞைகள் என்ற பௌதிக வடிவத்தைப் பெறுகிறது. இனிமேல் “பொத்தானை அழுத்துவதன் மூலம்” அல்லது மின் கணக்குப் பொறிகளால் புரிந்துகொள்ளப்படும் சங்கேதக் குறிப்புகளில்

ஏதாவதொன்றைத் தேர்ந்தெடுப்பதன் மூலம் வழங்கீடுகள் மென்மேலும் நிறைவேற்றப்படும் என்று தோன்றுகிறது. ஆனால் இவை முதலாளிதுவத்தின் கீழ் பணத்தின் சமூக–பொருளாதாரத் தன்மையை மாற்ற முடியாது. அது அடிப்படையில் அதே சமூக உறவுகளை, முதலாவதாகவும் முதன்மையாகவும் மூலதனத்துக்கும் கூலி உழைப்புக்கும் இடையிலான உறவுகளை வெளிப்படுத்து கிறது. பணம் முதலாளித்துவ சமூகத்தைத் தாங்கிக்கொண்டிருக்கும் தூணாக இருப்பதோடு மட்டுமல்லாமல் மக்களுடைய வாழ்க்கையின் மீது அதன் சக்தியும் செல்வாக்கும் தவிர்க்க முடியாத வகையில் பலமடைந்துகொண்டிருக்கின்றன. துளை போடப்பட்ட அட்டை அல்லது காந்த சக்தியைக் கொண்ட நாடாச்சுருள் பணத்தையும் அதன் இயக்கத்தையும் பிரதி நிதித்துவப்படுத்துமானால் தங்க நாணயத்துக்குச் சிறிதும் குறையாத வகையில் அவையும் வழிபாட்டுப் பொருள் களாகிவிடும்.

ஆனால் நவீன முதலாளித்துவம் தங்க வழிபாட்டை–அந்தச் சொல்லின் மிக அதிகமான நேர்ப் பொருளில் அகற்ற முடியாது என்பதை நாம் பார்த்தோம். தங்கம் பணமாகச் செயல்படுவது முடிந்துபோய் அது சாதாரணப் பண்டங்களின் உலகத்துக்குத் திரும்பி விடுவதாக வைத்துக் கொண்டால்கூட, அது பேராசையோடு புகழப் படுவதற்கும் வழிபடுவதற்கும் உரிய பொருளாகவே இருக்கும். ஏனென்றால் அதனிடம் மிகவும் பிரத்யேகமான சமூக குணாம்சங்கள் நீடிக்கும்.

# துதித்தலும் சபித்தலும்

நினைவுக்கு முந்திய காலத்திலிருந்தே மனித உணர்வில் தங்கம் கடவுளோடும் பேயோடும், பரிபூரணத் தன்மையோடும் அரக்கத் தன்மையோடும், மேன்மைத் தகுதியோடும் குற்றப்பண்போடும் இணைக்கப்பட்டு வந்திருக்கிறது. தார்மிக அளவில் இந்த இருவகையான மதிப்பீடு இன்றும் நம்மிடம் இருக்கிறது. பணம் என்ற அளவில் தங்கம் நன்மையானதா அல்லது தீமையானதா, அது பணமாக இருக்க வேண்டுமா அல்லது கூடாதா என்று மேற்கு நாடுகளைச் சேர்ந்த பொருளியலாளர்களுக்கிடையே நடைபெறும் விவாதங் களில் அதைப் பார்க்கிறோம்.

செடிய்யோ எழுதியுள்ள புத்தகத்தில் நிதானமான சமூகவியல் பகுப்பாய்வும் இந்த மர்மம் நிறைந்த, முடிவே இல்லாத உலோகத்தைப் பற்றித் தானாகவே ஏற்படுகின்ற போற்றுதலும் மாறி மாறிக் காணப்படுகின்றன. அவர் வாசகரிடம் பின்வருமாறு தெரிவிக்கிறார்: ''நான் என்னுடைய இதயத்திலோ, விரலிலோ, பணப்பையிலோ தங்கத்தை வைத்திருக்கவில்லை. என்னுடைய வாழ்க்கையில் அது பொருளாயத வகையில் இடம் பெறவில்லை....''★ ஆனால் பால் எய்ன்சீக் பின்வருமாறு எழுதுகிறார்: ''தங்கம் பணவியல் பாத்திரம் வகிப்பதை மிகத் தீவிரமாக எதிர்ப்பவர்கள் பலர் தங்க கடிகாரங்களை, சிகரெட் பெட்டிகளை அல்லது இதர பொருள்களை வைத்திருப்பதை நானே பார்த்திருக்கிறேன். இதே காரியங்களுக்குத் துருப்பிடிக்காத எஃகு அல்லது வேறு உலோகங்களை மிகச் சிறப்பாக உபயோகிக்க முடியுமே.''

மேலே தரப்பட்டிருக்கும் புதிரான கருத்துக்கள் மனித உளவியல் அவ்வளவு எளிமையானதல்ல என்பதைக் காட்டுகின்றன. ஆனால் தங்கத்தைப் பற்றிப் புத்தகம் எழுதுபவர் தன்னுடைய அன்றாட வாழ்க்கையில் அதை வழிபடுவார் என்று வாசகர் கருதுவதாக நாம் எதிர்பார்க்கிறோமா? அல்லது தங்க ஆதார அளவு முறையை எதிர்ப்பவர் இந்த உயிரற்ற பொருளை இழிவாகக் கருத வேண்டுமா?

தங்கத்தின் அழகை மக்கள் எக்காலத்திலுமே போற்றி யிருக்கிறார்கள். இனியும் போற்றுவார்கள். ஆனால் இயற்கையிலும் அதிகமான அழகு

இருக்கிறது. தங்கத்தின் சிறப்புக்கள் இயற்கையால் படைக்கப்பட்ட மற்ற எல்லாவற்றையுமே விஞ்சிவிடவில்லை. கொலம் பஸின் கடிதத்தை முன்னர் மேற்கோள் காட்டினோம். அதில் தங்கம் பூரணமானது என்று அவர் எழுதும் பொழுது அதன் இயற்கையான குணாம்சங்களை நினைத்துக்கொண்டா அப்படி எழுதினார். பல்ஸாக்கின் கோப்ஸெக் தங்கத்தின் பெருமைகளைப் பேசுவது அதன் ''பளபளப்புக்காக'' அல்ல. தங்கத்தை உண்மையான அல்லது உள்ளார்ந்த ஆற்றலைக் கொண்ட பணம் என்ற முறையில் மக்கள் பார்க்கும்பொழுது அந்த உலோகத்தின் இயற்கையான பிரகாசம் பத்து மடங்கு அதிகரிக்கிறது. தங்கம் புலன்களால் அறியக் கூடிய வன்மையோடு பணத்தின் எல்லா அம்சங்களின் சொரூபமாக இருக்கிறது. முதலாவதாகவும் முதன்மையாகவும் புதிய மதிப்பை உற்பத்தி செய்யக்கூடிய மதிப்பு என்ற வகையில் மூலதன்த்தின் ''முட்டைப் புழுவாகிய'' பணத்தின் சொரூபமாக இருக்கிறது.

''தன் குழந்தைப் பருவத்திலே பூமியின் அடிவயிற்றிலிருந்து புளூடசின் தலைமுடியைப் பிடித்து இழுத்து வெளியே கொண்டு வந்த நவீன சமூகம் தங்கத்தைப் புனிதக்குருதிக் கலத்தைப்போல தன்னுடைய சொந்த வாழ்க்கையின் கோட்பாட்டின் பளபளப்பான அவதாரமாக வரவேற்கிறது'' என்று மார்க்ஸ் எழுதினார். பாதாள உலகத்தின் கடவுளும் அந்தச் செல்வங்களுக்கு அதிபதியுமான புளூடசைப் பற்றி மார்க்ஸ் எழுதும்பொழுது அத்தனேயஸ் என்ற கிரேக்க எழுத்தாளருடைய சொற்றொடரை மனதில் கொண்டிருக்கவேண்டும் என்று தெரிகிறது. ''பூமியின் அடிவயிற்றிலிருக்கும் பூளூடசை தலை முடியைப் பிடித்த வெளியே இழுத்துக் கொண்டுவர முடியும் என்று பேராசை நம்பியது.''

பல மக்களினங்களின் மரபுகளிலும் இலக்கியத்திலும் நாம் காண்கின்ற தங்க வழிபாடு பலவிதமான சாயல் களைக் கொண்டிருக்கிறது. தங்க வழிபாட்டில் வெவ்வேறு அம்சங்கள் முன்வைக்கப்படுவதும் உண்டு.

பண்டங்கள், சேவைகள், மக்களைக்கூட, அவர்களுடைய திறமை, உழைப்பு, மனச்சாட்சி ஆகிய எல்லாவற்றையுமே எக்காலத்திலும் வாங்கக் கூடிய ஆற்றலாகிய தங்கத்தின் சர்வவல்லமை ஒரு அம்சமாகும். ஒரு பொருள் இவ்வளவு அதிகமான சக்தியைக் கொண்டிருக்கிறதே என்று வியப்படைகின்ற அளவுக்குத் தங்கத்தின் மர்மமான, புதிரான தன்மை மற்றொரு அம்சமாகும். தங்கம் எல்லா சமூகப் பிரிவுகளையும் அந்தஸ்துகளையும் கொண்டிருக்கும் மக்களை, யாரிடம் தங்கம் அதிகமாக இருக்கிறது என்ற ஒரே ஒரு கோட்பாட்டின் அடிப் படையில் பிரித்து

அவர்களை சமநிலைப் படுத்துகிறது. தங்கம் மனிதர்களுடைய உழைப்பையும் சக்தியையும் தொழிலூக்கத்தையும் சுறுசுறுப்பாக்குகிறது. அது ஜீவ சக்தியைக் கொடுக்கிறது, விரைவுபடுத்துகிறது, முன்னே போ என்று துரத்துகிறது. கடைசியாக, தானாகவும் பகுதியளவு மக்களுக்கிடையே ஏற்பட்ட உடன்பாட்டின் மூலமாகவும் தங்கம் சிறப்பான இடத்தை [பணத்தின் முக்கியமான வடிவமாக] வகிக்கும் பொருளாதார இயந்திரத்தின் அமைப்பை வியந்து போற்றும் அம்ச மாகிறது. தங்க வழிபாட்டின் இந்த அம்சமே பொருளிய லாளர்களிடம் மிகப் பரவலாக இருப்பதோடு மிக ஆழமாக வேரூன்றியிருக்கிறதென்று கூறலாம்.

தங்க ஆதார அளவு கடைப்பிடிக்கப்பட்ட காலகட்டத்தில் –முதலாவது உலக யுத்தம் வரையிலும்–பணவியல் அமைப்பின் அடிப்படையாக இருப்பதற்குத் தங்கத்தின் தகுதிகள் வெளிப் படையாகத் தெரிபவை. அவற்றை நிரூபிப்பது அவசியமல்ல என்பதைப்போல ஆராயாமலே உண்மையென்று ஒப்புக்கொள்ளப்பட்டன. தங்க ஆதார அளவு வீழ்ச்சியடைந்ததுதான் பொருளியலா ளர்களையும் சமூகவியலாளர்களையும் தங்களுடைய பழைய நண்பனை அருகே சென்று பார்ப்பதற்கும் முதலாளித்துவப் பொருளாதாரம் மற்றும்ப பூர்ஷ்வா நாகரிகத்தில் அதன் பாத்திரத்தைப் புரிந்துகொள்ள முயற்சிப்பதற்கும் தூண்டியது என்று கூடச் சொல்லலாம்.

தங்க வழிபாட்டின் பூர்விகமான, வெகுளித்தனமான வடிவங்களைப் பற்றி போதுமான அளவுக்கு எழுதி விட்டோம். இந்தப் பிரச்சினையை விஞ்ஞான ரீதியாக ஆராய்வதாகப் பெருமை பேசுகின்ற கல்வித்துறையின் ‘‘தங்க பாணர்கள்’’ வளர்த்திருக்கும் கருத்துக்களை இப்பொழுது விவாதிப்போம்.

தங்கமும் ‘‘சுதந்திரமான தொழில் முயற்சியும்’’ என்பது அவர்களுக்கு மிகவும் பிரியமான தலைப்புகளில் ஒன்று. தங்கம் பணவியல் அமைப்பின் அடிப்படையாகத் தலைமையான ஆதிக்கம் செலுத்துவது வரலாற்று ரீதியாக சுதந்திரப் போட்டி முறைக் காலத்தோடு சேர்ந்திருக்கிறது. ‘‘ஒழுங்குமுறையும் ஒத்திசைவான வாழ்க்கையும்’’ நிலவிய இந்தக் காலத்தைப் பற்றி மேற்கு நாடுகளில் அடிக்கடி ஏக்கப் பெருமூச்சுக்கள் வருவதைப் பார்க்கிறோம். எய்ன்சீக் இதைப் பற்றிப் பின் வருமாறு எழுதுகிறார். ‘‘1914க்கு முன்னர் தங்க ஆதார அளவு பின்பற்றப்பட்ட காலத்தை [ஒன்றுக்கு மேற்பட்ட அர்த்தங்களில்] மனிதகுலத்தின் பொற்காலம் என்று கூறுவது கணிசமான அளவுக்குச் சரியானதே.★ இங்கே பெலிக்ஸ் க்ரிவின் எழுதிய புதிர்போன்ற கருத்தை மேற்கோள் காட்டுவது பொருத்தமே. ‘‘பொன் யுகம் என்றால் அது எல்லோருக்கும் தெரிந்த இரும்பு

யுகம் தான். தங்கத்தின் மீது அளவுக்கு அதிகமான ஆசை வைக்ககாதிருந்தால் அது பொன் யுகமாக இருந்திருக்க கூடும்.''

இன்று தனியார் தொழில் முயற்சியை ஆதரிப்ப வர்களும் பொருளாதாரத்தில் அரசு ''அளவுக்க அதிகமாகத்'' தலையிடுவதை எதிர்ப்பவர்களுமே தங்க ஆதார அளவுக்குத் திரும்ப வேண்டும் என்று வலியுறுத்து கிறார்கள். இந்த ரகத்தைச் சேர்ந்தவர்களை பல்கலைக் கழகங்கள் உள்பட பல துறைகளிலும் பார்க்கலாம்.

தங்கம் மற்றும் தங்கப் பணத்தின் நிலையான தன்மை, அவற்றின் பணவீக்கம் எதிர்ப்பு இயல்பு என்ற கருத்தும் இதனோடு நெருக்கமான தொடர்பு கொண்டிருக்கிறது. தங்கத்தில் மூலதன முதலீடு செய்வது பணவீக்கம் என்ற கொந்தளிப்பான கடலுக்க நடுவே இருக்கும் ''ஸ்திரமான தீவைப்'' போன்றதாகும். இன்னொரு கருத்து இதைக் காட்டிலும் முக்கியமானதாகும். தங்கம் ஓரளவுக்காவது பணம் என்று கருதப்பட்டால் பொருளாதாரமும் அரசுமே தங்கத்தின் கட்டுப்பாட்டுக்குப் பணியுமாறு நிர்பந்திக் கப்படுகின்றன. இது பணவீக்கத்துக்கு எதிரிடையான ஓரளவான உத்தரவாதமாகும். தங்கத்தின் வாங்கும் சக்தி அரசு எவ்வளவு காகிதப் பணத்தை வெளியிட்டிருக்கிறது என்பதைப் பொறுத்திருக்கிறது. பிரச்சினை இவ்விதத்தில் முன்வைக்கப் படுவதனால் பலர் பணம் என்ற வகையில் தங்கத்துக்கு ஆதரவு தர முற்படுகிறார்கள். மாபெரும் நாடகாசிரியரான பெர்னார்டு ஷா அவருக்கே உரித்தான கிண்டலோடு பின்வருமாறு எழுதியிருக்கிறார்: ''ஒரு வாக்காளர் என்ற முறையில் நீங்கள் தங்கத்தின் இயற்கையான ஸ்திரத்தன்மை, அரசாங்க உறுப்பினர்களின் நேர்மை மற்றும் அறிவின் இயற்கையான ஸ்திரத்தன்மை ஆகியவற்றில் எதை நம்புவது என்று தேர்ந்தெடுக்க வேண்டியிருக்கும். இந்த கனவான்களுக்கு உரிய மரியாதையைத் தெரிவித்து விட்டு உங்களுக்கு அறிவுரை கூறுகிறேன். முதலாளித்துவ அமைப்பு நீடிக்கின்ற வரையிலும் தங்கத்துக்கே வாக்களி யுங்கள்.

பழங்காலத் தொட்டே வெள்ளிக்கும் தங்கத்துக்கு மிடையே ஒரு வகையான வேலைப் பிரிவினை இருந்து வந்திருக்கிறது. வெள்ளி பிரதானமாக உள்நாட்டுப் பணமாகவே இருந்தது. அரசின் எல்லைகளுக்கு அப்பால் அது போவது வழங்கீடுகளில் உபயோகிக்கப்படும் உலகப் பணமாக இருந்து வந்திருக்கிறது. ''தங்க பாணர்கள்'' அதன் பொதுவியல் தன்மையை, உலகச் சந்தையில் இணைப்பதிலும் ஒன்றுபடுத்தவதிலும் அது வகிக்கும் பாத்திரத்தைப் புகழ்ந்து பேசுகிறார்கள். எனினும் அரசு அதிகமான தங்க

இருப்புக்களைத் திரட்டுவதை –அது எப்பொழுதுமே தேசியவாதத்தின் கருவியாகப் பயன்படும் என்றாலும்கூட –அவர்களில் சிலர் பாராட்டுவதை இது தடுக்கவில்லை. இரண்டாம் உலக யுத்தத்தின்போது அமெரிக்காவிடமிருந்து தங்க இருப்பைப் பற்றி ஹாப்ஸ் பின்வருமாறு வெகுளித்தனமாக எழுதுகிறார்: "இன்று இந்த நாடு வைத்திருக்கும் மாபெரும் பணத் தங்க இருப்பின் மஞ்சள் குவியலில் உலகத்தின் நாடுகள் மற்றும் எல்லா மக்களினங்களின் தலைவிதியும் அடங்கியிருக்கிறது." தங்கத்தின் சர்வல்லமையில் வைக்கப்பட்டிருந்த இத்தகை நம்பிக்கை ஆபத்தானது என்றாலும் கடைசியில் வீணான கற்பனையாகவே முடிந்தது என்பதைக் கூறத் தேவையில்லை.

தங்கத்தைக் கண்டனம் செய்கின்ற மரபும் இந்த உயிரற்ற பொருளைத் திட்டுவதும் சபிப்பதும் அதன் சிறப்பைப் புகழ்வதைப் போலவே பழமையானதாக இருக்கிறது. பண்டைக்கால உலகத்தில் தங்கம் குலத் தந்தைவழி வாழக்கை முறையை நொறுக்கியது. பழைய தார்மிகப் பண்புகளை சீர்குலைத்தது, "ஒழுக்கத்தின் வீழ்ச்சியை" ஏற்படுத்தியது (உண்மையைச் சொல்வது என்றால் இது தங்கத்தினால் ஏற்படவில்லை, பண்ட–பண உறவுகளின் வளர்ச்சியினால் ஏற்பட்டது). பழங் காலத்திய ஸ்பார்த்தாவின் பாதி கற்பனையான சட்ட நிர்மாணியான லிகுர்ஜஸ் அரிய உலோகங்களால் செய்யப்பட்ட பணத்தைத் தடை செய்வதன் மூலம் இநதத் தீமைக்கு எதிராகப் போராடுவதற்கு முயற்சி செய்தார் என்று புளூடர்ச் கூறுகிறார். இதற்கு எத்தகைய விளைவும் ஏற்படாதது இயற்கையே. பணம் மனித குலத்தின் சாபக்கேடு, அது மனிதர்களின் இதயங்களைக் கெடுக்கிறது, நேர்மையற்ற காரியங்களைச் செய்யுமாறு அவர்களைத் தூண்டுகிறது என்று ஸோபாக்ளிஸ் தன்னுடைய அன்டிகோனா என்ற நாடகத்தில் எழுதுகிறார்.

பழங்காலத்திய சீனாவிலும் ரோமானியர் காலத்தில் ஜெர்மானிய இனக் குழுக்கள் மத்தியிலும் "தங்கத்தைப் பற்றி அச்சம்" நிலவியதை வரலாற்று ஆதாரங்களிலிருந்து அறிந்து கொள்கிறோம். லிகுர்ஜஸ் வெளிப்படுத்திய அச்சங்களைப் போன்றதே இந்த அச்சம். இத்தகைய அச்சங்களைத் தொன்மைக் காலத்தில் மட்டுமல்ல, பிறகும் நாம் பார்க்கிறோம். 1850–க்களில் தென் ஆப்பிரிக்காவின் தங்க இருப்புக்களைப் போயர்களின் (குலத் தந்தை வழி மரபுகளைக் கொண்ட சிறு எண்ணிக்கையில் இருந்த மக்களினம்) சட்டமன்றம் கனிப் பொருள்களைக் கண்டுபிடிக்க முயற்சி

செய்வதை யும் நாட்டின் கனிச்செல்வத்தைப் பற்றி தகவல்கள் வெளியிடுவதையும் தடை செய்து விசேஷச் சட்டங்களை நிறைவேற்றியது.

பிளேட்டோவின் காலத்திலிருந்தே சமூகத்தைத் திருத்தியமைப் பதற்குத் திட்டங்ள் தீட்டிய கற்பனாவதி களின் மிகப் பிரியமான கருத்துக்களில் ஒன்று பணத்தை ஒழிப்பதாகும். அவர்கள் மூலதனத்தையும் அதனோடு பிரிக்கப்பட முடியாத வகையில் இணைந் திருந்த மனிதனை மனிதன் சுரண்டுவதையும் ஒழிக்க விரும்பினார்கள். ஆனால் முதலாளித்துவ சமூகத்தின் கற்பனைவாத விமர்சகர்களும் அதன் புகழ் பாடியவர்களைப் போலவே மூலனத்தை அதன் பளபளப்பான பொன்னிற உடையில் தான் பார்த்தார்கள்.

ஷேக்ஸ்பியர் எழுதிய ஏத்தென்சின் டைமன் என்ற நாடகத்தில் வரும் பின்வரும் வரிகள் கற்பனை உலகம் என்ற நூலை (இந்த நூலின் பெயரே இந்தச் சிந்தனை மரபு முழுவதற்கும் பெயராயிற்று) எழுதிய தாமஸ் மோர் என்பவரின் தாக்கத்தினால் எழுதப்பட்டதென்று சில அறிஞர்கள் கருதுகிறார்கள்.

**இந்த மஞ்சள் அடிமை**

**தங்களைச் சேர்க்கவும் செய்யும்**

**பிரிக்கவும் செய்யும்**

**குட்ட நோயைப் போற்றச் செய்யும்**

**திருடர்களுக்கும் பட்டம் வழங்கி**

**அரசப் பிரதிநிதிகளோடு இடமும்**

**பெருமையும் அருளும்.**

ஷேக்ஸ்பியர் தங்கத்தை மனிதகுலத்தின் விபசாரி என்று குறிப்பிடுகிறார்.

சிறப்பு மிக்க பிரேஞ்சுச் சிந்தனையாளரும் அரசியல் பொருளாதார விஞ்ஞானத்தை நிறுவியவர்களில் ஒருவருமான பியேர் புவாகில்பேர் (1676-1714) அரிய உலோகங்கள் பணம் என்ற வகையில் மக்கள் மீது கொடுங்கோன்மையான அதிகாரத்தைப் பெற்றுவிட்டன, அவை பொருளாதார அழிவுகளுக்குக் காரணமாகி விட்டன என்று எழுதினார்.

பணம் தன்னளவில் நுகர்வின் முக்கியமான பொருளாக இருப்பதில்லையாகையால் அது ஒரு வகையில் செயற்கையானது, பகுத்தறிவுடைய மனித சமூகத்துக்கு அவசியமற்றது என்று கருதுகிறார். அவர் காரசாரமாகப் பணத்தைத் தாக்குகிறார். “கெட்டுப்போன இதயங்கள்.... தங்கத்தையும் வெள்ளியையும்.... விக்ரகங்களாக்கி விட்டன. அவை தெய்வங்களாக்கப்பட்டுவிட்டன. பெரும் பாலான மக்களுக்கு ஒரே வழிபாடாகவும் ஒரே மதமாகவும் நெடுங்காலமாக இருந்து வந்திருக்கும் இந்த தெய்வங்களுக்குக் குருட்டுத்தனமான பண்டைக் காலத்தில் காணிக்கை கொடுக்கப்பட்டதைக் காட்டிலும் அதிகமான உடைமைகள், விலையுயர்ந்த பொருள்கள், மக்கள்கூட காணிக்கையளிக்கப்பட்டார்கள். இன்னும் காணிக்கையளிக்கப்படுகிறார்கள்.”

ரஷ்ய ஜனநாயகவாதியும் மனிதாபிமானியுமான அ.என். ராடிஷ்செவ் சிறப்புமிக்க ரஷ்ய விஞ்ஞானியான லொமனோ சொவையும் கனிப்பொருள்களில் அவர் காட்டிய அக்கறையையும் பற்றி வர்ணிக்கும் பொழுது பணம் என்ற வகையில் அரிய உலோகங்களைப் பற்றிப் பின்வருமாறு எழுதுகிறார்: “தங்கமும் வெள்ளியும் மிகவும் அதிகமான அளவுக்குப் பூரணத்துவம் பெற்ற அரிய உலோகங்களாக இருக்கின்றன. இவை முன்பு ஆபரணமாகப் பயன்பட்டன. இப் பொழுது எல்லாவிதமான பணம் பிடுங்கலையும் பிரதிநிதித்துவப் படுத்துகின்ற அடையாளவில்லகளாக மாற்றப்பட்டுவிட்டன. உண்மையில் அப்பொழுதுதான் மனித இதயம் செல்வங்களுக்காகப் தீர்க்கப்பட முடியாத, கீழ்த்தரமான ஆசையினால் பீடிக்கப்பட்டது. எல்லாவற்றையும் பொசுக்கும் நெருப்பைப் போல இது ஊட்டம் கிடைத்ததும் மேலும் பலமடைகிறது. பிறகு மனிதன் தனது ஆரம்ப எளிமையையும் நிலத்தில் பாடுபடும் இயற்கையான தொழிலையும் கைவிட்டுவிட்டு கொந்தளிக்கும் அலைகளைக் கொண்ட கடலில் வாழ்க்கையை நடத்துகிறான் அல்லது பாலைவனத்தின் பசியையும் வெப்பத்தையும் பொருட்படுத்தாது பணமும் செல்வமும் தேடுவதற்காகத் தான் அறிந்திராத தேசங்களுக்குச் செல்கிறான். பிறகு, சூரிய வெளிச்சத்தை வெறுத்து ஒதுக்கிவிட்டுப் புதைகுழிக்குள் நுழைகிறான். அங்கே பூமியின் வயிற்றைப் பிளந்து இரவில் உணவு தேடும் பிராணியைப் போல பொந்துக்குள் தன்னைப் புதைத்துக் கொள்கிறான்.”★

மேலே தரப்பட்டிக்கும் பகுதியிலடங்கியிருக்கும் பழமை யான ஆனால் வன்மையான உரைநடையில் ராடிஷ் செவ்தின் வளர்ச்சியில் அரிய உலோகங்கள் வகிக்கும் இரட்டையான பாத்திரத்தை அவர்

கவனித்திருக்கிறார். ஒரு பக்கத்தில் அவை மக்களை நெடும் பயணங்களை மேற்கொண்டு பூமியிலிருக்கும் செல்வங்களை கண்டு பிடிக்குமாறு தூண்டுகின்றன, அதன் மூலம் முன்னேற் றத்தை ஊக்குவிக்கின்றன. மறு பக்கத்தில் பணம் தேடும் சிக்கு எல்லாவற்றையுமே கீழ்ப்படுத்தி விட்ட ஒரு சமூகத்தின் கீழ்மை அவற்றிலிருந்தே எற்படுகிறது.

முதலாளித்துவத்தின் எல்லாத் தீமைகளும் சகல குறைகளும் பணத்திலிருந்து, குறிப்பாக அரிய உலோகங்களின் தலைமையான பாத்திரத்திலிருந்து வருகின்றன என்ற பிரமை மிகவும் விடாப்பிடியான தாகும். பணத்தை ஒழிப்பதன் மூலம் முதலாளித்துவத்தின் தீமைகளை அகற்றிவிடாலம் என்று கூறும் எண்ணற்ற திட்டங்கள் இருக்கின்றன. விஞ்ஞான சோஷலிசத்தின் முன்னோடிகளில் ஒருவரான பியேர் ஜோசப் புரூதோன் இக்கருத்தை ஆர்வத்தோடு கூறினார். அவர் முதலாளித்துவத்தை வெறுத்து அதை ஆணித்தரமாகக் கண்டனம் செய்தார். பண்டங்களை அவற்றிலடங்கியிருக்கும் உழைப்பின் மதிப்புக்கு (அதாவது அவற்றை உற்பத்தி செய்வதில் செலவிட்ட உழைப்புக்கு ஒரு குறிப்பிட்ட விதத்தில் அது சரிபார்க்கப்படுவதை மட்டும் ஏற்படுத்திவிட்டால்) தகுந்தவாறு பணத்தை உபயோகிக்காத நேரடியான பரிவர்த்தனையைச் செய்வதால் சுரண்டலும் அநீதியும் ஏழ்மையும் தானாகவே மறைந்துவிடும் என்று கருதினார்.

தங்கமும் வெள்ளியும் சாதாரணமான பண்டங்கள் என்ற “இயற்கையான” அந்தஸ்துக்குத் திரும்பிவிடும் என்றார். புரூதோன் மற்றும் அவரைப் பின்பற்றியவர்களின் சோஷலிசம் குட்டி முதலாளித்துவ சோஷலிசமே. அவர்கள் முதலாளித்துவத்தை ஒழிப்பதற்குப் பாடுபட வில்டிலை, அதை அபிவிருத்தி செய்ய விரும்பி னார்கள். உற்பத்திச் சாதனங்களில் தனிச் சொத்து ரிமையை ஒழிப்பதைத் தங்களுடைய கடமையாக முன் வைக்கவில்லை. 20-ம் நூற்றாண்டில், குறிப்பாக அதன் பிற்பாதியில் தங்கம் மூலதனத்தோடு நேரடியாக ஒன்றேயெனக் கருதுவது, முதலாளித்துவத்தின் தீமைகளோடு அதை நேரடியாகச் சேர்ப்பது படிப்படியாக அதன் அர்த்தத்தை இழந்து வருகிறது. தங்க ஆதார அளவு ஒழிக்கப்பட்டதும் பணவியல் துறையிலிருந்து தங்கம் பகுதியளவுக்கு அகற்றப்பட்டதும் இதற்குக் காரணம். குட்டி முதலாளித்துவச் சீர்திருத்தவாதியின் ஆத்திரம் தற்பொழுது தங்கத்தைக் காட்டிலும் பிரம்மாண்டமான ஏகபோக வங்கிக்கு எதிராகவே அடிக்கடி திருப்பப்படுகிறது. 19ம் நூற்றாண்டில் தங்கத்தை கண்டனம் செளிணிவது

முதலாளித்துவத்தைக் கண்டனம் செய்வதாகவும் இருந்தது. ஆனால் இன்று தங்கத்தின் சர்வவல்லமையை எதிர்த்துப் போராடுவதைத் தன்னுடைய முதலாளித்துவ எதிர்ப்புச் செயல்திட்டத்தின் முக்கியமான பகுதியாகக் கருதுகின்ற எவ்வகையான சோஷலிஸ்டையும் கற்பனை செய்யக்கூட முடியாது.

தங்கத்தை விமர்சிப்பது இன்று மிகவும் கண்ணியமான செயல்; அரசு–ஏகபோக முதலாளித்துவத்தின் நிலைகளி லிருந்தும் அது விமர்சசிக்கப்படுகிறது. ஒரு காலத்தில் உணர்ச்சிவயப்பட்டுத் தங்கத்தை சபித்ததற்குப் பதிலாக தங்கத்தை “அதன் இடத்தில் வைக்க வேண்டும்”, பொருளாதாரத்தை அரசு ஒழுங்குபடுத்துவதைக் கட்டுப்படுத்துவதற்கு அதை அனுமதிக்கக் கூடாது என்று வலியுறுத்தும் நிதானமான வாதங்கள் இன்று சொல்லப் படுகின்றன.

தங்கத்தை எதிர்ப்பவர்களும் விமரிசகர்களும் தங்க ஆதார அளவையும் பொதுவாக அதன் பணவியல் செயல்களையும் “காட்டுமிராண்டித்தனமான மரபெச்சம்” என்று கூறுகிறார்கள். ஜான் எம்.கெய்ன்ஸ் எழுதிய பணவியல் சீர்திருத்தம் பற்றிய ஆய்வுச்சிக் கட்டுரை [1924] என்ற நூலில் இந்தச் சொற்றொடர் முதன்முதலில் உபயோகிக்கப்பட்டு இப்பொழுது மிகவும் பிரபலமடைந்து ஒரு கோஷத்தைப் போல அல்லது சபாத்தைப் போல மாற்றப்பட்டுவிட்டது. தங்கத்தை அடிப்படையாகக் கொண்ட பணவியல் அமைப்பின் நெகிழ்ச்சியற்ற தன்மைக்கும் அரசு இந்த அமைப்பை உணர்வுபூர்வமாக ஒழுங்குபடுத்துவதிலுள்ள சிரமங்களுக்கும் இப்பொழுது பிரதானமாக தங்கத்தைக் குறைகூறுகிறார்கள்.

பணவீக்கம், பணவியல் நெருக்கடிகள் மற்றும் இதர கொந்தளிப்புக்களிலிருந்து முதலாளித்துவத்தைக் காப்பாற்றுவதற்குத் தங்கத்தினால் மட்டுமே முடியும் என்று தங்கத்தை ஆதரிப்பவர்கள் வாதாடுகிறார்கள். இரு தரப்பினருமே முதலாளித்துவம் நன்றாக இருக்க வேண்டுமென்று விரும்புகிறார்கள், ஆனால் இதை அடைவதற்கு வெவ்வேறு வழிகளைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள்.

சில சமயங்களில் இந்த விவாதத்தில் சூடு மிகவும் அதிகமாகிவிடுகிறது. தங்கத்தைப் பற்றி யாரும் அலட்சியமாக இருக்க முடியாதென்ற உண்மை யை இது நமக்கு அடிக்கடி நினைவூட்டுகிறது. இரு தரப்பினரும் தம்முடைய எதிரிகளை ஏளன மாக, கிண்டலாகப் பேசுகிறார்கள். தங்கத்தை ஆதரிப்பவர்கள் பரிதாபகரமான பிற்போக்காளர்கள், காலாவதியாகிப்போன

வறட்டுக் கோட்பாடு களை இன்னும் சொல்லிக்கொண்டிருப்பவர்கள் என்று அதை விமர்சிப்பவர்கள் கூறுகிறார்கள். தங்கத்தை ஆதரிப்பவர்களும் இதற்குச் சிறிதும் சளைத்தவர்களல்ல, தங்கத்தின் எதிரிகள் உண்மையான உலகத்திலிருந்து தங்களைத் துண்டித்துக்கொண்ட, புதுப்பாணியான எந்தத் தத்துவத்தையும் ஆதரிக்கத் துடிக்கும் கல்வி யாளர்கள் ("வழுக்கை மண்டைகள்") தற்பொழுது அரசின் உயர் மட்டங்களில் பேராசையும் ஆர்ப்பாட்டமும் கொண்ட அதிகாரிகளாகப் பணிபுரிகின்ற அவர்களுடைய முன்னாள் மாணவர்கள் என்ற தங்கத்தை ஆதரிப்பவர்கள் கூறுகிறார்கள். வயதானவர்கள் தங்கத்தை ஆதரிக்கிறார்கள். இளைஞர்கள் தங்கத்தை எதிர்க்கிறார்கள். ஆகவே இரு தரப்பினரையும் பிரிப்பது வயதுதான் என்று ஒரு ஆசிரியர் எழுதுகிறார். இந்த வாதத்தில் ஓரளவுக்கு உண்மை இருக்கலாம். ஆனால் வயது உண்மையிலேயே முக்கியமான விஷயமல்ல. தங்கத்தை எதிர்ப்பவர்கள் பொருளாதாரத்தில் அரசு சுறுசுறுப்பாகத் தலையிடுவதை ஆதரிப்பவர்களாக, கெய்ன்ஸைப் பின்பற்றுபவர் களாக இருப்பது வழக்கம். தங்கத்துக்கு ஆதரவாக இருப்பவர்கள் சந்தை என்னும் இயந்திர நுட்பத்தில் நம்பிக்கை கொண்டவர்கள். இரண்டு தங்கத்தைப் பண உலோகம் என்ற நிலையிலிருந்து மொத்தமாக, உடனடியாக அகற்றிவிட வேண்டும் என்று சிலர் கூறுகிறார்கள்.

தங்கத்தைப் படிப்படியாக, ஜாக்கிரதையாக அகற்ற வேண்டும் என்று மற்றவர்கள் கூறுகிறார்கள். சிலர் தங்க ஆதார அளவை அதன் முழுமையான, மூல வடிவத்தில் மறுபடியும் ஏற்படுத்த வேண்டும் என்கிறார்கள் (அவர்களுடைய எண்ணிக்கை குறைவானதே). அதைப் பகுதியளவில் வரையறைகளுக்கு உட்பட்டு (வழக்கமாக சர்வதேசத் துறையில் மட்டும்) ஏற்படுத்த வேண்டும் என்று மற்றவர்கள் கூறுகிறார்கள்.

# பெருஞ்செல்வர்கள்

ப ல நூற்றாண்டுகளாகவே பணக்காரர் என்றால் பை நிறையத் தங்கம் வைத்திருப்பவர் என்று மக்கள் கருதி வருகிறார்கள். ஆனால் அரிய பொருட் களைச் சேகரிப்பவர்தான்– இவர் உண்மையில் “அறிவியக்க” காலமான முதலாளித்துவத்தைக் காட்டிலும் மத்திய காலத்துக்கே குறியடையாளமாக இருப்பவர் –தன் செல்வத்தில் பெரும் பகுதியைத் தங்கமாக வைத்திருக்கிறார்.

முதலாளித்துவ அமைப்பு வளர்ச்சியடைந்தபொழுது ஒருவருடைய மூலதனத்தை இயன்ற அளவுக்குக் குறைவாகவே தங்கமாகவும் பொதுவாக (வங்கிக் கணக்குகள் உட்படப்) பணமாகவும் வைத்திருக்கின்ற ஆசை வளர்ச்சியடைந்தது. ஏனென்றால் மூலதனம் என்ற வகையில் தங்கம் செத்துவிட்டது (உபயோகமில்லை). அது லாபம் தருவதில்லை என்பதோடு அதன் சேமிப்பிற்கும் காப்புறுதிக்கும் இதரவற்றுக்கும் செலவு செய்ய வேண்டியிருக்கிறது. ரொக்கமாகப் பணத்தை வைத்திருந்தாலும் ஒன்றும் கிடைப்பதில்லை. வங்கிக் கணக்கு வைத்திருப்பவர்களுக்கு எவ்வளவு அதிகமாகப் பார்த்தாலும் வட்டிதான் கிடைக்கிறது. ஆனால் அந்த மூலதனத்தை ஒரு தொழில் நிறுவனத்தில் முதலீடு செய்தால் கிடைப்பதற்குக் குறைவான விகிதத்தில்தான் வட்டி கிடைக்கிறது. மூலதனத்தைச் சும்மா வைத்திருக்க முடியாது என்பது அதன் இயற்கை யாகும். இன்று பதுக்கலும் தங்கத்தில் முதலீடு செய்வதும் இருக்கிறதென்று நர் பார்த்தோம். இது தங்கத்தின் இயற்கையான விலையுயர்ந்த தன்மையினால் ஏற்படவில்லை. இதற்குப் பணவீக்கம், ஸ்திரமற்ற தன்மை, நெருக்கடிகள் என்ற முறையில் முதலாளித்துவப் பொருளாதாரத்திலும் அதன் சமூக அரசியல் அமைப் பிலும் ஏற்படும் கொந்தளிப்புக்களே காரணம். அதே சமயத்தில் மூலதனத்தின் பண வடிவம் மாபெரும் பொருளாதார முக்கியத்துவத்தைக் கொண்டிருக்கிறது. மூலதனச் சுற்றோட்டத்தில் அதன் குறிப்பிட்ட பகுதி உரிய நேரத்தில் வழங்கீடுகளைக் கொடுப்பதற்கும் எதிர்பாராத நெருக்கடிகளுக்குச் சேம இருப்பாகவும் எப்போதும் பணத்தின் வடிவத்தில் இருக்க வேண்டும். பொருளாதார நெருக்கடிக் கால கட்டத்தில் ஒரு தொழில் நிறுவனம் ரொக்கமாக, தயாராகப் பண மூலதனத்தை

வைத்திருந்தால் அது தப்பிப் பிழைக்கும் வாளிணிப்புக்கள் அதிகம். முதலாளித்துவ வளர்ச்சியில் அநேகமாக எல்லா மூலதனத்தையும் பணவடிவத்தில் வைத்திருக்கும் வங்கிகளின் முக்கியத்துவம் அதிகரிக்கிறது.

இன்னொரு அம்சமும் முக்கியமானதாகும். செல்வத்தை முதலாவதாகவும் முதனமையாகவும் வருமானம் என்ற நிலையான, வாடிக்கையான விளைவைக் கொண்டே நாம் வழக்கமாக உணர்கிறோம். வருமானம் என்பது குறிப்பிட்ட அளவைக் கொண்ட பணமாக இருப்பது விதியாகும். செல்வமும் மூலதனமும் பணமாகத்தான் இருக்க வேண்டும் என்று நினைப்பது தவறாகும். ஆனால் செல்வத்தை அளந்த கூறுவதற்குப் பணம் ஒரு சாதனம், அதன் அவசியமான, ஜீவாதாரமான அளவுக்கு முக்கியமான பகுதி, அதன் கண்கூடான வெளியீடு, ஆகவே ஒரு பணக்காரரை வர்ணிப்பதற்குப் பண மூட்டை என்ற படிமத்தைப் பயன்படுத்தும் பொழுது அது சொல்லலங்காரமாக இருப்பதோடு மட்டுமின்றி, பொருளாதார யதார்த்தமாகவும் இருக்கிறது. பணக்காரர்களுடைய செல்வம் அந்தக் குறிப்பிட்ட சமூகத்தில் மேலோங்கியிருக்கும் ஸதூலமான பண வடிவத்தைப் பெறுவது இயற்கையானதே. கால்நடைகள் பணமாக இருந்தபொழுது பெரிய மந்தைகளை வைத்திருப்பவர் பணக்காரராகக் கருதப்பட்டார். இன்று ஒரு பணக்காகரர் முதலாவதாகவும் முதன்மையாகவும் ஏராளமான பங்குகளை, மற்ற பத்திரங்களை மற்றும் வங்கிக் கணக்குகளையும் வைத்திருப்பவராக இருக்க வேண்டும். ஆனால் பைபிளில் சொல்லப்படும் ஆபிர காமின் காலத்திலேயே தங்கம் “முன்னரே அநேகமாகப் பணம்” என்ற நிலையைப் பெற்றுவிட்டது, பல நூற்றாண்டு களுக்கு முக்கியமான மற்றும் தலைமையான வகையில் பணத்தின் வடிவமாக இருந்தது. இன்றும் பணத்தின் கூறுகளைக் கொண்டிருக்கிறது. செல்வத்தோடு தங்கக்தைச் சேர்த்து நினைப்பது இன்றும் மக்களுடைய மனங்களிலும் மொழியிலும் நீடிப்பதற்குக் காரணம் இதுவே.

செல்வத்துக்கும் தங்கத்துக்கும் உள்ள தொடர்புக்கு மற்றொரு பிரத்யேகமான பொருளும் உண்டு. தங்க ஆதார அளவுக் காலகட்டம் [19-ம் நூற்றாண்டின் கடைசியும் 20-ம் நூற்றாண்டின் தொடக்கமும்] செல்வந்தர்களுடைய மூலச் சிறப்பான காலமாக இருந்தது. அவர்கள் வெறும் பணக்காரர்கள் அல்ல, மூலுதனத்தின் பெருஞ்செல்வர்கள், நிதித்துறை மற்றும் தொழில்துறை சாம்ராஜ்யங்களைப் படைத்தவர்கள், பிரம்மாண்டமான குடும்பச் செல்வங்களைத் திரட்டியவர்கள். அவர்கள்

பெருஞ்செல்வர்களாகதையோ, தங்களுடைய திரண்ட செல்வத்தை வாரிசுகளுக்கு விட்டுச் செல்வதையுமோ எதுவும் தடுக்கவில்லை. அரசு தலையிட வேண்டிய அவசியம் கிடையாது. தனியார் மூலதனத்தைப் பற்றிய விவகாரங்களில் அரசு அநேகமாகத் தலையிட்டதுமில்லை. வருமான வரிகளும் மரணவரிகளும் அநேகமாக இல்லை. பணத்தின் மதிப்பு ஸ்திரமாக இருந்தது. உலகத்தில் பிரிட்டிஷ் கன்சோல்களைக் காட்டிலும் [நிலையான வருமானம் தருகின்ற அரசுப் பத்திரங்கள்] அதிகப் பாதுகாப்பானவை ஒன்றுமேயில்லை என்று தோன்றியது. ஏகாதிபத்திய வல்லரசுகள் உலகத்தைத் தமக்கிடையே பங்கு போட்டிருந்தன. தேசிய விடுதலை இயக்கங்கள் அந்நியக் கம்பெனிகளுக்க ஆபத்தைக் கொடுக்கின்ற வகையில் இன்னும் வளர்ச்சியடையவில்லை. அரசகளுக்கிடையே இருந்த எல்லைகள் அக்கம்பெனிகளைத் தடுக்க வில்லை. முதலாளித்துவத்தின் வரலாற்றில் முதல் தடவையாக சர்வதேச ஏகபோக நிறுவனங்கள் அமைக்கப் பட்டன. அந்த உலகத்தின் மக்கள், வர்க்கங்கள் மற்றும் மக்களினங்களுக்கிடையே சமத்துவம் இல்லாதிருப்பது இயற்கையானதென்று அந்தக் காலத்தின் முதலாளி வர்க்கமும் அதன் அறிவுஜீவிகளும் கருதினார்கள். செல்வத்துக்கு மரியாதை செய்தனர்; அதைக்கண்டு பொறாமைப்பட்டனர்.

பலமான தொழிலாளர் இயக்கம் முன்பே ஏற்பட்டிருந்தது உண்மையே. பல ஐரோப்பிய நாடுகளில் செல்வாக்கு மிக்க சமூகஅ. ஜனநாயகக் கட்சிகள் இருந்தன. ரஷ்யாவில் 1905–1907ல் நடைபெற்ற புரட்சி சர்வாதி காரத்துக்கு மட்டுமல்லாமல் உலக ஏகாதிபத்தியத் துக்கும் கண்டிப்பான எச்சரிக்கையாக இருந்தது. சீனாவில் பால்கன் பிரதேசத்திலும் உலகத்தின் இதர பகுதிகளிலும் கொந்தளிப்பான நிலைமை ஏற்பட் டிருந்தது. ஆனால் முக்கியமான முதலாளித்துவ நாடு களிலிருந்து முதலாளி வர்க்கத்தை இது இன்னும் தீவிரமான வகையில் பயமுறுத்தவில்லை. இந்தக் காலகட்டத்தின், மூலுதனத்தின் உடைமையாளர்கள் மற்றும் பெருஞ்செல்வர்களைக் கொண்ட உலகத்தின் குறியீடாகத் தங்கம் இருந்தது. அவர்களுக்கு உண்மை யிலேயே அது பொற்காலம்தான். இன்று அந்த உலோகம் கலவரமடைந்த வர்த்தக சூதாட்டத்துக்கும் பயம் கலந்த பதுக்கலுக்கும் உட்பட்டிருக்கிறது. அன்று இத்தகைய நிலைமை ஏற்படவில்லை. அப்போது பணவியல் அமைப்புக்களின் அதிகாரபூர்வமான அடிப்படையே அதுதான். தங்க நாணயத்தின் வடிவத்தில் அது செலாவணியாகிக் கொண்டிருந்தது.

மேற்கு நாடுகளில் தங்கப் பணம் எப்பொழுதுமே நிதி மற்றும் அரசியல் பழமைவாதத்தோடு, எல்லா விதமான சீர்திருத்தங்களுக்கும் எதிரான போராட்டத்தோடு சேர்ந்திருந்தது. இன்றைய நிலையும் அதுவே, ஒருபொது விதி என்று கூற முடியாவிட்டாலும், தொழிற்சங்கங்களை, அதிக வருமானங்களின் மீது வரி விதிப்பதை, வயது வந்த எல்லோருக்கும் வாக்குரிமை கொடுப்பதை எதிர்ப்பவர்கள் அநேகமாகத் தங்கத்துக்கு ஆதரவளிக்கிறார்கள். ஏ.ஹெய்லி எழுதிய பணத்தை மாற்றுபவர்கள் என்ற நாவலைப் பற்றி முன்னர் குறிப்பிட்டோம். அதில் மார்கோ பிராக்கென் என்ற பெண் வழக்குரைஞர் தீவிரமான கருத்துக் களைக் கொண்டிருக்கிறாள். தங்க நாணய முறைக் காக ஏங்குகின்ற நிதித்துறைப் பழமைவாதியான ஆர்சேயிடம் அவள் பின்வருமாறு கூறுகிறாள்: ''தங்க ஆதார அளவைப் பின்பற்றினால் உலகத்தின் செல்வத்தில் பெரும்பகுதியை இன்றைக்கு இருப்பதைக் காட்டிலும் குறைந்த எண்ணிக்கையினர் உடைமையாகக் கொண்டிருப்பார்கள், மனிதகுலத்தில் மீதமிருப்பவர்கள் வெறும் உடம்போடு நின்று கொண்டிருப்பார்கள்.''

ஏ.ஹெய்லி தன்னுடைய நாவல்களுக்கான பின்னணியை உண்மையான தோற்றுவாய்களைக் கவனமாகக் கண்டறிந்து அமைக்கின்ற சிறப்புடையவர் என்பது நமக்குத் தெரியும். ட..ர்சேயின் கருத்துக்களும் மொழியும் இரவல் வாங்கப்பட்டவையே. நிதித்துறையைப் பற்றிய விவரப் புத்தகங்களையும் விமரிசனங்களையும் வெளியிடுகின்ற பிரான்ஸ் பிக் அதன் முன்மாதிரியாக இருக்கக்கூடும். பண உலோகம் என்ற நிலையிலிருந்து தங்கத்தை நீக்க வேண்டும் என்று போதிக்குமக் பேராசிரியர்களை, ''முற்றிலும் முதிர்ச்சியில்லாத வங்கித் தலைவர்களை'', ''அதைக் காட்டிலும் குறைந்த அறிவைக் கொண்ட மந்திரி சபைப் பிரமுகர்களை'', ''அமெரிக்க நிதி இலாகாவின் அமொச்சூர் அதிகாரிகளை'', -தங்க ஆதார அளவு காலாவதியாகிவிட்டதாகக் கெடு நோக்கோடு கற்பனை செய்கின்ற, ''தங்கத்தை எதிர்க்கும்'' கொள்கையைக் கடைப்பிடிக்கின்ற எல்லோ ரையும் ஆத்திரமாகத் தாக்குகிறார். கற்பனை மனிதரான ட.ஆர்சேயும் மிகவும் உண்மையானவரான பிரான்ஸ் பிக்கும் தங்களுடைய அறிக்கைகளைப் பெருஞ்செல்வர்களுக்காக வெளியிடுகிறார்கள். அந்த நன்மையான பழைய காலத்துக்கும் தங்க ஆதார அளவின் மரபுகளுக்கும் பணக்காரர்கள் ஏங்குவதைப் புரிந்து கொள்ள முடியும். இவர்கள் அந்த ஏக்க உணர்ச்சியைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்கிறார்கள்'.

ஆகவே பணக்காரர்களும் தங்கமும், பெருஞ்செல்வர் களும் தங்கமும் –இந்தக் கருத்துக்கள் கதையிலும் உண்மையான வாழ்க்கையிலும் ஒன்றுக்கொன்று மிகவும் நெருக்கமாக இருக்கின்றன. ஆனால் தங்கத்தை வெட்டியெடுப்பதையும் தூய்மைப்படுத்து வதையும் விற்பனை செய்வதையும் தங்களிடம் வைத்திருக்கும் தங்கப் பெருஞ்செல்வர்களை, பெரிய மூலதனத்தின் அதிபதிகளைப் பற்றிப் பேசும்பொழுது இந்த நெருக்கம் குறிப்பிடத்தக்க வகையில் ஸ்தூலமடைகிறது.

கூலி எழுத்தாளர்கள் மற்றும் உணர்வுபூர்வமான வரலாற்றாசிரியர்கள் தென் ஆப்பிரிக்காவில் தங்கத் தொழிலை நிறுவியவர்களைப் பற்றி விரிவாக எழுதி யிருக்கிறார்கள். அது நிறுவியவர்களைப் பற்றி விரிவாக எழுதியிருக்கிறார்கள். அது ஒரு வீரயுகம், புத்தார்வ யுகம் என்று சித்தரிக்கப்படுகிறது. இத்தொழிலை நிறுவியவர்கள் சுறுசுறுப்பு, தொழிலூக்கம் மற்றும் வாணிக மதிநுட்பத்தின் சொரூபமாக விளங்கினார்கள் என்று வர்ணிக்கப்படுகிறது.

செஸில் ரோட்ஸ் [1853–1902] இவரைத் “தங்க வீரர்களில்” முதல்வராகச் சித்தரிப்பது வழக்க மாகும். ஒரு ஆப்பிரிக்க நாட்டை இந்த ஆங்கிலக் காலனியாதிக்கவாதியன் பெயரால் ரொடீஷியா என்று அழைத்தார்கள். அந்தப் பெயர் உலகத்தின் அரசியல் பூகோளத்திலிருந்து தற்பொழுது மறைந்துவிட்டது. அதற்குப் பதிலாக ஜிம்பாப்வே என்றபழைய ஆப்பிரிக்கப் பெயர் உபயோகிக்கப்படுகிறது. விட்வாட்டர்ஸ்ரேன்ட் பிரதேசத்தில் தங்க இருப்புக் கண்டு பிடிப்பதற்குப் பத்து வருடங்களுக்கு முன்பு கண்டுபிடிக்கப்பட்ட வைரச் சுரங்கங்களின் மீது அவருடைய பெருஞ்செல்வம் நிறுவப்பட்டது.

1887ல் ரோட்சும் அவருடைய கூட்டாளிகளும் “தென் ஆப்பிரிக்கத் தங்கச் சுரங்கங்கள் லிமிடெட்” என்ற கம்பெனியை ஏற்படுத்தினார்கள். தென் ஆப்பிரிக் காவில் வெட்டியெடுக்கப்படும் மொத்தத தங்கத்தில் சுமார் 20 சதவீதத்தை இந்தக் கம்பெனி இன்னும் வெட்டியெடுக்கிறது. ரோட்ஸ் நிறுவகப் பங்குகளை வைத்திருந்ததோடு கம்பெனியிலும் பிரதான நிர்வாக அதிகாரியாக இருந்தார். அதன் மூலம் அவருக்கு, 3,00,000 – 4,00,000 பவுன் வருட வருமானம் கிடைத்தது. பிறகு அவர் தன்னுடைய விசேஷமான நிறுவகப் பங்குகளைக் கைவிட்டு அவற்றுக்குப் பதிலாக 13,00,000 பவுன் மதிப்புடைய சாதாரணப் பங்குகளைப் பெற்றுக் கொண்டார்.★ ரோட்ஸ் பிரிட்டிஷ் கேப் குடியேற்றத்தின் பிரதம

மந்திரியாகவும் இருந்தார். தென் ஆப்பிரிக்காவை நாசப்படுத்திய போயர் யுத்தத்தைத் தூண்டியதில் இவர் மிக அதிகமான பங்கு வகித்தார்.

மற்றொரு ''தங்க வீரரான'' பார்னி ஐசக்ஸ் [1853–1897] என்பவருடைய வாழ்க்கை இன்னும் அதிகமான அளவுக்கு நாடகத்தைப் போல இருக்கிறது. இவர் தன்னுடைய பெயரை பர்னாடோ என்று மாற்றிவைத்துக் கொண்டார். லண்டனில் ஏழைகள் வசிக்கும் கிழக்குப் பகுதியில் சிறிய கடைக்காரரின் மகனாகப் பிறந்தார். கோமாளியும் ஏழை வீர சாகசக்காரருமான பர்னாடோ ரோட்சைப் போலவே வைரங்களில் சம்பாதித்துப் பெருஞ் செல்வரானார். 1888ல் தங்க வேட்டையின் சிகரத்தில் அவர் ஜோஹானஸ்பர்குக்கு வந்த பொழுது எதை வாங்கப் போகிறீர்கள் என்று கேட்டதற்கு ''எல்லாவற்றையுமே'' என்று பதிலளித்தார்.

ஆறு மாதங்களுக்குள் தங்கம் கிடைக்கும் பெரிய பிரதேசத்துக்கு உடைமையாளராகிவிட்டார். அவர் தன்னுடைய சகோதரரையும் மைத்துனரையும் பங்குதாரர் களாகக் கொண்டு ''ஜோஹானஸ்பர்க் கன்சாலிடேடட் இன்வெஸ்ட்மென்ட் கம்பெனி''என்ற நிறுவனத்தைத் தொடங்கினார். அது இன்றும வெற்றிகரமாக நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. இந்தக் கம்பெனியின் பங்குகளை லண்டன் பங்குச் சந்தை பேரார்வத்தோடு வாங்கியது. வாயிட்சேப்பலைச் சேர்ந்தபொழுது லண்டன் நகர மேயர் அவருக்கு விருந்தளித்து கௌரவித்தார். பர்னாடோவின் சுவாரசியமான வாழ்க்கை பைத்தியத்திலும் தற்கொலையிலும் முடிந்தது.

எர்னெஸ்ட் ஓப்பன்ஹேமர் [1880–1957] என்பவரைப் பற்றி முன்பே குறிப்பிட்டிருக்கிறோம். தென் ஆப்பிரிக்காவின் தங்கச் சுரங்கத் தொழிலுக்கு அமெரிக்க மூலதனத்தைக் கொண்டு வருவதில் அவர் முன்னோடியாக இருந்தார். 1917ல் அவர் நிறுவிய ''ஆங்கில –அமெரிக்கன் கார்ப்பரேஷன்'' என்ற பெயரிலேயே இது பிரதிபலிக்கப்படுகிறது. விட்வாட்டர்ஸ்ரேன்ட் பிரதேசத்தைப் பற்றிய நூலில் அவரைப் பற்றி தென் ஆப்பிரிக்க வரலாற்றாசிரியர் ஒருவர் பின்வருமாறு எழுதுகிறார். ''அவர் அதிர்ஷ்டக்காரர் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அவரிடம் துணிவும் கற்பனையும் இருந்தன. இல்லையென்றால் அவர் வெற்றியடைந்திருக்க மாட்டார். வங்கியாளர்களால் 'தொலைநோக்கு' என்று சொல்லப்படுகின்ற கற்பனை அவருடைய தலைசிறந்த குணமாக இருந்தது என்பது உண்மையே. ஒரு திட்டத்தின் வெறும் விவரங்களை மட்டும் எடுத்துக் கொண்டு ஐந்து அல்லது பத்து வருடங்களுக்குப் பிறகு அங்கே ஏற்படப் போகின்ற

கட்டிடத்தை முழுமையாகக் கற்பனையிலிலேயே கட்டி விடக்கூடிய தனித் திறமை அவரிடமிருந்தது.''

சர் எர்னெஸ்ட்டின் மகனான ஹேரி ஓப்பன் ஹேமர் குடும்ப சாம்ராஜ்யத்தை இன்றும் நிர்வகித்துக் கொண்டிருக்கிறார். ஆனால் காலம் மாறிவிட்டது. தங்கச் சுரங்கத்தொழில் புதிய இடங்களைக் கண்டுபிடித்துப் பரபரப்போடு புதிய கம்பெனிகளை ஏற்படுத்திய காலம் முடிந்து பல வருடங்களாகிவிட்டன. கம்பெனிகளின் நிர்வாகத்தில் நிர்வாகத் துறையினர், பொறியியலாளர்கள் மற்றும் நிதி நிபுணர்களின் பாத்திரம் இன்று முன்னைக் காட்டிலும் வெளிப்படையாகத் தெரிகிறது. எண்ணெய் மற்றும் பொறியியல் தொழில்துறைகளில் இணைப்புக்களும் கம்பெனிகளை விழுங்குவதும் புதிய கம்பெனிகளும் நபர்களும் தோன்றுவதும் மிகவும் சாத்தியமே.

எனினும் தங்கம் ஒரு விசேஷமான பண்டமாகவே நிலைத்திருக்கிறது. அது எண்ணெயைக் காட்டிலும் அதிக முக்கியமானதென்று சொல்ல முடியாது; எண்ணெய் அல்லது வேறு வகையான கனிப் பொருளிலிருந்து அது பொருளாதார ரீதியில் மட்டுமே வேறுபட்டிருக்கிறது. ''தங்கம் பணத்தின் மிக உயர்ந்த வடிவமாக நிலைத்திருக்கிறது. குறைந்த பட்சம், அன்றாட நடப்புக்கஷீமீ மற்றும் மனிதர்களின் ஏறுமாறான நடத்தைகளுக்கு அது உட்பட்டதல்ல என்று தோன்றுகிறது. ஆகவே தேசிய அல்லது சர்வதேசிய அளவில் பொருளாதார மற்றும் அரசியல் நிலைமை சீர்கேட்டையும் பொழுது எல்லோரும் குழப்பத்தோடு தங்கத்தை நோக்கித் திரும்புகிறார்கள். பொருளாதார அமைப்புக்களில், குறிப்பாக மேற்கு நாடுகளின் முதலாளித்துவ அமைப்பில் [அதன் குறியீடுகளில் தங்கமும் ஒன்றாகும்] நெருக்கடியை எடுத்துக் காட்டுகின்ற கருவியின் பாத்திரத்தை அது வகிப்பதற்கு இதுவே காரணம்''★ என்று எரிக் ஷேனல் கூறுகிறார்.

ஆகவே தங்கம் முதலாளித்துவத்தின் குறியீடு என்ற கருத்துரைக்கு நாம் திரும்பிவிட்டோம். எனினும் அது குறியீடு மட்டுமல்லாமல், முக்கியமான பொருளாதார இனமாகவும் இருக்கிறது. நவீன முதலாளித்துவ அமைப்பில் தங்கத்தின் பொருளாதாரப் பாத்திரத்தையும் அதன் பரிணாமத்தையும் அடுத்த அத்தியாங்களில் விவரிப்போம்.

# தங்க ஆதார அளவும் அதன் வேதனையும்

மூலச்சிறப்பான அரசியல் பொருளியலாளரான ஆடம் ஸ்மித் எழுதிய நாடுகளின் செல்வம் (1776) என்ற பிரபலமான புத்தகத்தில் மதிப்புப் பிரச்சினையின் உருவரையை எழுதத் தொடங்கும் பொழுதே அதிலடங்கியிருக்கும் சிரமத்தைப் பற்றி வாசகரிடம் மன்னிப்புக் கோருகிறார். மதிப்பை "என்னாலியன்ற அளவுக்கு முழுமையாகவும் திட்டவட்டமாகவும் விளக்குவதற்கு முயற்சி செய்வேன். அதற்கு வாசகர் தமது பொறுமை, கவனம் ஆகிய இரண்டையும் தரவேண்டுமென்று நான் மெய்யான ஆர்வத்தோடு கேட்டுக் கொள்கிறேன். சில இடங்களில் தேவை யில்லாத வகையில் அலுப்பூட்டுவதாக இருக்கும் விவரங்களை ஆராய்வதற்குப் பொறுமை தேவையாகும். என்னாலியன்ற அளவுக்கு நான் தரக் கூடிய மிகவும் முழுமையான விளக்கத்துக்குப் பிறகும் இன்னும் ஏதாவதொரு அளவில் புரிந்துகொள்ள முடியாததாக இருக்கக் கூடியவற்றைப் புரிந்துகொள்வதற்கு கவனம் தேவையாகும்."

முதலாளித்துவப் பணவியல் அமைப்பில் தங்கத்தின் பாத்திரத்தைப்பற்றிய பிரச்சினையைப் பற்றி எழுதும் பொழுதும் நாமும் இதைப்போலவே எழுத விரும்பு கிறோம். ஏனென்றால் இந்தத் தலைப்பும் ஸ்மித்தின் தலைப்புக்கு நெருக்கமானதாகும். பணம் என்ற வகையில் முதலாவதாகவும் முதன்மையாகவும் மதிப்பின் அளவுகோலே.

தங்க ஆதார அளவு அμவின் விளக்கத்தைக் காட்டிலும் எளிமையாக இருக்க வேண்டுமென்று ஒருவர் எதிர்பார்க்கக்கூடும். ஆனால் பொதுவாக சமூக விஞ்ஞானங்களை இயற்கை விஞ்ஞானங்களிலிருந்து பிரித்துக் காட்டுகின்ற சிரமங்கள் இங்கே நமக்கு எதிரே வருகின்றன. இந்தத் துறையில் பரிசோதனையும் தத்துவங்களைச் செய்முறையில் நிரூபிப்பது அல்லது மறுப்பதும் இயலாது. சமூக நிகழ்வுகள் கால வளர்ச்சியோடு மாறுகின்றன. சில பத்தாண்டு களுக்கு முன்பு உண்மையாக இருந்தது இன்று பொய்யாகி விடலாம். காரண காரிய உறவுகளை வெளிப்படுத்துவது நம்ப முடியாத அளவுக்குப் பலவகையான இயங்கும் காரணிகள், போக்குகள், எதிர்ப்போக்குகள் ஆகியவற்றால் மிகவும் அதிகமான அளவுக்குச் சிக்க

லாக்கப்படுகிறது. தகவல் மற்றும் புள்ளியியல் விவரங்கள் போதுமான அளவுக்கு நம்பகமானவை அல்ல, இவை பெரும்பாலும் இல்லாதிப்பதுமுண்டு.

ஆகவே பணம் என்ற வகையில் தங்கத்தைப் பற்றியும் தங்கஆதார அளவைப் பற்றியும் நிபுணர் கள் எராளமான புத்தகங்களை எழுதியிருந்தாலும் இத்துறையில் அதிகமானவை விவாதித்துக்குரிய வையாகவே இருக்கின்றன. இங்கே தங்க ஆதார அளவின் சாராம்சம், அதன் செயல்பாட்டுக்குரிய கால எல்லைகள், அதன் வீழ்ச்சியின் காரணங்கள் ஆகிய வற்றைப் பற்றிக்கூட உடன்பாடு ஏற்படவில்லை. இவையே இப்படியென்றால் தங்கத்தின் இன்றைய மற்றும் எதிர்கால நிலையைப் பற்றி சொல்லத் தேவையில்லை. இந்த விவாதங்களின் உண்மைகளுக்குப் பதிலாக உணர்ச்சிகளும் வாதங்களுக்குப் பதிலாக பரஸ்பரக் குற்றாச்சாட்டுகளுமே இடம் பெறுகின்றன.

இனி அடுத்துவரும் பக்கங்களில் முதலாளித்துவப் பண மற்றும் சர்வதேசப் பணவியல் அமைப்பின் பிரச்சினைகளைப் பற்றி மிகவும் எளிமையான முறையில் எல்லோரும் விரும்பிக் கற்கும் விதத்தில் எழுதுவோம்.

# உண்மையில் என்ன நடந்தது?

தங்க ஆதார அளவுக் காலகட்டத்தின் தொடக்கமும் கடைசியும் ஓரளவு தெளிவில்லாமல் இருக்கின்றன. விரிவான விளக்கத்தின்படி இந்தக் காலகட்டம் 18ம் நூற்றாண்டில் அல்லது குறைந்த பட்சம் நெப்போலியன் யுத்தங்களுக்குப் பிறகு இங்கிலாந்தில் வங்கி நோட்டுகளைத் தங்கத்துக்குப் பரிவர்த்தனை செய்வது மறுபடியும் ஏற்படுத்தப்பட்ட 1816–1821ல் தொடங்கியதாகச் சொல்லப்படுகிறது. ஆனால் மற்ற பெரிய நாடுகளில் தங்கத்தோடு சேர்ந்தே வெள்ளியும் பணவியல் அமைப்பின் அடிப்படையாக இன்னும் இருந்து கொண்டிருந்தது அல்லது வெஷீமீளி மட்டுமே அடிப்படையாக இருந்தது (உதாரணம்–ரஷ்யா), உலகப் பணத்தின் ஒரே வடிவமாகத் தங்கம் இன்னும் உருப்பெறவில்லை. அத்தகைய நிலைமை 1862க்கள் வரையிலும் வளர்ச்சி அடையவில்லை. 1867ல் பாரிசில் "ஒப்புநோக்கில் அதிகமான பிரபலமில்லாத ஒரு மாநாட்டில்"தான் சட்டபூர்வமாக தங்கம் உலகப் பணத்தின் ஒரே வடிவமென்று ஏற்றுக்கொள்ளப்பட்டது என்று கேல்பிரேய்த் எழுதுகிறார்.

முழுமையான ("மூலச்சிறப்பான") சர்வதேசத் தங்க ஆதார அளவின் தொடக்கத்தை இந்த வருடத்தைச் சுற்றி பல எழுத்தாளர்கள் அமைத்துக் கொள்கிறார்கள். எனினும் வெள்ளி 19–ம் நூற்றாண்டின் கடைசி வரையிலும் அதற்குப் பின்னரும் கூட பின்வரிசையில் சண்டை போட்டுக் கொண்டிருந்தது. பல நாடுகளில் (குறிப்பாக ஆசியாவில்) உள்நாட்டுச் செலாவணியில் இப்பொழுது கூட தங்கத்தினால் வெள்ளியை அகற்றிவிட முடியவில்லை.

தங்க ஆதார அளவுக் காலகட்டத்தின் முடிவைத் திட்டவட்டமாகக் கூறுவதும் சுலபமான காரியமல்ல. முழுமையான, வளர்ச்சியடைந்த அமைப்பு என்ற முறையில் அது மிக முந்திய காலமான 1914 லேயே முடிந்துவிட்டது. ஆனால் அமெரிக்க ஐக்கிய நாடு அதை நீடித்தக்கொண்டிருந்தது. முதல் உலக யுத்தத்துக்குப் பிறகு பிரிட்டன், பிரான்ஸ் மற்றும் இதர நாடுகள் பகுதியளவுக்கு அதை மறுபடியும் ஏற்படுத்திக்கொண்டன. மிகவும் மோசமான உலகப் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டு தங்கத்தை வங்கி நோட்டுகளுக்குப் பரிவர்த் தனை செய்துகொள்வது எல்லா நாடுகளிலும் ஒழிக்கப் பட்ட காலகட்டமாகிய

1930க்களில் அதன் “இரண்டாவது வீழ்ச்சி” ஏற்பட்டது. ஆனால் இரண்டாவது உலக யுத்தத்துக்குப் பிறகு உருவாக்கப்பட்ட சர்வதேசப் பணவியல் அமைப்பில் [பிரெட்டன்வுட்ஸ் அமைப்பு என்று சொல்லப்படுவது] தங்கத்துக்கு மிகவும் முக்கியமான பாத்திரம் அளிப்பது நீடித்தது. 1971ல் டாலருக்குத் தங்கம் கொடுக்கப்படுவது சர்வதேச ரீதியில் ஒழிக்கப்பட்டது. அதன் மூலம் உலகக் காகிதக் கடன் பணத்தைத் தங்கத்தோடு அதிகாரபூர்வமாக இணைத்த கடைசி நூலிழையும் அறுந்தது. ஆகவே தங்க ஆதார அளவுக்குத் “கடைசி முடிவு” 1971ல் ஏற்பட்டதாக வழக்கமாகக் கருதப்படுகிறது.

ஆகவே தங்க ஆதார அளவுக் காலகட்டம் அதிகமாகப் பார்த்தால் இரண்டு நூற்றாண்டுகளும் குறைவாகப் பார்த்தால் அரை நூற்றாண்டுக் காலமும் இருந்ததென்று கூறலாம். ஆனால் அந்தப் பணவியல் அமைப்பு முதலாளித்துவ வளர்ச்சியின் குறிப்பிட்ட கட்டமான தொழில்துறை [ஏகபோகத்துக்கு முற்பட்ட] முதலாளித் தவத்துக்கும் பொருந்தியிருந்தது என்பதே முக்கியமானதாகும். நாம் சில சமயங்களில் இந்தக் கட்டத்தை “சுதந்திரப் போட்டி முதலாளித்துவம்” என்று கூறுகிறோம். சுமார் 19ம் நூற்றாண்டின் கடைசியிலும் 20ம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் அதனிடத்தில் ஏகபோக முதலாளித்துவக் கட்டம் ஏற்பட்டது. தங்க ஆதார அளவு சோம்பல் காரணமாகத் தொடர்ந்தது. 20ம் நூற்றாண்டின் முதல் பத்தாண்டுகளில் பரவவும் செய்தது. இதனையடுத்த காலகட்டம் முழுவதிலும்-முதல் உலக யுத்தம் மற்றும் ரஷ்யாவில் சோஷலிஸ்ட் புரட்சியிலிருந்து ஏற்பட்ட முதலாளித்துவத்தின் பொது நெருக்கடிக் காலத்தில் -தங்க ஆதார அளவு படிப்படியாகத் தேய்வடைந்ததைப் பார்க்கிறோம். நவீன முதலாளித்துவப் பொருளாதாரத்தின் நிலைமை களுக்கும் தேவைகளுக்கும் அது பொருந்தவில்லை.

இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் ஒரு லட்சியப் பணவியல் அமைப்பு சர்வதேச ரீதியிலும் முக்கியமான நாடுகளுக்குள்ளேயும் கடைசியாக ஏற்படுத்தப்பட்டு விட்டதென்று பல பார்வையாளர்கள் கருதினார்கள். அதன் எளிமை, சிக்கலற்ற வகையில் செயல்படுவது, தானாக இயங்கும் தன்மை, அதிகாரிகளின் மனப் போக்கான நடவடிக்கைகளுக்கு அப்பாற்பட்ட நிலையில் அது இருந்தது ஆகியவை பாராட்டப்பட்டன. அப்படிப் பாராட்டியவர்கள் மூலதனத்தின் கூலி எழுத்தாளர்கள் மட்டுமே என்று சொல்ல முடியாது. ஒரு கணிதவியல் அமைப்பு என்ற முறையிலும் நன்கு செயல்படும் இயந்திரம் என்ற

முறையிலும் அது அழகாகத் தோன்றியது. இந்த அழகில் குறைகள் இல்லாதிருக்கவில்லை. அதைப் பற்றிப் பிறகு எழுதுவோம். வாழ்க்கையில் வழக்காக நடப்பதைப் போல அதுகுறைவான ஆயுளைக் கொண்டிருந்தது. முதலாளித்து வத்தின் வரலாற்றில் தங்க ஆதார அளவு மிகவும் குறிப்பிடத்தக்க அத்தியாயம் என்ற போதிலும் அது ஒரு அத்தியாயம் மட்டுமே. மேலே தொடர்வதற்கு முன்பாக இந்த அத்தியாயத்தைச் சரியான முறையில் புரிந்துகொள்வதற்கு விசேஷமான முக்கியத்துவத்தைக் கொண்டிருக்கும் மூன்று உண்மை களை இங்கே குறிப்பிடுவோம்.

முதலாவதாக, தங்க ஆதார அளவு அமுலிலிருந்த குறைவான காலம் ஆதார அளவுக்கு முன்பே தங்கம் பணமாக இருந்தது என்ற உண்மையையும் அது ஒழிக்கப்பட்ட பிறகும் பணத்தின் செயல்களை மாறிய வடிவத்தில் நிறைவேற்றியது என்ற உண்மையையும் மறைக்க முடியாது.

இரண்டாவதாக, இந்தக் காலகட்டத்தில் தங்கம் எக்காலத்திலும் பணத்தின் ஒரே வடிவமாகவோ அல்லது அளவு ரீதியாகக் கூட தலைமையான வடிவமாகவோ இருக்கவில்லை; அதன் ஆதரவின் கீழ் காகிதக் கடன் பணத்தின் வெவ்வேறு வகைகள் வேகமாக வளர்ச்சி யடைந்தன.

மூன்றாவதாக, தங்க ஆதார அளவின் உச்ச கட்டத்திலும்கூட தொழில்துறையில் வளர்ச்சியடைந்த ஒரு கோஷ்டி நாடுகளில் மட்டுமே அதன் முழுமை யான வடிவத்தில் இருந்தது. இந்த வல்லரசுகள் ஏற்படுத்தியிருந்த அமைப்புக்குத் தக்கவாறு மற்ற நாடுகள் தம்மைத் தகவமைத்துக் கொள்ள வேண்டியிருந்தது.

தங்க ஆதார அளவு சில அடிப்படைக் கூறுகளைக் கொண்டிருந்தது. இவை எல்லாமே எல்லா நாடுகளிலும் எல்லாக் காலங்களிலும் இருக்கவில்லை. ஆனால் அவை பரப்பப்படும் போக்கு இருந்ததென்பதில் சந்தேக மில்லை.

தங்க நாணயம் செலாவணியில் இருந்து வந்தது. இது தான் பணத்தின் முக்கியமான வடிவம். இதனோடு தொடர்புடைய வகையில் காகிதக் கடன் பணமும் மற்ற உலோகங்களில் செய்யப்பட்ட பணமும் செயல் ரீதியில் கீழான பாத்திரத்தையே வகித்தன. புள்ளிவிவரங்களின்படி 1913ல் மூன்று முக்கிய நாடுகள் [அமெரிக்கா, பிரிட்டன் மற்றும் பிரான்ஸ்] உலகத்தின் தங்கச் செலாவணியில் 62 சதவீதப் பங்கைக் கொண்டிருந்தன, இந்த அளவுவிகிதம் மேலும் அதிகரித்துக்கொண்டிருந்தது. ஜெர்மனியிலிருந்த தங்க நாணயத்தின் அளவும் குறிப்பிடத்தக்கதாகும். ரஷ்யாவில்

செலாவணியிலிருந்த தங்க நாணயம் ஒப்புநோக்கில் குறைவு (மேலே குறிப்பிட்ட ஒவ்வொரு நாட்டிலும் செலாவணியிலிருந்த தங்க நாணயத்தின் மதிப்பில் இரண்டு அல்லது மூன்று பங்குக்குக் குறைவாகவே இருந்தது).

மற்ற எல்லா வகையான பணங்களையுமே அவற்றின் முகப்பு மதிப்புக்குத் தங்கத்துக்குப் பரிவர்த்தனை செய்து முடிந்தது. நாணய இருப்புக்களை எப்பொழுதுமே வைத்துக்கொண்டிருந்த தனியார் வர்த்தக வங்கிகள் இந்தப் பரிவர்த்தனையின் முதல் வரிசையைத் தோற்றுவித்தன. கடைசியாகப் பார்க்கும்பொழுது தேசத்தின் தங்க இருப்புக்களை வைத்திருந்த மத்திய வங்கிகள்தான் இப்பரிவர்த்தனைத் தன்மையை உத்தரவாதம் செய்தன. 1913ல் மேலே குறிப்பிடப்பட்ட மூன்று நாடுகளும் உலகத்தின் மத்திய இருப்புக்களில் 51 சதவீதத்தை வைத்திருந்தன. இந்த சதவீதம் நாணயச் செலாவணியில் அவற்றின் சதவீதத்தைக் காட்டிலும் குறைவானதே என்பதை நாம் பார்க்க முடியும். சர்வதேசப் பணவியல் அமைப்பின் மையமாக இருந்த பிரிட்டன் மிகக்குறைவான தங்க இருப்பை வைத்திருப்பதைத் தன்னுடைய நெடுங்கால மரபாகக் கொண்டிருந்தது என்பதே விஷயமாகும். அன்றே அமெரிக்கா மிகவும் அதிகமான தங்க இருப்பை (1913ல் உலகத்திலுள்ள எல்லாநாடுகளின் தங்க இருப்புக்களும் 6.8 பில்லியன் டாலர்கள் என்றும் அந்நியப் பரிவர்த்தனை இருப்புக்கள் 800 மில்லியன் டாலர்கள் மட்டுமே என்றும் மதிப்பிடப்பட்டிருந்தன. ஆனால் இங்கே டாலர் கணக்கிடுகின்ற அலகாக மட்டுமே உபயோகிக்கப்படுகிறது. டாலர்களில் மத்திய வங்கிகளின் உண்மையான இருப்புக்கள் (அதாவது அமெரிக்க வங்கிகளில் இருக்கும் அந்நிய இட்டுவைப்புகள் மற்றும் வெளிநாடுகளில் இருக்கும் அமெரிக்க அரசாங்கப் பத்திரங்கள்) மிகவும் குறைவாகவே இருந்தன. அநேகமாக எல்லா சேம இருப்புக்களுமே பவுன் ஸ்டர்லிங்கில் இருந்தன. அவை பிரிட்டிஷ் வங்கிகளில் வைக்கப்பட்டிருந்தன.

ஒவ்வொரு பணவியல் அலகின் தங்க அடக்கமும் சட்டப்படி நிர்ணயிக்கப்பட்டு பல பத்தாண்டுகளுக்கு, நூறாண்டுகளுக்கும்கூட வழக்கமாக மாறாமலிருந்தது. இதன் காரணமாக, பணவியல் அலகுகளுக்கிடையே உறவுகள், பரிவர்த்தனை விகிதங்களும் ஸ்திராக இருந்தன. பவுனின் தங்க அடக்கம் சுத்தத் தங்கத்தில் சுமார் 7.322 கிராம், டாலரின் தங்க அடக்கம் 1.505 கிராம். பவுனில் டாலர்களின் பரிவர்த்தனை விகிதம். முன்னதைப் பின்னதால் வகுக்கும் பொழுது கிடைக்கும் ஈவாகிய 4.87 ஆகும். இதே அளவுக்கு ஸ்திரமான உறவுகள் பவுனையும் டாலரையும்

பிரெஞ்சு பிராங்க்கோடும் ஜெர்மன் மார்க்கோடும் இதர முக்கியமான நாணயங்களோடும் இணைத்தன. சுதந்திரமான பரஸ்பர நாணய மாற்றுத் தன்மை [ஒரு நாணயத்தை மற்றொரு நாணயத்துக்கு சுதந்திரமாகப் பரிவர்த்தனை செய்தல்] இருந்து வந்தது. இந்தப் பரிவர்த்தனை சந்தை விலைகளில் நடைபெற்றது. அவை அளவு விகிதங்களிலிருந்து மிகக் குறைவான அளவுக்கு வேறுபடும். இது வழக்கமாக இரு பக்கத்திலும் ஒரு சதவீதத்திலும் அதிகமாக இல்லாதிருக்கும். அந்நிய நாணயத்தில் தன்னுடைய கடனைக் கொடுக்க வேண்டிய பொறுப்பை வைத்திருந்த ஒரு கடன்காரர் தன்னுடைய சொந்த நாட்டின் நாணயத்தைக் கொடுத்து அந்நிய நாணயத்தை வாங்குவார் அல்லது தங்கத்தை வாங்கி மாற்றுவார்.

எனவே சந்த விகிதங்கள் அதிகமான வேறுபாட்டைக் கொண்டிருப்பதில்லை. உதாரணமாக, 1889–1908 கால கட்டத்தில் பாரிசில் பவுன் ஸ்டர்லிங்கின் விலை [“லண்டன் விலை” என்று சொல்லப்படுவது] பரிவர்த்தனை விகிதத்திலிருந்து 0.67 சதவீகிதத்துக்கு அதிகமாக வேறுபட்டிருக்கவில்லை. பாரிசில் டாலர் விலை [“நியூயார்க் விலை” என்று சொல்லப்படுவது] பரிவர்த்தனை விகிதத் சதவீதம் வரை வேறுபட்டிருந்தது. பாரிசுக்கும் நியூயார்க்குக்குமிடையே தங்கத்தைக் கொண்டு வருவதில் பாரிசுக்கும் லண்டனுக்குமிடையே கொண்டுவருவதைக் காட்டிலும் அதிகச் செலவு ஏற்பட்டது இந்த வேறுபாட்டுக்குக் காரணமாகும்.

தங்கம் சுதந்திரமாக ஏற்றுமதி மற்றும் இறக்குமதி செய்யப்பட்டு வந்தது. தங்கம் தொடர்ச்சியாக நாடுகளுக் கிடையே மாற்றப்பட்டு வந்தது. எல்லா அந்நிய வர்த்தகமும் இதர சர்வதேசக் கொள்விணைகளும தங்கத்தில் விலை கொடுக்கப்பட்டன என்று இதற்கு அர்த்தமல்ல. மிகவும் பெரும்பான்மையான வழங்கீடுகள் வங்கிகளுக்கிடையே நாணய மாற்றத்தின் வழங்கீடுகளின் சம நிலையிலுள்ள பற்றாக்குறையை, அதாவது நாடுகளுக்கிடையே பரஸ்பரக் கொடுக்கல் வாங்கல்கள் எல்லாவற்றிலும் மீதமிருப்பனவற்றைத் தீர்ப்பதற்குத் தங்கம் பயன்படுத்தப்பட்டது. உதாரணமாக, 1894ல் சர்வதேச மொத்த வழங்கீடு 20 பில்லியன் டாலர்களாகவும் நாடுகளுக்கிடையே தங்கப் புழக்கம் 700 மில்லியன் டாலர்களாகவும் இருந்தது என்று மதிப்பிடப்படுகிறது, அப்படியானால் தங்கத்திலுள்ள ஒவ்வொரு டாலரும் 30 டாலர்கள் மதிப்புக் கொண்டுள்ள பண்டங்களையும் சேவைகளையும் “கைமாற்றியிருக்கும்”.

இந்த அமைப்பு வழக்கமான முறையில் இயங்குவது மத்திய வங்கிகளின் இருக்கின்ற தங்க சேம இருப்புக்களைப் பொறுத்தாகும். வங்கிப் பத்திரங்கள்

சிக்கலின்றி பரிவர்த்தனை செளிணியப்படுவதை உறுதி செய்வதற்காக மத்திய வங்கிகள் வெளியிட்டிருக்கும் நோட்டுகளின் மொத்தத் தொகையில் ஒரு குறிப்பிட்ட சதவீதத்துக்குக் குறையாத அளவைப் பிரதிநிதித்துவப் படுத்துகின்ற தங்கத்தை மத்திய வங்கிகள் எப்பொழுதும் வைத்திருக்கவேண்டும் என்று விதிக்கும் சட்டங்கள் இயற்றப்பட்டன. தங்கத்தை வைதக்திருப்பதற்கும தங்கத்துக்கும் மிகவும் அதிகமான தேவை ஏற்படுகின்ற சமயத்தில் வங்கி நோட்டுக்களைப் பரிவர்த்தனை செய்வதற்கு மறுக்காமலிப்பதற்கும் வங்கிகளுக்கும் இரண்டு முக்கியமான வழிகள் இருந்தன. முதலாவதாக, அந்நிய நாணயங்களில் வெளிநாடுகளில் கடன் வாங்கு வதும் அவசியப்படுமானால் அதைத் தங்கத்துக்குப் பரிவர்த்தனை செய்வதும் சாத்தியமாக இருந்தது. இரண்டாவதாக, மத்திய வங்கிகள் கட்டுப்படுத்தும் கடன் கொள்கையைக் கடைப்பிடித்தன. அதாவது கடன் அளவையும் வங்கி நோட்டுகளின் செலாவணியையும் குறைக்கின்ற நோக்கத்தோடு தனியார் வர்த்தக வங்கிகளுக்குத் தாங்கள் தருகின்ற கடன் தொகையின் வட்டி விகிதத்தை அதிகமாக நிர்ணயித்தன. மத்திய வங்கியின் வட்டி விகிதம் அதிகமாக நிர்ணயிதன. மத்திய வங்கியின் வட்டி விகிதம் அதிகமாக இருக்கும் பொழுது வர்த்தக வங்கிகள் அதிலிருந்து குறை வாகவே கடன் பெறும். தாங்களும் தொழிலதிபர் களுக்கும் வர்த்தகர்களுக்கம் பொது மக்களுக்கும் குறைந்துவிடும். மேலும் அதிகமான வட்டி விகிதங்கள் அந்நிய மூலதனத்தை நாட்டுக்குள் கவர்ந்திழுக்கின்றன.

இது வழங்கீடுகளின் சமநிலையில் அபிவிருத்தியை ஏற்படுத்துகிறது. வர்த்தகப் பற்றாக்குறையைத் தீர்ப்பதற்கு, அந்நிய நாடுகளில் வழங்கீடு செய்வதற்குத் தங்கத்தை உபயோகிக்க வேண்டிய அவசியத்தைக் குறைக்கிறது. இதுதான் தங்க ஆதார அளவு என்று சுருக்கமாகக் கூறலாம். எனினும் இங்கே அதன் முக்கியமான கூறுகள், வெளித் தோற்றங்கள், அதன் தொழில் நுட்ப அம்சத்தைப் பற்றி மட்டுமே நாம் எழுதியிருக்கிறோம். தங்க ஆதார அளவின் பொருளாதார இயந்திர அமைப்பைப் பற்றிய பிரச்சினையே மிகவும் முக்கியமானதாகும்.

# இயந்திர அமைப்பு

இது தத்துவரீதியில் ஒன்றோடொன்று இணைக்கப் பட்டுள்ள பாத்திரங்களின் அமைப்பைப் போன்றதாகும். இந்தப் பாத்திரங்களில் இருக்கும் திரவத்தைப் போலவே சரி அமைதி நிலையிலிருக்கும் தங்கம் நாடுகளுக்கிடையே அவை ஒவ்வொன்றின் பொருளா தாரத் தேவைகளுக்குச் சுமாரான பொருந்திய வகையில் உத்தேசமாக வினியோகிக்கப்படுகிறது. அவற்றில் ஏதாவதொரு நாட்டில் தங்க உற்பத்தி அதிகரிப் பதனாலோ அல்லது வழங்கீடுகளின் சமநிலைநிலை பாதிக்கப்படுமானால் அப்பொழுது தானாகவே ஏற்படும் சக்திகள் குறிப்பிட்ட காலத்துக்குப் பிறகு சகஜமான நிலையை மறுபடியும் ஏற்படுத்துகின்றன.

இத்தகைய வழக்கமான நிலை அல்லது சரி அமைதி நிலை வழங்கீடுகள் திருப்திகரமான முறையில் சமப்படுத்தப்பட்டுவிட்டன என்பதையும் பல்வேறு நாடுகளிலுமுள்ள பண்டவிலைகளின் மட்டங்கள் ஏறக்குறைய ஒரே மாதிரியாக இருக்கின்றன என்பதையும் எடுத்துக்காட்டுகின்றன. இரண்டாவதாகச் சொல்லப் பட்டிருப்பதைப் பின்வருமாறு புரிந்துகொள்ள வேண்டும். உதாரணமாக, இங்கிலாந்தில் ஒரு பவுன் ஸ்டர்லிங்குக்கு வாங்கப்படக் கூடிய அதேஅளவு பண்டங்களை அமெரிக்காவில் 5 டாலர்களுக்கு (இரண்டு நாணயங் களுக்குமிடையில் உத்தேசமான பரிவர்த்தனை விகிதம் இதுதான் என்பதை நினைவுபடுத்திக் கொள்வோம்) வாங்கக் கூடும். இதே மாதிரி பொருந்திய அளவு மார்க்குகளுக்கம் பிராங்குகளுக்கும் இதர நாணங்களுக்கும். இந்த சரி அமைதி நிலையை மறுபடியும் ஏற்படுத்தவும் ஆதரவு கொடுக்கவும் எத்தகைய இயந்திர அமைப்பு வேண்டும்? இதை ஒரு உதாரணத்தின் மூலம் விளக்குவோம்.

ஏதோ சில காரணங்களுக்காக மற்ற நாடுகளோடு (இவற்றை ஒரு தனிமொத்தமாகக் கருதுவோம்) பிரிட்டனுடைய வழங்கீடுகளின் சமநிலை பாதிக்கப் பட்டிருப்பதாக வைத்துக் கொள்வோம். பவுன் ஸ்டர்லிங்கின் பரிவர்த்தனை விகிதம் இறங்கிவிட்டது. பவுன்களைத் தங்கத்துக்குப் பரிவர்த்தனை செய்து அதை வெளிநாட்டுக்கு அனுப்பி வைப்பது அதிக லாபகரமாகிவிட்டது. எனவே தங்கம் வெளிநாடுகளுக்குப் போய்க் கொண்டிருக்கிறத. பாங்க் ஆப் இங்கிலாந்தின் தங்க சேம இருப்பு

குறைந்து கொண்டிருக்கிறது. இதற்கு மாறாக, உலகத்தின் மற்ற பகுதிகளில் அதிகமான தங்கம் இருக்கிறது.

இது பின்வரும் ஒரே மாதிரியான நிகழ்வுப் போக்குகளை ஏற்படுத்துகிறது. நாட்டில் வங்கிக் கடனுக்குத் தங்கம் அடிப்படையாக இருக்கிறது. அது இங்கிலாந்தை விட்டுப்போகும் பொழுது வங்கிகளின் சேம இருப்புகள் குறைகின்றன. வங்கிகள் தொழில் துறைக்கும் வர்த்தகத்துக்கும் தருகின்ற கடன்களைக் குறைக்கின்றன. மற்ற அம்சங்கள் சமமாக இருக்கும் பொழுது, இதன் விளைவாகப் பண்டங்களின் தேவை குறைகிறது, பண்டங்களின் விலைகள் இறங்குகின்றன. உலகத்தின் மற்ற பகுதிகளில் தங்கம் வருவதனால் கடன் வசதி விரிவடைகிறது, பண்டங்களின் தேவை அதிகரிக்கிறது. விலைகள் உயர்கின்றன. ஒரே மாதிரியான விலை மாற்றங்களின் மற்றொரு கற்பனையான இயந்திர நுட்பம் இருப்பது அதிகமான விவாதத்துக்குரியதாகும். இது பணத்தின் அளவுத் தத்துவத்தோடு தொடர்புடையது. டேவிட் ரிக்கார்டோவின் காலத்திலிருந்து சொல்லப்பட்டு வரும் இந்தக் கருத்தின்படி தங்கம் நாட்டிலிருந்து வெளியே போவதால் விலைகள் ரேநடியாகவும் உடனடியாகவும் இறங்குகின்றன.

ஏனென்றால் உள்நாட்டில் பணம் குறைந்துவிடுகிறது. குறைந்த அளவு பணத்தை முன்பிருந்த பண்டங் களின் மொத்தத்திரள் எதிரிடுகிறது. பண்டத்தின் ஒவ்வொரு அலகின் விலையும் குறைந்துவிடும். தங்கம் போய்க்கொண்டிருக்கம் நாடுகளில் இதற்கு எதிர்மறையான நிகழ்வு நடைபெறுகிறது. இங்கே நாம் தங்கப் பணத்தை அல்லது தங்கத்துக்குப் பரிவர்த் தனை செய்யப்படக்கூடிய பணத்தைப் பற்றி விவாதிக்கிறோம் என்பதை நினைவுபடுத்திக்கொள்ள வேண்டும். மார்க்சியப் பொருளாதாரத் தத்துவம் இந்த விளக்கத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. பணத்தின் அளவுத் தத்துவத்தையும் அது ஒத்துக்கொள்ள வில்லை. ஏன்? ஏனென்றால் பண்டங்கள் மற்றும் தங்கத்தின் உற்பத்தி நிலைமைகளுக்குச் சம்பந்தமில்லாத வகையில் தங்கத்தின் மதிப்பு செலாவணியில் நிர்ணயிக் கப்படுவதாகக் கூறுவது உண்மையல்ல. இந்தத் தத்துவம் விலைகள் அதிகரிப்பதையும் குறைவதையும் பணத்தின் அளவோடு மட்டுமே இணைத்து அதிகமான அளவுக்கு ஒரு தலைச் சார்பான விளக்கத்தைக் கொடுக்கிறது.

இது எப்படியிருந்தபோதிலும் தங்கம் எந்த நாட்டிலிருந்து வெளியே போகிறதோ அங்கே விலைகள் குறைய முற்படுகின்றன. எந்த நாட்டுக்குத் தங்கம் போய்ச் சேருகிறதோ அங்கே விலைகள் அதிகரிக்கின்றன.

பண்டங்கள் மலிவான சந்தையிலிருந்து அதிகமான விலையிருக்கும் சந்தைக்குப் போக முற்படும் என்பது பொதுஅறிவு. ஆகவே பிரிட்டனின் ஏற்றுமதிகள் அதிகரிக்கின்றன, இறக்குமதிகள் குறைகின்றன. அதன் வர்த்தக மற்றும் வழங்கீடுகளின் சமநிலை அபிவிருத்தியடைகிறது, பவுன் ஸ்டர்லிங்கின் பரிவர்த் தனை விகிதம் அதிகரிக்கிறது, தங்கம் பிரிட்டனுக்குத் திரும்பத் தொடங்குகிறது.

உலகத்தில் மற்ற பகுதிகளில் இதற்கு எதிர்மறையான நிகழ்வுகள் நடைபெறுகின்றன. அங்கேயுஷீமீள அதிகமான விலைகள் பிரிட்டனிலிருக்கும் பண்டங் களைக் கவர்ந்திழுக்கின்றன, உள்நாட்டில் உற்பத்தி செய்யப்படும் பண்டங்களை ஏற்றுமதி செய்யவிடாது தடுக்கின்றன. உலகத்தின் மற்ற பகுதிகளிலிருந்து பிரிட்டனுக்கு வரும் ஏற்றுமதிகள் குறைகின்றன. இறக்குமதிகள் அதிகரிக்கின்றன. வர்த்தக மற்றும் வழங்கீடுகளின் சமநிலை சீர்கேடடைகிறது, பவுன் ஸ்டர்லிங் கோடு தொடர்புடைய பரிவர்த்தனை விகிதங் கள் குறைகின்றன. தங்கம் இந்த நாடுகளை விட்டு பிரிட்டனுக்குப் போய்ச் சேருகிறது.

தானாகவே ஏற்படுகின்ற இந்த இயந்திர அமைப்பின் நடவடிக்கை மத்திய வங்கிகளின் மேற்சொல்லப்பட்ட கொள்கையினால் ஆதரிக்கப்படுகிறது. பிரிட்டனில் வட்டி விகிதங்கள் உயர்ந்தன. கடன் வசதி குறைந்தது. மற்ற நாடுகளில் வட்டி விகிதங்கள் இறங்கின. கடன் வசதி பெருகியது. இது தேவை மற்றும் விலை களின் மீது தகுந்த விளைவைக் கொண்டிருந்தது. ஒன்றோடொன்று இணைக்கப்பட்டிருக்கும் பாத்திரங்கள் என்ற உதாரணத்தைத் தொடர்ந்தால், இவ்வாறு அதன் இணைப்புக் குழாய்கள் சற்று விரிவு செய்யப்பட்டு திரவ மட்டத்தை சமப்படுத்தும் நிகழ்வு துரிதப்படுத்தப்பட்டது என்று கூற வேண்டும். இது படிப்பதற்கு நன்றாக இருக்கிறது. ஆனால் உண்மையில் நடந்தது வேறு. நாம் வர்ணித்திருக்கும் லட்சிய மாதிரிப் படிவத்திலிருந்து அது மிகவும் வேறுபட்டிருந்தது. இது ஆச்சரியப்படக் கூடியதல்ல. தங்க ஆதார அளவின் மாதிரி பல அனுமானங்களை ஆதாதமாகக் கொண்டது. இவற்றுக்கும் யதார்த்தத்துக்கம் சிறிதளவு மட்டுமே தொடர்பு உண்டு அல்லது அதுகூட இல்லை. அத்தகைய அனுமானங்களில் முக்கியமானவற்றை இங்கே குறிப்பிடுகிறோம்.

வெளிநாட்டுப் பொருளாதார நடவடிக்கைகள் எல்லாமே விலைகள் அல்லது வட்டி விகிதங்களின் பால் கூருணர்ச்சி கொண்டிருப்பவை; அவற்றின் தாக்கத் துக்குப் பொருந்திய வகையில் மாற்றமடை கின்றன என்று

இத்தத்துவம் அனுமானிக்கிறது. ஆனால் உண்மையில் இப்படி ஒரு போதும் நடப்பதில்லை. தங்க ஆதார அளவு அமுலிலிருந்த காலகட்டம் முழுவதுமே பிரிட்டன் நீண்டகால மூலதனத்தை ஏற்றுமதி செளிணிதது. பிரிட்டிஷ் பணத்தைக் கொண்டு மற்ற நாடகளில் தொழிற்சாலைகளும் இரயில்வேக்களும் கட்டப்பட்டன. அந்த அரசாங்கங்கள் லண்டன் சந்தையில் கடன்களை அறிவித்துப் பணம் திரட்டின. மூலதன முதலீட்டிலிருந்து கிடைக்கும் வருமானம் லண்டனுக்குள் வாடிக்கையாகப் பாய்ந்துகொண்டிருந்தது. தங்கம் மற்றும் அந்நியப் பரிவர்த்தனை விகிதங்களை போக்குவரத்தைப் பற்றி எத்தகைய அக்கறையுமின்றி இந்த நடவடிக்கைகள் தம் சொந்த வழியைப் பின்பற்றின.

ஒரு நாட்டுக்குள் தங்கம் வருமானால் அது தவிர்க்க முடியாத வகையில் பணத்தின் அளிப்பில் அதிரிகப்பை ஏற்படுத்துகிறது. இந்த அதிகரிப்புக்குத் தகுந்தவாறு விலைகள் உயர்கின்றன (ஒரு நாட்டிலிருந்து தங்கம் வெளியே எடுத்துச் செல்லப்படும் பொழுது இதற்கு எதிர்மறையாக நடைபெறுகிறது) என்று அனுமானமும் இதே அளவுக்குச் சந்தேகத்துக்குரியதே. இந்தக் கருத்தை மார்க்ஸ் வன்மையாகக் குறைகூறினார். ஒரு நாட்டின் பொருளாதாரம் பணத்தின் அவசியத்தை உணரவில்லையென்றால் தங்க ஆதார அளவின் நிலைமைகளின் கீழ் அதன் பண அளிப்பைப் பலவந்தமாக அதிகப்படுத்த முடியாது. நாட்டிற்குள் இறக்குமதி செய்யப்பட்டி ருக்கும் தங்கம் தனியார்களின் பதுக்கல்களில் மறைந்துவிடும் அல்லது மத்திய வங்கிகளின் பாதாள அறைகளில் புதைக்கப்பட்ட செல்வமாக இருக்கும்.

இது மட்டுமல்ல, பண அளிப்பு அதிகரித்தால்கூட விலைகளின் அதிகரிப்பு அவசியமாக ஏற்படும் என்பது இதன் அர்த்தமல்ல. விலை மட்டங்களில் பொருளாதாரச் சுற்றுவளையத்தின் கட்டம் மிகவும் முக்கியமான காரணியாகும். பொருளாதாரம் மேலே ஏறுகின்ற பொழுது, பெருக்கமடைகின்ற பொழுது விலைகள் வழக்கமாக அதிகரிக்கும். ஒருவேளை பண அளிப்பின் வளர்சச் அது சுற்று வளையததின் இந்தக் கட்டங்களோடு பொருந்திவருகின்ற உதாணரங்களுக்கும் அந்த அளவுக்கும் மட்டுமே விலைகளை உயர்த்துவதற்கு உதவியிருக்கலாம்.

கடைசியாக (இதுதான் மிக முக்கியமான கருத்து என்றும் கூறலாம்) உண்மையான வாழ்க்கையில் ஏதோ ஒரு வகையான சரி அமைதி நிலையைச் சரி செய்து சீரமைத்து ஏற்படுத்துவது தகவமைக்கின்ற இணக்க மான நிகழ்வுகளின் மூலம் ஏற்படவில்லை, அதற்குப் பதிலாக அது

தீவிரமான பொருளாதார மற்றும் நிதி நெருக்கடிகளின் மூலமாக, பொருளாதாரம் மற்றும் மக்கள் தொகையினர் மீது அதிகமான தியாகங்களைச் சுமத்தி நடைபெற்றது. ஒரு நாட்டிலிருந்து தங்கம வெளியே போவது வழக்கமாகவே பொருளாதார நெருக்கடியின் அறிகுறியாக இருக்கிறது. அந்த நெருக்கடியைத் தொடர்ந்து ஏற்படுத்துகிறது. பிறகு அது இந்த நெருக்கடியைத் தீவிரப்படுத்துகிறது. தங்கம் போய்விட்டால் வங்கிகள் தாங்கள் தருகின்ற கடன்களைத் குறைத்து விடுகின்றன. பணச் சந்தையில் “இறுக்கமான நிலைமை” ஏற்படுகிறது. கொடுக்கபட வேண்டிய வழங்கீடுகளுக்கு ரொக்கப் பணத்தைத் தயாரிப்பது கஷ்டமாக இருக்கிறது. இந்த வழங்கீடுகள் அந்த நிறுவனம் இயங்குவதா அல்லது முறிந்து விடுவதா என்பதை முடிவு செய்கின்ற அளவுக்கு முக்கியமாகக் கூட இருக்கலாம். சில நிறுவனங்கள் முறிந்ததனால் வேறு பல நிறுவனங்களும் முறிய நேர்ந்தது. கடன் வசதி சீர்குலைக்கப்பட்டு எல்லோருமே செய்யப்படக்கூடிய வங்கிப் பத்திரங்கள் மற்றும் இதரக் கடன் பணம்] வேண்டமென்று கேட்டார்கள். இது “நிதிநெருக்கடி” எனப்படும், மத்திய வங்கி “இந்த விளையாட்டின் விதிகளுக்கு” ஏற்றவாறு தன்னுடைய வட்டி விகிதத்தை உயர்த்திக் கடன் வசதியைக் குறைத்த பொழுது உண்மையில் நிலைமையை மேலும் மோசமாக்கிக் கொண்டிருந்தது.

பொருளாதாரத்தில் இத்தகைய நிலைமை ஏற்படும் பொழுது என்ன நடைபெறுகிறது? முதலாளித்துவ நிறுவனங்கள் தமது மொத்தச் சரக்குகளை மலிவான விலைக்கு விற்பனைசெய்கின்றன, உற்பத்தியைக் குறைக்கின்றன அல்லது நிறுத்தி விடுகின்றன, தொழி லாளர்களில் ஒரு பகுதியினரை வேலையை விட்டு நீக்குகின்றன, எஞ்சியிருக்கும் தொழிலாளர்களின் கூலியைக் குறைக்கின்றன. வேலையில்லாத் திண்டாட் டம் அதிகரிக்கிறது, தேசிய வருமானம் குறைகிறது, தொழிலாளர்களின் நிலை சீர்கேடடைகிறது. இத்தகைய விலையைக் கொடுப்பதன் மூலமே, இவ்வழியின் மூலமாக மட்டுமே பொருளதார நெருக்கடி படிப்படியாகக் குறைந்து பொருளாதாரத்தில் வேகமான வளர்ச்சிக்குரிய நிலைமைகள் தோன்றும், தங்கம் மறுபடியும் நாட்டுக்குத் திரும்பும், மத்திய வங்கியில் பழைய மாதிரிதங்க இருப்பு ஏற்படும். சில மில்லியன் அல்லது சில பத்து மல்லியன் பவுன் ஸ்டர்லிங்குகள் பெறுமதிப்புள்ள தங்கத்தைப் பாதாள அறைகளுக்குக் கொண்டு வருவதற்காக நாட்டுப் பொருளாதார வளர்ச்சியின் வழக்கமான நிகழ்வைக் குலைத்து அதன் மொத்தப்

பொருளாதாரத்தையுமே வேறு வழியில் திருப்பி இயக்கிவிட வேண்டியிருக்கிறது.

பியானோவிலிருந்து நாற்காலி வெகு தூரத்தில் இருப்பதைக் கண்ட கோமாளி பியானோவை நாற்காலிக்குப் பக்கத்தில் இழுத்துக் கொண்டு வர முயற்சிப்பதை இது நினைவுபடுத்துகிறதென்று ஒரு மேற்கத்திய பொருளியலாளர் சுட்டிக் காட்டுகிறார்.

சமப்படுத்தல் மற்றும் தகவமைத்தல் நடைபெறுகிற தென்பது உண்மையே. ஆனால் அவை எல்லோரும் எல்லோருடனும் நடத்துகின்ற மூர்க்க மான போராட்டத்தில் வேதனை நிறைந்த கொந்தளிப்புகளோடு மிகவும் அதிகமான தியாகத் தோடு நடைபெறுகிறது. ஒன்றோடொன்று இணைக் கப்பட்டிருக்கும் பாத்திரங்களை உதாரணம் காட்டுவ தென்றால் அந்தப் பாத்திரங்களை தண்ணீரால் நிரப்பப் படவில்லை. ஒட்டிக் கொள்ளக்கூடிய திரவம்தான் அங்கே இருக்கிறது. அந்த திரவம் தொடர்புக் குழாய்களில் அடைத்துக்கொள்கிறது, குழாய்களில் ஒரே சீராக இல்லாமல் விட்டுவிட்டுப் பாய்கிறது, அவ்வப்பொழுது பீச்சியடிக்கிறது, இதரவை.

இங்கே ஒன்றைக் குறிப்பிட வேண்டும். முதலாளித்துவ உலகத்தில் தங்க ஆதார அளவு மிகக் குறைந்த காலம்தான் இருந்திருக்கிறதென்று வியப்படையக் கூடாது. அது இவ்வளவு காலம் நிடித்ததே என்று ஆச்சரியப்பட வேண்டும். பணம் மற்றும் அந்நியச் செலாவணியில் அது உறுதிப்படுத்திய சார்பு நிலை ஸ்திரத்தன்மை அதன் குறை இல்லாத தன்மையினால் ஏற்படவில்லை, 19–ம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் முதலாளித்துவ வளர்ச்சியின் ஸ்தூலமான நிலைமை களினால் அது ஏற்பட்டது. உலகத்தின் மற்ற பகுதியின் மீது தங்க ஆதார அளவு என்ற ‘‘விளையாட்டின் விதிகளைத்’’ திணிப்பதில் வெற்றியடைந்த பிரிட்டனின் கேந்திரமான பொருளாதார மற்றும் அரசியல் பாத்திரம் இந்த நிலைமைகளில் ஒன்று என்பதை நாம் குறிப்பிட வேண்டும். இந்த அமைப்பு பெரு மளவுக்கு அக்காலத்திய உலகத்தின் வர்த்தக, நிதித்துறைக் கேந்திரமாக லண்டன் இருந்ததை அடிப்படையாகக் கொண்டிருந்தது. பாங்க் ஆப் இங்கிலாந்தினால் தலைமை தாங்கப் பட்ட மத்திய வங்கிகள் சர்வதேசத் தங்க ஆதார அளவுக்கு ஆதரவு கொடுத்துக் பாதுகாத்தன. இந்த அமைப்பு அவற்றுக்கு அதிகமான பலத்தையும் செல்வாக்கையும் கொடுத்தது.

முதல் உலக யுத்தம் வரையிலும் அறிவாழமிக்க பொருளியலாளர் ஒருவர்கூட தங்க ஆதார அளவு சரியானதா என்பதைக் கனவிலும்

சந்தேகித்திருக்க மாட்டார். அது படைப்பின் சிகரமாக, தலைமையான பொருளாதாரச் சாதனையாக, ஒழுங்குமுறை மற்றும் முதலாளித்துவ சுதந்திர்த்தின் அடையாளமாகத் தோன்றியது. எனவே இந்தப் பிரச்சினைகளைப் பற்றி மார்க்ஸ், குறிப்பாக மூலதனத்தின் மூன்றாம் தொகுதியின் பூர்த்தி செய்யப்படாத ஐந்தாவது பகுதியில் எழுதியிருக்கின்ற ஆழமான, ஊடுருவிப் பார்க்கின்ற கருத்துக்கள் மிகவும் ஆச்சரியமளிக்கின்றன. ‘‘கடன் வசதி அமைபபின் அச்சு மத்திய வங்கியே, உலோக இருப்பு மத்திய வங்கியின் அச்சு.’’ இந்த உண்மையைக் குறிப்பிட்ட பிறகு ‘‘நெருக்கடிகளின்போது ‘அச்சு’ என்ற முறையில் அதன் திகைப் பூட்டும் வெளிப்பாடுகளைப்’’ பற்றிக் கூறுகிறார். ‘‘நெருக்கடியான தருணத்தில் உலோக அடிப்படையைக் காப்பாற்றுவதற்கு உண்மையான செல்வத்தை மிகவும் அதிகமான அளவுக்க தியாகம் செய்ய வேண்டியிருக்கிறது’’ என்று பல மரபுகளையும் சேர்ந்த முதலாளித்துவப் பொருளியலாளர்கள் ‘‘ஒரே மாதிரியாக ஒத்துக் கொள்கிறார்கள்.

மார்க்ஸ் இக்கருத்துக்களைச் சென்ற நூற்றாண்டின் அறுபதுக்களில் எழுதினார். இவற்றை எங்கெல்ஸ் 1890க்களில் முதல் தடவையாக வெளியிட்டார். இரண்டு சந்தர்ப்பங்களிலுமே இவை தம் காலத்துக்கு மிகவும் முந்தியவையாகும். தங்கத்தையும் தங்க ஆதார அளவையும் பற்றிய மார்க்சின் கருத்துக்கஷீமீ முதலாளித்துவ உற்பத்தி முறையின் தன்மை மற்றும் அதன் எதிர்காலத்தைப் பற்றி அவருடைய போதனையின் அடிப்படைக் கோட்பாடுகளோடு நெருக்கமாக இணைந்திருக்கின்றன. தங்கம் வெளிநாடுகளுக்கு அனுப்பப்படுவது, நிதித்துறை நெருக்கடி மற்றும் அவற்றின் பொருளாதார விளைவுகள் முதலாளித்துவ அமைப்பின் சாராம்சத்தின் வெளியீடுகளே. அந்த அமைப்பில் அடிப்படையில் எது சமூக உற்பத்தியோ அது சமூக நிர்வாகத்துக்க உட்படுத்தப்படுவதில்லை.

முதலாளித்துவப் பொருளியலாளர்களைப் போல முதலாளித்து வத்தை ஒரு இயற்கையான, நிரந்தரமான அமைப்பு என்று மார்க்ஸ் பார்க்கவில்லை. மனிதகுலுத்தின் வளர்ச்சியில் அது ஒரு இயற்கையான கட்டம் என்ற முறையில் மட்டுமே அவர் பார்த்தார். முதலாளித்து வத்தால் உருவாக்கப்பட்ட பணவியல் மற்றும் கடன் அமைப்பையும் அவர் இந்தக் கருத்து நிலையிலிருந்தே அμகினார். பெரிய வங்கிகளையும் அவற்றின் ‘‘சமூகக் கணக்கு முறை மற்றும் உற்பத்திச் சாதனங்களின் வினியோகத்தையும்’’ ‘‘முதலாளித்துவ உற்பத்தி முறையினால்

தயாரிக்கப்பட்ட அதிக நுட்பமான, அதிக வளர்ச்சியடைந்த உற்பத்திப் பொருள்’’ என்று அவர் கருதினார்.

இந்த இயந்திர அமைப்புக்குப் புதிய உள்ளடக்கத்தைக் கொடுத்து சோஷலிசம் அதை உபயோகிக்கும் என்று மார்க்ஸ் நம்பினார். தங்கப் பணத்தையும் தங்க ஆதார அளவு என்ற இயந்திர அமைப்பையும் பற்றி அவர் இவ்வாறு குறிப்பிட்டிருக்கக் கூடும் என்று கற்பனை செய்வது கடினமானதே.

# இரண்டு உலக யுத்தங்களுக்கு இடையில்

மேற்கு நாடுகளைச் சேர்ந்த பொருளியலாளர்களும் அரசியல்வாதிகளும் பிரிட்டனில் 1925ல் தங்க ஆதார அளவை மறுபடியும் ஏற்படுத்தியதன் விளைவுகளைப் பற்றி அரை நூற்றாண்டுக் காலத்துக்கும் அதிகமாக விவாதித்திருக்கிறார்கள். முதல் உலக யுத்தத்தின்போது பிரிட்டிஷ் அரசாங்கம் அநேகமாக மற்ற எல்லா நாடுகளின் அரசாங்கங்களையும் போலவே தங்க ஆதார அளவை ஒழித்து நாட்டிலிருக்கும் தங்கத்தைத் தன்னிடம் திரட்டி வைத்துக்கொள்ள முயற்சி செய்தது. பவுன் இனிமேல் தங்கத்துக்குப் பரிவர்த்தனை செய்யப்பட முடியாத நிலையில் தங்கம், பண்டங்கள் மற்றும் நிலையான அந்நிய நாணயங்களோடு ஒப்பிடும் பொழுது மதிப்புக் குறைந்தது. லண்டன் நிதிச் செல்வர்களும் கன்சர்வேடிவ் அரசியல்வாதிகளும் இந்த நிலைமையை ஒத்துக்கொள்ள மறுத்தனர். ஏனென்றால் தங்க பவுன் நாணயம் பொதுஜன வாக்கின்படி சூரியன் ஒருபோதும் அஸ்தமிக்காத பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் சின்னமாக இருந்தது.

தங்க ஆதார அளவை மறுபடியும் ஏற்படுதுவதற்குத் தகுதி வாய்ந்த ஒரு நபர் கிடைத்தார். அவர்தான் நிதி அமைச்சரான (பிற்காலத்தில் பிரதம மந்திரி பதவி வகித்த) வின்ஸ்டன் சர்ச்சில். நாம் முன்னர் வர்ணித்ததைப் போலவே இது சிக்கலான நடவடிக்கையாக இருந்தது. நாட்டின் விலைகளின் மட்டத்தைக் குறைக்க, உலகச் சந்தையில் பவுன் ஸ்டர்லிங்கின் பரிவர்த்தனை விகிதத்தை உயர்த்த, வழங்கீடுகளின் சமநிலையிலும் தங்கம் உள் நாட்டுக்கு வருவதிலும் அபிவிருத்தியை ஏற்படுத்த வேண்டியிருந்தது. பெருந்திராள மக்களின் வேலையில்லாத் திண்டாட்டம், குறைவான கூலிகள், வயிற்றை இறுக்கிக் கட்டுதல் என்ற விலையைக் கொடுத்து இதை அடைந்தனர். சமீப பத்தாண்டுகளாக இக்கொள்கை பணவாட்டக் கொள்கை என்று சொல்லப்படுகிறது.

யுத்தத்துக்கு முன்பிருந்த பவுனின் சமநிலையின் அடிப்படையில் தங்கஆதார அளவு மறுபடியும் ஏற்படுத்தப் பட்டது. பவுனுக்கும் டாலருக்கும் இடையிலிருந்த பழைய விகிகதம் மறுபடியும் விகிதத்தின்படி பிரிட்டனிலிருந்த விலை மட்டங்கள் சிறிளதவு குறைவடைந்திருந்த

போதிலும் அமெரிக்காவைக் காட்டிலும் குறிப் பிடத்தக்க வகையில் அதிகமாக இருந்தன. பவுனின் பரிவர்த்தனை விகிதம் இப்படி மிகவும் அதிகமாக வைக்கப்பட்டது. ஒரு நாட்டினுடைய நாணயப் பரிவர்த்தனை விகிதம் மிகவும் அதிகமாக இருந்தால் அந்த நாடு ஏற்றுமதி செய்வது கஷ்டம்.

யுத்தத்துக்கு முன்பிருந்த பவுனின் சமநிலையின் அடிப்படையில் தங்க ஆதார அளவு மறுபடி யும் ஏற்படுத்தப்பட்டது. பவுன்கும் டாலருக்கும் இடை யிலிருந்த பழைய விகிதம். மறுபடியும் பின்பற்றப்பட்டது என்பது இதன் பொருள். இந்த விகிதத்தின்படி பிரிட்டனி லிருந்த விலை மட்டங்கள் சிறிதளவு குறைவடைந்திருந்த போதிலும் அமெரிக்காவைக் காட்டிலும் குறிப்பிடத்தக்க வகையில் அதிகமாக இருந்தன. பவுனின் பரிவர்த்தனை விகிதம்இப்படி மிகவும் அதிகமாக வைக்கப்பட்டது. ஒரு நாட்டினுடைய நாணயப் பரிவர்த்தனை விகிதம் மிகவும் அதிகமாக இருந்தால் அந்த நாடு ஏற்றுமதி செய்வது கஷ்டம்.

இதை எண்களின் உதவியைக் கொண்டு விளக்குவோம். ஏனென்றால் இனி நம் வாதத்தில் பரிவர்த்தனை விகிதங்களும் அந்நியச் சந்தைகளும் முக்கியமான பாத்திரத்தை வகிக்கப்போகின்றன. ஒரு பவுன் சுமார் டாலர்களுக்குச் சமம் என்று சமமதிப்பு விகிதம் நிர்ணயிக் கப்பட்டது. ஆனால் உண்மையில் அது 4 டாலர்கள் மதிப்பை மட்டும்தான் கொண்டிருந்தது. பிரிட்டனில் ஒரு குறிப்பிட்ட அளவு பவுன்களின் மதிப்பைக் கொண் டிருக்கும் குறியடையாளமான பண்டங்களின் மாதிரி அமெரிக்காவில் அதைக் காட்டிலும் நான்கு மடங்கு அதிகமான டாலர்களின் மதிப்பைக் கொண்டிருக்கும் என்பது இதன் அர்த்தம். இந்த வேறுபாடு பவுனின் பரிவர்த்தனை விகிதம் எந்த அளவுக்குச் செய்கையாக உயர்த்தப்பட்டது, ஸ்டர்லிங்கின் மிகை மதிப்பு எந்த அளவுக்கு இருந்தது என்பதற்கு அளவு கோலாகும்.

ஒரு பிரிட்டிஷ் கம்பெனி அமெரிக்காவில் 1,000 டாலர்களுக்குப் பண்டத்தை விற்பனை செய்வதாக வைத்துக்கொள்வோம். இந்தப் பணத்தை தேசிய நாணயத்துக்குப் பரிவர்த்தனை செய்கின்ற பொழுது அது 200 பவுன்களைப் [1,000:5] பெறுகிறது. ஆனால் உண்மையில் இந்தப் பண்டம் உத்தேசமாக 250 பவுன் மதிப்பைக் [1,000:4] கொண்டிருக்கக்கூடும். இத்தகைய நிலைமைகளில் அந்தப் பண்டத்தை வெளிநாட்டில் விற்பனை செய்வது பிரிட்டிஷ் கம்பெனிக்கு லாபகரமான தல்ல.

ஒரு தேசிய நாணயத்தின் பரிவர்த்தனை விகிதத்தைச் செயற்கையாக உயர்த்தி வைக்கும் பொழுது நாட்டின் ஏற்றுமதிகள் சுருங்குகின்றன, இறக்குமதிகள் தூண்டப்படுகின்றன, வர்த்தக மற்றும் வழங்கீடுகளின் சமநிலையில் பற்றாக்குறை ஏற்பட வரி திறக்கப்படுகிறது என்பதை நாம் ஒரு பொதுவிதியாகவே கூறலாம். பரிவர்த்தனை விகிதத்தைக் குறைத்தால் அது சில நிலைமைகளல் நாட்டுப் பண்டங்களின் போட்டியிடக் கூடிய தகுதியை உயர்த்தும், வழங்கீடுகளின் சமநிலையை மறுபடியும் சரி செய்ய உதவும். இவ்வாறு குறைப்பதை நாணய மதிப்பைக் குறைத்தல் என்று கூறுகிறோம்.

1920–க்களில் பிரிட்டனுடைய நிலைக்குதக் திரும்புவோம். சர்ச்சில் பொருளாதாரம் தெரியாதவர். மிகவும் ஆபத்தான தவறைச் செளிணிதவர் என்று பொருளியலாளர்கள் சில தலைமுறைகளாகவே அவரைக் குறைகூறி வந்திருக்கிறார்கள். 1975ல் கேல்பிரெய்த் பின்வருமாறு எழுதினார்: ‘‘1925ல் தங்க ஆதார அளவுக்குத் திரும்பியது நவீன காலத்தில் பணம் சம்பந்தப்பட்ட நடவடிக்கைகளில் மிகவும் அதிகமான அளவுக்கு ஆபத்தை ஏற்படுத்திய செயலாக ஒருவேளை இருக்கலாம்.’’

‘‘மாபெரும் பொருளாதார மந்தம்’’, உலகப் பொருளாதார நெருக்கடி [1929–193333] இந்தத் தவறின் விளைவாக ஏற்பட்டதென்று நம்புவதற்கும் சிலர் முற்படுகிறார்கள். அவர்களுடைய வாதத்தைக் கீழே தருகிறோம். யுத்தத்துக்குப் பிறகு உலகப் பொருளாதாரத்தில் பிரிட்ட னுடைய நிலை பலவீனமடைந்த போதிலும் அது மூலுப்பொருள்களை இறக்குமதி செய்யும் தலைமையான நாடு, நிதித்துறைக் கேந்திரம், இதரவை என்ற முறையில் ஒருநாடு நிதித்துறைக் கேந்திரத்தை இன்னும் வகித்து வந்தது. யுத்தத்துக்கு முந்திய சமமதிப்பு விகிதத்தின் அடிப்படையில் தங்க ஆதார அளவை மறுபடியும் ஏற்படுத்தியதும் அதனால் ஏற்பட்ட மிக அதிகமான பணவாட்டமும் பிரிட்டனைப் பாதித்தது. 1920–க்களில் மேற்கு நாடுகளின் பொருளாதாரத்தின் பிரிட்டனை பலவீனமான கண்ணியாகச் செய்தது. 1926–ல் தொழில்துறை உற்பத்தி 1913–லிருந்ததைக் காட்டிலும் 30 சதவீதம் குறைவாக இரந்தது. உழைக்கக் கூடிய மக்கள் தொகையில் 12 சதவீதத்துக்கும் அதிக மானவர்கள் வேலையில்லாதிருந்தார்கள். தன்னுடைய தொழில்துறை உற்பத்திப் பொருள்களை ஏற்றுமதி செய்வதில் பிரிட்டன் வெற்றியடையாதபடியால் மூலப் பொருள்களின் இறக்கமதியைக் குறைத்தது. லண்டனின் ஏற்பட்ட பலவீனம் உலகப் பணச்சந்தை முழுவதிலுமே ஸ்திரமற்ற நிலைமையை ஏற்படுத்தியது. இவையனைத்தும்

ஒன்றுசேர்ந்து 1929-ம் வருட இலையுதிர் காலத்தில் ஏற்பட்ட நியூயார்க் பங்குச் சந்தையின் சீர்குலைவை உலகம் இதுவரை கண்டிராத பரிமாணங்களைக் கொண்ட நெருக்கடியாக மாற்றின. இந்த வாதத்தை இன்னும்கூட வளர்த்துக்கொண்டு போகலாம். ஜெர்மனியில் நாஜிகள் ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றியது கூட பொருளாதார நெருக்கடியோடு நெருக்கமாக இணைந்திருக்கிறது. ஆகவே பிரிட்டன் தங்க ஆதார அளவை மறுபடியும் ஏற்படுத்தியதோடு இரண்டாவது உலக யுத்தம் கூட காரணகாரிய ரீதியில் இணைந்திருக்கிறது என்ற அதிசயமான முடிவுக்கு வருகிறோம்!

ஆனால் இப்படிப்பட்டி கருதுகோள்களைச் சிந்தனைக் குரிய வையாக எப்படிக் கருத முடியும்? பிரிட்டன் கடைப்பிடித்த நிதித்துறைக் கொள்கை தவறான தென்றபோதிலும் அதைக்காட்டிலும் மிக ஆழமான காரணிகள்தான் உலகப் பொருளாதார நெருக்கடியைத் தோற்றுவித்தன. ஆனால் இந்தக் காரணி நெருக்கடியை ஆழப் படுத்துவதற்கு உதவியிருக்கலாம். பொருளாதார நிகழ்வுகளின் புறநிலையான சாராம்சத்தைக் கண்டறி வதற்கு எப்பொழுதுமே முயற்சித்த மார்க்ஸ் “முட்டாள்தனமான, தவறன வங்கிச் சட்டங்கள்... பண நெருக்கடியைத்... தீவிரப்படுத்தமுடியும்” என்று கூறியிருக்கிறார். பிரிட்டிஷ் பொருளாதாரத்தில் பணத் தேவை மிகவும் அவசியமாக இருந்த கட்டங்களிலே வங்கிநோட்டுகள் வெளியிடுவதைக் கறாராகக் குறைத்த சட்டங்களின் இயக்கத்தை மனதில் நினைத்துக் கொண்டு மார்க்ஸ் இதை எழுதியிருக்கிறார்.

1920-க்களில் தத்துவப் பொருளியலாளர்கள் மற்றும் நிதிச் செல்வர்கள் அனைவரிடமும் “தங்கப் பற்றாக்குறை” என்ற புலம்பல் எப்பொழுதுமே காணப்பட்டது. உண்மையில் 1913-ல் அரசு இருப்புக்களில் இருந்த தங்கத்தைக் காட்டிலும் அப்பொழுது சுமார் இரண்டு மடங்கு அதிகமாகத் தங்கம் இருந்தது. ஆனால் தேவை அதற்கும் அதிகமாக வளர்ந்துவிட்டது. சேம இருப்புக்களின் வினியோகத்தில் இருந்து ஏற்றத்தாழவு இதைக் காட்டிலும் மிக அதிகமாக இருந்தது. 1920க்களின் கடைசியில் முதலாளித்துவ உலகத்தின் மொத்த தங்க இருப்பில் சுமார் மூன்றில் இரண்டு பங்குகள் அமெரிக்கா, பிரான்ஸ் ஆகிய இரண்டு நாடுகளில் குவிக்கப்பட்டிருந்தன. ஆனால் முக்கியமான விஷயம் இதுதான். யுத்தத்துக்கு முந்திய முதலாளித்துவத்தோடு சேர்ந்து ஒப்புநிலை ஸ்திரத்தன்மை, சர்வதேச நம்பிக்கை மற்றும் படிப்படியான மாற்றம் முடிந்துபோன கதையாகிவிட்டன. உதாரணமாக, பிரிட்டனின் தங்க இருப்பு

யுத்தத்துக்கு முன்பு இருந்ததைக் காட்டிலும் சில மடங்கு அதிகமாகவே இருந்தது. ஆனால் முன்னைக் காட்டிலும் மிகவும் குறைந்த திறமையோடுதான் அது தன் செயல்களைச் செய்தது.

யுத்தத்துக்குப் பின்னர் கடைப்பிடிக்கப்பட்ட தங்க ஆதார அளவு யுத்தத்துக்கு முன்பிருந்ததன் நிழலாக மட்டுமே இருந்தது. அமெரிக்காவில் தங்க நாணயச் செலாவணி சொற்ப அளவுக்கு நீடித்துக் கொண்டிருந்தது. பிரிட்டனும் பிரான்சும் தங்கக் கட்டி ஆதார அளவு என்ற வடிவத்தில் அதை மறுபடியும் ஏற்படுத்தியிருந்தன. மத்திய வங்கிகள் ஆதார எடையைக் [சுமார் 12.5 கிலோகிராம்] கொண்ட தங்கக் கட்டிகளுக்கு மட்டுமே வங்கி நோட்டுகளைப் பரிவர்த்தனை செய்தன. இதன் பலானக நடைமுறையில் தங்கம் சம்பந்தமான நடவடிக்கைகளிலிருந்து "சிறு மீன்கள்" அகற்றப்பட்டுவிட்டன; பெரிய முதலாளிகள், குறிப்பாக தனியார் வங்கிகள் மட்டுமே பரிவர்த்தனை செய்யும் உரிமையை உண்மையில் உபயோகிக்க முடிந்தது. தங்க ஆதார அளவு மற்ற நாடுகளைக் காட்டிலும் பிரான்சில் அதிகமான காலத்துக்கு 1936 செப்டம்பர் வரை நீடித்தது. அங்கே சில சமயங்களில் சிறு பதுக்கல்காரர்கள் ஒன்று சேர்ந்து ஒரு தங்கக் கட்டியை வாங்கி அதைப் பொற்கொல்லர் கடையில் கொடுத்துப் பங்கு போட்டுக் கொள்வார்கள் என்று சொல்லப்படுகிறது. இது இந்த அமைப்பின் வாடிக்கையான செயல் முறை அல்ல, அதன் மரணத்துடிப்பு மட்டுமே என்றுதான் சொல்லவேண்டும்.

இந்த உலோகத்தின் உபயோகத்தைச் சிக்கனப்படுத்து வதில் தங்கப் பரிவரித்தனை ஆதார அளவு மற்றொரு வடிவமாகும். பல நாடுகளையும் சேர்ந்த மத்திய வங்கிகள் தங்களுடைய வங்கி நோட்டுகளைத் தங்கத்துக்குப் பதிலாக தங்கத்துக்குப் பரிவர்த்தனை செய்யப்படக்கூடியதாக அங்கீகரிக்கப்பட்ட ஒரு நாணயத்துக்குப் பரிவர்த்தனை செய்துகொண்டன. இந்தப் பரிவர்த்தனையைப் பலப்படுத்துவதற்காக மத்திய வங்கிகள் அந்நிய நாணய இருப்புக்களைக் கணிசமான அளவில் வைத்துக்கொண்டிருந்தன. யுத்தத்துக்கு முன்பு பவுன் ஸ்டர்லிங் மட்டுமே அநேகமாக ஒரே சேம இருப்பு நாணயமாக இருந்தது, ஆனால் இப்பொழுது அமெரிக்க டாலர் அதற்குப் பலமான போட்டியாக வந்துவிட்டது.

இவை தங்க ஆதார அளவில ஏற்பட்டிருந்த சில ரகங்களாகும். இவற்றின் விளைவாக உள் நாட்டுச் செலாவணியிலிருந்து தங்கம் அநேகமாக முழுவதுமே அகற்றப்பட்டுவிட்டது. உலகச் சந்தையில் வழங்கீடுகளின் சர்வாம்ச சாதனமாக, உலகப் பணமாக அரசின் கைகளில் குவிந்திருந்தது.

ஆனால் இவ்வளவு அதிகமான சிரமங்களோடும் தியாகங் களோடும் ஏற்படுத்தப்பட்டிருந்த இந்த அமைப்பு சில வருடங்களுக்கு அதிகமாக இருக்கவில்லை. முன்னெப்போதும் ஏற்பட்டிராத மிக ஆழமான பொருளா தார நெருக்கடியின் விளிம்பில் முதலாளித்துவ உலகம் நின்றுகொண்டிருந்தது.

முதலாளித்துவ நாடுகள் ஒவ்வொன்றும் தங்கத்தோடு ஒவ்வொரு வழியில் முறித்துக்கொண்டன. பிரிட்டனில் 1931 செப்டம்பரில் மற்ற நாடுகளின் முதலாளிகள் தங்க பவுன் மீது நம்பிக்கை வைக்க மறுத்த பிறகு சர்வதேச நிதி நெருக்கடியின் தாக்குதலின் அது வீழ்ச்சியடைந்தது. இது வரை எடுக்கப்பட்டிருக்கும் நடவடிக்கைகள் தற்காலிகமானவையே என்று அரசாங்கம் அறிவித்தது. ஆனால் பிரிட்டிஷ் எழுத்தாளரான என். பார்க்கின் சன் (பிரபலமான பார்க்கின்சன் (பிரபலமான பார்க்கின்சன் விதியை உருவாக்கியவர்) குறிப்பிட்ட படி தற்காலிகமானதைப்போல அதிக நிரந்தரமானது வேறொன்றுமில்லை. அமெரிக்காவில் 1933ம் வருடத் தொடக்கத்தில் தீவிரமான நெருக்கடியின்போது பதவியேற்ற ஜனாதிபதி ரூஸ்வெல்ட் “புதிய ஏற்பாடு” என்று சொல்லப்பட்டதன் பொருளாதார மந்த எதிர்ப்பு நடவடிக்கைகளை அமுல் நடத்தினார். டாலரைத் தங்கமாக மாற்றுவதை ஒழிப்பதும் அரசு தங்கத்தைத் திரட்டுவதும் அந்த முதல் நடவடிக்கை களில் ஒன்றாகும். தங்க ஆதார அளவைக் கடைசியாகக் கைவிட்ட நாடு பிரான்சாகும். சோஷலிஸ் லியோன் பிலூம் தலைமை தாங்கிய மக்கஷீமீ முன்னணியின் இடதுசாரி அராசங்கத்துக்கு எதிராக முதலாளி வர்க்கம் போராடிக் கொண்டிருந்தபொழுது அவர்கஷீமீ நாட்டின் பொருளாதாரத்திலிருந்து மூலதனத்தைப் பிரம்மாண்டமான அளவில் அகற்றி வெளிநாடுகளுக்கு மாற்றிக் கொண்டிருந்த பரபரப்பான அரசியல் நிலைமையில் தங்க ஆதார அளவு கைவிடப்பட்டது. ஜெர்மனியில் ராஜிகள் நாட்டின் மொத்தப் பொருளாதாரத்தையும் செய்ததைப்போல தங்கத்தையும் அந்நிய நாணயத்தையும் யுத்தத் தயாரிப்புகளுக்கு உட்படுத்தினார்கள். வெளிநாடுகளில் செய்யப்படும் எல்லா வழங்கீடுகளும் கறாரான வரையறைகளுக்கு உட்படுத்தப்பட்டன, மார்க்குகளில் இருந்த வெளிநாட்டுக் கணக்குகளிலிருந்து பணம் எடுப்பது தடை செய்யப்பட்டது. தங்க ஆதார அளவைப் பற்றிய பிரச்சினை இனிமேலும் விவாதத்துக்கு எடுத்துக்கொள்ளப்படவில்லை.

இவ்விதமான எல்லா மாற்றங்களிலும் ஏற்பட்ட மிக முக்கியமான பொருளாதார விளைவு என்னவென்றால் நாணயங்களுக்கிடையே

நிர்ணயிக்கப்பட்டிருந்த விகிதங் கள் [பரிவர்த்தனை விகிதங்கள்] இல்லாமற் போய் விட்டன. நாணயங்கள் [ 1973ம் வருடத்திலிருந்து நம் காலத்தில் இருப்பதைப் போல] ''மிதக்க'' அனுமதிக்கப்பட்டன. ஒரு நாடு தங்க ஆதார அளவைக் கைவிட்டதும் அதனுடைய நாணயத்தின் பரிவர்த்தனை விகிதம் வேகமாகக் கீழே இறங்கியது. ஒரு நாடு தன்னுடைய பரிவர்த்தனை விகிதத்தை இயன்ற அளவுக்குக் கீழே இறங்க அனுமதித்தது; ஏனென்றால் சந்தைகளுக்காக நடைபெற்ற போட்டியில் இது ஒரு சாதகமாக இருந்தது. இத்தகைய நிலைமைகளல் ஸ்திரமான தங்க சமமதிப்பு விகிதங்கள் ஒரு சுமையாகவே இருக்கும். இப்பொழுது தங்கம் தனியாருடைய பண வர்க்கதக்திலிருந்தும் உள்நாட்டுத் துறையிலிருந்தும் அகற்றப்பட்டது. அராசங்கம் பணவியல் தங்கம் முழுவதையும் திரட்டிவைத்தக் கொண்டது, சர்வதேசத் தீர்வுகளுக்கு இறுதி வழங்கீட்டுச் சாதனமாக உபயோகித்தது. இந்த உலோகத்தின் சர்வ தேசப் போக்குவரத்தின் இயந்திர அமைப்பும் மாற்றமடைந்தது. இப்பொழுது அது ஒரு மத்திய வங்கியின் [அல்லது விசேஷ அரசு இருப்பின்] பாதாள அறையிலிருந்து மற்றொரு வங்கியின் பாதாள அறைக்கு மட்டுமே போயிற்று. யுத்தத்துக்கு முந்திய வருடங்களிலும் யுத்தம் நடைபெற்ற ஆரம்ப வருடங்களின்போதும் உண்மையில் அதன் பாதை ஒரே மாதிரியாகவே இருந்தது- அட்லாண்டிக் சமுத்திரத்தைக் கடந்து அமெரிக்காவுக்குப் போய்க்கொண்டிருந்தது.

1940-க்களிலும் 1950-க்களிலும் அமெரிக்காவில் தங்கம் வைக்கப்பட்டிருக்கும் முக்கிய இடமாகிய பார்ட்-நாக்ஸ் மிகவும் பிரபலமடைந்தது. எனவே 007 ஜேம்ஸ் பாண்ட் என்ற ரகசிய உளவாளியைப் பற்றிப் பல நாவல்கள் எழுதிய ஆங்கில எழுத்தாளரான யான் ப்ளெமிங் பார்ட் நாக்ஸைக் கொள்ளையடிக்க முயற்சி செய்வதைப் பொருளாகக் கொண்டு கோல்ட்பிங்கர் என்ற மர்ம நாவலை எழுதினார். அதில் வருகின்ற கதாபாத்திரமான கோல்ட்பிங்கருக்கு நோய் ன்று சொல்லும் அளவுக்குத் தங்க மோகம் அதிகம். அவர் சில கொள்ளை கோஷ்டியினருடைய உதவியோடு ஒரு அவுன்ஸ் தங்கம் 35 டாலர்கள் என்ற அன்றைய அதிகாரபூர்வமான விலையின்படி 15 பில்லியன் டாலர் கள் மதிப்புடைய தங்கத்தை அமெரிக்காவிலிருந்து திருடிக்கொண்டுபோகத் திட்டம் போடுகிறார். ஜேம்ஸ் பாண்டின் அசாதாரணமான குணங்களும் உறுதியுமே அந்தப் பயங்கரமான திட்டம் நிறைவேற முடியாதபடி தடுக்கின்றன. தங்கத்தின் சக்தியைப் பற்றி கோககல்ட்பிங்கர் மிகவும் உணர்ச்சிகரமாகப் பேசுகின்ற கட்டங்களில் ஆசிரியர் ப்ளெமிங் அதைப் பற்றி எவ்வளவு அறிந்திருக்கிறார் என்பதை நாம் புரிந்து கொள்கிறோம்.

உலகத்தின் தங்க இருப்புக்கள் அமெரிக்காவில் குவித்து வைக்கப்பட்டிருந்தது யுத்தத்தின்போதும் அதற்குப் பிறகும் அமெரிக்கா பின்பற்றிய வெளிநாட்டுக் கொள்கை மற்றும் வெளிநாட்டுப் பொருளாதாரக் கொள்கையில் முக்கியமான பங்கைக் கொண்டிருந்தது.

# பிரெட்டன்வுட்ஸ் மாநாடு

1944 -ம் வருடக் கோடைகாலத்தின்போது ஐக்கிய நாடுகள் சபையின் எதிர்கால உறுப்பினர்களான 44 நாடுகளின் பிரதிநிதிகள் சர்வதேச நிதிப் பிரச்சினைகளைப் பற்றி முடிவு செய்ய பிரெட்டன்வுட்ஸ் (நியூஹாம்ப்ஷியர், அமெரிக்கா) என்ற சிறிய நகரத்தில் நடைபெற்ற மாநாட்டில் கலந்து கொண்டார்கள். ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் சமுத்திரங்களின் மீதும் யுத்தம் இன்னும் நடைபெற்றுக்கொண்டிருந்தது. ஆனால் வெற்றியடைவது உறுதியாகிவிட்டது. யுத்தத்துக்குப் பிறகு உலகத்தின் அரசியல் மற்றும் பொருளாதாரக் கட்டமைப்பைப் பற்றிய பிரச்சினைகள் ஏற்கெனவே தோன்றிவிட்டன.

இம்மாநாட்டில் இதுவரை கேள்விப்பட்டிராத ஒரு பிரச்சினை உலகப் பண மற்றும் நிதி ஸ்தாபனத்தை நிறுவுவதைப் பற்றியும் பண உறவுகளை சர்வதேச ரீதியில் ஒழுங்குபடுத்துவதைப் பற்றியும் -விவாதிக் கப்பட்டது. இது புதுமையான விஷயம் என்பதோடு சிக்கல் நிறைந்ததாகவும் இருந்தது. சர்வதேச நிதி ஸ்தாபனம் (மிவிதி) என்ற பெயரில் அத்தகைய ஸ்தாபனத்தை நிறுவுவதென்று மாநாடு முடிவு செய்து அந்த உடன்பாட்டின் ஷரத்துக்களையும் அங்கீகரித்தது. அதில் உறுப்பினராகச் சேர்ந்துள்ள நாடு களின் சட்டமன்றங்களின் அங்கீகாரத்துக்கு அவை அனுப்பப்பட்டன. சோவியத் யூனியன் இந்த ஆவணத்தை அங்கீகரிக்கவில்லை. சர்வதேச நிதி ஸ்தாபனத்தில் உறுப்பினராகச் சேரவில்லை என்பதை இங்கே குறிப்பிட வேண்டும். அமெரிக்காவின் ஆளும் வட்டாரங்கள் இந்த ஸ்தாபனத்தை நிர்வகித்து வருகின்றன என்பது யுத்தம் முடிந்த உடனேயே வெளிப்படையாகத் தெரிந்தது. சோவியத் யூனியனைப் பற்றி அவர்களுடைய நிலை மென்மேலும் பகைமையாக மாறியது.

இன்று இந்த ஸ்தாபனத்தில் ஸ்விட்சர்லாந்தைத் தவிர தொழில் துறையில் வளர்ச்சியடைந்த எல்லா முதலாளித்துவ நாடுகளும் சில சிறு அரசுகளைத் தவிர மற்ற எல்லா வளர்முக நாடுகளும் சில சோஷலிஸ்ட் நாடுகளும் (யுகோஸ்லாவியா, ரொமானியா, வியத்நாம், லாவோஸ் மற்றும் சீனா) உறுப்பினர்களாக இருக்கின்றன. 1982ன் தொடக்கத்தில் 150 நாடுகள் இதில் உறுப்பினர்களாகச் சேர்ந்திருந்தன.

பிரெட்டன்வுட்ஸ் அமைப்பை உருவாக்கியவர்களின் மனங்களில் துன்பமிகுந்த 1930க்கள், உலக பொருளா தார நெருக்கடியின் வருடங்கள் பசுமையாக இருந்தன. பணவியல் துறையில் நடைபெற்ற சம்பவங்கள் [தங்க ஆதார அளவின் வீழ்ச்சி, ஒவ்வொரு நாடும் போட்டி போட்டுக்கொண்டு நாணயங்களின் மதிப்பைக் குறைத்தது. சர்வதேசக் கடன் வசதி முறையின் தேய்வு, வர்த்தகத்திலும் வழங்கீடுகளிலும் பலவிதமான கட்டுபாடுகளைப் புகுத்தியது] இந்த நெருக்கடியைப் பெருமளவு ஊக்குவித்தன என்பது எல்லோராலும் ஒத்துக்கொள்ளப்பட்டது. யுத்தத்துக்குப் பிந்திய காலகட்டத்தில் உலக முதலாளித்துவம் இதேபோன்ற நெருக்கடிகளுக்கு ஆளாகும் என்ற அச்சம் பொருளியலாளர்கள் மற்றும் அரசியல்வாதிகள்மத்தியில் பரவலாக இருந்தது. இந்த ஸ்தாபனத்தைத் தோற்றுவித்தவர்கள் எதிர்நோக்கிய நடவடிக்கைகள் இரண்டு திசைகளைக் கொண்டிருந்தன. முதலாவதாக, பணவியல் துறையில் கண்டிப்பான "ஒழுங்கு செய்யப்பட்டது, இந்த ஸ்தாபனத்தின் உடன்பாடு இல்லாமல் நாணயத்தின் மதிப்பைக் குறைக்கக்கூடாது, வெளிநாடுகளில் செய்யப்படும் வழங்கீடுகளின் மீது கட்டுப்பாடுகளை ஒழிக்க வேண்டும், அவற்றை மறுபடியும் ஏற்படுத்தக்கூடாது மற்றும் இதரவை இந்த விதிகளாகும். இரண்டாவதாக, இந்த ஸ்தாபனம் பணவியல் சிக்கல்கள் உள்ள நாடுகளுக்குக் கடன் வசதி தரும் வகையில் புதிய சர்வதேச அமைப்பை ஏற்படுத்துவதற்குத் திட்டமிட்டது.

பிரெட்டன்வுட்ஸ் அமைப்பு என்பது பெருமளவுக்கு இரண்டு நபர்களின் வேலையே என்று மேற்கு நாடுகளில் பொதுவாகக் கருதப்படுகிறது. இங்கிலாந்தைச் சேர்ந்த ஜான் எம்.கெய்ன்சும் அமெரிக்காவைச் சேர்ந்த ஹாரி டி.ஒயிட்டும் அந்த இரு நபர்களாவர். எதர்கால ஸ்தாபனத்தைப் பற்றி இருவரும் தனித்தனியே திட்டங் களைத் தயாரித்தனர். இரு திட்டங்களுமே மாநாட்டுக்கு முன்பாக வைக்கப்பட்டன. அந்த மாநாட்டுக்கு முன்பே கெய்ன்ஸ் பொருளாதாரத்தை அரசு ஒழுங்குபடுத்துகின்ற தத்துவத்தைத் தோற்றுவித்தவராக, பொருளாதாரக் கொள்கை மற்றும் நிதித்துறையில் செல்வாக்குள்ள நிபுணராக பொருளியலில் மிகச்சிறந்த மேதையாகக் கருதப்பட்டு வந்தார். அம்மாநாட்டுக்குச் சற்று முன்பு அவருக்கு பிரவு பட்டமளிக்கப்பட்டு அரசியல் பொருளாதாரத்தைப் பிரதிநிதித்துவப்படுத்துகின்ற முதல் உயர்குடிப் பெருமகனாக கௌரவிக்கப்பட்டிருந்தார். ஹாரி ஒயிட் செய்முறைப் பொருளியலாளர், அமெரிக்க பணியாற்றியவர். 20-ம் நூற்றாண்டில் அமெரிக்க ஐக்கிய நாட்டின் வரலாற்றில் மிக முக்கியமான பங்கு வகித்த ஜனாதிபதியான

ரூஸ்வெல்ட்டுக்கு ஆலோசனை கூறிவந்த குழுவைச் சேர்ந்தவர். கெய்ன்ஸ் மிகவும் உயர்ந்த சிறப்புக்களைப் பெற்று மரியாதைக்குரியவராக 1946–ல் மரணமடைந்தார். ஒயிட்டின் விதி வேறுவிதமாக இருந்தது. அமெரிக்காவின் மக்கார்த்தியின் செல்வாக்கு ஓங்கியிருந்த பொழுது, ஜனநாயகவாதிகள் “வேட்டையாடப்பட்ட” காலகட்டத்தில் அரசாங்கத்தைக் கவிழ்க்கும் நடவடிக்கையில் ஈடுபட்டதாக அவர் மீது குற்றம் சாட்டப்பட்டது. அவப் பெயரெடுத்த அமெரிக்க விரோத நடவடிக்கைகளின் பதிலளிக்க வேண்டுமென்று 1948ல் அவருக்கு ஆணையிடப்பட்டது. இதற்குச் சில நாட்களுக்குப் பிறகு அவர் இருதய வலியால் மரணமடைந்தார்.

கெய்ன்ஸ், ஒயிட் இருவருக்குமே நோக்கம் ஒன்றுதான். பணவியல் மற்றும் நிதி அமைப்பை பலப்படுத்தி அதன் மூலம் உலக முதலாளித்துவத்தை உறுதிப்படுத்துவது அவர்களுடைய நோக்கமாகும். ஆனால் கெய்ன்ஸ் கிரேட் பிரிட்டனுக்குப் பழைய அந்தஸ்தை மறுபடியும் ஏற்படுத்த விரும்பினார். யுத்தத்துக்குப் பிந்திய பொருளாதாரக் கட்டமைப்பில் அமெரிக்காவின் தலைமையான பாத்திரத்தை அதிகப்படுத்த ஒயிட் விரும்பினார். ஆகவே அவர்களுடைய திட்டங்கள் பெருமளவுக்கு வேறுபட்டிருந்தன. நிதி ஸ்தாபனம் பரந்த மனப்பான்மையோடு அதிகமான நிபந்தனைகள் இல்லமல் கடன் கொடுத்து உதவ வேண்டும் என்றார் கெய்ன்ஸ். கடன் உதவியைக் கோரப்போகம் நாககளில் கிரேட் பிரிட்டன் முதலாவதாக நிற்கும் என்பது தெளிவாகப் புலப்பட்டது. அமெரிக்கா இதற்கு உடன்படவில்லை, ஏனென்றால் கடன் கொடுக்கின்ற முக்கியமான நாடாக அமெரிக்கா இருக்கப் போவது உறுதி. எனவே ஒயிட்டின் திட்டம் கடன் கொடுப்பதற்கு இன்னும் அதிகக் கண்டிப்பான நிபந்தனைகளை முன் வைத்தது. அங்கே சக்திகள் சமத்துவமின்றி இருந்தன. மாநாடு கெய்ன்சின் கருத்துக்களை மரியாதையோடு கேட்டது. ஆனால் அமெரிக்க அரசாங்கத்தின் சார்பில் சமர்ப்பிக்கப்பட்ட திட்டத்தை ஒரு அடிப்படை என்ற முறையில் மாநாடு அங்கீகரித்தது.

தங்க ஆதார அளவின் குறைகளை அகற்றிவிட்டு அதன் சாதகங்களை வைத்துக்கொள்வது புதிய பணவியல் முறையின் முக்கியமான நோக்கமாகும். அதன் சாதகங்கள் பின்வருமாறு: நாணயங்களுக்கிடையே ஸ்திரமான பரிவர்த்தனை விகிதங்கள், அவை ஒன்றுக்கொன்று மாற்றப்படுவது மற்றும் பண்டங்கள், மூலதனம் ஆகியவற்றின் சுதந்திரமான போக்குவரத்து, தங்க ஆதார அளவு என்னும் கட்டுப்பாட்டுக்கு அதிகமான

முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. ஒரு நாடு "தன்னுடைய வருமானத்துக்கு அப்பாற்பட்ட முறையில் வாழ்க்கை நடத்தினால்" அது தங்கத்தை இழக்கத் தொடங்கும். சிக்கன மற்றும் கட்டுப்படுத்தும் நடவடிக்கைகளை எடுக்குமாறு, பண வாட்டக் கொள்கையைக் கடைப்பிடிக்குமாறு அது நிர்பந்திக்கப்படும். இந்த அமைப்பிலுள்ள நெகிழ்ச்சியற்ற தன்மையும் தான்தோன்றித்தனமும் அதிலிருக்கும் குறை களாகும். அது நாடுகள் மீது பணவாட்டக் கொள்கையை மிகச் சீக்கிரமாகவும் மிகவும் அடிக்கடியும் திணித்தது. இந்தக் கொள்கையைக் கடைப் பிடித்தால் பொருளாதார வளர்ச்சி குறைந்துவிடும், வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்படும். பிரெட்டவுட்ஸ் அமைப்பின் ஸ்தாபகர்கள் யுத்த பிற்கால உலகத்தில் இந்த ஆபத்துக்களைப் பற்றி முன்பே பயந்து கொண்டிருந்த படியால் அவர்களுடைய பார்வையில் இதுவே தங்க ஆதார அளவின் முக்கியமான குறைபாடாகத் தெரிந்தது.

எனினும் புதிய அமைப்பில் தங்கத்துக்கு முக்கியமான பாத்திரம் ஒதுக்கப்பட்டது. நெடுங்கால மரபின் பலத்தி னாலும் அது நன்மையை ஏற்படுத்தும் என்ற நம்பிக்கை யினாலும் மற்றும் அமெரிக்காவில் ஏராளமான தங்க இருப்பு இருந்தது ஆகிய இரண்டோடும் இது இணைக்கப்பட்டிருந்தது. ஆனால் மிகவும் முந்திய காலமான 1942–ல் கெய்ன்ஸ் கூறியதைப் போல அவர்கள் இப்பொழுது தங்கத்திடமிருந்து அதன் சர்வாதிகார சக்தியை அகற்றிவிட்டு அரசியலமைப்புச் சட்டத்துக்கு உட்பட்ட அரசர் என்ற நிலையில் அதை விட்டுவைக்க விரும்பினார்கள். பிரெட்டன்வுட்ஸில் இது பிரிட்டிஷ் வழியின்படி இல்லாமல், அமெரிக்க வகையில் நிறைவேற்றப்பட்டது.

பணவியல் அலகுகளின் சர்வதேச அளவுகோல் என்ற பாத்திரம் தங்கத்துக்கு மறுபடியும் கொடுக்கப்பட்டது. ஒவ்வொரு நாடும் தன்னுடைய பண அலகின் (நாணயத்தின்) தங்க அடக்கத்தை நிர்ணயிப்பதென்றும் அதைக் காப்பதென்றும் முடிவு செய்யப்பட்டது. தங்கம் சர்வதேச சேம இருப்புக்களின் முக்கியமான வடிவமாகவும் வழங்கீடுகளின் சமநிலையிலுள்ள பற்றாக்குறையைத் தீர்க்கின்ற கடைசிக் சாதனமாகவும் அறிவிக்கப்பட்டது.

இவை அனைத்துமே தங்கத்தின் உள்நாட்டுப் பணவியல் செயல்களை ஒரு வகையிலும் பாதிக்கவில்லை. வங்கி நோட்டுகளைத் தங்கத்துக்குப் பரிவர்த்தனை செளிணிவது மறுபடியும ஏற்படப் போவதில்லை. உள்நாட்டில் தங்கம் பணத்தின் பாத்திரத்தை வகிக்காது என்று பொதுவாகக்

கருதப்பட்டது. எனினும் பெரும் பாலான நாடுகளில், குறிப்பாக அமெரிக்காவில், வங்கிப் பத்திரங்கள், கடன் பணத்தின் இதர வகைகளில் ஒரு குறிப்பிட்ட சதவீதத்துக்குத் தங்க ஆதரவு இருக்க வேண்டும் என்று விதிக்கும் சட்டங்கள் நீண்டகால மரபு காரணமாகத் தொடர்ந்து அமுல் செய்யப்பட்டன. இவை அமெரிக்காவில் 1960–க்கள் வரையிலும் ரத்துச் செய்யப்படவில்லை. சில நாடுகளில் இன்றும்கூட இவை அமுலில் இருக்கின்றன.

ஆகவே ஒரு வகையான சர்வதேசத் தங்க ஆதார அளவு அறிமுகப் படுத்தப்பட்டது; ஆனர் அது தங்க ஆதார அளவாக இருக்கவில்லை. தங்க டாலர் ஆதார அளவாக இருந்தது.

மற்ற எல்லா விதமான நாணயங்களுக்கும் தங்கத்துக்கும் இடையே ஒரு இடைத்தரகர் என்ற நிலையை டாலர் இப்பொழுது பெற்றிருந்தது. உண்மையில் நாணயங்கள் தங்கத்தோடு பிணைக்கப்படவில்லை. ஒரு வகையில் தங்கத்தின் முழு அதிகாரத்தைப் பெற்ற பிரதிநிதியாகக் கருதப்பட்ட டாலரோடு பிணைக்கப்பட்டிருந்தன. சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் உடன்பாட்டில் பின்வரும் ஷரத்து இடம் பெற்றிருந்தது: ‘‘உறுப்பினராகவுள்ள நாட்டின் நாணயத்தின் பரிவர்த்தனை பொதுத்தொகுதிக் கூறு என்ற வகையில் தங்கத்தின் மூலமாக அல்லது 1944 ஜூலை 1–தேதியன்று அமுலில் உள்ள எடை மற்றும் தரத்தைக் கொண்ட அமெரிக்க டாலரின் மூலமாகச் சொல்லப்படும்’’ [ஷரத்து மிக்ஷி, உட்பகுதி 1].

டாலரின் தங்க அடக்கம் அல்லது டாலர்களில் தங்கத்தின் அதிகாரபூர்வமான விலை [இரண்டுமே ஒன்றுதான்] உண்மையான பொருளாதார முக்கியத்துவத்தைக் கொண்டிருந்தது. ஏனென்றால் வழங்கீடுகளின் சம நிலைப் பற்றாக்குறையைத் தீர்ப்பதற்கு இந்த விலையில்தான் அது உபயோகப்படுத்தப்பட்டது. மத்திய வங்கிகள் இந்த விலைக்குத்தான் அதை வாங்கி விற்பனை செய்தன. ஒரு அவுன்சுக்கு 35 டாலர்கள் எனப்படுகின்ற இந்த விலை 1934 முதல் 1971–வரையிலும் மாறாமல் இருந்து வந்தது. பௌதிக நிலை யளவைகளைப் போல உலகப் பொருளாதாரத்தில் அது ஒரு வகை இயற்கை நிலையளவையாகத் தோன்றியது. ஒவ்வொரு நாட்டுக்கும் அதன் நாணயத்தின் டாலர் பரிவர்த்தனை விகிதம் அதிகமான முக்கியத்துவத்தைக் கொண்டிருந்தது. இந்த எண்ணை முடிவு செய்வதில் தகராறுகளும் ஏற்பட்டன. சில சமயங்களில் அவை கசப்பான போராட்டங்களாகவும் மாறின. ஏனென் றால் சரக்குகளை ஏற்றுமதி, இறக்குமதி செய்வது, வெளிநாடுகளோடு செளிணியப்படுகின்ற வேறு

பொருளாதார நடவடிக்கைகளின் லாபநஷ்டம் அதைப் பொறுத்ததாக இருந்தது. டாலர் பரிவர்த்தனை மதிப்பு விகிதகத்கதை முடிவு செய்த பிறகு அவர்கள் கணக்கிடும் பொறியைக் கொண்டு தங்கத்தில் நாணயத்தின் மதிப்பைக் கணக்கிடுவார்கள். இரண்டு எண்களும் ஒரே தன்மையைக் கொண்டிருப்பதாக சர்வதேச நிதி ஸ்தாபனம் பதிவு செய்தது.

பவுன் ஸ்டர்லிங்கின் பரிவர்த்தனை மதிப்பு 4.03 டாலர்கள் என்று ஆரம்பத்தில் முடிவு ய்யப்பட்டது. 1949 செப்டம்பரில் பிரிட்டன் பவுன் மதிப்பைக் குறைத்ததால் அதன் பரிவர்த்தனை மதிப்பு 2.80 டாலர்களாயிற்று. இது ஒரு வகையான பணவியல் பூகம்பத்தை, முக்கியமான பொருளாதார மற்றும் அரசியல் விளைவுகளைக் கொண்ட மாற்றத்தை ஏற்படுத்தியது. இதோடு ஒப்பிடும் பொழுது பவுனின் தங்க அடக்கம் இதற்குப் பொருத்தமான வகையில் குறைக்கப்பட்டதுகூட குறைவான முக்கியத்துவத்தை மட்டுமே கொண்டிருந்தது.

பார்ட்–நாக்ஸ் மற்றும் மான்ஹாட்டன் பாதாள அறைகளில் உலகத்தின் தங்க இருப்புக்களில் மிகப்பெரிய பங்கை பத்திரமாகச் சேர்ந்திருந்த காரணத்தால் அந்நிய அரசாங்கங்களுக்கும் மத்திய வங்கிகளுக்கும் டாலர்களுக்குத் தங்கத்தைச் சுலபமாகப் பரிவர்த்தனை செய்கின்ற சுகத்தை அமெரிக்கா அனுபவித்தது. அமெரிக்காவைச் சேர்ந்த அல்லது வெளிநாடுகளைச் சேர்ந்த தனி நபர்கள். கம்பெனிகள் அல்லது வங்கிகளுக்கு இந்த உரிமை தரப்படவில்லை. அந்தச் சமயத்தில் அந்நிய அரசுகளிடம் பரிவர்த்தனை செய்வதற்குப் போதிய டாலர்கள் கூடக் கிடையாது. ஆனால் இது டாலரை மற்ற நாணங்களிலிருந்து தனியே பிரித்துக் காட்டியது. அது தங்கமாக இல்லாதிருந்தாலும் நிச்சயமாகத் தங்க முலாம் பூசப்பட்டாக இருந்தது. டாலரின் இந்தக் குறைவான பரிவர்த்தனைத் தன்மை மொத்த அமைப்பையுமே தங்கத்தோடு பிணைத்த மெல்லிய நூலிழையாக இருந்தது. ஒரு நாட்டின் நாணத்தை டாலர்களில் மாற்ற முடியுமென்றால் அந்த நாணயம் கடைசியாகப் பார்க்கும் பொழுது இதனாலேயே ஒரு அர்த்தத்தில் தங்கத்துக்குப் பரிவர்த்தனை செளிணியப்படக் கூடியதாக இருந்தது. யுத்தத்துக்குப் பிந்திய ஆரம்ப வருடங்களின்போது டாலர்களுக்கு மாற்றம் செய்வதில்லை என்பது வழக்கம். ஆனால் அதற்குப் பிறகு மேற்கு ஐரோப்பிய நாடுகள் மற்றும் ஜப்பானின் பொருளாதாரம் மறுபடியும் உயிர் பெற்று பலமடைந்த பொழுது இப்படி மாற்றுவது ஏற்படுத்தப்பட்டது. எனினும் டாலர் கேள்வி கேட்கப்பட முடியாத வகையில் இந்த அமைப்பின் அச்சாக இருந்தது.

“டாலர் தங்கத்தைப் போன்றது” அந்த சமயத்தில் இவ்வாறு சொல்லாத அமெரிக்கர்களே கிடையாது. “டாலர் உற்சாகிகள் கூறினார்கள். அமெரிக்க வங்கிகளிலும் அமெரிக்க அரசாங்கப் பத்திரங்களிலும் டாலரில் பணத்தை வைத்திருப்பவர்களுக்க வட்டி கிடைக்கிறது, பணத்தைத் தங்கமாக வைத்திருந்தால் வருமானம் இல்லாமற்போவது மட்டுமல்ல, அதற்குச் செலவும் ஏற்படுகிறது என்று அவர்கள் கூறினார்கள். இத்தகைய கருத்துக்களை இன்று யாராவது சொன்னால் அவை சிரிப்பையே ஏற்படுத்தும். ஆனால் நாற்பதுக்களிலும் ஐம்பதுக்களிலும் அவற்றுக்கு ஒரு அர்த்தம் இருந்தது.

மத்திய வங்கிகளுக்கிடையே உள்ள நடவடிக்கைகளில் தங்கம் பிரதானமாக டாலர்களுக்கு வாங்கப்பட்டு விற்பனை செய்யப்பட்டது. ஆகவே அது அமெரிக்காவை விட்டுப்போவது மிகவும் அபூர்வம். ஆனால் கடைசி வழங்கீட்டுச் சாதனம், வழங்கீடுகளின் சமநிலையில் உள்ள பற்றாக்குறையைத் தீர்க்கும் கடைசி ஆதாரம் என்ற பாத்திரத்தை அது தொடர்ந்து நிறை வேற்றியது. மத்திய வங்கிகளும் தம்முடைய டாலர்களை அமெரிக்கக் கருவூலத்தில் பரிவர்த்தனை செய்து தங்கத்தைப் பெற்றுக்கொள்ள முடிந்தது. ஆகவே அரசுகளின் தங்கம் வைக்குமிடங்களிலிருந்து அது ஓரளவுக்குத் தீவிரமாகவே வந்து கொண்டிருந்தது.

யுத்தத்துக்கு முன்பு நடைபெற்றதைப் போலவே 1945–1949ல் தங்கம் அமெரிக்காவுக்குள் வந்து கொண்டிருந்தது. ஏழ்மையடைந்த, யுத்தத்தில் படு நாசத்துக்காளாகிய நாடுகள் அமெரிக்கச் சரக்குகளை வாங்குவதற்கு அது ஒன்றுதான் வழியாக இருந்தது. 1949 கடைசியில் அமெரிக்காவின் தங்க இருப்பு இதுவரையிலும் இல்லாத புதிய சிகரத்தைத் தொட்டது. அமெரிக்காவிடமிருந்து 21,800 டன்கள் தங்கம் முதலாளித்துவ உலகத்தின் இருப்புக்களில் 70 சதவீதமாகும். இதற்குப் பிறகு அமெரிக்காவிற்குள் தங்கம் வருவது சிறிது காலத்துக்கு நின்றுவிட்டது, ஐம்பதுக்களில் தங்கம் அமெரிக்காவை விட்டுப் போகத் தொடங்கியது. 1960 கடைசியில் அமெரிக்காவிடம் 15,800 டன்கள் (44 சதவீதம்) இருந்தன. 1972ல் அமெரிக்கா தங்க ஜன்னலை மூடி டாலர்களுக்குத் தங்கத்தைப் பரிவர்த்தனை செய்வதை நிறுத்திய பொழுது அதனிடம் 8,600 டன்கள் (21 சதவீதம்) மட்டுமே இருந்தன. மற்ற நாடுகளின் இருப்புக்களைப் போலவே அமெரிக்காவின் தங்க இருப்பும் இந்த அளவில்

அநேகமாக உறைந்துவிட்டது. அரசுகளுக்கிடையே தங்கப் போக்குவரத்து நின்றுவிட்டது.

அமெரிக்காவின் தங்க இருப்பில் ஏற்பட்டிருக்கும் மாற்றம் அமெரிக்காவுக்கும் மற்ற நாடுகளுக்குமிடையே தங்கப் போக்குவரத்தின் கடைசி விளைவை (சமநிலையை) பிரதிபலிக்கிறது. உண்மை என்னவென்றால் அறுபது களின் கடைசி வரை அமெரிக்கா 13,200 டன்களை விற்பனை செய்தது, 5,100 டன்களை வாங்கியது. இவற்றுக்கிடையே உள்ள வேறுபாடு அமெரிக்காவிலிருந்து போன தங்கத்தின் அளவாகும்.

சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் உடன்பாட்டின் ஷரத்துக் களின்படி உறுப்பினராகவுள்ள நாடுகள் தங்களுக்கு ஒதுக்கப்பட்ட தொகையில் 25 சதவீதத்தைக் தங்கமாகக் கொடுக்க வேண்டும். ஒரு நாட்டின் தங்க இருப்பு அதிகமாக இல்லையென்றால் இந்தப் பங்குத் தொகை வேறு விதமாக, அதாவது அதன் தங்க மற்றும் டாலர் இருப்புக்களில் 10 சதவீதம் என்று நிர்ணயிக்கப்பட்டது.

யுத்தத்துக்குப் பிறகு ஏற்பட்ட பணவியல் அமைப்பு உலகத்தின் மாறிய நிலைமைகளுக்கு அரசு–ஏகபோக முதலாளித்துவம் தன்னைத் தகவமைத்துக் கொண்டதைப் பிரதிபலிக்கிறது. இது உலகப் பொருளாதார வளர்ச்சியின் தேவைகளுக்கும் நிலைமை களுக்கம் ஓரளவுக்குப் பொருந்தியிருந்தது. உலக வர்த்தகமும் நாடுகளின் பொருளாதார ஒன்றிணைப்பின் மற்ற வடிவங்களும் கணிசமான அளவுக்கு விரிவடை வதற்குரிய நிலைமைகளை இது ஏற்படுத்தியது. 1949 முதல் 1970 முடிய முதலாளித்துவ நாடுகளின் அந்நிய வர்த்தகத்தின் (சரக்கில்) அளவு நான்கு மடங்காகப் பெருகியது. அதோடு உலக வர்த்தகத்தின் வளர்ச்சி உற்பத்தி விஸ்தரிப்பைக் காட்டிலும் அதிகமாக இருந்தது. சர்வதேச வேலைப் பிரிவினை அதிகரித்து உற்பத்தியில் சிறப்புத் தேர்ச்சியும் கூட்டுறவும் வளர்ச்சி யடைந்தன என்பது இதன் பொருளாகும். அந்நியப் பொருளாதார உறவுகளின் வளர்ச்சி பொருளாதாரத் திறமையை உயர்த்துவதில் உதவி செய்தது.

1960–களின் பிற்பாதியில் இந்த தற்காலிகமான, ஒப்பு நிலை ஸ்திரத்தன்மை முடிவடைந்தது.

# சேம இருப்புக்களும் கடன்களும்

நி தியுலக்கதில் ஒரு புதிரான நிலைமையைப் பார்க்கிறோம். யாரிடமாவது நீங்கள் 5 டாலர் கடன் வாங்கியிருந்து அதைக் கொடுக்க முடியவில்லை என்றால் உங்களுக்குக் கடன் கொடுத்தவரிடம் நீங்கள் சிக்கிக்கொண்டிருக்கிறீர்கள் என்று அர்த்தம். ஆனால் நிங்கள் பில்லியன் டாலர்கள் கடன்பட்டிருந்தால் உங்களுக்குக் கடன் கொடுத்தவர்கள் உங்களிடம் சிக்கியிருக்கிறார். 1967 கடைசியில் அமெரிக்கா உலகத்தின் மற்ற பகுதிக்கு 36 பில்லியன் டாலர்கள் கடன்பட்டிருந்தது. இதில் 18 பில்லியன் டாலர்கள் அரசாங்கங்களிடமும் மத்திய வங்கிகளிடமும் கடன்பட்டிருந்த தொகையாகும். 1980க்களின் தொடக்கத்தில் இந்தத் தொகை 200 பில்லியன் டாலர்களுக்கம் அதிகமாக அதிகரித்தது. இது அமெரிக்க ஏகாதிபத்திய விஸ்தரிப்பு முறையாகவும் அதே சமயம் பணவியல் அமைப்பில் ஸ்திரமற்ற நிலைமையின் பிறப்பிடமாகவும் இருந்தது.

அமெரிக்கா மற்ற நாடுளிடம் வாங்கியிருக்கும் கடன்கள் பித்யேகமான தன்மையைக் கொண்டிருக்கின்றன. அவை ஒரே சமயத்தில் பணவியல் இருப்புக்களாக, மற்ற நாடு களால் திரட்டப்பட்ட சர்வதேச வழங்கீட்டுச் சாதன இருப்புக்களாக இருக்கின்றன. ஒரு நாணயத்துக்கு இரண்டு பக்கங்கள் இருப்பதைப் போல எந்த வங்கிக் கணக்கும் பணம் போட்டவர் [கடன் கொடுத்தவர்] அல்லது வங்கி [கடன் வாங்கியவர்] ஆகிய இரண்டில் எந்தக் கோணத்திலிருந்து நீங்கள் பார்க்கிறீர்கள் என்பதைப் பொறுத்து வெவ்வேறு விதமாகத் தோன்றுகிறது. இந்த இரண்டு அம்சங்களுமே ஒரு தனி மொத்தமாக இருந்தாலும் ஒரு குறிப்பிட்ட தருணத்தில் குறிப்பிட்ட ஏதாவதொரு கோணத்தில் பார்க்கும்பொழுது அவற்றில் ஏதாவதொன்று தலைமையான முக்கியத் துவத்தைக் கொண்டிருக்கும். யுத்தத்துக்குப் பிந்திய முதல் இரண்டு பத்தாண்டுகளில் சேம இருப்பு அம்சம் முன்னணியிலிருந்தது, இவை அமெரிக்காவுக்கும் கடன்களே என்பது எப்படியோ மறக்கப்பட்டிருந்தது. இவை பல பத்து பில்லியன் டாலர்கள் அளவை எட்டிய பொழுது கடன் அம்சம் முக்கியத்துவத்தை அடைந்தது. ஏனென்றால் கடன்காரனின் கடன்தீர்வுத் திறத்தைப் பற்றி சந்தேகம் ஏற்படத் தொடங்கியது. சேம இருப்புக்கள்

கடன்களாக மாற்றமடைந்ததை" 1970–க்களில் ஏற்பட்ட பணவியல் நெருக்கடியின் மிக முக்கியமான கூறு எனலாம்.

அமெரிக்காவின் தங்க சேம இருப்பு எந்த வங்கியும் எந்த நேரத்திலும் தன்னுடைய வாடிக்கையாளர்களுக்குப் பணம் கொடுக்கத் தயாராக இருப்பதற்காக வைத்திருக்க வேண்டிய சேம இருப்பைப் போன்றதே. சகஜமான நிலைமைகளில் பணம் போட்டிருப்பவர்களில் சிலர் தங்களுடைய பணத்தை எடுக்கிறார்கள். வேறு சிலர் தங்கள் பணத்தை வங்கியில் போடுகிறார்கள். ஆகவேகொண்டு வங்கியால் சமாளித்துவிட முடியும். ஆனால் வங்கியின் மீதுள்ள நம்பிக்கை பாதிக்கப்பட்டு பணத்தைக் கொடுத்தவர்கள் தங்கஷீமீ பணத்தைப் பற்றிக் கவலைப்படுவார்க்ளானால் அந்த பயத்தினால் தூண்டப்பட்டு மிகப்பெரிய அளவுக்குப் பணத்தைத் திரும்பப்பெறுவது தொடங்கிவிடும். இதை வங்கியிலிருக்கும் பணத்தை ஓடிப்போய் வாங்கிக் கொள்ளுதல் (run of the bank) என்று சொல்கிறோம்.

யுத்தத்துக்குப் பிந்திய முதல் வருடங்களில் சம்பவங்கள் இப்படி வளர்ச்சியடையுமென்று அமெரிக்கா அஞ்சுவதற்கு அவசியமில்லாமலிருந்தது. 1950ல் அதன் தங்க இருப்பு அந்நிய நாடுகளின் டாலர் ஆஸ்திகளைப் போல சுமார் ஏழு மடங்கு அதிகமாக இருந்தது. ஆனால் 1967ல் அது 78 சதவீதமாகக் குறைந்துவிட்டது. அந்த ஆஸ்திகளை வைத்திருப்பவர்கள் எந்த நேரத்திலும் தங்கம் கொடுக்க வேண்டுமென்று கோர முடியும். 1971ல் இது 22 சதவீதமாகக் குறைந்தது. அது நெருக்கடியான கட்டத்தை அடைந்துவிட்டது. உடனே அமெரிக்க அரசாங்கம் காசாளருடைய சன்னலை மூடிவிட்டது. ஒரு தனியார் வங்கிக்கு இந்த நிலை ஏற்பட்டிருந்தால் அது திவாலாகியிருக்கும். அதன் ஆஸ்திகள் ஏலம் விடப்பட்டிருக்கும். தங்க டாலர் ஆதார அளவின் வீழ்ச்சிக்கு முன்னால் பரபரப்பான சில சம்பவங்கள் நடைபெற்றன. அவை முக்கியமான அரசியல் அம்சங்களைக் கொண்டிருந்தன. மேற்கு நாடுகளின் முன்னணியிலிருந்து ராஜியவாதிகள் அவற்றில் பங்கெடுத்துக் கொண்டிருந்தனர். இங்கே பிரான்சையும் அதன் கொள்கையையும் பற்றிச் சில வார்த்தைகள் சொல்ல வேண்டும்.

1950–க்களின் கடைசியில் பிரான்சில் அதுவரை இருந்த அதிகமான பணவீக்கக் காகலகட்டத்துக்குப் பதிலாக பணம் மற்றும் விலைகளின் ஒப்புநிலை ஸ்திரத்தன்மை ஏற்பட்டது. பத்து வருடங்களில் தொழில்துறை உற்பத்தி அநேகமாக இரண்டு மடங்கு அதிகரித்தது.

பிரெஞ்சுக் கம்பெனிகள் தங்களுடைய தொழில் நிறுவனங்களை நவீனப்படுத்தி சீரமைத்துக் கொண்டு அந்நியச் சந்தைகளைப் பிடிக்கும் தாக்குதலை ஆரம்பித்தன. அங்கே தங்களோடு போட்டியிட்டவர்களை அகற்றின. இதற்கு முன்பு பிரான்சின் வழங்கீடுகளின் சமநிலையில் எப்பொழுதுமே நிரந்தரமான பற்றாக்குறை இருக்கும். ஆனால் இப்பொழுது அது கணிசமான அளவுக்கு அபிவிருத்தியடைந்தது. பிரான்ஸ் அந்நியச் செலாவணி இருப்புக்களைத் திரட்ட ஆரம்பித்தது. 1957 கடைசியில் தங்கம் மற்றும் அந்நியச் செலாவணி (இது உண்மையில் டாலர் மட்டுமே) இருப்புக்களின் மொத்த அளவு நெருக்கடியான நிலைமை என்று சொல்லக்கூடிய கீழ் மட்டத்தை (645 மில்லியன் டாலர்கள்) அடைந்தது. பத்து வருடங்களுக்குப் பிறகு அது சுமார் 7 பில்லியன் டாலர்ளாக இருந்தது, அதாவது 11 மடங்கு அதிகரித்திருந்தது.

பிரான்ஸ் முன்பிருந்ததைக் காட்டிலும் சுதந்திரமான வெளிநாட்டுக் கொள்கையைக் கடைப்பிடிக்கத் தொடங்கி யது. நேடோ ஸ்தாபனத்தின் ராணுவக் கூட்டை விட்டுவிலகியது. அல்ஜீரியாவில் காலனி யாதிக்கப் போரை நிறுத்தியது. சோஷலிஸ்ட் நாடுகளோடு தன்னுடைய உறவுகளை அபிவிருத்தி செய்து கொண்டது. அமெரிக்கக் கொள்கையைக் கீழ்ப்படிதலோடு பின்பற்று வதற்குப் பிரான்ஸ் மறுத்தது.

இந்த மாற்றங்கள் 1958–1969 காலகட்டத்தில் பிரான்சுக்குத் தலைமை தாங்கிய சிறப்பு மிக்க தலைவரான சார்லஸ் டெ கோலோடு நெருக்கமாக இணைந்திருக்கின்றன. டெகோல் தற்சிந்தனையும் கவர்ச்சியும் சிக்கலும் நிறைந்த தலைவர். அவர் ‘‘பிரான்சின் பெருங் கீர்த்தி’’ என்ற கருத்தால் உருவாக்கப் பட்டு அதற்கே தன்னை அர்ப்பணித்துக் கொண்டவர். இந்தக் கீர்த்தியை ‘‘நேர்மையான’’ தங்கப்பணத்தோடு சேர்த்துப் பார்க்க முற்பட்டார். ஏனென்றால் ஜெனரல் டெகோல் மிகவும் போற்றிய வீரபுருஷரான நெப்போலியனால் கொண்டுவரப்பட்ட தங்க ராங்க் நாணயம் ஒரு நூற்றாண்டு காலத்துக்கு அதிகமாக பிரான்சுக்கு உண்மையாகச் சேவை செய்திருக்கிறது. டெ கோல் மலிவான அரசியல் சூழ்ச்சிகளை வெறுத்தார். அவருடைய மனதில் பற்றாக்குறையும் பணவீக்கமும் இவற்றோடு உறுதியாக இணைந்திருந்தன.

டெ கோலின் கருத்துக்கள் உள்ளுணர்விலிருந்து பிறந்தவை. பகுத்தறிவைக் காட்டிலும் உணர்ச்சியையே அடிப்படையாகக் கொண்டவை. இவை செல்வாக்கு மிக்க பிரெஞ்சுப் பொருளிய லாளர்களின், குறிப்பாக சார்லஸ் ரிஸ்ட் மற்றும் ஜாக் ருவெப் ஆகியோரின் தத்துவங்களில்

நிருபணத்தையும் ஆதரவையும் கண்டன. இந்த மரபினர் கெய்ன்சிய மரபினரிடமிருந்து பல அம்சங்களில் வேறுபடுகின்றனர். அவர்கள் அரசின் ஒழுங்குமுறைக் கட்டுப்பாட்டைப் பலப்படுத்துவதில் முதலாளித்துவத்தின் மீட்சியைக் காணவில்லை. இதற்கு மாறாக "சுதந்திரமான தனியார் தொழிலூக்கத்தை" பலப்படுத்துவதில், தானாகத் தோன்றும் சந்தை இயந்திர அமைப்பைப் பாதுகாப்பதில் முதலாளித்துவத்தின் மீட்சியைக் கண்டனர். தங்க ஆதார அளவு இந்தக் கருத்துக்களுக்கு மிகவும் பொருத்தமாக இருப்பது தெரிந்ததே.

பிரெஞ்சு "உலோகவாதிகளின்" [உலோகப் பணத்தை ஆதரிப்பவர்கள்] கருத்துக்கள் பிரெஞ்சுக்காரர்களின் தங்க மோகத்தைப் பிரதிபலிக்கின்றன. இவர்களுடைய தங்க மோகத்தை நாம் நன்றாக அறிவோம். பிரான்சின் வளர்ச்சியிலுள்ள வரலாற்று ரீதியான தனித்தன்மை களோடும் பிரெஞ்சு சமூகத்தில் கட்டமைப் போடும் இந்த மோகம் இணைந்திருக்கிறது. 19ம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் பிரான்ஸ் மூலதனத்தைக் கடனாகக் கொடுத்து அந்த வருமானங்களைக் கொண்டு வாழ்க்கை நடத்திக் கொண்டிருக்கும் பண முதலாளிகளின் மூலச் சிறப்புடைய நாடாக இருந்தது. கடன் கொடுத்தவர் கடன் பணமும் வட்டியும் முறைப்படி கொடுக்கப் படுமென்று எதிர்பார்க்கிறார். ஆகவே பணத்தின் ஸ்திரத் தன்மையில் அவருக்கு ஆழமான அக்கறை ஏற்பட்டுவிடுகிறது. மிகவும் அதிகமான அளவுக்கு அக்கை ஏற்பட்டுவிடுகிறது. மிகவும் அதிகமான அளவுக்கு ஸ்திரமான பணம் தங்கமே. 1914ல் பிரான்சில் ஆரம்பமாகிய பண வீக்கத்தினால் அந்தப் பண முதலாளிகள் அழிக்கப்பட்டனர். பிரான்ஸ் தங்க ஆதார அளவைப் பின்பற்றிய 1927–1936ல் மட்டும்தான் அவர்கள் பணவீக்கத்திலிருந்து குறைந்து காலத்துக்கு விடுதலை பெற்றிருந்தனர். இது தங்கத்தைப் பதுக்க வேண்டும் என்ற ஆசையை, நம்பகமான, ஸ்திரான பணம் வேண்டும் என்ற ஏக்கத்தை அதிகப்படுத்தியது.

1960க்களின் ஸ்தூலமான நிலைமைகளில் பிரெஞ்சு உலோகவாதம் அமெரிக்க எதிர்ப்பு உணர்ச்சியைத் தெளிவான முறையில் வெளியிட்டது. இதைப் பற்றி நமக்குச் சந்தேகம் ஏற்பட முடியாத விதத்தில் பிரெஞ்சுப் பொருளியலாளர்களே எழுதியுள்ளனர். டாலரை சேமஇருப்பு நாணயமாகச் செய்ததன் மூலம் மற்ற நாடுகளின் மீது அமெரிக்காவுக்குச் சாதகம் ஏற்பட்டிருந்தது. வழங்கீடுகளின் சமநிலையில் ஏற்படும் பற்றாக்குறையை அமெரிக்கா பல வருடங் களுக்கு அப்படியே விட்டுவைத்திருக்க முடியும்; காகித டாலர்களை ஏற்றுக்கொள்ளுமாறும் வைத்திருக்குமாறும் மற்ற

நாடுகளை நிர்ப்பந்தித்து அதைத் தீர்த்துக்கொள்ள முடியும். சரக்குகளை விற்பனை செய்து டாலர்களைத் திரட்டுவதன் மூலம் மற்ற நாடுகள் உள்நாட்டில் பணவீக்கத்தை அதிகப்படுத்திக்கொண்டன. அமெரிக்கர்கள் இந்த வசதியைக் கைவிடுமாறு வாங்கும் பொருள்களுக்குத் தங்கத்தைக் கொடுக்கும்படி செய்யவேண்டும். அப்பொழுதுதான் அவர்கள் விரும்புகிறார்களோ, விரும்பவில்லையோ தங்களுடைய பொருளாதாரத்தை ஒழுங்குபடுத்திக்கொள்ள வேண்டியிருக்கும், விலைகள் அதிகரிப்பதைத் தடுத்து தங்களுடைய வழங்கீடுகளின் சமநிலைப் பற்றாக்குறைக்கு முடிவு கட்ட வேண்டிய நிலை ஏற்படும்.

ருவெபும் அவருடைய கருத்தை ஆதரித்தவர்களும் தங்கத்துக்குப் பணத்தை உள்நாட்டில் பரிவர்த்தனை செய்வதை மறுபடியும் ஏற்படுத்த உத்தேசிக்க வில்லை. ஆனால் சர்வதேசப் பணவியல் அமைப்பில் அதன் பாத்திரத்தைப் பலப்படுத்துவது அந்த அமைப்பை ஆரோக்கியமுடைதாக்கும் என்று நம்பினார்கள். சர்வதேசச் சேம இருப்புக்களின் முக்கியமான வடிவமாகத் தங்கம் இருக்க வேண்டும், அது நாடுகளுக்கிடையே தீவிரமாகச் செலாவணியாக வேண்டும் என்று அவர்கள் விரும்பினார்கள்.

இந்தக் கருத்துக்கள் பின்வரும் செய்முறை முடிவுக்கு வெளிப்படையாகவே வழிவகுத்தன: பிரான்சிடமுள்ள டாலர்களைத் தங்கத்துக்குப் பரிவர்த்தனை செய்து கொள்ள வேண்டுமென்று அமெரிக்க நிதித் துறையிடம் கேட்க வேண்டும். ருவெபின் சிபாரிசின் பேரில் பிரான்சிடம் “டாலர் உபரி” ஏற்பட்ட உடனே பிரெஞ்சு அரசாங்கம் உண்மையில் இதையே செய்தது. 1965 பிப்ரவரி 4-ந் தேதியன்று இந்த விவகாரம் உயர்மட்ட அரசியல் துறைக்கு மாற்றப்பட்டது. அன்றைய தினம் ஜனாதிபதி டெ கோல் வெளியிட்ட அறிக்கை டாலருக்கு ஒரு அடியாக, நன்கு திட்டமிடப்பட்ட அதிகமான வலியை ஏற்படுத்துகின்ற அடியாக இருந்தது. ஏற்கெனவே ரொக்கப் பணத்துக்குச் சிரமப்பட்டுக்கொண்டிருக்கும் வங்கி முதலாளி ஒருவரைக் கற்பனைசெய்து கொள்ளுங்கள். அவருடைய வங்கியில் மிகஅதிக மான பணத்தைப் போட்டிருப்பவர்களில் ஒருவர் தன்னுடைய பணத்திலிருந்து கணிசமான தொகையைத் திரும்பப் பெற்றுக்கொள்கிறார். மேலும் தன்னுடைய கணக்கிலிருக்கும் ரொக்கப் பணத்தை அல்லது அதில் சேர்ந்து கொண்டிருக்கும் பணத்தைத் திரும்பப் பெறுவதைத் தொடர்வேன் என்றும் அறிவிக்கிறார். அவர் அதோடு நின்றுவிடவில்லை.

தன்னுடைய பக்கத்து வீட்டுக்காரர்களிடம், அந்த வங்கியில் பணம் போட்டிருப்பவர்களிடம், உடனே போய்ப் பணத்தை வாங்கிக் கொள்ளுங்கள்,

காலதாமதம் ஆபத்து என்று அறிவுரை கூற உத்தேசிக்கிறார், அதிகமாகப் பணம் போட்டிருப் பவர்களில் இன்னும் சிலர் இவருடைய அறிவுரையைப் பின்பற்றி னால் பணம் கொடுப்பதை நிறுத்துவதைத் தவிர வேறு வழியில்லை என்பது அந்த வங்கி முதலாளிக்குத் தெரியும். 1965–ன் தொடக்கத்தில் இதே மாதிரியான சம்பவம் உலகப் பொருளாதாரத்தில் நடைபெற்றது.

அதிகமாக நடுங்கிக்கொண்டிருக்கும் வங்கி முதலாளியின் பாத்திரத்தைத அமெரிக்காவும் வங்கியிலிருந்து பணத்தைத் திரும்பப் பெறுகின்ற ஜாக்கிரதையான பணம் போட்டவரின் பாத்திரத்தைப் பிரெஞ்சு அரசாங்கமும் எஞ்சியுள்ள பாத்திரங்களை டாலர் வைப்பு நிதிகளின் வடிவத்தில் சேம இருப்புக்களை வைத்திருக்கும் மற்ற முலாளித்துவ நாடுகளும் வகிகத்தன. மேற்கு நாடுகளின் பணவியல் அமைப்பு முழுவதையுமே டெ கோல் தீவிரமாக குறை கூறினார். அதில் ருவெப் பாணியில் பொருளாதார ஆராய்ச்சியும் ஜனாதிபதியான ஜெனரலின் பேச்சுக் கலையும் இணைந்திருந்தன. “உலகத்துக்கு ஏற்பட்ட மாபெரும் இடையூறுகளுக்கு முன்பு சர்வதேசப் பரிவர்த்தனை இருந்ததைப் போல, குறிப்பிட்ட எந்த ஒரு நாட்டின் முத்திரையையும் பெற்றிராத, மறுக்கப்பட முடியாத பணவியல் அடிப்படையில் அதை நிறுவுவது அவசியம் என்று நாம் கருதுகிறோம். எந்த அடிப்படை? இதைப் பொறுத்தரைவயிலும் உண்மையைச் சொல்ல வேண்டு மென்றால் தங்கத்தைத் தவிர வேறு எந்த ஆதார அளவையும் பற்றி நினைப்பது கடினம். ஆம். தங்கம்தான். அது தன் இயல்பை மாற்றிக்கொள்ளவதில்லை. அதைப் பளாங்களாக, கட்டிகளாக, நாணயங்களாக எப்படி வேண்டுமானாலும் வைத்துக்கொள்ள முடியும். அது எந்த தேசத்துக்கும் சொந்தமல்ல. அது மாற்றப்பட முடியாத, எல்லாவற்றுக்கும் மேம்பட்ட நிதித்துறை மதிப்பு என்று உலக முழுவதிலும் எப்பொழுதுமே ஒத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது...

இன்றும்கூட ஒரு நாணயத்துக்கு நேரடியாகவோ மறைமுகமாகவோ, உண்மையாகவோ கற்பனையாகவோ தங்கத்தோடு அதற்குள்ள உறவுகளின் மூலமாக ஏற்படும் மதிப்பைத் தவிர வேறு எதுவுமில்லை என்பதே உண்மை... ஆனால் சர்வதேசப் பொருளாதார உறவுகளில் அமுலாக்கப்பட்டு கௌரவிக்கப்பட வேண்டிய தலைமையான விதி தங்கமான விதி (அதை இங்கே குறிப்பிடுவது மிக அவசியம்) ஒரு பணவியல் பிரதேசத்திலிருந்து மற்றொன்றுக்குத் தங்கத்தை உண்மையிலேயே கொடுப்பது வாங்குவதன் மூலம் அவற்றின் பரிவர்த்தனையிலிருந்து விளைகின்ற வழங்கீடுகளின்

சமநிலையில் சரி அமைதி நிலையை உறுதிப்படுத்த வேண்டும் என்பதாகும்.''★ ''மாபெரும் இடையூறுகள்'' என்று குறிப்பிட்ட பொழுது 1929–1933ம் வருடங்களில் ஏற்பட்ட உலகப் பொருளாதார நெருக்கடியையும் இரண்டாம் உலக யுத்தத்தையுமே டெ கோல் சுட்டிக்காட்டுகிறார் என்பது தெளவு. ஆகவே இரண்டு உலக யுத்தங்களுக்கும் இடைக் காலத்திலிருந்த தங்க ஆதார அளவை –சர்வதேச வழங்கீடுகளில் தங்கத்தின் தீர்மானமான பாத்திரம் அதன் முக்கியமான கூறாகும் –மறுபடியும் ஏற்படுத்த வேண்டுமென்று அவர் கூறுனார்.

டெ கோலின் அறிவிப்பைத் தொடர்ந்து மேலும் அமெரிக்காவிடமிருந்து தங்கம் திரும்பப் பெறப்பட்டது. டாலர் இருப்புக்கள் அன்றாட நடவடிக்கைகளுக்குத் தேவையான நடப்புப் பணத்தின் அளவுக்கத் குறைந்துவிட்டன. பிரான்சின் உதாரணத்தை அதிகமான விளம்பரம் இல்லாமல் வேறு சில நாடுகளும் பின்பற்றின. மூன்று வருடங்களில் அமெரிக்கா 3,000 டன்களுக்கம் அதிகமான தங்கத்தை இழந்தது.

மற்ற நாடுகள் தங்களுடைய டாலர்களைத் தங்கத்துக்குப் பரிவர்த்தனை செய்து கொள்வதைத் தவிர்க்க வேண்டும் என்று அமெரிக்கா அந்த நாடுகள் மீது நிர்ப்பந்தத்தைக் கொண்டு வருவதற்கு முயற்சி செய்தது. பிறகு வெறும் நிர்ப்பந்தம் பலனளிக்காத தால் பயமுறுத்துவதற்கும் வேறுவிதமான நடவடிக்கைகள் எடுப்பதற்கும் துணிந்தது. இது ஓரளவுக்கு உதவியளித்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. 1969 மற்றும் 1970–ம் வருடங்களில் அமெரிக்காவின் தங்க இருப்புக்கள் குறையவில்லை. ஆனால் இது குறுகிய அவகாசமாக மட்டுமே இருந்தது. 1971ல் டாலர் மீது புதிய நம்பிக்கையின்மை ஏற்பட்டது. சில மேற்கு ஐரோப்பிய நாடுகள் மறுபடியும் தங்கத்தைத் திரும்பப் பெறுவதற்குத் தொடங்கின. ஒரு ஆங்கிலப் பழமொழியில் சொல்லப்படுவதைப் போல ஒட்டகத்தின் முதுகை உடைத்த கடைசித் துரும்பு இதுவே. 1971 ஆகஸ்டில் டாலரைத் தங்கமாக மாற்றிக் கொள்வதை அமெரிக்கா ரத்துச் செய்தது.

பிரான்சில் டெ கோலுக்குப் பிறகு பதவிக்கு வந்த பாம்பிடூ, ஜிஸ்கார் ட எஸ்டேனும் மற்றவர்களும் அவருடைய கொள்கையைசற்று குறைந்த உறுதியோடு, சமரசத்துக்காக அதிகமாக முற்படும் வகையில்–தொடர்ந்து கடைப்பிடித்தார்கள். பிரான்சின் ''டாலர் எதிர்ப்புத்'' தாக்குதல்களின் தீவிரம் பல காரணிகளினால் அடிக்கடி வெகுவாகக் குறைந்தது. ஆனால் தங்கத்தின் பாத்திரம் உள்பட முக்கியமான பிரச்சினைகளில் பிரான்சின்

நிலை அமெரிக்காவின் நிலையிலிருந்து நிரந்தரமாக வேறுபட்டிருக்கிறது. அடிக்கடி அதற்கு எதிராகவும் இருக்கிறது.

1970க்களில் பணவியல் பிரச்சினை உயர்மட்டப் பேச்சுவார்த்தைகளுக்குரிய பொருளாகத் தொடர்ந்து இருந்து வந்தது. பிரெஞ்சு ஜனாதிபதியின் பேச்சைப் பற்றிக் கருத்துத் தெரிவிக்கும் பொழுது, யுத்தத்தையும் தளபதிகளையும் பற்றிய பிரபலமான கருத்தைத் தழுவி நிதி என்பது மிக முக்கியமான விஷயமாதலால் அதைப் பற்றி முடிவு செய்வதை நிதிச் செல்வர்களிடம் மட்டுமே விட்டுவிட முடியாது என்று ஒரு பிரெஞ்சுப் பத்திரிகை எழுதியது. இதற்கு மாறாக, பொருளாதாரம் மற்றும் நிதிப் பிரச்சினைகளைப் பற்றி விசேஷமான அறிவு இல்லாமல் ஒரு ராஜியவாதி இன்றைய தினம் சமாளிப்பது கடினமே.

ஒரு பொருளாதாரப் பேராசிரியர் அமைச்சராகவும் ராஜியவாதியாகவும் முன்னேற்றமடைவது இன்று வழக்க மாகிக்கொண்டிருக்கிறது. பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்த ஹெரால்ட் வில்சன், மேற்கு ஜெர்மனியின் சான்சலராக இருந்து லுட்விக் எர்ஹார்டு, பிரான்சின் பிரதமராக இருந்த ராய்மோன் பார் ஆகியோர் இந்த ரகத்தைச் சேர்ந்தவர்களே. பாம்பிடூவும் ஜிஸ்கார் ட எஸ்டேனும் நிதித்துறையில் சிறந்த நிபுணர்களாவர்.

ஒரு நாட்டின் பொருளாதாரத்தையும் உலக முதலாளித் துவப் பொருளாதாரத்தை யும் வளர்ந்து கொண்டிருக்கும் நெருக்கடிகளிலிருந்து இது எந்த அளவுக்குக் காப்பாற்றுகிறது என்பது வேறு பிரச்சினையாகும். எத்தனை பேராசிரியர்கள், செய்முறை நிபுணர்கள் ஒன்று சேர்ந்தாலும் 1970-களிலும் 1980-களிலும் ஏற்படும் நெருக்கடிகளிலிருந்தும் பிரச்சினை களிலிருந்தும் முதலாளித்துவத்தைக் காப்பாற்ற முடியாது என்பது நம் கருத்தாகும்.

# சர்வதேசப் பணவியல் அமைப்பு

**1960** –க்கள் முதல் 1980–க்கள்வரை முதலாளித்துவ சர்வதேசப் பணவியல் அமைப்பில் தங்கத்தைப் பற்றி இந்த அத்தியாயத்தில் எழுதுவோம். இந்த அமைப்பில் தங்கத்தின் இடத்தையும் பாத்திரத்தையும் பற்றிப் புரிந்துகொள்ள அதன் முக்கியமான கூறுகளையும் அதில் ஏற்பட்டுள்ள மாற்றங்களையும் சுருக்கமாகக் குறிப்பிடுவோம்.

நம் காலத்தில் தங்கத்தின் விதியை மாநாடுகளும் கமிட்டிகளும் சட்டங்களும் சர்வதேச உடன்பாடுகளும் முடிவு செளிணிகின்றன என்ற எண்ணம் மக்களிடம் இருக்கலாம். இவற்றில் சிலர் தங்கத்துக்க எதிராக இருக்கிறார்கள். வேறு சிலர் அதை ஆதரிக்கிறார்கள். கடைசியில் சமரசம் உருவாக்கப்படுகிறது, எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்படும் ஏதோ ஒரு வகையான முடிவு நிறைவேற்றப்படுகிறது. வெளியிலிருந்து பார்க்கும் பொழுது இப்படித் தோன்றுகிறது. இதற்கு முன்பு எந்தக் காலத்திலும் இத்தனை கமிட்டிகளும் கவுன்சில்களும் சர்வதேசப் பணவியல் அமைப்பையும் அதில் தங்கத்தின் பாத்திரத்தையும் பற்றி விவாதித்ததில்லை.

ஏராளமான விஷயங்கள் கமிட்டிகளின் முடிவுகளையும் அதைக் காட்டிலும் அதிகமான அளவில் அரசாங்கத்தின் கொள்கையையும் சார்ந்திருப்பது உண்மையே. ஆனால் இந்தப் பிரச்சினையை இன்னும் நுணுக்கமாகப் பார்த்தால் இந்த முடிவுகளும் நடவடிக்கைகளும் உலகப் பொருளாதாரத்திலும் நிதி நிநலைமையிலும் ஏற்படும் புறநிலை நிகழ்வுகளினால் திணிக்கப்படுவையே என்பதை நாம் பார்க்க முடியும். கமிட்டி மேசைகளில் புதியன பிறப்பதில்லை. அவை பொருளாதார யதார்த்தத் திலிருந்து பிறக்கின்றன. மேற்கு நாடுகளைச் சேர்ந்த பிரத்யட்ச உணர்வு கொண்ட நிதிச்செல்வர் யாருமே இதைப் புரிந்து கொள்ள முடியும். உதாரணமாக, மேற்கு ஜெர்மனியின் மத்திய வங்கியின் துணை கவர்னர், இன்றுள்ள மிதக்கும் பரிவர்த்தனை விகிதங்கள் என்ற அமைப்பு நீடிப்பது ‘‘காகிதச் சூத்திரங்களின் மூலமாக இல்லாமல் கடினமான பொருளாதார உண்மைகளின் மூலம் உலகப் பொருளாதாரத்தின் மீது திணிக்கப்படும்’’ என்று கூறியுள்ளார்.

தங்கத்தின் விதியில் திருப்புமையங்களான டாலர்களைத் தங்கத்துக்கு மாற்றுவது ரத்து செய்யப்பட்டது. தங்கத்தின் சுதந்திர மான [சந்தை] விலையியல் அடிக்கடி ஏற்பட்ட அதிகரிப்புக்கள், அதிகார பூர்வமான விலையில் அதைக் கொண்டு நடிவடிக்கைகள் செய்வதன் நிறுத்தம். தங்க சமவிகிதங்கள் யதார்த்தத்தோடு கொண்டிருந்த எல்லாவிதமான பொருத்தங்களையும் இழந்தது ஆகியவை நெருக்கடியான நிலைமைகளின் கீழ் நடைபெற்றன. இந்த அமைப்பில் மற்ற மாற்றங்கள், குறிப்பாக, நிர்ணயிக்கப்பட்ட சமமதிப்புகளுக்குப் பதிலாக மிதக்கும் பரிவர்த்தனை விகிதங்கள் அறிமுகம் செய்யப்பட்டதற்கும் இது பொருந்தக்கூடிய உண்மையே. முடிவேயில்லாத நீண்ட விவாதங்களுக்குப் பிறகு 1976-ல் ஒத்துக்கொள்ளப்பட்ட சீர்திருத்தம் முன்னரே ஏற்படடிருந்த நிலைமை களையே பதிவு செய்துகொண்டது. எழுபதுக்களின் நிலைமைகளையே பதிவு செய்துகொண்டது. எழுபதுக்களின் கடைசியிலும் எண்பதுக்களின் தொடக்கத்திலும் புதிய அவசரமான பிரச்சினைகள் தோன்றியிருக்கின்றன. இவை கமிட்டி ஜுரம் தணிவதை அனுமதிக்கவில்லை. நிதித்துறை நிபுணர்களும் செய்முறை நிதிச் செல்வர்களும் புதிய திட்டங்களையும் ஏற்பாடுகளையும் மென்மேலும் அதிகமாக உற்பத்தி செய்து கொண்டிருக்கிறார்கள். இவற்றில் யதார்த்த நிலைமைகளைப் பிரதிபலித்து அவற்றோடு பொருந்தி வருபவை ஏதாவதொரு அளவில் நிறைவேற்றப்படுகின்றன.

# 20-ம் நூற்றாண்டின் கடைசிக் கால்பகுதியில் முதலாளித்துவம்

20 –ம் நூற்றாண்டின் கடைசிக் கால் பகுதியில் சிக்கலான பொருளாதார மற்றும் சமூக – அரசியல் நிலைமை முதலாளித்து வத்தை எதிரிடுகின்றது. 1974–1974ல் ஏற்பட்ட பொருளாதார மந்தம் யுத்தத்துக்குப் பிந்திய காலப் பகுதி முழுவதிலுமே மிகவும் மோசமானதாக இருந்தது. அது மெதுவாகச் சமாளிக்கப்பட்ட போதிலும் அது விட்டுச் சென்ற கசப்பான பாரம்பரியம் அடுத்து ஏற்பட்ட மேலேற்றத்தை பலவீனமானதாகவும் சமநிலை யில்லாததாகவும் குறுகியதாகவும் செளிணிதது. 1979ல் பெரும்பாலான நாடுகளின் பொருளாதார வளர்ச்சி விகிதங்கள் ஏற்கெனவே குறைந்திருந்தன; 1980ல் அமெரிக்கா, பல நாடுகளின் பொருளாதாரங்கள் ஒரு புதிய மந்தமான கால கட்டத்தை அடைந்தன. மொத்தத் தில் எழுபதுக்களில் வளர்ச்சியடைந்த முதலாளித்துவ நாடுகளின் பொருளாதார வளர்ச்சி விகிதங்கள் அறுபதுகளில் இருந்தவற்றுக்கு உத்தேசமாகப் பாதி யளவுக்கே இருந்தன.

சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் 25வது காங்கிரசில் லியொனித் பிரேஷ்னெவ் சுட்டிக் காட்டியதைப் போல முதலாளித் துவம் ஒரு வகையில் ‘‘தானாகவே வீழ்ச்சியடைந்துவிடும்’’ என்பது இவற்றின் அர்த்தமல்ல. அது இன்னும் கணிசமான இருப்புக்களை வைத்திருக்கிறது. புதிய நிலைமைகளுக்குத் தன்னைத் தகவமைத்துக் கொள்வதற்கச் சுமாரான சக்தியையும் கொண்டிருக்கிறது. பல துறைகளில் தீவிரமான விஞ்ஞான, தொழில் நுட்பவியல் முன்னேற்றம் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. ஆனால் மொத்தத்தில் எழுபதுக்களிலும் எண்பதுக்களின் தொடக்கத்திலும் நடைபெற்றி ருக்கும் சம்பவங்கள் நவீன உலகத்தில் முதலாளித்துவத்தின் நிலைகள் பலவீனமடைந்திருப்பதைக் சுட்டிக்காட்டுகின்றன. மார்க்சிஸ்டுகள் இதை முதலாளித்துவத்தின் பொது நெருக்கடி ஆழமடைதல் என்று கூறுகிறார்கள். இங்கே பொது நெருக்கடி என்பது முதலாளித்துவம் இனிமேல் உலகத்தின் தலைமையான சமூக அமைப்பாக இல்லாமல் சோஷலிசத்தோடு போட்டியிடுமாறு நிர்ப்பந் திக்கப்படுகின்ற நிலையைக் குறிக்கிறது.

எழுபதுகளில் மிகவும் கூர்மையான பொருளாதாரப் பிரச்சினை தோன்றி அடுத்த பத்தாண்டுகளிலும் தொடர்ந்தது. அதிகமான வேலையில்லாத் திண்டாட் டத்தோடும் ஒப்பளவில் குறைவான வளர்ச்சி விகிதங்களோடும் அதிகமான பணவீக்கம் சேர்ந்திருந்தது இந்தப் பிரச்சினையாகும். வாழ்க்கைச் செலவு அதிகரிப்பதைக் கொண்டு பணவீக்கத்தை அளக்க முடியும் இந்த நாடுகள் எல்லாவற்றிலும் வளர்ச்சி யடைந்தவை. வளர்ந்துகொண்டிருப்பவை ஆகிய இரண்டிலுமே விலைகள் மென்மேலும் வேகமாக அதிகரித்தன. பணம் மென்மேலும் வேகமாக மதிப்புக் குறைந்தது என்பதைக் காண முடியும். அறபது களில் பணவீக்கத்தைப் பற்றி மிக அதிகமாகப் பேசப்பட்டது என்றாலும் இது ஒப்பு நோக்கில் ஸ்திரமான நிலைமை இருந்த நல்ல காலம் என்றே தோன்றுகிறது. பெரும்பான்மையான நாடுகளில் விலைகள் வருடத்துக்கு 3 அல்லது 4 சதவீதத்துக்க மேல் அதிகரிக்கவில்லை. சமீப வருடங்களில் பல நாடுகளில் பணவீக்கம் இரண்டு இலக்க அளவுக்கு வந்துவிட்டது. விலைகள் வருடத்துக்கு 10 சதவீதத்துக்கு மேல் அதிகரித்திருக்கின்றன. 1979–1981ல் அமெரிக்காவில் பணவீக்கம் இந்த எண்ணைக் கூடத் தாண்டிவிட்டது. எனினும் வளர்முக நாடுகள் பலவற்றிலும் வளர்ச்சியடைந்த நாடுகளில் ஒப்புநோக்கில் பலவீனமான நாடுகளிலும் பண மதிப்புக் குறைவின் வேகம் குறிப்பிடத்தக்க அளவுக்கு அதிகமாக் இருக்கிறது. பணவீக்கம் உலகளாவிய தன்மையைக் கொண்டிருந்த போதிலும் நாடுகளுக் கிடையே கணிசமான வேறுபாடுகள் இருக்கின்றன. மேற்கு ஜெர்மனியில் ஒப்புநோக்கில் விலை அதிகரிப்பின் குறைவான சதவீதம் குறிப்பிடத்தக்கதாகுமக். நவீன பணவீக்கத்தின் இக்கூறுகள் அனைத்தும் சர்வதேசப் பணவியல் அமைப்புக்கு மாபெரும் முக்கியத்துவம் வாயந்தவையாகும்.

பொருளாதாரம் மந்த நிலைமையை அடைந்ததும் பணவீக்க விகிதங்கள் தீவிரமாக அதிகரித்ததும் 1974–ஐ ஒரு மைல்கல்லாகக் காட்டின என்பது சிந்தனைக்குரியது. 1973 கடைசியில் நடைபெற்ற ஒரு முக்கியமன சம்பவம் அதற்குப் பின்னர் ஏற்பட்ட வளர்ச்சி முழுவதிலும் தன் முத்திரையைப் பதித்தது. பெட்ரோலியம் ஏற்றுமதி செய்யும் நாடுகளின் ஸ்தாபனத்தின் [OPEC] உறுப்பினர்கள் பொருளாதார, அரசியல் ரீதியில் சாதகமான ஒரு சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு தாங்கள் உலகச் சந்தையில் விற்பனை செய்யும் பெட்ரோலியத்தின் விலையைச் சுமார் நான்கு மடங்காக உயர்த்தின. பாட்டிலுக்குள்ளேயிருந்து ஒரு புதிய ஆவி வெளியே வந்தது. அதுதான் எரிபொருள் நெருக்கடி, இந்த அராபிய உவமை மிகவும் பொருத்தமானது. ஏனென்றால் இந்த ஸ்தாபனத்தில்

மத்திய கிழக்கு மற்றும் வடக்கு ஆப்பிரிக்காவைச் சேர்ந்த அராபிய நாடுகளே பெரும் பான்மையாக இருக்கின்றன. மேற்கு நாடுகளல் பலர் – மிகவும் அதிகமான தகுதிகளைக் கொண்டவர்கள்கூட – இந்த ஸ்தாபனத்தின் நடவடிக்கைக்கும் அதற்குப் பிந்திய வருடங்களில் ஏற்பட்ட பொருளா தார விபத்துக்களுக்கும் நேரடியான காரணகாரியத் தொடர்பைக் இந்தக் கருத்தை ஒத்துக்கொள்ளவில்லை. பிரபலமான அமெரிக்கப் பொருளியலாளரும் எழுபதுக்களில் ஏற்பட்ட உலகப் பொருளாதாரக் கொந்தளிப்புக்களின் வெளிச்சத்தில் உலக முதலாளித்துவத்தை ஆராய்கின்ற தமது புத்தகத்தில் 1973–ல் ஏற்பட்ட பெட்ரோலிய அதிர்ச்சியின் பாத்திரத்தை முப்பதுக்களில் தொடக்கத்தில் ஏற்பட்ட உலகப் பொருளாதார நெருக்கடியின் உண்மையான காரணங்கள் ஆழமாக மறைந்திருந்தன, சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகள் அந்த அமைப்பின் உள்ளுறையான பலவனங்களை வெளிப்படுத்தியதோடு நெருக்கடியின் வளர்ச்சியைத் துரிதப்படுத்தின.

எரிபொருள் நெருக்கடி மற்றும் சந்தைகளைப் பிடிப்பதற்கு வளர்ச்சியடைந்து கொண்டிருந்த போராட்டத் தின் தாக்கத்தினால் சர்வதேச வழங்கீடுகளில் மிகவும் அதிகமான பொருத்தமின்மைகள் தோன்றின. எண்ணெய் இறக்குமதி செய்ய பிரிட்டன், இத்தாலி, பிரான்ஸ் ஆகிய நாடுகளுக்கு ஏராளமான கடன்வசத அவசியமாக இருந்தது. அமெரிக்கா ஒப்பு நிலையில் இந்த நாடுகளைக் காட்டிலும் குறைவாகவே எரிபொருள் இறக்குமதியை நம்பியிருந்தது. எனினும் அமெரிக்காவும் தன்னுடைய வழக்கமான ஏற்றுமதிகளின் மூலம் அதற்குத் தேவையான நிதியைத் திரட்ட முடியவில்லை. எண்ணெய் உற்பத்தி செய்கின்ற நாடுகளில் பல பில்லியன் வருமானங்களும் பணத் திரட்டல்களும் உருவானது உலகத்தின் நிதி நிலைமையல் மிகவும் பரபரப்பை ஏற்படுத்திய மாற்றமாகும். சாவூதி அரேபியா, ஈரான், வெனிசுலா, குவெய்த், இன்னும் சில நாடுகளின் கணக்குகளில் எண்ணெய்ப் பணம் அருவிபோல பாய்ந்தது. குறைந்த காலத்துக்குள் இத்தனை பில்லியன் பணத்தையும் உபயோகித்துப் பயனுள்ள பண்டங் களை வாங்க அவைகளால் முடியவில்லை. எனவே பணம் உலக கடன் மூலதனச் சந்தைகளை நோக்கி அதிகமான பகுதி அந்நியச் செலாவணி (பிரதானமாக டாலர்) இருப்புக்கள் என்ற வடிவத்தில் உறைந்துவிட்டன. 1973ன் கடைசி முதல் 1977 முடியவுள்ள வருடங்களின் போது OPEC நாடுகளின் சேம நிதிகள் ஐந்து மடங்குகளுக்க மேல் அதிகரித்தன. சாவூத அரேபியா இதில் சாதனையை ஏற்படுத்தியது. 1977 கடைசிக்குள்ளாகவே 24.7 பில்லியன் எஸ்.டி.ஆர்.

அலகுகளை [29.9 பில்லியன் அமெரிக்க டாலர்கள்] சேம நிதியாக வைத்திருந்து உலகத்தில் இரண்டாவது இடத்தைப் பெற்றது.

உலகத்திலேயே மிகவும் அதிகமான சேம நிதிகளைத் திரட்டியிருந்த மேற்கு ஜெர்மனி முதலிடத்தைப் பெற்றிருந்தது. அதனிடம் 32.7 பில்லியன் எஸ்.டி.ஆர்.அலகுகள் [39.7 பில்லியன் டாலர்கள்] இருந்தன. ஜப்பான் [19.1 பில்லியன் எஸ்.டி.ஆர்.அலகுகள் அல்லது 23.2 பில்லியன் டாலர்கள்] மூன்றாவது இடத்தைப் பெற்றிருந்தது. சர்வதேச நிதி

ஸ்தாபனம் இந்தப் புள்ளிவிவரங்களில் தங்க இருப்பை ஒரு அவுன்சுக்கு 35 எஸ்.டி.ஆர்.அலகுகள் என்ற அதிகார பூர்வமான விலையின்படியே மதிப்பிடுகிறது என்பது உண்மையே. இந்த ஸ்தாபனத்தின் உடன்பாட்டின் ஷரத்துக்களில் செய்யப்பட்ட இரண்டாவது திருத்தமாகிய கிங்ஸ்டன் உடன்பாட்டின் படி இந்த விலையை ரத்து செய்துவிட்டது. சந்தை விலையின்படி தங்கத்தை மதிப்பிட்டால் அதிகமான தங்க இருப்புக்களைத் திரட்டியுள்ள தொழில்துறை வளர்ச்சியடைந்துள்ள நாடு களோடு ஒப்பிடும்பொழுது சவுதி அரேபியாவின் தங்க இருப்புக்கள் குறைவான முக்கியத்துவத்தைக் கொண்டிருப்பதாகவே தோன்றும்.

எண்ணெய் உற்பத்தி செய்கின்ற நாடுகளின் தங்க இருப்புக்கள் மிகக் குறைவானவை என்றே சொல்ல வேண்டும். சமீபத்தில் இந்த நாடுகளுக்கு ஏற்பட்டிருக்கும் பணப்பெருக்கத்தை அவை சிறிது கூடப் பிரதிபலிக்கவில்லை. 1977ல் எல்லா OPEC நாடுகளையும் மொத்தமாக எடுத்துக் கொண்டால்கூட பெல்ஜியம் அல்லது நெதர்லாந்து தனித்தனியாக வைத்திருந்ததைக் காட்டிலும் குறைவான தங்கமே அவற்றிடம் இருந்தது. இந்த நாடுகளின் முந்திய வறுமை மற்றும் சார்பு நிலையின் பாரம்பரியமே இது. இந்த நாடுகளில் பலவற்றின் நாணயச் சேம இருப்புக்கள் 1978–1981ம் வருடங்களில் தொடர்ந்து வளர்ச்சியடைந்தன. இது வரையிலும் அவற்றில் மிகவும் குறைவான பகுதி மட்டுமே தங்கமாக மாற்றப்பட்டிருக்கிறது. 1973க்குப் பிறகு வழங்கீடுகளின் சமநிலையில் மிகவும் அதிகமான அளவல் ஏற்பட்ட பற்றாக்குறைகள் மற்றும் உபரிகள் சர்வதேசத் தங்கப் போக்குவரத்தை அநேகமாக ஏற்படுத்த வில்லை. பிரதானமாக சர்வதேச மூலுதன மற்றும் பணச் சந்தைகளின் செயல்பாட்டின் உதவியால் பல விதமான வடிவங்களைக்கொண்ட கடன்களால் அவை சரிபாத்திரத்தை சர்வதேச நிதி ஸ்தாபனமும் இதர சர்வதேச நிதி அமைப்புக்களும் நிறைவேற்றின. இந்த ஸ்தாபனங்கள் எண்ணெய் உற்பத்தி செய்யதான் வளர்முக நாடுகளுக்கு நிதியுதவி செய்வதில் தம் முயற்சிகளை

ஒன்றுகுவித்தன. ஏனென்றால் அவை மிகவும் கஷ்டமான நிலைமையில் இருந்தன.

எழுபதுகளில் சர்வதேசக் கடன் அமைப்பின் செயல்பாடு ஒரு பக்கத்தில் இந்தக் கடன் அமைப்பின் திறமையையும் மாபெரும் செயல்வளத்தையும் சுட்டிக்காட்டியது. ஆனால் மறு பக்கத்தில் கோபுரத்தைப் போல வளர்ந்துகொண்டிருக்கும் கடன்கள்–அவற்றில் குறைந்த காலக்கடன்கள் மற்றும் சந்தேகமான கடன்களின் சதவீதம் அதிகரித்துக்கொண்டிருக்கிறது– உலக முதலாளித் துவப் பெருளாதாரத்தில் மிகவும் அதிகமாக வீக்கமடைந்திருக்கும் கடன் மேற்கட்டு மானத்தை அரித்துக் கொண்டிருப்பதோடு அதற்கு மாபெரும் ஆபத்தை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறது.

1979–1980ல் வழங்கீடுகளின் சமநிலையைப் பற்றிய பிரச்சினை மறுபடியும் தீவிரமடைந்தது. எண்ணெளிணி விலைகளில் ஏற்பட்ட புதிய அதிகரிப்பு இதன் காரணங்களில் ஒன்றாகும். எண்ணெய் உற்பத்தி செய்யும் நாடுகளின் வருமானங்கள், மறுபடியும் கூர்மையாக அதிகரித்துக்கொண்டிருந்தன. இதற் கிடையில் உலகத்தின் மூலதனச் சந்தையில் அவற்றை மறுபடியும் சுற்றிவருமாறு செய்வது நிதித்துறை மற்றும் அரசியல் காரணங்களால் மென்மேலும் கஷ்டமானதாகிக்கொண்டிருக்கிறது. இந்தச் சந்தையில் டாலரே தலைமையான நாணயம்; அமெரிக்க வங்கிகளும் அவற்றின் ஐரோப்பியக் கிளைகளும் இதில் கேந்திரமான பாத்திரத்தை வகிக்கின்றன. ஆனால் 1977–1979ல் டாலருக்கு மதிப்புக் குறைவு ஏற்பட்ட பொழுது டாலர் களில் அல்லது ஐரோப்பிய டாலர்களில் (அதாவது மேற்கு ஐரோப்பிய நாடுகளில் டாலர்களில் உள்ள கணக்குகள்) பணத்தை வைத்திருக்கும் நாடுகளுக்கு நஷ்டங்கள் ஏற்பட்டன. மற்ற அரசியல் "ஆபத்துக்களைப்" பற்றி Economist பத்திரிகை பின்வருமாறு விளக்கம் கொடுத்தது: "நாணய உபரியை வைத்திருக்கும் OPEC நாடுகள் தமது ஆஸ்திகளை டாலரிலிருந்து வேறுபடுத்தி வைத்திருப்பதை விரும்புகின்றன. அதிலிருந்து வேறுபடுபடுத்தி வைத்திருப்பதை விரும்புகிறேன். அதிலும் ஈரான் மற்றும் ஆப்கானிஸ்தானித்தில் ஏற்பட்ட நெருக்கடிகள் சம்பந்தமாக அமெரிக்காவின் பதில் நடவடிக்கைகளைப் பார்த்த பிறகு தமது முட்டைகள் அனைத்தையும் ஒரே கூடையில் வைத்திருக்க அவை விரும்பவில்லை. அமெரிக்கக் கட்டுப்பாட்டுக்க உட்பட்ட வங்கிகளில் இருந்த ஈரானிய அமெரிக்க வர்த்தகத்தில் பகுதியளவுக்குத் தடை விதித்தது. அமெரிக்காவிலிருந்து சோவியத் யூனியனுக்கு தானியம் மற்றும் உயர் தொழில்நுட்பச் சரக்குகளை

ஏற்றுமதி செய்வதைத தடை செய்தது ஆகியவை இனி இது எங்கே நடக்கும் என்ற கேள்வியைத் தவிர்க்க முடியாத வகையில் எழுப்புகிறது.

மறுபடியும் அராபிய –இஸ்ரேலிய சண்டை ஏற்படும்பொழுது வர்த்தகத் தடைகளும் ஆஸ்திகளும் எடுக்க முடியாது செய்வதும் மீண்டும் ஏற்படலாம் என்பதைப் புரிந்து கொள்ள அதிகமான கற்பனை தேவையில்லை. இத்தகைய அச்சங்களுக்கு ஆதாரமில்லாதிருக்கலாம். ஆனால் OPEC நாடுகளின் நிதிகளை மறுபடியும் புழக்கத்துக்குக் கொண்டு வருகின்ற முயற்சிகளுக்கு இது உதவி செய்யவில்லை.''

இங்கே பலவிதமான சாத்தியங்களுக்கும் இடையில் தங்கப் பிரச்சினை, இந்த நிதிகளில் ஒரு பகுதியைத் தங்கத்தில் முதலீடு செய்வதைப் பற்றி பிரச்சினை ஏற்படுகிறது. இதை ஆராய்ந்த பிறகு Economist பின்வரும் முக்கியமான முடிவுக்கு வருகிறது; ''இன்னொரு ஆரூடம் சொல்லலாமென்றால் தங்கத்தின் பணவியல் உபயோகம் கடந்த பத்து வருடங்களில் இன்னும் அதிகமாக இருக்கும்...'' இந்தப் பிரச்சினையின் முக்கியமான அம்சங்களை நாம் பின்னர் எடுத்துக் கொள்வோம். ஆனால் தங்கம் மற்றும் அதன் பணவியல் பாத்திரத்தோடு நெருக்கமாக இணைந்திருக்கும் நாணயப் பரிவர்த்தனை விகிதங்களின் அமைப்பு என்ற மற்றொரு பிரச்சினையைப் பற்றி சுருக்கமாகக் கூற வேண்டும்.

எழுபதுக்களில் சர்வதேசப் பணவியல் அமைப்பின் வளர்ச்சியில் மிகவும் முக்கியமான கூறு நிர்ணயிக்கப்பட்ட நாணய பரிவர்த்தனை விகிதங்களுக்குப் பதிலாக ''மிதக்கும்'' பரிவர்த்தனை விகிதங்களுக்கு (அதாவது நாணங்களின் பரிவர்த்தனை விகிதங்களின் சந்தையில் ஏற்படுகின்ற நிரந்தரமான மற்றும் கணிசமான ஏற்றத் தாழ்வுகள் நிர்பந்தமாக ஏற்பட்ட மாற்றமாகும்.

தங்கம் மற்றும் நாணங்களின் துறையில் ஸ்திர நிலைமை ஆட்சி செலுத்த வேண்டுமென்று பல நூற்றாண்டுளாகச் சிந்திக்கப்பட்டது. இன்று வழக்கத்தை மீறிய நிலைமையே வழக்கமான நிலைமையாக இருக்கிறது. ஸ்திரமற்ற நிலைமையே ஸ்திரமான ஒரே நிகழ்வாக இருக்கிறது.

# மிதக்கும் நாணயங்கள்

தங்க ஆதார அளவைப் பொறுத்த வரையிலும் அந்நியப் பரிவர்த்தனை விகிதங்கள் ஒவ்வொரு நாணயத்தின் தங்க அடக்கத்தைக் கொண்டு நிர்ணயிக்கப்பட்ட சமமதிப்புக்களைச் சுற்றி குறுகிய எல்லைகளுக்குள் ஏறி இறங்கிக் கொண்டிருந்தன என்பதை நாம் அறிவோம். சமமதிப்புக்களின் ஸ்திர நிலைமையும் ஏற்ற இறக்கங்களின் குறுகிய அளவுகளம் பிரெட்டன்வுட்ஸ் அமைப்பின் ஒரு முக்கியமான கோட்பாடாக இருந்தன. ஆனால் இங்கே இவை வேறு வழிகளின் மூலமாக நிறைவேறின. ஒரு நாடு தன்னுடைய நாணயத்தின் பரிவர்த்தனை வகிதத்தை நிர்ணயிக்கமாலிருப்பதும் அல்லது சம்பிரதாயப்படி அதை நிர்ணயித்து சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் அதைப் பதிவு செய்த பிறகு உண்மையில் அதைப் பின்பற்றாமலிருப்பதும் இந்த அமைப்பில் அடிக்கடி நடைபெற்றது என்பது உண்மையே.

இம்மாதிரியான இனங்களில் சந்தை அல்லாத முறையில் பரிவர்த்தனைக் கட்டுப்பாட்டின் உதவியைக் கொண்டு இந்த விகிதம் உறுதிப்படாவிட்டால் அது சந்தையில் ஏற்ற இறக்கங்களைக் கொண்டிருக்கும். எனினும் முதலாவதாக, அத்தகைய நிலைமை தற்காலிக மானதாகக் கருதப்பட்டது, உறுதியான பரிவர்த்தனை வகிதத்தை நிறுவுவது நோக்கமாக இருந்தது. இரண்டாவதாக, இது குறிப்பிட்ட நாணயம் சம்பந்தப்பட்ட பிரச்சினையே தவிர மொத்த அமைப்புக்கும் ஒருபோதும் சம்பந்தமுடையதல்ல. அந்த நாணயம் ஒரு வகையான ஸ்திர அச்சோடு தொடர்புடையதென்ற முறையில் ஏறி இறங்கியது, ஆனால் அந்த அச்சு அசையாதிருந்தது. தங்கத்தோடு இணைக்கப்பட்ட டாலர் அத்தகைய அச்சாகப் பயன்பட்டது. இன்றைய அமைப்பில் ஸ்திரமான அச்சு என்பதே கிடையாது. நாணயங்களின் மதிப்பின் அதிகாரப்பூர்வமான அளவுகோல் என்ற முறையில் தங்கம் இந்த அமைப்பிலிருந்து முழுமையாக ஒதுக்கப்பட்டிருக்கிறது. நிர்ணயிக்கப்பட்ட பரிவர்த்தனை செய்யப்படுவதில்லை. இதைப் பின்வருமாறு வர்ணிக்க லாம். ஒரு குளத்தில் பலர் மிதந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களோடு சேர்ந்து டாலரும் அந்தக் குளித்தில் மிதந்து கொண்டிருக்கிறது, ஆனால் மற்ற நீச்சல்காரர்களைக் காட்டிலும் அதன் பெரிய உடல் நன்கு தெரிகிறது.

பரிவர்த்தனை விகிதம் என்பதுஇரண்டு பணவியல் அலகுகளுக்கு இடையே உள்ள மதிப்பு விகிதம். அது இரண்டு நாணயங்களை இணைக்கிறது. ஒன்று கீழே இறங்கும் பொழுது அடுத்தது மேலே ஏறுகிறது. ஒன்றுமேலே ஏறும் பொழுது அடுத்தது கீழே இறங்கு கிறது. இதை நன்கு விளக்குவதற்காகப் பின்வரும் உதாரணத்தைக் கூறலாம். விலைகளின் குறியீட்டெடன் மேலே உயர்கின்ற பொழுது பணத்தின் வாங்கும் சக்தி கீழே இறங்குகிறது. விலைகளின் குறியீட்டெண் இறங்கும பொழுது [இப்பொழுது இது நடைபெறுவதே கிடையாது] பணத்தின் வாங்கும் சக்தி அதிகரிக்கிறது. இதே முறையில், மேற்கு ஜெர்மனியின் மார்க் நாணயத்தோடு ஒப்பிடும் பொழுது டாலர் கீழே இறங்கினால் டாலரோடு ஒப்பிடும் பொழுது மார்க்கின் மதிப்பு அதிகரிக்கிறது என்று பொருள்படும்.

எனினும் 1971–1973க்கு முன்பு ஒரு குறிப்பிட்ட நாணயத்துக்கும் டாலருக்கும் இடையே உள்ள பரிவர்த்தனை விகிதம் எப்பொழுதும் ஒரே ஒரு கோணத்திலிருந்து மட்டுமே பார்க்கப்பட்டது. அந்த நாணயம் டாலரோடு எவ்விதமான தொடர்பைக் கொண்டிருக்கிறது என்பதே அந்தக் கோணம். மறுபடியும் டாலரே ஒரு அச்சாக, மொத்த அமைப்புக்குமே குறியீட்டு நிலையாக இருந்தது. இன்று நிலைமை வேறுவிதமாக இருக்கிறது. 1977 கடைசியிலும் 1978 முழுவதிலும் டாலர் தொடர்ச்சியாக மதிப்புக் குறைந்தது மேற்கு நாடுகளில் அதிகமான கவலையை ஏற்படுத்தியது. இந்த அம்சம்தான் முழு கவனத்தையும் ஜப்பானின் யென், ஸ்விட்சர்லாந்தின் பிராங்க் ஆகியவற்றின் பரிவர்த்தனை விகிதம் அதிகரித்ததைப் பற்றியும் பேசியிருக்க வேண்டும். 1980–1981ல் இதே முறையில் இதன் எதிர்ப் போக்கு [டாலரின் பரிவர்த்தனை விகிதம் அதிகரிப்பது] குறிப்பிடத் தக்க விதத்தில் வெளிப்பட்டது.

நாணயங்கள் மிதப்பது சர்வதேசப் பணவியல் அமைப்பிலிருந்து தங்கத்தை அகற்றும் நிகழ்ச்சிப் போக்கோடு நெருக்கமாக இணைந்திருந்தது. இங்கே இன்னொரு புதிரைச் சந்திக்கிறோம். எழுபதுக்களில் ஏற்பட்ட நெருக்கடி ஒதுக்கப்பட்ட நாணயங்களின் நெருக்கடியாகும், உண்மையைச் சொல்வதென்றால் டாலருக்கு ஏற்பட்ட நெருக்கடியாகும். ஆனால் அதற்குத் தங்கம் “பலியாயிற்று” குறைந்த பட்சம் அதிகாரபூர்வ மான முறையில் அது இந்த அமைப்பின் பின் வரிசைக்குத் தள்ளப்பட்டது. 1971–ன் வசந்தகாலம் மற்றும் கோடைகாலம் முழுவதிலும் பங்குச் சந்தைகளில் பரபரப்பு அதிகரித்தது. மிகவும் அதிகமான அளவுக்கு டாலர் மீது நம்பிக்கையின்மை ஏற்பட்ட் காரணத்தால் டாலர்களை வைத்திருந்த

தனியார்கள் (வங்கிகள், வர்த்தக நிறுவனங்கள் மற்றும் தனிப்பட்ட முதலாளிகள்) மொத்தமாக அமெரிக்க நாணயத்தைக் கொடுக்க, அதிக நிலையான நாணயங்களுக்கு அதைப் பரிவர்த்தனை செய்ய முயற்சி செய்தார்கள். டாலர் பரிவர்த்தனை விகிதம் மிகக்கீழான மட்டத்துக்குக் குறைந்தது. சர்வதேச உடன்பாடுகளின்படி டாலர் அந்தக் கடைசி மட்டத்துக்குக் குறையும் பொழுது மத்திய வங்கிகள்அதற்கு இன்னும் ஆதரவளிக்கவேண்டும். வங்கிகள் மென்மேலும் அதிகமான பில்லியன் டாலர்களைச் சந்தையில் வாங்க வேண்டும். ஏற்கெனவே தங்களிடமிருக்கும் ஏராளமான டாலர் இருப்புக்களை அதிகப்படுத்த வேண்டும் என்பது அதன் பொருளாகும்.

இந்த விளையாட்டின் விதிகள்படி, டாலர்களை மற்ற நாணயங்களுக்கு மாற்றுவதை மிகவிலையுள்ளதாகச் செய்தவற்காக டாலரின் மதிப்பைக் குறைத்திருக்க வேண்டும். ஆனால் டாலரின் தங்க அடக்கத்தைக் குறைக்காமல் அமெரிக்கா இதைச் செய்ய முடியாது. 1934–ம் வருடத்திலிருந்து டாலரின் தங்க அடக்கம் மாறாதபடி இருந்து வந்திருக்கிறது என்பதோடு அது ஒரு மாறாதபடி இருந்து வந்திருக்கிறது என்பதோடு அது ஒருவகையான அரசியல் வழிபாடாகவும் வளர்ச்சி யடைந்திருந்தது. மற்ற நாடுகள் டாலரோடு சம்பந்தப்பட்ட வகையில் தம்முடைய நாணயங்களின் பரிவர்த்தனை விகிதங்களை அதிகப்படுத்துவது இந்தப் பிரச்சினைக்கு மற்றொரு தீர்வாகும். ஆனால் அவை அவ்வாறு செய்ய விரும்பவில்லை. ஒரு நாட்டு நாணயத்தின் பரிவர்த்தனை விகிதத்தை அதிகப்படுத்தினால் அந்த நாட்டுப் பண்டங்களின் போட்டித் தன்மை பலவீனமடை கிறது, ஏற்றுமதிகள் பாதிக்கப்படுகின்றன என்பதை நாம் முன்பே பார்த்தோம். இத்தகைய தீர்வுகளை அமெரிக்கா தன்னுடைய கூட்டாளிகள் மீது திணிக்கக் கூடிய காலம் மறைந்துவிட்டது. அது மட்டுமல்ல. அந்தக் கூட்டாளிகள் பொறுமையிழந்து தங்களிடமிருக்கும் டாலர் திரட்டல்களுக்குப் பரிவர்த்தனையாகத் தங்கத்தைக் கொடுக்குமாறு கேட்போமென்று சந்தேகத்துக்கு இடமில்லாத வகையில் உணர்த்திவிட்டார்கள்.

அப்பொழுது ஜனாதிபதியாக இருந்த நிக்சனின் ஆலோசகர்கள் தங்க சன்னலை மூடிவிடுமாறும் (டாலரைத் தங்கமாக மாற்றுவதை ஒழித்தல்) அமெரிக்காவுக்குள் இறக்கு மதியாகின்ற அந்நியப் பண்டங்களின் மீது விசேஷமான கூடுதல் தீர்வை விதிக்க வேண்டுமென்றும் உள்நாட்டி பணவீக்கத்துக்கு எதிராக சில நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்றும்

கூறினார்கள். 1971 ஆகஸ்ட் 15 ஞாயிற்றுக்கிழமையன்று நிக்சன் பதினெட்டு நிமிடச் சொற்பொழிவில் இந்தப் ‘‘புதிய பொருளாதாரக் கொள்கையை’’ அறிவித்தார். அமெரிக்காவின் கூட்டாளிகளுக்கு அது மாபெரும் அடியாக இருந்தது. இச்செய்தி கிடைத்ததும் பிரிட்டிஷ் பிரதமமந்திரி ஹித் கிராமப்புற இல்லத்தில் தன்னுடைய படுக்கையிலிருந்து கீழே குதித்தார். ‘‘திங்கட்கிழமை பொழுது விடிவதற்குள் ஐரோப்பா முழுவதும் அமைச்சர்கள் பிரான்சின் தெற்குப் பகுதியிலிருந்தும் ஸ்காட்லாந்தின் சதுப்பு நிலங்களிலிருந்தும் திக் பிரமையடைந்தவர்களாக கறுத்துப்போன முகங்களோடு தலைநகரங்களுக்குள் பறந்து வந்து கொண்டிருந்தார்கள்’’ என்று ஒரு அமெரிக்க வாரப் பத்திரிகை எழுதியது.

ஆனால் குறைந்தபட்சம் அவசர நடவடிக்கைகள் என்ற முறையில் அமைச்சர்களால் அதிகமாக ஒன்றும் செய்யமுடியவில்லை. சந்தையில் ‘‘புதிய’’ டாலர்களை, அதாவது தங்கமாக மாற்றப்பட முடியாத டாலர்களை விலைக்கு வாங்குவதும் அவற்றைத் திரட்டுவதும் அர்த்தமில்லாததாகிவிட்டது. மத்திய வங்கிகள் இதைச் செய்வதையும் டாலர் விகிதத்தை ஆதரிப்பதையும் நிறுத்திவிட்டன. பெரும்பான்மையான தொழில்துறை வளர்ச்சியடைந்த நாடுகளின் நாணயங்களின் பரிவர்த்தனை விகிதங்கள் சில வாரங்களுக்குள் டாலரோடு ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது அதிகரித்தன. நிலையான பரிவர்த்தனை விகிதங்கள் என்ற அமைப்பு சிதறுண்டது, நாணயங்கள் மிதக்கத் தொடங்கின, பரிவர்த்தனை விகிதங்களின் ஏற்ற இறக்கங்கள் கணிசமான அளவுகளை அடைந்தன.ஒரு பரபரப்பான நிலைமை உருவாயிற்று; அதன் எதிர்கால விளைவுகள் சிக்கல் நிறைந்த தோன்றின.

1971–ன் கடைசி மாதங்களில் மாநாடுகள் மற்றும் பேச்சுவார்த்தைகளின் பரபரப்பு அதன் உச்சியை அடைந்தது. குழப்பம் ஏற்பட்டுவிடுமோ என்ற பயம் ஏதாவது ஒரு சமரசத்தை ஏற்படுத்த வேண்டிய அவசியத்தை உண்டாக்கிற்று. நாம் எல்லோருமே ஒரே படகில்தான் உட்கார்ந்திருக்கிறோம்; படகை அதிகமாக ஆட்டினால் நமக்கத்தான் ஆபத்து ஏற்படும் என்ற தோரணையில் அமெரிக்கர்கள் இந்தப் பேச்சுவார்த்தைகளை நடத்தினார்கள். படகை ஆட்டியது நிக்சன், படகு ஏற்கெனவே அதிகமான தண்ணீரை குடித்துவிட்டது என்று ஐரோப்பியர்கள் பதிலளித்தார்கள். இந்தப் ‘‘பணப் படகில்’’ அமெரிக்காவோடு உட்கார்ந் திருப்பது ‘‘ஒரே படகில் யானையோடு உட்கார்ந் திருப்பதைப் போன்றது’’★ என்று மேற்கு ஜெர்மனியின் பிரதிநிதி ஒருவர் கூறினார்.

பிரெட்டன்வுட்ஸ் அமைப்பு எல்லா இடங்களிலும் வெடித்துக்கொண்டிருந்தது. தங்கத்தோடு நாணயங்கள் கொண்டிருந்த இணைப்பு அறுந்துவிட்டது. ஆனால் மக்களுடைய சிந்தனைகளில் அவர்களுக்கு அறிமுகமான வடிவங்களே இன்னும் ஆதிக்கம் செலுத்திக்கொண்டிருந்தன. புதிய தங்க சம மதிப்புக்களை நிறுவுவதிலும் நாணயங்களுக்கிடையே அநேகமாக நிலையான விகிதங்களை மறுபடியும் ஏற்படுத்துவதிலும் சமரசத்துக்கு முயற்சிக்கப்பட்டது. எல்லா நாணயங்களையும் மிதக்க விடுவதைப் பல பொருளியலாளர்கள் நெடுங்காலமாகவே வற்புறுத்தி வருகிறார்கள் என்றாலும் அரசியல்வாதிகள் சுதந்திரமாக மிதக்க விடுகின்ற மாற்றத்தைக் குறிப்பாகப் பணவாதிகள் தீவிரமாக ஆதரித்தார்கள். இந்த மரபினருக்கு நோபெல் பரிசு பெற்ற அமெரிக்கரான மில்டன் ப்ரீட்மென் தலைமை தாங்கினாரென்று பொதுவாகக் கருதப்படுகிறது.

சோவியத் பொருளியலாளரான டி.வி.ஸ்மிஸ்லோவ் தன்னுடைய புத்தகத்தில் ப்ரீட்மென் மற்றும் அவரது ஆதரவாளர்களுடைய முக்கியமான கருத்தைப் பின்வருமாறு எடுத்துக் கூறுகிறார்: “ஆகவே தங்க ஆதார அளவின் காலகட்டத்தின்போது தங்கத் தின் சுதந்திரமான போக்குவரத்து சர்வதேச வழங்கீடுகளை ஒழுங்குபடுத்துகின்ற தானியங்கியாக இருந்தது என்றால் இப்பொழுது நாணயங்களின் “மிதக்கும்” விகிதங்கள் இச்செயலை மேற்கொண்டன.” ஆனால் உலகத்தின் புறநிலைமைகள் மாற்றமடைந்த எழுபதுக்களின் தொடக்கம் வரையிலும் இத்தகைய கருத்துக்கள் பெருமளவுக்கு விஞ்ஞானத் துறையோடு மட்டுமே நின்றன. இப்பொழுது ப்ரீட்மென் எதிர்பார்த்துக் கொண்டிருந்த சந்தர்ப்பம் வந்துவிட்டது. அவருடைய திட்டங்களுக்குத் தகுந்த முறையில் ஸ்தூலமான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன என்பது இதன் அர்த்தமல்ல. மேற்கு நாடுகளின் நிதிக் கொள்கையை உருவாக்கு பவர்கள் வேறு திசையைப் பின்பற்ற வழியில்லாதபடி சம்பவங்கள் நடைபெற்றுவிட்டன. இதற்குக்கூட நெருக்கடிகளும் பீதியும் நிறைந்த இரண்டு வருடங்கள் தேவைப்பட்டன. பிரெட்டன்வுட்ஸ் அமைப்பில் சிறு திருத்தங்களைச் செய்வதன் மூலம் சமாளித்துவிட முடியுமென்று 1971 கடைசியில் கூட அவர்கள் இன்னும் நம்பிக் கொண்டிருந்தார்கள்.

அமெரிக்க, பிரெஞ்சு ஜனாதிபதிகளுக்கிடையே நடைபெற்ற இருதரப்புப் பேச்சுக்களில் முதல் தடவையாக சமரசம் முடிவு செய்யப்பட்டது. இப்பேச்சுவார்த்தைகளில் பிரெஞ்சு ஜனாதிபதி ஓரளவுக்கு மேற்கு ஐரோப்பா

முழுவதின் சார்பில் பேசினார். நிக்சனும் பாம்பிடூவும் "பணவியல் பிரச்சினைகளைப் பற்றி விரிவான முறையில் தனியாக விவாதித்த பிறகு (இதைப் பற்றிப் பேசுவது பாம்பிடூவுக்கு மிகவும் விருப்பமானது, ஆனால் நிக்சனுக்கோ கண்ணில் திரைபடர்ந்தது என்று பத்திரிகைகள் எழுதின) தங்கத்தின் விலை ஒரு அவுன்ஸ் 35 டாலர்கள் என்பதை 38 டாலர்களாக உயர்த்தி டாலரை மதிப்புக் குறைப்பதென்று ஒத்துக்கொண்டனர்." 1971 டிசம்பரில் இந்த சமரசம் வாஷிங்டனில் பல தரப்பு உடன்படிக்கையாக்கப்பட்டது.

இந்த சமரசம் எத்தகைய உண்மையான பொருளாதார முக்கியத்துவத்தையும் கொண்டிருக்கவில்லை. அவ்வாறு கொண்டிருக்கவும் முடியாது. 1971 கடைசியில் சுதந்திரச் சந்தையில் ஒரு அவுன்ஸ் தங்கத்தின் விலை சுமார் 44 டாலர்களாகவும் 1972 கடைசியில் 65 டாலர்களாகவும் இருந்தது. எல்லா நடவடிக்கைகளும் இந்த விலைக்குத்தான் செய்யப்பட்டன. யாரும் 38 டாலர்களுக்குத் தங்கத்தை விற்பனை செய்யவில்லை. ஆகவே அது முக்கியமான அம்சம் அல்ல. டாலரின் மதிப்பைக் குறைத்தது அரசியல்ரீதியில் அமெரிக்க அரசாங்கத்தின் சரணாகதியாகும். அமெரிக்காவின் ஜனாதிபதிகளும் நிதித்துறைச் செயலாளர்களும் இன்னும் இதர உயர்மட்ட அதிகாரிகளும் டாலரின் மதிப்பைக் குறைக்கமாட்டோம் என்று எண்ணற்ற தடவைகளில் அறிவித்தார்கள். மற்ற நாடுகளின் நாணயங்கள் ஒருக்காலும் டாலருக்குச் சமமாக முடியாது என்று மறைமுகமாகப் பேசினார்கள். இப்பொழுது நிலை என்ன? மற்ற எல்லா நாணயங்களுக்கும் எற்படுகின்ற அதே குறைபாடுகளுக்கு டாலரும் ஆளாகியிருப்பது நிரூபிக்கப்பட்டது. பிரெஞ்சுக்காரர்கள் ஏளமானகச் சிரிப்பதற்குச் சந்தர்ப்பம் கிடைத்தது.

ஆனால் இந்தச் சலுகையிலிருந்தும் மிகவும் அதிக மான சாதகத்தைப்பெறப் போதுமான அளவுக்கு அமெரிக்காவிடம் பலமும் செல்வாக்கும் இருந்தன. கிரேட் பிரிட்டனும் பிரான்சும் தங்களுடைய நாணயங்களின் முந்திய சம்பிரதாயமான தங்க உஷீமீளடக்கத்தைத் தக்கவைத்துக் கொண்டன. ஜப்பானும் மேற்கு ஜெர்மனியும் சொற்பமான அளவுக்கு அதை அதிகப் படுத்தின. இதன் விளைவாக, டாலருக்கு இந்த நாணயங்கள் மற்றும் இதர நாணயங்கள் கொண்டிருந்த பரிவர்த்தனை விகிதங்கள் இதையே விரும்பியது. டாலர் மலிவாக இருந்தால் உலகச் சந்தைகளில் போட்டியிடுவது இன்னும் சுலபமாக இருக்கும்.

இந்த முடிவுகள் உலக வரலாற்றிலேயே பணவியல் பிரச்சினையில் ஏற்பட்டிக்கும் முக்கியமான உடன்பாடு என்று நிக்சன் அவசரமாக அறிவித்தார். உண்மையில் அமெரிக்க ஜனாதிபதியின் அறிவிப்பு ''உலக வரலாற்றிலேயே'' மிகவும் அதிகமான அளவுக்கு முன்னறி யுந்திறம் இல்லாததாக இருந்தது. 1971 டிசம்பரில் ஏற்படுத்தப்பட்ட அமைப்பு பதினான்கு மாதங்கள் மட்டுமே நிலைத்திருந்தது. அமெரிக்காவின் வழங்கீடு களின் சமநிலை அபிவிருத்தி அடையவில்லை. டாலர் மீது ஏற்பட்ட நம்பிக்கையின்மை குறைய வில்லை. எப்பொழுதுமே முதல் காலடி வைப்பதுதான் கடினம். ஒரு தடவை ''கற்பழிக்கப்பட்ட'' டாலர் 1973 பிப்ரவரில் எத்தகைய மதிப்புக் குறைப்புக்கு ஆளாயிற்று. தங்கத்தின் விலை 42.22 டாலர்களாக உயர்த்தப்பட்டது. இதற் கிடையில் சுதந்திரச் சந்தையில் அது 1973 கடைசியில் 112 டாலர்களும் 1974 கடைசியில் 187 டாலர்களும் என உயர்ந்தது. ஒருநாள் அது 200 டாலர்களைக்கூட எட்டியது.

விமர்சகர்களைப்போல சொல்லலங்காரத்தோடு எழுதுவ தென்றால், இதை ஒரு சகாப்தத்தின் முடிவு என்று வர்ணிக்கவேண்டும். இதன் பிறகு யாரும் புதிய நிர்ணயிக்கப்பட்ட பரிவர்த்தனை விகிதங்களை நிறுவ முயற்சிக்கவில்லை. மிதக்கின்ற நாணங்களின் சகாப்தம் தொடங்கிவிட்டது. 1973 மார்ச்சுக்குப் பிறகு பரிவர்த்தனை விகிதங்களின் படம் ஒரு விசிறியைப் போலத் தோற்றமளிக்கிறது.

ஸ்விட்சர்லாந்தின் பிராங்க் விகிதம் [மற்ற எல்லா நாணயங்களோடும் சம்பந்தப்பட்ட சராசரியைக் கணக்கிடும் பொழுது] வேகமாக மேலே ஏறியது. 1973ன் முதல் காலாண்டில் இருந்ததைப்போல சுமார் இரண்டு மடங்காக 1979ல் அதிகரித்திருந்தது. சிறு நாடாகிய ஸ்விட்சர்லாந்தின் நாணயத்தின் குறிப்பிடத்தக்க ''ஸ்திரத்தன்மைக்கு'' மேற்கு உலகத்திலேயே அங்கே தான் மிகவும் குறைவான பணவீக்க விகிதம் இருந்ததும் வெளிநாடுகளிலிருந்து மூலதனம் அங்கே தொடர்ச்சியாகப் பாய்ந்துகொண்டிருப்பதும் அது ஸ்விஸ் நாயணத்துக்கு விரிவான, ஸ்திரமான தேவையை ஏற்படுத்தியிருப்பதும் காரணங்களாகும். ஜெர்மனியின் மார்க் இதைக் காட்டிலும் சற்றுக் குறைவான வேகத்தோடு ஆனால் எஃகின் உறுதியோடு அதிகரித்தது. 1979ல் அதன் மதிப்பு, அந்த நாணயம் மிதப்பதற்கு முன்பிருந்த மதிப்பைக் காட்டிலும் 45 சதவீதம் அதிகமாக இருந்தது. ''பலமான'' நாணயத்தைக் கொண்ட மூன்றாவது நாடு ஜப்பானாகும். முதலாளித்துவ உலகத்தில் மொத்த உற்பத்தியின் அளவின்படி மேற்கு ஜெர்மனியும் ஜப்பானும்

முறையே இரண்டாவது, மூன்றாவது இடங்களைப் பெற்றிருக்கின்றன; பண்ட ஏற்றுமதி அளவில் மேற்கு ஜெர்மனி அமெரிக்காவைக் கூட மிஞ்சிவிட்டது. இரண்டு நாடுகளுமே பணவீக்கத்தால் பாதிக்கப் பட்டிருந்தபோதிலும் அதைத் தாங்கிக்கொள்ளும் வரையறை களுக்குள் நிறுத்திகொண்டுவிட்டன. அவை உலகச் சந்தைகளில் உறுதியான நிலைகளைப் பெற்றிருக்கின்றன. எண்ணெய் இறக்கு மதிக்குத் தேவைப்படுகின்ற மாபெரும் வழங்கீடுகளைத் திருப்தி கரமாக நிறைவேற்றிக்கொண்டிருக்கின்றன.

எனினும் 1978–79ல் யென் நாணயத்தின் பரிவர்த்தனை விகிதம் குறிப்பிடும் அளவுக்குக் கீழே இறங்கியது. இது ஜப்பானின் பொருளாதார நிலைமை மோசமயைடத் தொடங்கியிருப்பதைப் பிரதிபலித்தது. இந்தப் படத்தின் மறு முனையில் இத்தாலி இருக்கிறது. இந்தப் படத்தின் மறுமுனையில் இத்தாலி இருக்கிறது. அதன் நாணயம் (மற்ற எல்லா நாணங்களோடும் சம்பந்தப்பட்ட சராசரியைக் கணக்கிடும்பொழுது) அதன் மதிப்பில் 40 சதவீதத்துக்கும் அதிகமாக இழந்துவிட்டது. கிரேட் பிரிட்டன் நாணயமும் மிகவும் மோசமான நிலைமையில் இருந்தது. 1977–க்கு முன்பு பவுன் ஸ்டர்லிங்கின் பரிவர்த்தனை விகிதம் பாதாளத்துக்கு விழுந்துவிட்டது. பிறகு வட கடல் எண்ணெய் அதன் வழங்கீடுகளின் சமநிலைக்கு உதவி செய்தபடியால் பவுனின் பரிவர்த்தனை விகிதம் ஓரளவுக்கு அபிவிருத்தி யடைந்தது. 1979ல் பவுனின் பரிவர்த்தனை விகிதம் 1973ன் முதல் காலாண்டைக் காட்டிலும் சராசரியாக 25 சதவீதம் குறைவாக இருந்தது. இந்தப் படத்தின் மத்தியில் 100 என்ற குறியீட்டெண்ணைச் சுற்றி அமெரிக்க டாலரும் கனடாவின் டாலரும் பிரெஞ்சு பிராங்க்கும் ஏறி இறங்கிக்கொண்டிருக்கின்றன. டாலரின் கதி குறிப்பிடத்தக்க அளவுக்கு மாறக் கூடியதாக இருந்தது. 1973–ல் வேகமாகக் கீழே இறங்கிய பிறகு அது மறுபடியும் பழைய மட்டத்தை அடைந்து 1977–ன் நடுப்பகுதி வரை அங்கேயே இருந்தது. அடுத்த வருடம் முழுவதிலும் அது வேகமாகக் கீழே இறங்கியது முக்கியமான பொருளாதார மற்றும் அரசியல் விளைவுகளை ஏற்படுத்தியது. அவற்றில் தங்கத்தின் டாலர் விலை தீவிரமாக அதிகரித்ததும் ஒன்றாகும். அதைப் பற்றிப் பின்னர் எழுதுவோம். இத்தகைய ஏற்ற இறக்கங்களின் விளைவாக 1979ல் டாலரின் சராசரி பரிவர்த்தனை விகிதம் அதன் ஆரம்ப மட்டத்தைக் காட்டிலும் சுமார் 10 சதவீதம் குறைவாக இருந்தது.

1980–1981ல் நிலைமை மறுபடியும் மாறியது. பல காரணங்களினால் டாலரின் பரிவர்த்தனை விகிதம் அதிகமான வட்டி வகிதம் கொடுக்கப் பட்டது இக்காரணங்களில் ஒன்றாகும். மேற்கு ஐரோப்பா விலிருந்து பண மூலதனம் மிகவும் அதிகமான அளவில் அமெரிக்காவுக்குள் வருவதற்கும் அதனாலேற்பட்ட டாலர்கள் பரிவர்த்தனை விகிதம் அதிகரித்தது அந்த சமயத்தில் தங்கத்தின் டாலர் விலையைக் குறைப்பதில் ஓரளவு பங்கு வகித்தது.

இன்றைய நிலைமைகளில் நாணயத்தின் பரிவர்த்தனை விகிதமும் அதன் ஏற்ற இறக்கமும் ஒரு நாட்டின் பொருளாதார மற்றும் நிதி நிலைமைக்க ஒரு முக்கியமான குறியீடாக இருக்கின்றன. ஆனால் தொடர்ச்சி யாக ஏற்படும் கூர்மையான ஏற்ற இறக்கங்கள் உலக முதலாயித்துவப் பொருளாதாரத்தில் ஸ்திரமற்ற நிலைமையின் மற்றொரு கூறை நுழைக்கின்றன. இந்தத் துறையில தானாகத் தோன்றும் நிகழ்வுகளை முழுமையான அளவுக்கு முதலாளித்துவ நாடுகளால் அனுமதிக்க முடியாது. பரிவர்த்தனை விகிதங்களின் ஏற்ற இறக்கங்களைப் பல்வேறு முறைகளின் மூலம் ஒழுங்குப்படுத்துமாறு அவை நிர்ப்பந்திக்கப்படுகின்றன. நாணயத் தலையீடு, அதாவது பரிவர்த்தனை விகிதத்தின் மீது தாக்கம் ஏற்படுத்துகின்ற நோக்கத்தோடு மத்திய வங்கிகள் சந்தையில் ஒரு நாணயத்தை வாங்குவது அல்லது விற்பனை செளிணிகின்ற மரபுவழிப்பட்ட வடிவத்தை அவை பயன்படுத்துகின்றன. எப்படியாவது பரிவர்த்தனை விகிதங்களை ஸ்திரமாக்குவதில் இதற்கு நெருக்கமான இன்னொரு முறையும் உண்டு.

ஒரு நாணயத்தைத் தலைமை நாணயத்தோடு இணைத்து அதனோடு சேர்ந்து மிதப்பது இந்த முறையாகும். சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் புள்ளி விவரங்களின்படி 1979–ன் மத்தியில் அதில் உறுப்பினராக இருந்து 137 நாடுகளில் 41 நாடுகள் மட்டும் தங்களுடைய நாணயங்களை சுதந்திரமாக மிதக்க அனுமதித்தன. அல்லது ஏதாவதொரு நிலையைத் தேர்ந்தெடுக் காதிருந்தன. 56 நாடுகளின் நாணயங்கள் தலைமை நாணயங்களோடு இணைக்கப்பட்டிருந்தன. அவற்றில் 36 நாணயங்கள் டாலரோடு இணைக்கப் பட்டிருந்தன. அநேகமாக இவை முற்றிலும் வளர்முக நாடுகளாக இருந்தன. 35 நாடுகளின் நாணயங்களின் பரிவர்த்தனை விகிதங்கள் பல்தொகுதி நாணயக் கூடைகளின், குறிப்பாக எஸ்.டி.ஆர். அலகுகளின் அடிப்படையில் நிர்ணயிக்கப்பட்டிருந்தன. கடைசியாக 8 பொருள்சந்தை நாடுகள் ஐரோப்பியப் பணவியல் அமைப்பில் சேர்ந்து

தங்களுடைய நாணயங்களுக்கிடையே நிலையான விகிதங்களுக்க ஆதரவு கொடுத்தன. அதன் மூலம் கொந்தளிப்பான நாணயங்க கடலில் ஒன்று சேர்ந்து மிதந்தன. இது மிகவும் சிக்கலான சித்திரமாகத் தோன்றும். இங்கே இதை மேலும் ஆராய நாம் உத்தேசிக்கவில்லை. தங்கத்தைப் பற்றிய பொருளோடு நேரடியாகத் தொடர்பு கொண்டிருக்கும் ஒரு விஷயத்தை மட்டும் இங்கே குறிப்பிடுவோம்.

இந்தப் பிரச்சினையை வெறும் கருத்தளவில் மட்டும் ஆராய்ந்த பொருளியலாளர்கள் மிதக்கும் நாணயங்கள் தங்க மற்றும் அந்நியச் செலாவணி சேம நிதிகளின் தேவையை வெகுவாகக் குறைத்துவிடுகின்றன. அவை ‘‘சுத்தமான நிலைமையில் மிதக்கும் பொழுது’’, அதாவது அரசாங்கங்கள் மற்றும் மத்திய வங்கிகளின் தலையீடு இல்லாமல் மிதக்கும் பொழுது இந்த நிதிகள் முற்றிலும் தேவையில்லாமற் போய்விடுகின்றன என்ற முடிவு செய்தனர். இதன் பொருள் பின்வருமாறு: வழங்கீடுகளின் சமநிலை மிகவும மோசமடைகின்ற பொழுது நாணயத்தின் பரிவர்த்தனை விகிதம் மிகவும் கீழே இறங்கிவிடுகிறது. அப்பொழுது தானாகவே தோன்றும் காரணிகள் அமைதி நிலையை மறுபடியும் ஏற்படுத்துகின்றன சேமநிதிகளைச் செலவிடத் தேவையில்லை. ஆனால் உண்மையில் ஒருநாடோ அல்லது அதனுடைய கூட்டாளிகளோ பரிவர்த்தனை விகிதம் இந்த அளவுக்குக் கீழே இறங்க அனுமதிக்க முடியாது என்பது தெரியவந்தது.

வழங்கீடுகளின் சமநிலையை ஒழுங்குபடுத்துவதற்கும் பரிவர்த்தனை விகிதத்தைச் சந்தை முறைகளின் மூலமாக ஆதரிப்பதற்கும் சேம நிதிகள் அவசியமாகும். எழுபதுக்களில் வழங்கீடுகளின் சமநிலைகளின் ஏற்ற இறக்கங்கள் மாபெரும் அளவுகளில் இருந்தன. ஆகவே சேம நிதிகள், அவற்றின் அளவையும் அடுக்கமைவையும் பற்றிய பிரச்சினை மட்டுப்படுத்தப்படவில்லை. சேம நிதிகளின் அதிக நம்பிக்கையான வடிவமாகிய தங்கத்துக்கு இது இரண்டாம் காற்றாக ஆதரவாக இருந்ததை நாம் பின்னர் விவரிப்போம்.

# காகிதத் தங்கம்

உ லக நிதி மற்றும் பணவியல் அமைப்பில் சமீப வருடங்களில் பல புதுமைகள் ஏற்பட்டிருக்கின்றன. இவை அசாதாரணமான வையாக, முதல் பார்வைக்கு விசித்திரமானவையாகக் கூடத் தோன்றுகின்றன. இவற்றில் ‘‘காகிதத் தங்கம்’’–சர்வதேசக் கடன் பணம்–மிகவும் முக்கியமானது.

தங்கம் இல்லாதிருக்குமானால் அப்படி ஒன்றைப் படைக்க நேர்ந்திருக்கம். ஏனென்றால் உலகப் பொருளாதாரத்தில் அது அவ்வளவு உபயோகமாக இருக்கிறதென்று எய்ன்ஸீக் எழுதினார். அவர் எந்தத் தங்கத்தை ஆதரித்தாரோ அதை அரசுகளுக்கு இடையில் நடைபெறும் செலாவணியிலிருந்து துரத்துவதற்கும் கடைசியில் அதனிடத்தைக் கைப்பற்றுவதற்குமே ‘‘செயற்கைத்’’ தங்கம் கண்டுபிடிக்கப்பட்டது என்பது வேடிக்கையானதே. இங்கே தங்கத்தைப் போன்ற குணாம் சங்களைக் கொண்ட, செயற்கையாகத் தயாரிக்கப்பட்ட பொருளைப் பற்றி நாம் பேசவில்லை. பல நாடுகளைச் சேர்ந்த அரசாங்கங்களின் கூட்டுப் பொறுப்பை ஆதார மாகக் கொண்ட, விசேஷமான வடிவத்தைக் கொண்ட கடன் பணத்தைப் பற்றியே நாம் பேசுகிறோம்.

சர்வதேசக் கடண் பணம் நீண்ட மற்றும் சிக்கலான பேச்சுவார்த்தைகளுக்குப் பிறகு 1969ல் முதன் முறையாகக் கொண்டுவரப்பட்டது. அதை விசேஷமான வாங்கும் உரிமைகள் (S.D.R.Special Drawing Rights) என்று சொல்கிறார்கள். எஸ்.டி.ஆர். (S.D.R.Special Drawing Rights)- என்ற முதல் எழுத்துக்களின் மூலம் அது வழக்கமாகக் குறிக்கப்படுகிறது.

எஸ்.டி.ஆரையும் சர்வதேசப் பணவியல் அமைப்பில் அவற்றின் பாத்திரத்தையும் பற்றிய பிரச்சினைகள் சிறிதும் சுலபமானவை அல்ல. இந்த அமைப்பைச் சீர்திருத்துவதைப் பற்றிய சர்வதேசப் பேச்சு வார்த்தைகளில் பல வருடங்களாகப் பங்கெடுத்து வந்திருக்கின்ற ஒரு அமெரிக்க நிபுணர் அதன் செய்முறை அம்சங்கள் மிகவும் சிக்கலானவை, இந்தப் பேச்சுவார்த்தைகளில் தங்கள் நாடுகளின் அதிகாரபூர்வமான பிரதிநிதிகளாகப் பங்கெடுக்கும் நிதி அமைச்சர்களின் பெரும்பாலானவர்கள் இவற்றைப் புரிந்துகொள்வார்கள் என்று நாம் எதிர்பார்க்க முடியாது என்று எழுதியிருக்கிறார்.

எனக்கு அமைச்சர்களைப் பற்றித் தெரியாது. ஆனால் பொதுமக்களுக்கு, சர்வதேசப் பணவியல் பிரச்சினையைப் பற்றி விசேஷமாகத் தெரிந்துகொண்டிராத தொழில் முறைப் பொருளியலாளர்களுக்கும்கூட எஸ்.டி.ஆர். எனப்படுபவை ஒரு வகையான புதிராகவே இருக்கின்றன. சர்வதேச நிதி ஸ்தாபனம் சர்வதேச நிதித்துறைப் புள்ளிவிவரங்கள் என்ற அதிகமான பக்கங்களைக் கொண்ட மாதாந்திர இதழை வெளியிடுகிறது. இதில் தங்கத்திலும் டாலர்களிலும் எடுத்துரைக்கப்படுகின்ற நாணயங்களின் சமமதிப்புக்களின் சாதாரணமான அட்டவணைகள் ஆரம்பத்தில் வெளியிடப்பட்டன. இப்பொழுது ஒரு எஸ்.டி.ஆர். அலகு எத்தனை அமெரிக்க டாலர்களின் மதிப்புக்குச் சமம். ஒரு அமெரிக்க டாலர் எத்தனை எஸ்.டி.ஆர்.அலகுகளின் மதிப்பைக்கொண்டிருக்கிறது என்று அட்டவணைகளில் வெளியிடப்படுகிறது. இவற்றிலிருந்து நாம் அதிகமாகத் தெரிந்துகொள்ள முடிவதில்லை. அது மட்டுமல்ல. இந்த அளவுகளும் ஒவ்வொரு நாளுமம மாறுகின்றன. உதாரணமாக, 1977 மார்ச் 1-ந் தேதியில் டாலர் குறிப்பிடல் 0.864165 எஸ்.டி.ஆர். அலகுகளாகவும் மார்ச் 31ந் தேதியில் 0.862691 அலகுகளாகவும் இருந்தது. அந்த மாதத்தில் டாலரின் மதிப்பு லேசாகக் குறைந்துவிட்டது. இன்னொரு அட்டவணை முக்கியமான நாணயங்கள் ஒவ்வொன்றின் பரிவர்த்தனை விகிதமும் நாள்தோறும் டாலரோடு ஒப்பிடும்பொழுது ஏறி இறங்குவதைக் காட்டுகிறது.

முன்பு சர்வதேச நிதி ஸ்தாபனத்தோடு ஒவ்வொரு நாடும் செய்யும்நடவடிக்கைகளையும் அதன் அந்நியச் செலாவணி சேம நிதிகளையும் பிரதிபலிக்கின்ற அட்டவணை வரிசை வெளியிடப்பட்டது. இந்தத் தொகைகள் டாலர்களில் வெளியிடப்பட்டது. இந்தத் தொகைகள் டாலர்களில் வெளியிடப்பட்டிருந்தாலும் அவசியமானால் ஒருவர் தங்கத்தில் அல்லது ஏதாவதொரு நிலையான செலாவணியில் அவற்றைச் சுலபமாகக் கணக்கிட்டுக் கொள்ளலாம். இதுவும் அறிமுகமானதாகவும் சுலபமாகப் புரிந்துகொள்ளக் கூடியதாகவும் இருந்தது.

ஆனால் இன்று நாம் படிப்பது வேறு. 1976 கடைசியில் மேற்கு ஜெர்மனியிடமிருந்த மொத்தச் சேம நிதிகள் 29.9 பில்லியன் எஸ்.டி.ஆர். அலகுகளாகுமக். இவற்றில் 4.1 பில்லியன் அலகுகளுக்கச் சமமான தங்கம், 22.0 பில்லியன் அலகுகளுக்கச் சமமான அந்நியச் செலாவணி, எஸ்.டி.ஆர் 1.7 பில்லியன் அலகுகள் மற்றும் சர்வதேச நிதி ஸ்தாபனத்தில் 2.1 பில்லியன் அலகுகளுக்குக் காப்புரிமையும் அடங்கும். எஸ்.டி.ஆர்.அலகுகளில் தங்கத்தை மதிப்பிடுவது முற்றிலும்

மரபுவழிப்பட்டதாக இருப்பது இந்த விவகாரத்தை மேலும சிக்கலாக்குகிறது. அது தங்கத்தின் உண்மையான சந்தை விலையை எவ்விதத்திலும் பிரதிபலிக்கவில்லை. ஒரு காலத்தில் அலகின் தங்க அடக்கம் ‘‘பழைய’’ டாலரின் [1971ல் மதிப்புக் குறைப்பிற்கு முன்பு] கிராம் தங்கத்தைக் கொண்டிருந்தது என்ற விவரத்தை மட்டுமே பிரதிபலிக்கிறது. ஆனால் இன்று எஸ.டி.ஆர்.அலகுக்குத் தங்க அடக்கம் கிடையாது. ஆகவே அதைத் தங்கத்துக்குப் பரிவர்த்தனை செய்ய முடியாது. தங்கத்தின் டாலர் விலையைப் பொறுத்தவரை பண்ட விலைகளைப் பற்றிய பகுதியில் ஆங்கில அகர வரிசைப்படி மீன் மாவுக்கும் வேர்க் கடலைக்கும் இடையில் அது இடம் பெறுவது குறிப்பிடத்தக்க தாகும். தங்கம் நாணய உலோகம் என்ற நிலையிலிருந்து அகற்றப் பட்டு சாதாரணப் பண்டத்தின் நிலைக்குத் தாழ்த்தப்பட்டு விட்டது என்பதை இந்த இதழாசிரியர்கள் இப்படி எடுத்துக்காட்ட விரும்புகி றார்கள் போலும்.

எஸ்.டி.ஆர்.எங்கேயிருந்து கிடைக்கின்றன? அவை நிறைவேற்றுகின்ற செயல்கள் யாவை? அவற்றைக் காகிதத் தங்கம் என்று பத்திரிகையாளர் நடையில் குறிப்பிடக் காரணமென்ன?

இவ்வகையான கடன் பணத்தை உருவாக்க வேண்டு மென்ற எண்ணம் நெடுங்காலமாகவே இருந்திருக்கிறது. அரசுகளுக்கிடையே நடைபெறும் செலாவணியில் அவசியம் ஏற்படுகின்ற பொழுது விரும்பியபடி அதிகப்படுத்தக்கூடிய ரகத்தைச் சேர்ந்த பணத்தை நுழைத்துவிடுவதைப் பற்றிய பிரச்சினையே அது. இந்த அம்சத்தில் அது தங்கத்தைக் காட்டிலும் சிறப்புடையதாக இருக்கும். ஏனென்றால் மத்தியச் சேம நிதிகளில் தங்கம் பாய்வது புதிய கிடைக்குமிடங்களைக் கண்டுபிடிப்பது மற்றும் பணம் அல்லாத உபயோகங்களுக்குத் தங்கத் தேவை ஆகிய தற்செயலான நிகழ்வுகளைப் பொறுத் திருக்கிறது.தேசிய நாணங்களைக் [டாலர்] காட்டிலும் அது சிறப்புடையதாகவும் இருக்கும். ஏனென்றால் தேசிய நாணயத்தை சர்வதேசப் பணமாக உபயோகித்தது நெருக்கடிக்கு வழிவகுத்துவிட்டது. பொருளியலாளர்கள் தயாரித்த திட்டங்களில், காகிதத்தில் அது இப்படித் தோற்றமளித்தது.

எல்லாமே உண்மையில் இதைக் காட்டிலும் இன்னும் அடக்கமாகத்தான் இருந்தது. ஆனர் எஸ.டி.ஆரை அறிமுகப்படுத்துவதை ஆதரித்தவர்கள் மனந்தளரவில்லை. இது ஒரு தொடக்கம் மட்டுமே என்று அவர்கள் நினைக்கிறார்கள். ஒரு நாட்டின் மத்திய வங்கி காதிதப் பணத்தை வெளியிடுவதைப் [செலாவணியில் ஈடுபடுத்துவதைப்]போல, ஏறக்குறைய

அதே முறையில் 19710– 1972ல் சர்வதேச நிதி ஸ்தாபனம் 9.3 பில்லியன் எஸ்.டி.ஆர். அலகுகளைப் "படைத்து" வினியோகித்தது. அந்த சமயத்தில் ஒரு அலகின் தங்க அடக்கம் ஒரு டாலருக்குச் சமமாக இருந்தது. சூனியத்திலிருந்து உருவாக்கப்பட்ட இந்தப் பணத்தை ஒவ்வொரு நாடும் தன்னுடைய சேம நிதிகளில் சேர்த்துக்கொண்டது. அவ்வாறு செய்ததன் மூலம் முதலாளித்துவ உலகத்தில் கூடுதலாகச் செல்வம் உண்மையான மதிப்புக்களில் அடங்கியிருக்கிறது. இது வெறும் காகித மதிப்பு. ஆனால் ஒவ்வொரு நாட்டையும் தனித்தனியாகப் பார்க்கும் பொழுது இந்தச் சேர்ப்பு உண்மையானதாகும். இது அந்த நாட்டின் ரொக்க நிலையை, சர்வதேசக் கடன்களைத் தீர்ப்பதற்கு அதன் திறமையை அதிகப்படுத்தியது.

எஸ்.டி.ஆர். தங்கத்தைப் போன்றியிருப்பது எவ்விதம்? முதலாவதாக, வழங்கீடுகளின் சமநிலையில் ஏற்படும் பற்றாக் குறையைத் தீர்க்க ஒரு நாடு அதை உபயோகிக்கும்பொழுது தங்கம் கொடுத்தது மாதிரியே இறுதி வழங்கீடு செய்கிறது. அது என்றைக் காவது கொடுத்துத் தீரவேண்டிய கடன் அல்ல. இரண்டாவதாக, எஸ்.டி.ஆர்.சேம நிதிகள் அதே சமயத்தில் யாரோ ஒருவரிடம் வாங்கிய கடன் பணம் அல்ல (இந்த விஷயத்தில் டாலர் சேம நிதிகளலிருந்து வேறுபட்டிருக்கின்றன). அவற்றின் விதி கடன் வாங்கியவருடைய (உதாரணமாக, அமெரிக்க வங்கிகள்) நிலையைப் பொறுத்திருக்கவில்லை. மூன்றாவதாக ஒரு தடவை எஸ்.டி.ஆர். அலகுகளை மத்திய வங்கியின் செலாவணியில் ஈடுபடுத்திவிட்டால் அதைவிட்டு அவை போகமுடியாது, ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டுக்கு அல்லது சர்வதேச நிதி ஸ்தாபனத்துக்க மட்டுமே போக முடியும்.

எனினும் அவை தங்கம் அல்ல என்பது உண்மைதான். அவற்றுக்கு உள்ளார்ந்த மதிப்பு கிடையாது. எல்லா விதமான காகிதக் கடன் பணத்தையும் போலவே அவற்றின் மீதும் அவற்றை வெளியிட்டிருக்கம் அமைப்பின் மீதும் உள்ள நம்பிக்கையின் அடிப் படையில் மட்டுமே அவை செலாவணியாகின்றன. எஸ்.டி.ஆரின் சாதகம் அவை கூட்டுக் வணியாகின்றன. எஸ்.டி.ஆரின் சாதகம் அவை கூட்டுக்கடனை அடிப்படையாகக் கொண்டிருப்பதே. அரசு மத்திய வங்கிகள் 18 மற்றும் 19–ம் நூற்றாண்டுகளில் முதன் முறையாக வங்கிப் பத்திரங்களை வெளியிட்டபொழுது தனியார் வங்கிகளின் பத்திரங்களை காட்டிலும் அவை நம்பகமானவையாக இருந்தன. எனினும் அவை காகிதம் அல்ல என்பது இதன் பொருளல்ல. தேசிய வங்கிப் பாத்திரங்களையும் காகிதக் கடன் பணத்தின் மற்ற வடிவங்களையும் காட்டிலும் எஸ்.டி.ஆர்.அதிகமான

நம்பிக்கைக்கு உரியவையாக இருந்தபோதிலும் அவற்றின் பதிவுகளாக மட்டுமே இருக்கின்றன. வங்கிப் பத்திரங்களின் வடிவத்தில் இல்லை.

எஸ்.டி.ஆர்.என்ற அமைப்பு சமரசத்தின் முத்திரையைத் தாங்கி யிருக்கிறது. விரிவான பணச் செயல்களைக் கொண்டிருப்பதோடு, சேம நிதிகள் மற்றும் கடன் தீர்வுகளின் சாதனம் என்ற முறையில் தங்கத்தை உண்மையாகவே அகற்றக் கூடிய சர்வதேசப் பணத்தைப் படைக்க அமெரிக்கா முயற்சி செய்து கொண்டிருந்தது. மரபுவழயாக தங்கத்திடம் பாசம் கொண்டிருந்த பிரான்ஸ் இதை விரும்பவில்லை. எனவே சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் இதர கடன் வடிவங்களைப்போல மற்றொரு வடிவத்தைப் படைக்கும் பிரச்சினையாக இதைக் குறைக்க முயற்சி செளிணிதது. கடைசியல் எஸ்.டி.ஆர்.பணக் கடன் ஒட்டுச் செடியாகப் பிறந்தது.

எஸ்.டி.ஆர்.என்பது வரிக்குதிரையைப் போன்றது. அது வெள்ளைக்கோடுகள் உள்ள கறுப்புக் குதிரை என்று சொல்லலாம், என்று நிபுணர் கூறினார். 1970-க்களின் மத்தியில் எண்ணெய் விலை அதிகரித்ததனாலும் மற்ற காரணங்களினாலும் வழங்கீடுகளின் சமநிலைகளில் மிகப்பெரிய மாற்றங்கள் ஏற்பட்டன. அந்தக் கொந்தளிப்பான காலத்தில் இப்படி உருவாக்கப்பட்ட எஸ்.டி.ஆர்.அலகுகள் மிகவும் அடக்கமான பாத்திரத்தை வகித்தன. இத்தகயை நிலைமைகளில் எஸ்.டி.ஆரின் குறைவான தொகைகள் -பற்றாக்குறை நாடுகள் அவற்றை உபயோகப் படுத்துவது கட்டுப்படுத்தப்பட்டிருந்தது -வழங்கீடுகளைச் சமநிலைப்படுத்துவதில் எவ்விதமான உண்மையான பாத்திரத்தையும் வகிக்கவில்லை. ஏனென் றால் அவை முழுமையாகப் பணமாக இல்லாமல் கடன் பணமாகத் தான் இருந்தன. ஆறு வருட காலம் புதிய எஸ்.டி.ஆர். வெளியிடப்படவில்லை.

ஆனால் 1979ல் எஸ்.டி.ஆர். மறுபடியும் வெளியிடப் பட்டன. 1979-81ல் உறுப்பினர் நாடுகளின் பங்களவின் அடிப்படையில் மேலும் 12 பில்லியன் அலகுகள் வினியோகிக்கப்பட்டன. முதல் வினியோகத்தில் செய்யப் பட்டதைப் போலவே இப்பொழுதும் புதிய எஸ்.டி.ஆர். அலகுகளில் பெரும்பகுதி தொழில்துறையில் வளர்ச்சி யடைந்த நாடுகளுக்க ஒதுக்கப்பட்டன. மேலும் எஸ்.டி.ஆரின் பண குணாம்சங்கள் விஸ்தரிக்கப்பட்டன, அதாவது அவற்றை வைத்திருப்பவர்கள் நாணங்களை வாங்க, கடன்களைத் தீர்க்க, இதரவைகளுக்கு அவற்றைப் பயன்படுத்துவதற்குரிய வாய்ப்புக்கள் அதிகப்படுத்தப்பட்டன. எஸ்.டி.ஆரை ஆதரிப்பவர்கள், இவர்களுடைய கோட்டையான சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் உடன்பாட்டின் ஷரத்துக்களில் பதிவு செய்யப்பட்டிருக்கும்

நோக்கத்தை, அதாவது சர்வதேசச் சேம நிதிகளின் முக்கியமான வடிவமாக எஸ்.டி.ஆரை மாற்றுவதென்று நோக்கத்தை நிறைவேற்றுகின்ற பாதையில் முன்னேறிச் செல்வதென்று இவற்றைக் கருதுகிறார்கள்.

தற்பொழுது அதிகக் காலமாகவே இன்னொரு திட்டமும் விவாதிக்கப்பட்டு வருகிறது. இதை அமுலாக்கினால சர்வதேசச் செலாவணியில் எஸ்.டி.ஆரின் அளிப்பில் கணிசமான அதிகரிப்பும் அதன் காரணமாக சர்வதேசச் சேம நிதிகளில் அவற்றின் அளவு விகிதத்தின் அதிகரிப்பும் நடைபெறும். இந்தத் திட்டம் பதிலீட்டுக் கணக்கை ஏற்படுத்துதல் என்று சொல்லப்படுகிறது. இராபர்ட் டிரிபின் என்பவர் உலக வங்கியை நிறுவ வேண்டும். உண்மையான சர்வதேசக் கடன் பணத்தை ஏற்படுத்த வேண்டும் என்ற கருத்துக்களைத் தீவிரமாகப் பரப்பியவர். அவர் மிகவும் முந்திய காலமான அறுபதுக்களின் ஆரம்பத்தில் கூறிய கருத்துக்குப் புத்துயிர் தரப் பட்டிருக்கிறது என்றுதான் உண்மையில் இதைச் சொல்லவேண்டும். ஏராளமான அளவில் டாலர்களை வைத்திருக்கும் மத்திய வங்கிகள் சர்வதேச நிதி ஸ்தாபனம் வெளியிடுகின்ற எஸ்.டி.ஆர். அலகுகளுக்கு அவற்றைப் பரிவர்த்தனை செய்து கொள்ளும். நிதி ஸ்தாபனம் இதற்காகவே விசேஷமான எஸ்.டி.ஆர். அலகுகளுக்கு அவற்றைப் பரிவர்த்தனை செய்து கொள்ளும். நிதி ஸ்தாபனம் இதற்காகவே விசேஷமான எஸ்.டி.ஆர். கடன் பத்திரங்களில் முதலீடு செளிணியும். இத்தகைய பரிவர்த்தனைக்கு வைக்கப்படும் டாலர்களின் அளவைப் பற்றி விவாதிக்கும் பொழுது 10 பில்லியன் எஸ்.டி.ஆர். அலகுகளிலிருந்து 50 பில்லியன் வரை [1980ன் ஆரம்பத்தில் இது சுமார் 65 பில்லியன் டாலர்கள் மதிப்பைக் கொண்டிருந்தது] வெவ்வேறு ஆலோசனைகள் சொல்லப்படுகின்றன.

Economist பத்திரிகை இந்தத் தொகைகளைக் குறிப்பிட்டுப் பின்வருமாறு எழுதுகிறது: “பிரச்சினையின் அளவோடு ஒப்பிடும்பொழுது உச்சத்தொகைகூட சொற்பமானதே”. அமெரிக்காவுக்கு வெளியே திரட்டப் பட்டிருக்கும் டாலர்களின் மிகப்பெரும் அளவு இங்கே பிரச்சினை என்று சொல்லப்படுகிறது. இந்தக் காலத்தின் உணர்ச்சிக்கு ஏற்ப இந்தத் திட்டத்தில் உண்மையான தங்கத்துக்கும் இடம் கொடுப்பதற்கு இப்பொழுது முயற்சி செய்யப்படுகிறது. சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் தங்க சேம நிதி உத்தரவாதமளிக்கும் நிதியாக உபயோகிக்கப்படும் என்று கருதப்படுகிறது. குறிப்பாக டாலரின் பரிவர்த்னை விகிதம் கீழே இறங்குமானால் நிதி ஸ்தாபனத்தின் இழப்புக்களை அது ஈடு செய்யும் என்று கருதப்படுகிறது.

சர்வதேச நிதி ஸ்தாபனம் கடைசியில் அமெரிக்காவின் மத்திய நிதி அமைப்பைப் போன்ற உலக மத்திய வங்கியாக மாறுமா? எஸ்.டி.ஆர். சர்வதேச வழங்கீடுகளின் ஒரே சாதனமாக அல்லது குறைந்தபட்சம் முக்கியமான வடிவமாக முடியுமா? இந்தக் கேள்விகளுக்கு மார்க்சிஸ்டுகள் பின்வரும் முறையில் பதிலளிக்கிறார்கள்: முதலாளித்துவம் முதலாளிததுவமாக நீடிக்கின்ற வரையிலும் அது இயலாததாகும். உலக ரீதியல் இத்தகைய மாபெரும் அமைப்பை ஏற்படுத்துவது முதலாளித்துவத்தின் இயல்புக்கு மாறானது, மிகை ஒழுங்குபடுத்தல் என்பது ஒரு காலத்தில் அதிக மாகப் பேசப்பட்ட மிகை ஏகாதிபத்தியம் என்ற கருது கோளைப்போன்றதே. லெனின் இதைக் கண்டனம் செய்தார். அவர் மற்ற விஷயங்களோடு பின்வருமாறு எழுதினார்:

''இன்றைய வளர்ச்சியின் போக்கு எல்லா நிறுவனங் களையும் விதிவிலக்கில்லாமல் எல்லா அரசுகளையும் விதிவிலக்கில்லாமல் தன்வயப்படுத்து கின்ற ஒற்றை உலக டிரஸ்ட்டை நோக்கி இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. ஆனால் இந்த வளர்ச்சி தனி சந்தர்ப்பங்களில், அதிக வேகத்தில், பொருளாதார ரீதியில் மட்டுமின்றி அரசியல், தேசிய மற்றும் இதர முரண்பாடுகள், மோதல்கள், கொந்தளிப்புகள் மூலமாக நடைபெறுகின்றபடியால், ஒரே உலக டிரஸ்ட் ஏற்படு வதற்கு நெடுங்காலத்துக்கு முன்பே, தேசிய நிதி மூலதனதங்களின் ''மிகை ஏகாதிபத்திய'' உலக ரீதியான ஒருங்கிணைப்பு ஏற்படுவதற்கு முன் ஏகாதிபத்தியம் தவிர்க்க முடியாத வைகயில் வெடித்து முதலாளித்துவம் அதற்கு எதிரானதாக மாற்றமடையும்.''

முதாளித்துவத்தின் கீழ் எல்லா உற்பத்தி, எல்லா வர்த்தகம், எல்லா நுகர்வு ஆகியவற்றையும ஒழுங்கு படுத்துகின்ற ஒற்றை உலக டிரஸ்ட் ஏற்பட முடியாத தென்பதைப் போலவே உலக ரீதியில் பணத்தையும் கடனையும் ஒழுங்குப்படுத்துகின்ற உலக உயர் மட்ட வங்கியும் ஏற்பட முடியாது.

எனினும் இந்தத் திசையில் முன்னேற்றம் சாத்தியமே. அதுமட்டுமல்ல. இது தர்க்கரீதியானது, தவிர்க்க முடியாததும்கூட. அதனால்தான் எஸ்.டி.ஆர். படைக்கப்படுகிறது. பரிணாம வளர்ச்சி அடைகிறது. கணக்குச் செய்யப்படும் அலகு என்ற முறையில் சர்வதேசப் பணவியல் உறவுகளில் எஸ்.டி.ஆரின் பாத்திரம் மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். இதைப் புரிந்துகொள்வது சுலபமே. நாணங்களின் தங்க சமமதிப்புக்கள் செய்முறையிலும் பிறகு சட்ட ரீதி யிலும் ஒழிக்கப்பட்டு நாணயங்கள் சொல்லப்படுமுன்

பணத்தொகைகளுக்கு எப்படிக் கணக்கு வைத்திருப்பது என்ற கேள்வி எழுந்தது. பொதுக் குறியீடாக எது இருக்க முடியும்?

எஸ்.டி.ஆர். அலகு மேற்கொண்டிருக்கும் செயல்கள் இங்கே கூறப்பட்டன. ஆனால் அது மிகவும் பிரத்யேமான பொதுக் குறியீடாக இருக்கிறது. ஏனென்றால் அது மற்ற நாணயங்களோடு சேர்நது மிதக்கிறது. எஸ்.டி.ஆரின் மதிப்பு தங்கத்திலோ அல்லது பண்டங்களின் எந்த மாதிரியிலுமோ நிலையானது அல்ல. பணவீக்கத்தின் தாக்கத்தில் நாணயங்கள் மதிப்புக் குறைகின்ற அளவுக்கு அவற்றோடு சேர்ந்து எஸ்.டி.ஆர். அலகும் மதிப்புக் குறைகின்றது. எஸ்.டி.ஆர். அலகு அறிமுகம் செய்யப்பட்ட பத்து வருடங்களுக்கும் அதிகமான காலத்தில் அதன் உண்மையான வாங்கும் சக்தி சுமார் மும்மடங்கு குறைந்திருக்கிறது. அது மிகத் தீவிரமான நிலைகளுக்குப் போகாமல் இந்த மதிப்புக் குறைவைச் சராசரியாக்கிக் கொள்கிறது.

எஸ்.டி.ஆர்.அலகின் மதிப்பு (நாணயங்களோடு அதன் அளவு விகிகதம்) “ஆதார அளவுக்கூடை” என்று சொல்லப்படுகின்ற பதினாறு முக்கியமான நாணயங் களின உண்மையான பரிவர்த்தனை விகிதங்களை அடிப்படையாகக் கொண்டு நிர்ணயிக்கப்படுகிறது. 1981க்குப் பிறகு இந்தக் கூடையிலுள்ள நாணங்களின் எண்ணிக்கை ஐந்தாகக் குறைந்து விட்டது. ஆனால் இதுதான் நிலையென்றால் நாணங்களன் எஸ்.டி.ஆரில் தங்களுடைய மதிப்பை அளந்து கொள்வது எப்படி? இது ஒரு நச்சுச் சுழல். இதைச் சமாளிப்பதற்காக ஒரு குறியீட்டு நிலை ஏற்றுக்கொள்ளப்பட்டது. டாலர்களிலும் மற்ற நாணங்களிலும் எஸ்.டி.ஆரின் தொடக்க மதிப்பு நிர்ணயிக்கப்பட்டது. எஸ்.டி.ஆரின் தங்க அடக்கத்தை இரண்டு தடவைகள் (1971 மற்றும் 1973லும்) மதிப்புக் குறைக்கப்பட்ட டாலரின் தங்க அடக்கத்தால் வகுத்தால் கிடைக்கும். 1,20635 டாலர் அதன் மதிப்பு என்று முடிவு செய்யப்பட்டது. இங்கும் தங்கம் சம்பந்தப்பட்டிருப்பதை நாம் பார்க்க முடியும்.

இந்த எண்ணையும் டாலருக்கு ஒரு குறிப்பிட்ட நாணயத்தின் பரிவர்த்தனை விகிதத்தையும் அடிப்படை யாகக் கொண்டு எஸ்.டி.ஆருக்கும் அந்த நாணயத்துக்கும் உள்ள அளவுவிகிதம் நிர்ணயிக்கப்பட்டது. எல்லா நாணயங்களுக்கும் இதேமுறை பின்பற்றப்பட்டது. இதற்குப் பிறகு எஸ்.டி.ஆர். உண்மையில் நாணயங்களின் மதிப்பை எடுத்துக் கூறவில்லை. ஒவ்வொரு நாணயத் தின் பரிவர்த்தனை விகிதமும் மற்ற எல்லா நாணயங்களோடும் ஒப்பிடுகின்ற பொழுது இந்தத் தொடக்க

மட்டத்திலிருந்து எவ்வளவு விலகியிருக்கிறது என்பதையே எடுத்துக் கூறுகிறது.

எஸ்.டி.ஆரில் அளக்கப்படும்பொழுது ஏற்ற இறக்கங் கள் மென்மையாக்கப்பட்டு சீராக்கப்படுகின்றன. உதாரண மாக, 1977 ஆகஸ்ட் முதல் டிசம்பர் முடிய மேற்கு ஜெர்மனியின் மார்க்குக்கும் ஜப்பானின் யென்னுக்கம் டாலரின் பரிவர்த்தனை விகிதம் முறையே 9 சதவீதமும் 10 சதவீதமும் குறைந்தது. ஆனால் எஸ்.டி.ஆருக்கு அதன் அளவு விகிதம் 4 சதவீதம் மட்டுமே குறைந்தது. பரிவர்த்தனை விகிதங்களில் பெரிய அளவில் ஏற்படுகின்ற ஏற்ற இறக்கங்களினால் கடன்கொடுத்தவர்கள். முதலீடு செய்தவர்கள், எதிர்காலத்தில் பணத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டிய வர்கள் ஆகியோர் இழப்புக்கள் ஏற்படாதென்ற உத்தர வாதத்துக்கு முயற்சிக்கிறார்கள். ஓரளவுக்கு எஸ்.டி.ஆர். இதைச் செய்கின்றன. உதாரணமாக, பவுன் ஸ்டர்லிங்கில் ஒரு கடனைக் கொடுக்கும் பொழுது எஸ்.டி.ஆரின் நிலையான தொகைக்குச் சமமான பவுன்களைத் தரவேண்டும் என்று நிபந்தனை விதிக்கப்படுகிறது.

ஆனால் முக்கியமான ஆபத்தாகிய பணவீக்கத்துக்கு எதிராக எஸ்.டி.ஆர். உத்தரவாதம் கொடுக்க முடியாது என்பதை நாம் பார்த்தோம். வளர்ச்சியடைந்த நாடுகள் டாலருக்குப் பதிலாக எஸ்.டி.ஆர்.அலகு களில் எண்ணெய் விலைகளைக் குறிப்பிட நெடுங்காலத்துக்கு முன்னரே ஒத்துக்கொண்டன. எனினும் பல காரணங் களினால் இந்த முடிவு அமுலாக்கப்படவில்லை. அது அவ்வளவு பலன் தருவதல்ல எஸ்.டி.ஆர்.- என்பது ஒரு காரணமாகும். எஸ்.டி.ஆர். அலகுக்கு டாலரின் பரிவர்த்தனை விகிதம் அநேகமாகக் குறையவில்லை அல்லது 1980-1981ஐப் போல சிறிதளவு அதிகரிக்கவும் செய்தது. ஆனால் இதே காலத்தில் பண்டங்களின் டாலர் விலைகள் கூர்மையாக அதிகரித்திருக்கக்கூடும். அப்படியானால் டாலர் உண்மையில் மதிப்புக் குறைந் திருக்கிற தென்று அர்த்தம்.

சர்வதேச நிதி ஸ்தாபனம் எல்லாப் பணத் தொகைகளையும் எஸ்.டி.ஆரில் கணக்கிடுவது இயற்கையே. ஆனால் சமீப வருடங்களில் மேலும் பல சர்வதேச நிதித்துறை ஸ்தாபனங்கள் எஸ்.டி.ஆரைக் கணக்கிடுகின்ற அலகாக உபயோகிக்கத் தொடங்கியிருக்கின்றன. ஆப்பிரிக்க வளர்ச்சி வங்கி (African Development Bank), அராபிய நிதி ஸ்தாபனம் (Arab Monetary Fund) இஸ்லாமிய வளர்ச்சி வங்கி (Islamic Development Bank) இதரவை இவற்றிலங்கும். சர்வதேச மூலதனச் சந்தையில் வெளியிடப்படும் கடன் பத்திரங்கள் எஸ்.டி.ஆரில் சொல்லப் படுகின்றன;

பெரிய வர்த்தக வங்கிகள் எஸ்.டி.ஆரில் சொல்லப்படும் வைப்புகளை ஏற்றுக்கொள்கின்றன. எஸ்.டி.ஆரில் உண்மையான வழங்கீடுகள் செய்யப்படு வதில்லை [அவற்றின் நிலைகாரணமாக இதை அனுமதிப்பதில்லை], பணத்தொகைகள் மட்டுமே அவற்றில் சொல்லப்படுகின்றன என்பதை மறுபடியும் வலியுறுத்துகிறோம்.

கணக்கிடு அலகாக எஸ்.டி.ஆரை உபயோகிக்கும் பொழுது அது நாணயப் பரிவர்த்தனை விகிதங்களைத் திருப்திகரமாக சராசரியாக்கிவிடுகிறது, விகிதங்களில ஏற்படும் இழப்புக்களுக்கு எதிரான காப்புறுதிச் சாதனமாகப் பயன்படுகிறது. ஒரு குறிப்பிட்ட அளவு பணத்தின் உண்மையான வாங்கும் சக்தியைத் தக்க வைத்துக்கொள்வதற்குக் குறியீட்டெண்ணைப் பயன்படுத்துவது, அதாவது விலைக் குறியிட்டெண் மாற்றங்களுக்கு ஏற்பப் பணத்தின் அளவை மறு கணக்கிடுவது அவசியமாக இருக்கிறது. இந்தக் குறியீட்டெண் முறை முதலாளிததுவ நாடுகளில் மென் மேலும் அதிகமாகக் கையாளப்படுகிறது. உதாரணமாக, ஒரு ஒப்பந்தத்தில் ஈடுபடுகின்ற இரு தரப்பினர் பண்டங்களின் விலை 1,000 டாலர்கள் என்றும் பணம் கொடுக்கும் நேரத்தில் மொத்த விலைக் குறியீட்டெண் அல்லது குறியீட்டெண் 10 சதவீதம் அதிகரித்திருந்தால் விலை 1,100 டாலர்களாகவும் 20 சதவீதம் அதிகரித்திருந்தால் விலை 1,200 டாலர்களாகவும் மேலும் அதிகரித்தால் இதே மாதிரியாகவும் இருக்கும். எனினும் குறியீட்டெண்ணை அல்லது குறியீட்டெண் ஷரததுக்களைச் சேர்ப்பதில் பெரும் குறைபாடுகள் இருக்கின்றன. நடைமுறையில் அது சிக்கலான விவகாரமாகிவிடவும் கூடும்.

இதே நோக்கங்களுக்குத் தங்கம் தகுதியானதாக இருக்காதா என்ற கேள்வி இயற்கையாகவே எழுகிறது. இப்பொழுது பண்டங்கள் பட்டியலில் மீன் மாவுக்கும் வேர்க்கடலைக்கும் நடுவில் தங்கம் வைக்கப்பட்டிருக்கிறதென்றாலும் பொருளாதார, வரலாற்று, அரசியல் மற்றும் உளவியல் காரணங்களால் தங்கத்தின் விலை இத்தகைய சாதாரணமான பண்டங்களின் விலைகளிலிருந்து வேறுபட்டிருக்கிறது. தங்கத்தின் விலை அதிகமாக ஏறி இறங்குவது உண்மையே ஆனால் நீண்டகால நோக்கில் டாலர் மற்றம் இதர காகிதப் பணங்களுக்குப் பணவீக்கத்தினால் ஏற்படும் மதிப்புக் குறைவைப் பிரதிபலிக்க முற்படுகிறது. இன்று ஒப்பந்தங்களில் தங்க ஷரத்து, அதாவது குறிப்பிடப்பட்டிருக்கும் பணத் தொகைகள் தங்கத்தின் விலைக்குத்

தகுந்தவாறு மறுபரிசீலனை செய்யப்படும் என்ற நிபந்தனைக்குப் புத்துயி கொடுக்கப்படுகின்ற அறிகுறிகளைப் பார்க்கிறோம்.

மொத்தத்தில் தங்கம் எஸ்.டி.ஆருக்கு ஆபத்தான போட்டியாக இருக்கிறது.எஸ்.டி.ஆருக்க என்ன தான் சர்வதேச உத்தரவாதங்கள் தரப்பட்டாலும்கூட அரிய உலோகத்தின் பிரகாசம் அவற்றைக் காட்டிலும் சிறந்த உத்தரவாதமாக இருக்கிறது. அளவு ரீதியிலும்கூட அது நிதித்துறையைச் சேர்ந்த ரசவாதிகளின் செயற்கையான தயாரிப்பைப் பின்னால் தள்ளிவிடுகிறது, சந்தை விலையின்படி மதிப்பிடப்படும் மொத்த தங்கச் சேம நிதிகள் எஸ்.டி.ஆர். சேம நிதிகளைக் காட்டிலும் பல டஜன் தடவைகள் அதிகமானவையாக இருக்கின்றன. எஸ்.டி.ஆருக்கு இன்னொரு போட்டியும் இருக்கிறது. அது அவ்வளவு பிரபலமானதல்ல, ஆனால் அதே மரபு வழியைச் சேர்ந்ததே. 1979ல் ஐரோப்பியப் பொருளாதாரச் சமூகத்தின் உறுப்பினர்கள் ஐரோப்பியப் பணவியல் அமைப்பையும் அதற்குரிய கூட்டுப் பண அலகையும் உருவாக்கினார்கள். அதற்கு ஐரோப்பிய நாணய அலகு (European Currency Unit - ECU) என்று பெயரிட்டார்கள். "ஈகு" என்ற அதன் சுருக்கமான பெயர். மத்திய காலத்தில் பிரான்சின் தங்க மற்றும் வெள்ளி நாணயங்களை நினைவுபடுத்துகிறது.

இதுவும் காகிதத் தங்கத்தில் ஒரு ரகம்தான். ஆனால் இது உலக ரீதியான எஸ்.டி.ஆரைப்போல இல்லாமல் பிராந்திய அளவில் சர்வதேசக் கடன் பணமாக இருக்கிறது. உறுப்பினர் நாடுகள் தங்களுடைய மத்திய வங்கிகளின் மட்டத்தில் தீர்வுக்களைச் செய்து கொள்ள அது உபயோகப்படுகிறது. எஸ்.டி.ஆரைக் காட்டிலும் ஈகு தங்கத்தோடு இன்னும் நெருக்கமாக இணைந்திருப்பது பொருத்தமானதே. இந்த அமைப்பின் மத்திய ஸ்தாபனமாகிய ஐரோப்பியப் பணவியல் ஒத்துழைப்பு ஸ்தாபனத்துக்கு ஒவ்வொரு நாடும் தன்னுடைய டாலர் மற்றும் தங்கச் சேம நிதிகளில் 20 சதவீதத்தைப் பங்காகக் கொடுத்து இவ்விதப் பணத்தைப் பெற்றுக் கொள்கின்றன (மூன்று மாதங்களுக்கொரு முறை பரஸ்பரப் பரிவர்த்தனை மூலம் இது செய்யப்படுகிறது). தங்கம் சந்தை விலைக்கு மதிப்பிடப்படுகிறது.

ஆகவே தங்கத்துக்குத் கொடுக்கப்படுகின்ற ஈகு டாலர்களுக்குக் கொடுக்கப்படும் ஈகுவின் அளவைக் காட்டிலும் மிக அதிகமாக இருக்கிறது. எனவே மிக அதிகமான அளவுக்குத் தங்க ஆதரவைக் கொண்ட ஒரு

நாணயம் வெளியிடப்பட்டிருக்கிறது. ஐரோப்பியப் பொதுச் சந்தை நாடுகளுக்கிடையே முக்கியமான கணக்கிடும் அலகாக ஈகு இருக்கிறது.

ஐரோப்பியப் பணவியல் அமைப்பு இன்னும் உருவாக்கப்பட்டு வரும் நிலையில்தான் இருக்கிறது. அடுத்த சில வருடங்களில் அது இன்னும் அதிகத் தெளிவான வடிவத்தைப் பெறும். மேற்கு ஐரோப்பாவில் கணிசமான அளவுக்கு டாலருக்கு எதிர்ப்பான பணவியல் அணி உருவாகிக்கொண்டிருக்கிறது, அமெரிக்காவின் தலைமையிலிருக்கும் உலக ரீதியான சர்வதேச நிதி ஸ்தாபனத்தைக் காட்டிலும் இந்த அணியில் தங்கம் அதிகமான அளவுக்கு முக்கியமான பாத்திரத்தை வகிக்கும் என்பதை மட்டுமே இப்பொழுது கூறமுடியும்.

# சீர்திருத்தமும் அதற்குப் பிறகும்

பிரெட்டன்வுட்ஸ் அமைப்பு யுத்தத்துக்குப் பிந்திய ஆரம்ப வருடங்களின் கஷ்டங்களைச் சமாளித்த உடனேயே வளர்ச்சியடைகின்ற நெருக்கடி நிலைமைக்கு ஆளாகத் தொடங்கியது. அந்த நிலைமை பிரதான மாக உலகப் பொருளாதாரத்தில் ஒப்புநிலையில் பலவீனமடைந்த அமெரிக்க நிலைகளோடு இணைக்கப் பட்டிருந்தது. ஏற்கெனவே ஐம்பதுக்களின் கடைசியில் பிரெட்டன்வுட்ஸ் அமைப்பைச் சீர்திருத்தம் செய்வதைப் பற்றி விஞ்ஞான வட்டாரங்களில் அதிகமாகப் பேசப்பட்டு வந்தது. விரைவிலேயே இத்தகைய சீர்திருத்தத் திட்டங்கள் அமோகமாக வெளிவரத் தொடங்கின. அறுபதுக்களில் இதைப் பற்றி ஏராளமான புத்தகங்கள் எழுதப்பட்டன. பிரெட்டன்வுட்ஸ் அமைப்பின் சிற்பிகளான கெயன்சுக்கும் ஒயிட்டுக்கும் கிடைத்த புகழ்மாலைகள் பல அறிஞர்களை அமைதியாகத் தூங்க விடவில்லை. அந்தப் பத்தாண்டுகளின் கடைசியில் ஒரு பொருளிய லாளரோ அல்லது அரசியல்வாதியோ ஏதாவது மரியாதையைக் கொண்டிருக்க வேண்டுமானால் இதைப் பற்றி ஒரு “திட்டத்தை” வெளியிட வேண்டாம் அல்லது வேறு யாருடைய திட்டத்துக்காவது திருத்தங்களைக் கூற வேண்டும் என்ற நிலைமை ஏற்பட்டது.

ஆங்கில–அமெரிக்கத் திட்டங்களில் தங்கத்தின் பாத்திரத்தைக் குறைப்பது மற்றும் சர்வதேசச் சேம நிதிகளின் ஏதாவதொரு வடிவத்தை அறிமுகம் செய்வது என்ற நிலையிலிருந்து தயாரிக்கப்பட்டிருப்பது வழக்கம். சில அதிதீவிரமான திட்டங்கள் உலக உயர்மட்ட வங்கியை நிறுவ வேண்டுமென்றும் நாடுகளுக் கிடையே வழங்கீடுகளின் துறையிலிருந்து தங்கம் மற்றும் தேசிய நாணயங்களை முழுவதும் அகற்றிவிட வேண்டும், உயர்மட்ட வங்கி முறையாக வெளியிடுகின்ற சர்வதேசப் பணம் இதற்குப் பயன்படுத்தப் பட வேண்டுமென்றும்

இவை கூறின. வழக்கம் போலவே பிரெஞ்சுக் காரர்கள் இதற்கு நேர்மாறான திட்டத்தை முன்வைத்தார்கள். தங்கத்தின் பாத்திரத்தை அதிகப்படுத்தி அதன் அதிகார பூர்வமான விலையைத் தீவிரமாக அதிகப்படுத்த வேண்டும், அதாவது டாலர் மற்றும் அதோடு சேர்ந்த மற்ற நாணயங்களின் மதிப்பைக் குறைக்க வேண்டும் என்றார்கள். எனினும் சில விதிவிலக்குகளும் இருந்தன. பிரிட்டனில் எய்ன்ஸீக் தங்கத்தை ஆதரித்துப் பிரச்சாரம்

செய்தார், அமெரிக்காவையும் பிரிட்டனையும் சேர்ந்த கொள்கையை உருவாக்குபவர்களின் ''தங்க எதிர்ப்பு'' நிலைக்கு ''இந்தப் பழம் புளிக்கும்'' என்ற மனோபவமே காரணம், பழைய கதையில் வருகின்ற பொருளைக் கைவிட எண்ணுகிறார்கள் என்று விளக்கமளித்தார்.

அதே சமயத்தில் தங்க ஆதார அளவுக்குத் திரும்புவதற்கு ஆங்கிலோ–சாக்ஸானியாக்ளின் பிடிவாதம் மட்டுமல்லாமல், புறவகையான நெருக்கடிகளும் முதலாளித்துவப் பொருளாதார வளர்ச்சியின் வாழ்கின்ற யதார்த்தங்களும் எதிராக இருப்பது மெதுவாக, மென்மேலும் தெளிவாகப் புலப்பட்டது. புதிய சேமச் சாதனங்களை உருவாக்குவதில் மென்மேலும் கவனம் குவிக்கப்பட்டது. திட்டங்கள், விவாதங்கள் என்ற துறை யிலிருந்து பேச்சுவார்த்தைகள், நிதித்துறை ராஜிய நடவடிக்கைகள் என்ற துறைக்கு விவகாரம் மாறிச் சென்றது. இதன் விளைவாக, எஸ்.டி.ஆர். தோன்றின. 1971–1973ல் பணவியல் அமைப்பில் ஏற்பட்ட தொடர்வரிசையான தீவிரமான நெருக்கடிகளோடு எஸ்.டி.ஆரை அறிமுகம் செய்தும் சேர்ந்து நடைபெற்றது. இந்த நெருக்கடிகள் விசேஷ மான வாங்கும் உரிமைகளால் [எஸ்.டி.ஆர்.] அபிவிருத்தியடைந்த பிரெட்டன்வுட்ஸ் அமைப்பின் அடிப்படைகளை அரித்தன. மிதக்கும் பரிவர்த்தனை விகிதங்கள் நடைமுறைக்கு வந்தன. சர்வதேசப் பணவியல் அமைப்பைத் தீவிரமாகச் சீர்திருத்தம் செய்யும் பிரச்சினை மறுபடியும் ஏற்பட்டது.

1973ம் வருடத்தின் இலையுதிர் காலத்தில் முடிவேயில்லாத அளவுக்கு நெடுங்காலமாக நடை பெற்ற பேச்சுவார்த்தைகளில் சில சீர்திருத்த கோட்பாடுகள் ஒத்துக்கொள்ளப்பட்ட பிறகு எண்ணெய் நெருக்கடி வெடித்தது. பணவியல் சீர்திருத்தவாதிகளின் சீட்டுக்கட்டுகளைச் சம்பவங்கள் மறுபடியும் கலைத்துப்போட்டன. இந்த சீர்திருத்தங்களை அங்கீகரிப்பதற்காக சர்வதேச நிதி ஸ்தாபனக் கூட்டம் 1974ம் வருடத்தின் இலையுதிர்காலத்தில் நடைபெற்றது. ஆனால் சர்வதேசப் பணவியல் அமைப்பைத் திருத்தி யமைப்பதற்குச் செய்யப்பட்ட முயற்சிகள் முக்கால் பங்கு தோல்வியடைந்துவிட்டன என்பது தெளிவாயிற்று.

தீவிரமான நெருக்கடிகளிலும் முரண்பட்ட நலன்களின் மோதல்களிலும் தானாகவே தோன்றி வளர்ச்சியடைந்த ஒரு நிலைமைக்குச் சட்ட ரீதியாக அங்கீகாரமளிப்பதே மிச்சமிருந்த கால்பகுதியாகும். 1974 கடைசியில் அமெரிக்கப் பொருளியலாளரான ஜே.எம்.ப்ளெமிங் பின்வருமாறு எழுதினார். ''பலதரப்புப் பேச்சு வார்த்தைகள், உடன்பாடுகள் என்ற முறைப்படியான நிகழ்வின் மூலம் சர்வதேசப் பணவியல் அமைப்பை ஒத்திசைவான மற்றும்

பன்முக அடிப்படையில் திருத்தி யமைப்பதற்கு முன்னெப்போதும் செய்யப்பட்டிராத வகையில் நடைபெற்ற மாபெரும் முயற்சி தற்பொழுது நிறுத்தப்படுகிறது.''

மலை எலி பிரசவித்தது என்பது உண்மையே. 1975ல் படிப்படியாகத் தயாரிக்கப்பட்டு 1976ன் தொடக்கத்தில் கிங்ஸ்டனில் சம்பிரதாயப்படி ஒத்துக்கொள்ளப்பட்ட கருத்துக்கள் இந்த அமைப்பில் முக்கியமான மாற்றங் களை ஏற்படுத்தவில்லை. சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் உடன்பாட்டு ஷரத்துக்களுக்குத் திருத்தங்களின் வடிவத்தில் கொண்டுவரப்பட்ட இந்தச் சிறு சீர்திருத்தம், போதுமான எண்ணிக்கையைக் கொண்ட உறுப்பினர்கள் அவற்றை அங்கீகரித்த பிறகு 1978 ஏப்ரலில் அமுல் செய்யப்பட்டது.

மிதக்கும் பரிவர்த்தனை விகிதங்கள் சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் உடன்பாட்டின் ஷரத்துக்களில் அதிகார பூர்வமான அங்கீகாரத்தைப் பெற்றன. நிலையான பரிவர்த்தனை விகிதங்களுக்குத் திரும்புவதற்கு மிக லேசான சாத்தியம்தான் இருக்கிறது. மேலே வர்ணிக்கப் பட்டதுதான் உண்மையான நிலைமை.

சேம நாணயம் என்ற முறையில் டாலரின் அந்தஸ்து உண்மையில் மாறவில்லை. இத்தனைக்கும் இந்த ஷரத்துக்களில் ஏதாவதொன்றில் கூட இது பதிவு செய்யப்படவில்லை. சர்வதேச சேம நிதிகள் மற்றும் தீர்வுகளின் முக்கியமான ஊடகமாக இனிமேல் தங்கம் பயன்பட முடியாத பொழுது, காகிதத் தங்கமான எஸ்.டி.ஆர். இன்னும் அந்தப் பாத்திரத்தை வகிக்க முடியாத பொழுது (அது எந்தக் காலத்திலாவது வகிக்க முடியுமா என்பது தெரியவில்லை) டாலர் அவசியமாகவே கேந்திரமான நிலையை வகிக்கிறது. நாம் எடுத்துக்கொண்டிருக்கும் தலைப்பின் சுற்று வட்டத்துக்குள் சீர்திருத்தம் செய்யப்பட்ட அமைப்பில் தங்கத்தின் பாத்திரத்தைப் பற்றிய பிரச்சினை விசேஷமான ஆர்வத்தைக் கொண்டிப்பது இயற்கையே. எஸ்.டி.ஆர். உடன்பாட்டைப் போலவே ஜமாய்கா முடிவுகளும் (முதலாவதாகவும் முதன்மையாகவும் அமெரிக்காவுக்கும் பிரான்சுக்குமிடையே) சமரசத்தன் விளைவாகவே தோன்றின.

அவற்றின் சாராம்சம் பின்வருமாறு:

1. தேசிய நாணயங்களையும் எஸ்.டி.ஆர். அலகையும் மதிப்பீடு செய்யும் அடிப்படையாக இந்த அமைப்பிலிருந்து தங்கம் அகற்றப்படும். ஒரு நாடு தன்னுடைய நாணயத்தின் பரிவர்த்தனை விகிதத்தை நிர்ணயம் செளிணிய

விரும்பினால், அதை வேறொரு நாணயத்தோடு, எஸ்.டி.ஆர். அலகு அல்லது வேறொரு கணக்கிடும் அலகோடு சேர்ப்பதன் மூலம் இதைச் செய்ய வேண்டும். அதன் தங்க அடக்கத்தை நிர்ணயிப்பதன் மூலம் இதைச் செய்யக்கூடாது.

2. சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் நடவடிக்கைகளிலிருந்து தங்கம் நீக்கப்படும். உடன்பாட்டின் ஷரத்துக்களில் உறுப்பினர் நாடுகள் தமது பங்களவில் கால பங்கை தங்கமாகக் கொடுக்க வேண்டும் என்று விதிக்கப் பட்டிருப்பது ரத்துச் செய்யப்படும் [தற்பொழுது பங்கு அளவின் வருடாந்தர அதிகரிப்பில் கால பங்கு எஸ்.டி.ஆர் கொடுக்கப் படுகிறது].

3.தங்கத்தின் சுதந்திரமான சந்தை அரசு ஒழுங்குமுறைக்கு உட்படுத்தப்படாதிருப்பதை உறுதிப் படுத்துகின்ற, [தங்க கூட்டிணைப்புக் காலத்தைப்போல இல்லாமல்] அதற்கு நிர்ணயிக்கப்பட்ட விலை என்பது இல்லாமற் செய்கின்ற கொள்கையை சர்வதேச நிதி ஸ்தாபனம் கடைப்பிடிக்க வேண்டும். வேறு வார்த்தைகளில் சொல்வதென்றால் தங்கத்தைச் சாதாரணப் பண்டமாக மாற்றுவதற்கு நிதி ஸ்தாபனம் உதவ வேண்டும்.

4. சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் உறுப்பினர் நாடுகளின் பங்களிப்புகளிலிருந்து உருவாக்கப்பட்ட தங்க இருப்பை உடனடியாக ஒழித்துவிட வேண்டும். 1976ல் இந்த இருப்பில் மூன்றில் ஒரு பகுதியைப் பற்றி முடிவு செய்யப்பட்டது. இதில் பாதியை [அதாவது ஆறில் ஒரு பகுதி] தங்கம் கொடுத்த உறுப்பினர் நாடுகளிடம் ஒரு அவுன்சுக்கு 35 எஸ்.டி.ஆர் அலகுகள் என்ற அதிகாரபூர்வமான விகிதத்தின்படி அவற்றின் தேசிய நாணங்களுக்கு பரிவர்த்தனை செய்ய வேண்டும். அடுத்த பாதியை சுதந்திரச் சந்தையில் விற்பனை செய்ய வேண்டும். வளர்மக நாடுகளின் நிர்ப்பந்தித்தினால் [சர்வதேச நிதி ஸ்தாபனத்தில் அவற்றின் பாத்திரம் ஓரளவுக்கு வளர்ச்சியடைந்திருக்கிறது] இந்த விற்பனை யின் மூலம் கிடைக்கும் வருமானத்தை [பழைய அதிகாரபூர்வமான விலைக்கும் சந்தை விலைக்கும் இடையிலுள்ள வேறுபாட்டை] மிகவும் கீழ்நிலையிலுள்ள வளர்ந்துவரும் நாடுகளுக்குக் கொடுப்பதென்று முடிவு செய்யப்பட்டது. நிதி ஸ்தாபனத்தின் சேம நிதிகளில் எஞ்சியிருக்கின்ற மூன்றில் இரண்டு பங்கைப் பற்றிப் பின்னர் முடிவு செய்யப்படும் [இதைப் பற்றி இன்னும் அதிகமாகப் பிறகு எழுதுவோம்].

பண உலோகம் என்ற நிலையிலிருந்து தங்கம் சம்பிரதாயமான முறையில் அகற்றப்படுவதை, இந்த உடன்பாட்டின் மூலம் ஏற்பட்ட சர்வதேசப் பணவியல் அமைப்பில் தங்கத்தின் அதிகார பூர்வமான பணவியல் செயல்கள் ஒழிக்கப்பட்டதை இந்த நடவடிக்கைகள் குறிக்கின்றன. இந்தச் சீர்திருத்தத்தைத தயாரித்த நிதி ஸ்தாபனக் கமிட்டி பின்வருமாறு கூறியது: "சர்வதேசப் பணவியல் அமைப்பின் கேந்திரமான சொத்தாக எஸ்.டி.ஆரின் பாத்திரத்தை உயர்த்துவதும் ஆகவே தங்கத்தின் பாத்திரத்தைக் குறைப்பதும் நோக்கமாக இருக்க வேண்டும்."★ சேம நிதிகளின் முக்கியமான வடிவமாக எஸ்.டி.ஆரைச் செய்ய வேண்டும் என்று சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் உடன்பாட்டின் ஷரத்துக்களுக்குச் செய்யப்பட்ட திருத்தத்தில் எழுதியிருப்பதை நாம் முன்பே குறிப்பிட்டோம்.

ஆனால் இந்த முடிவுகள் தெரிந்தவுடன் தங்கத்தின் பாத்திரம் உண்மையில் குறைக்கப்படுகிறதா அல்லது உயர்த்தப்படுகிறதா என்று விவாதம் தொடங்கியது. தங்கத்தின் அதிகாரபூர்வமான விலை ரத்து செய்யப்படுவது அதன் சுதந்திர விலையை முற்றிலும் சட்ட பூர்வமாக்குகிறது என்பது முக்கியமாகும். தங்க இருப்புக்களின் உண்மையான வாங்கும் சக்தி அல்லது கொடுக்கும் சக்தி அதிகரிக்கிறது. இப்பொழுது [1978 முதல்] அதிகமான சந்தை விலையில் தமக்கிடையே தங்கத்தை வாங்கிக் கொள்ளவும் விற்பனை செய்யவும் மத்திய வங்கிகளுக்குச் சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறதே ஆகவே தங்கத்தின் சேமச் செயல் அதிகரித்திருக்கிறதே தவிர, குறைய வில்லை. எந்த சர்வதேச ஒப்பந்தமும் இந்தச் செயலை ஒழுங்குபடுத்த முடியாதென்பதால் நிதி ஸ்தாபனத்தின் உடன்பாட்டின் ஷரத்துக்கள் இந்தப் பிரச்சினையில் மௌனமாக இருக்கின்றன. சர்வதேச சேம நிதிகளின் சாதனம் என்ற முறையில் தங்கத்தின் பாத்திரத்தைப் பற்றி எதுவும் சொல்லப்படவில்லை. இந்தப் பாத்திரத்தை "ஒழித்ததைப்" பற்றியும் எத்தகைய குறிப்பும் இல்லை.

தங்க விவாதத்தில் மரபுவழியாக எதிரெதிராக நிற்கும் ஒவ்வொரு தரப்புமே தங்கத்துக்குத் தரப்பட்டிருக்கும் புதிய அந்தஸ்து தங்களுடைய கோட்பாடுகளையும் நோக்கங்களையும் அமுல் செய்வதே என்று விளக்க முடியும். அவர்களும் அவ்வாறே விளக்கம் செய்தனர். தானாகத் தோன்றும் தங்கக் காரணியிலிருந்து விலக்கப்பட்ட, நெகிழ்ச்சியான சர்வதேச ஒழுங்கு முறைக்குக் கட்டுப்படுகின்ற பணவியல் அமைப்பு அமுலாக்கப்படுகிறது என்ற கருத்தை பண உலோகம் என்ற நிலையிலிருந்த தங்கத்தை அகற்ற வேண்டுமென்று விரும்பும் அமெரிக்கர்கள் கூறினார்கள். மறுபக்கத்தில்,

தங்கத்தின் அதிகமான சந்தை விலையைச் சட்ட பூர்வமாக்கியிருப்பதையும் அதன் உண்மையான சேம மற்றும் வழங்கீட்டு வாய்ப்புக்கள் அதிகரித்திருப்பதையும் பண உலோகமாகத் தங்கம் இருக்க வேண்டும் என்று விரும்புகின்ற பிரெஞ்சுக்காகரர்கள் வலியுறுத்தினார்கள்.

ஆகவே இந்த நிலைமையில சிலர் தங்கம் அகற்றப் பட்டதைப் பற்றியும் வேறு சிலர் தங்கத்தின் வெற்றயைப் பற்றியும் பேசுகிறார்கள். செல்வாக்குள்ள பிரெஞ்சுப் பத்திரிகையான இந்த முடிவுகளை வெளியிட்ட பொழுது பின்வரும் தலைப்பைக் கொடுத்திருந்தது: "தங்கத்தை ஒழித்துவிட்டோம்! தங்கம் வாழ்க!"★ ["அரசர் இறந்துவிட்டார்! அரசர் நீடூழி வாழ்க!" என்ற பிரபலமான வாசகத்தைச் சிறிது மாற்றி வெளியிட்டிருந்தது].

தங்கம் வாஷிங்டனிலுள்ள சர்வதேச நிதி ஸ்தாபனக் கட்டிடத்தின் முன்வாசற் கதவின் வழியாக விரட்டப்பட்டு சுதந்திரச் சந்தை என்ற சன்னலின் வழியாக உள்ளே வருகிறது. தங்கப் பிசாசு பிடிவாதமானது, விடாப் பிடியானது. தங்கத்தின் புதிய பாத்திரத்தை உண்மையான நடவடிக்கைகளில் பார்க்கிறோம். அங்கே அது சுதந்திரமான சந்தை விலையில் சர்வதேச வழங்கீட்டுச் சாதனமாகச் செயல்புரிகிறது. ஜமாளிணிகாவில நடைபெற்ற மாநாட்டுக்கும் முன்னரே இத்தாலி மற்றும் மேற்கு ஜெர்மனியின் வங்கிகளுக்கிடையே நடைபெற்ற கடன் உடன்பாடு எல்லோருடைய கவனத்தையும் ஈர்த்தது. இத்தாலி தன்னிடமிருந்த கணிசமான தங்கச் சேம நிதிகளில் ஒரு பகுதியை ஈடாக வைத்து மேற்கு ஜெர்மனியின் மார்க் நாணயங்களில் சர்வதேசக் கடன் வாங்கியது. ஐரோப்பியப் பணவியல் அமைப்பின் சுற்றுவிட்டத்துக்குள் ஈகு துணைப்பிணைய மாகத் தங்கத்தை உபயோகித்தது அதிக முக்கியத்துவத்தைக் கொண்டிருக்கிறது.

தங்க சமமதிப்புக்கள் ஒழிக்கப்பட்ட பிறகு அதன் பலனாக அதிகார பூர்வமான தங்க விலைகள் ஒழிக்கப்பட்ட பிறகு அரசாங்கங்களுக்கும்மத்திய வங்கிகளுக்கும் தங்களிடமுள்ள தங்க சேம நிதிகளை எப்படி மதிப்பிடுவதென்ற செய்முறைப் பிரச்சினை ஏற்பட்டது. கணக்குப் பதிவைப் பற்றிய, வெளித்தோற்றத்தில் நேரடியான இந்தப் பிரச்சினைக்கு அரசியல் முக்கியத் துவம் ஏற்பட்டது. பிரான்ஸ் மிக முந்திய காலமான 1975ம் வருடத்திலேயே சந்தை விலையில் [உறுதியான மதிப்பீடு செய்யப்படும் அரை வருடத்துக்கு முந்திய ஒவ்வொரு கால் வருட சராசரி விலையில்] தங்கத்தை மதிப்பிடகின்ற முதலாவது நாடாக இருந்தது.

இதன் விளைவாக பிரான்ஸ் வங்கயின் இருப்பு நிலைக் குறிப்பில் இந்த இனம் பல தடவை மேலே உயர்ந்தது. ஒவ்வொரு அரை வருடக் கணக்கிலும் மேலுங்கீழுமாகக் குதித்தது. இதைப் பின்பற்றி பல நாடுகள் தங்கத்தின் சந்தை விலையை அடிப்படையாகக் கொண்ட பல சூத்திரங்களை உபயோகித்துத் தமது சேம நிதிகளை மறுபடியும் மதிப்பிட்டன. இந்த உதாரணத்தை அமெரிக்கா இதுவரை பின்பற்றவில்லை. அது தன்னுடைய கருவூலத் திலிருக்கும் தங்கத்தை ஒரு அவுன்ஸ் 42.22 டாலர்கள் என்ற செயற்கையான விலையை [கடைசியாகப் பின்பற்றப்பட்ட அதிகார பூர்வமான விலை] ஆதாரமாகக் கொண்டு மதிப்பிடுகிறது. இந்த விலை அதன் ஒப்புதலோடு சர்வதேச நிதி ஸ்தாபனத்தால் ரத்துச் செய்யப்பட்டது. ஆனால் இது பிடிவாதத்தோடு கூடிய கால வழு என்று உலகத்தில் கருதப்படுகிறது.

இந்த சீர்திருத்தத்தைப் போலவே தங்கத்தின் துறையில் இதற்குப் பிறகு ஏற்பட்ட போக்குகளும் இரண்டு விதமான விளக்கங்களுக்கு இடமளிக்கின்றன. ஒரு பக்கத்தில் தங்கம் சர்வதேசப் பணவியல் அமைப்பின் அடிப்படையாக இனியும் இருக்கவில்லை. அது ஒரு பண்டமாகவே இருக்கிறது. மற்ற பண்டங்களின் விலைகளைப் போலவே அதன் விலையும் சந்தையில் மாறுகிறது. மறுபக்கத்தில் தங்கத்தின் விலை அடிக்கடி அதிகரிப்பதன் பலனாக அதன் உள்ளுறை யான மற்றும் உண்மையான பொருளாதாரப் பாத்திரம் அதிகரித்திருக் கிறது. சர்வதேசச் சேம நிதிகள் என்ற செயலில் பணவீக்கத்தால் பாதிக்கப்பட்ட தேசிய நாணயங்கள், சர்வதேசக் கடன் பணம்ஆகியவற்றைக் காட்டிலும் தன்னுடைய சாதகங்களை எடுத்துக் காட்டுகிறது. இநத இரட்டைத் தன்மை தங்கத்தின் எதிர்காலத்துக்கு முக்கிய மானதாகும்.

# தங்க ஏலம்

ஒரு பண்டத்தை மிகவும் அதிகமான விலை கொடுப்பவருக்கு விற்பனை செய்வதற்கு ஏலமுறை நெடுங்காலமாகக் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. வாங்கிய கடனைத் திருப்பித்தர முடியாதவர்களின் சொத்துக்கள் வழக்கமாக ஏலம் விடப்படுகின்றன. சிறந்த கலைப்பொருள்களும் ஏலத்தில் விற்பனை செய்யப்படுகின்றன. ஆனால் தங்கத்தை ஏல விற்பனை செய்தது எழுபதுக்களில் ஏற்பட்ட புதுமையாகும். முதலாளித்துவப் பொருளாதார அமைப்பில் தங்கத்தின் செயல்களில் ஏற்பட்டிருக்கும் மாற்றங்களோடு இந்தப் புதுமை இணைந்திருக்கிறது.

முதலாளித்துவ நாடுகளைச் சேர்ந்த மத்திய வங்கிகள் தங்கத்தின் சர்வதேசப் போக்குவரத்தில் பங்கு கொள்வது முதலில் தங்க கூட்டிணைப்பை ஒழிப்பதென்று முடிவுசெய்த உடன்பாட்டினாலும் [1968 மார்ச்] பிறகு அந்நிய நாடுகளின் மத்திய வங்கிகளுக்கு டாலருக்குத் தங்கத்தைக் கொடுப்பதை ஒழிப்பதென்று அமெரிக்கா தானாகச் செய்த முடிவினாலும் [1971 ஆகஸ்ட்] நிறுத்திவைக்கப் பட்டிருந்ததை முன்பே குறிப்பிட்டிருக்கிறோம். எனினும் முக்கியமான முதலாளித்துவ நாடுகள் 1973-ம் வருடத்திலேயே மத்தியத் தங்க சேம நிதிகளை உறைய வைத்து அவற்றின் உண்மையான பொருளாதார முக்கியத்துவத்தைக் குறைக்கும் நிலைமையை மாற்ற வேண்டிய அவசியத்தை உணர்ந்தன. அதற்குப் பல காரணங்களுண்டு. பண உலோகம என்ற நிலையிலிருந்து தங்கம் கடைசியில் மூலப் பொருளாக உபயோகிக்கப்படுகின்ற தனியார் சந்தைத் துறைக்கு மாற்றுவதை ஊக்குவிப்பது தன்னுடைய சொந்த நலன்களுக்க உதவக் கூடியது என்ற நிலைமையிலிருந்து அமெரிக்கா சிந்தித்தது. ஆனால் மறு பக்கத்தில் மேற்கு ஐரோப்பிய நாடுகள், குறிப்பாக பிரான்ஸ் வழங்கீடுகளின் சம நிலைகளைச் சரி செய்வதற்கு சந்தை விலையில் தங்கம் [சந்தை விலை பழைய ஒரு அவுன்ஸ் 35 டாலர்கள் என்ற அதிகார பூர்வமான விலையைக் காட்டிலும் சுமார் நான்கு மடங்கு அதிகமாக இருந்தது] உபயோகிக்கப்படுவதைத சட்டபூர்வமாக சாத்தியமாகக்க வேண்டும் என்ற விரும்பின. இதன் விளைவாக 1973 நவம்பரில் முக்கியமான முதலாளித்துவ நாடுகளின் மத்திய வங்கி களின் தலைவர்கள்

தாங்கள் விரும்பினால் தங்கள் சேம நிதிகளிலுள்ள தங்கத்தை சுதந்திரச் சந்தையில் விற்பனை செய்யலாம் என்று ஒத்துக்கொண்டார்கள்.

அமெரிக்க அரசாங்கம் இந்த விஷயத்தில் முன்முயற்சி எடுத்தது. மற்ற நாடுகளுக்க உதாரணமாக இருக்க வேண்டும் என்று நினைத்து அதற்குக் காரணமாக இருக்கலாம். 1975 தொடக்கத்தில் இரண்டு ஏலங்களை நடத்தி சுமார் 39 டன்கள் தங்கத்தை விற்பனை செய்தது. மிகப் பெரிய விற்பனை நிறுவனங்கள்தான் தங்கத்தை வாங்கின. எனினும் வேறு எந்த நாடும் இந்த உதாரணத்தைப் பின்பற்றவில்லை. சில நாடுகள், குறிப்பாக இத்தாலி தங்களுடைய தங்க இருப்புக்களைப் பயன்படுத்திக் கொள்வதற்கு வேறு முறைகளைக் கடைப்பிடித்தன, அதாவது சந்தை விலையில் தங்கத்தை ஈடாக வைத்து சர்வதேசக் கடன்களை வாங்கின என்பது உண்மையே. ஆனால் அமெரிக்காவைப் போலன்றி இந்த முறையில் தங்கம் தனியார்களின் துறைக்கு, பணம் அல்லாத துறைக்குப் போகவில்லை. மத்திய வங்கிகளுக்கிடையே செலாவணியில் இருக்கிறது. 1976ம் வருடத்தின் கோடைகாலத்தில் ஜமாய்கா மாநாட்டில் செய்யப்பட்ட முடிவுகளை சர்வதேச நிதி ஸ்தாபனம் அமுல் செய்த பொழுது தங்க ஏல விற்பனை மாபெரும் பொருளாதார முக்கியத்துவத்தைப் பெற்றது 25 மில்லியன் அவுன்சுகளை [777.5 டன்கள்] அது நான்கு வருடங்களில் விற்பனை செய்யவேண்டும். தங்கத்கதை ஏலத்தில் விற்பனை செய்ய முடிவாயிற்று. முதல் ஏலம் 1976 ஜூன் 2–ந் தேதியன்று நடைபெற்றது. சராசரியாக ஒரு அவுன்ஸ் 126 டாலர்கள் விலைக்கு 7,80,000 அவுன்சுகளை [24.3 டன்களை] விற்பனை செய்தது. ஏற்றுக்கொள்ளப்படக்கூடிய மிக அதிகமான விலைக்கு மொத்தம் இருபது பிரேரேபணைகள் வந்தன.

நிதி ஸ்தாபன ஏலங்கள் ஒரு வகையான பணவியல் வேடிக்கை என்ற முறையில் அதிகமான கவனத்தை ஈர்த்தன. இந்த வேடிக்கைகளைச் செய்ய வேண்டிய விசேஷ அவசியம் கிடையாது. தங்கத்தை வழக்கமான முறையில் சந்தையில விற்பனை செய்திருக்கலாம். உதாரணமாக, தங்கக் கூட்டுக் காலத்தில் 1961–1968ல் இவ்வாறுதான் விற்பனை செளிணியப்பட்டது. தங்கம் ஒரு சாதாரணப் பண்டம் தான் என்பதை எடுத்துக்காட்டுவதற்காக ஏலமுறை தேர்ந்தெடுக்கப்பட்டது. மத்திய இருப்புக்களிலிருந்து தங்கம் விற்பனை செய்வது இம்முறையில் மூலம் மிகவும் அதிகமான விளம்பரத்தைப் பெற்றது. வெற்றிகரமான விலைக் குறிப்பீடுகளின் எண்ணிக்கை, விற்பனை செய் யப்பட்ட தங்கத்தின் அளவு

மற்றும் விலைகளைப் பற்றி மிகவும் துல்லியமான விவரங்களை நிதி ஸ்தாபனம் வெளியிடுகிறது. சர்வதேசப் பணவியல் அமைப்பிலிருந்து தங்கத்தை வெளியேற்றுவதை நோக்கமாகக் கொண்ட கொள்கையின் சுற்றுவட்டத்துக்குள் தங்க ஏலங்கள் நடைபெற்றன. ஏலம் என்றாலே சந்தடியும் பரபரப்பும் நிறைந்த கூட்டங்களும் வாங்குபவர்கள் கூச்சலும் ஏலம்போடுபவர் சுத்தியலைத் தட்டுவதும் வழக்கம். சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் வாஷிங்டன் ஏலங்கள் இப்படி நடைபெறவில்லை. வாங்குபவர்கள் தாங்கள் கொடுக்கத் தயாராகவுள்ள விலையையும் வாங்க் விரும்பும் தங்கத்தின் அளவையும் எழுதி உறைகளில் வைத்து ஒட்டி முத்திரையிட்டுக் கொடுத்தார்கள். வாங்க வேண்டிய குறைந்த பட்ச அளவு 1,200 அவுன்சுகளாகும் [சுமார் 37.3 கிலோக்கள்], ஆகவே சாதாரண மனிதன் இந்த வியாபாரத்தில் ஈடுபட முடியாது என்பது தெளிவு. இக்குறைந்த பட்ச அளவைக் காட்டிலும் பல மடங்கு அதிகமாகக் கேட்பதுதான் வழக்கம்.

இந்த ஏலங்கள் முதலில் ஆறு வாரங்களுக்கு ஒரு முறையும் பிறகு மாதந்தோறும் நடைபெற்றன. ஒவ்வொரு ஏலத்திலும் விற்பனை செய்யப்பட்ட தங்க அளவு 24.3 டன்களிலிருந்து 16.3 டன்களாகவும் பிறகு 14.6 மற்றும் 13.8 டன்களாகவும் குறைக்கப்பட்டது. நிதி ஸ்தாபனம் குறிப்பிட்ட அளவு தங்கத்தை வளர்மக நாடுகளுக்கு முன்னுரிமையோடு விற்பனை செளிணிவதற்காக ஒதுக்கி வைத்தது இதற்குக் காரணம். அதிகமான ஏல விலைக்கும் நிதி ஸ்தாபனத்தின் கணக்குகளில் தங்கம் கணக்கிடப்பட்ட முகப்பு விலைக்கும் [ஒரு அவுன்சுக்கு 35 எஸ்.டி.ஆர். அலகுகள்] உள்ள வித்தியாசம் ஒரு விசேஷ அறக்கட்டளை நிதியில் போட்டு வைக்கப்பட்டது. இந்தப் பணம் சர்வதேச நிதி ஸ்தாபனத்தில் உறுப்பனர்களாக இருக்கும் வளரும் நாடுகளுக்கு [எண்ணெய் உற்பத்தி செய்கின்ற நாடுகள், இதர “பணக்கார” நாடுகளைத் தவிர] ஒரு சூத்திரத்தின்படி பிரித்துக் கொடுக்கப்பட்டது. ஒவ்வொரு நாடும் நிதி ஸ்தாபனத்திலிருந்து தங்கம் வாங்குவதற்குத் தன்னுடைய பங்கில் ஒரு பகுதியைப் பயன்படுத்திக் கொள்ளலாம். இந்தத் திட்டத்தின்படி நிதி ஸ்தாபனம் மொத்தம் 46 டன்களை விற்பனை செய்தது. அதில் பாதிக்க மேற்பட்ட அளவை இந்தியா வாங்கியது.

இந்த நான்கு வருட காலம் முழுவதும் நிதி ஸ்தாபனம் விற்பனை செய்த தங்கத்தின் விலையின் தீவிரமான ஏற்ற இறக்கங்கள் அப்போதைய சந்தை விலைகளோடு பொருந்தி வந்தன. 1976 செப்டம்பரில் ஒரு அவுன்ஸ் 109.4

டாலர்களுக்கு விற்பனை செய்தது ஏலத்தில் மிகக் குறைவான விலை. 1980 பிப்ரவரியில் 712.1 டாலர்களுக்கு விற்பனை செய்தது ஏலத்திலேயே மிக அதிகமான விலையாகும். இந்த ஏற்ற இறக்கங்களின் அளவுகளே சந்தையின் ஸ்திரமற்ற நிலைமைக்குக் குறியீடாக இருந்தது; கொந்தளிப்பு மிக்க அரசியல் மற்றும் பொருளாதார நிகழ்ச்சிகள் இந்த விற்பனைத் திட்டத்தின் பின்னணியாக இருந்தன.

ஒவ்வொரு ஏலத்தின்போதும் வாங்க உத்தேசிப்பவர்கள் கேட்ட அளவுகளின் மொத்தம் ஏலம் விடப்படுகின்ற தங்கத்தைக் காட்டிலும் மிகஅதிகமான (சில சமயங்களில் நான்கு அல்லது ஐந்து மடங்காக) அளவில் இருந்தது. ஆகவே சிலருடைய குறியீடுகளை மட்டுமே ஏற்றுக்கொள்ள முடிந்தது. அப்படி வெற்றி பெற்றவர்களின் எண்ணிக்கை எந்த சமயத்திலும் இருபதுக்கு மேல் அதிகரிக்கவில்லை.சில சமயங்களில் ஐந்தாகக் கூடக் குறைந்தது. வெற்றிகரமாக ஏலம் கேட்டவர்களின் பட்டியலில் பிரபலமான தங்க வியாபாரிகளான ஸ்விட்சர்லாந்தின் மூன்று வங்கிகளும் ராத்ஷீல்டு குடும்பம் தலைமை வகிக்கும் லண்டன் சந்தை உறுப்பினர்களும் மேற்கு ஜெர்மனியின் Dresdner வங்கிகளும் பெரிய அமெரிக்க நிறுவனங்களும்- முதலாவதாகவும் முதன்மையாகவும் எங்கெல்ஹார்டு கம்பெனியும் இருக்கின்றன. 1978 வரை மத்திய வங்கிகள் இந்த ஏலங்களில் சம்பிரதாய முறைப்படி பங்கெடுக்க முடியாது. ஆனால் எப்பொழு துமே தங்கப் பிரச்சினையில் தனி வழியைக் கடைப்பிடிக்கும் பிரான்ஸ் இடைத் தரகரை வைத்து பாஸெலில் இருக்கின்ற உலக தீர்வுகளின் வங்கி என்ற சர்வதேச ஸ்தாபனத்தின் மூலம் குறிப்பிட்ட அளவு தங்கத்தை வாங்கியது.

1978ல் மத்திய வங்கிகDresdner எந்தச் சந்தையிலும் எந்த விலைக்கும் தங்கத்தை வாங்குகின்ற உரிமையைப் பெற்றன. எனினும் இது ஏலங்களைப் பாதிக்கவில்லை. முன்போல அநேகமாக தனிப்பட்ட வர்த்தகங்கள் மட்டுமே ஏலங்களில் பங்கு கொண்டார்கள்.

1979ல் நடைபெற்ற ஏலங்களில் இந்த வர்த்தக நிறுவனங்கள் பெரும்பாலும் "எண்ணெய் ஷேக்குகளின்" சார்பில்தான் தங்கத்தை வாங்கின என்று நிபுணர்கள் கருதுகின்றார்கள். லண்டனைச் சேர்ந்த Economist இதழ் பின்வருமாறு எழுதியது: "சர்வதேச நிதி ஸ்தாபனம் மற்றும் அமெரிக்க நிதித் துறை நடத்தும் வாடிக்கையான ஏலங்களில் உண்மையில் யார் தங்கத்தை வாங்கு கிறார்கள் என்பதை ஸ்விட்சர் லாந்து (மற்றும் மேற்கு ஜெர்மன்) ரகசியம் மறைத்திருக்கிறது. ஆனால் ஒரே ஒரு ஜெர்மன் வங்கி விற்பனை செய்யப்படுகின்ற தங்கம் முழுவதையுமே வாங்கும்பொழுது,

உலகத்தில் இப்படி உத்தரவு கொடுக்கக்கூடிய அளவுக்குப் பணம் வைத்திருப்பவர்கள் அநேகமாக மத்திய கிழக்குப் பகுதியைச் சேர்ந்த வாடிக்கையாளர்களாகத்தான் இருக்கவேண்டும் என்று முடிவு செய்ய அதிகமான மூளை அவசியமில்லை.”

சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் ஏலத் திட்டம் 1980 மே மாதத்தில் முடிவடைந்தது. இதற்கு நெடுங்காலத்துக்கு முன்பே நிபுணர்களும் நிதி விவகாரங்களைப் பற்றிய பத்திரிகைகளும் ஏலம் நீடிக்குமா என்பதை விவாதிக்கத் தொடங்கி விட்டார்கள். நிதி ஸ்தாபனத்தின் எஞ்சியிருக்கும் தங்க சேம நிதியிலிருந்து (சுமார் 3,200 டன்கள்) குறைந்தபட்சம் அடுத்த சில வருடங் களுக்காவது இனி விற்பனை இருக்காது என்று 1979ம் வருடத்திலேயே ஏகமனதான கருத்து ஏற்பட்டிருந்தது. இந்த ஏலங்கள் மடிவடைந்த பொழுது இது முற்றிலும் தெளிவாகத் தெரிந்தது.

நிதி ஸ்தாபனம் தன்னிடமிருக்கும் எல்லாத் தங்கத்தையும் படிப்படியாக விற்பனை செய்துவிடும் என்று 1976–1977ல் தோன்றியது. ஆனால் அடுத்த நான்கைந்து வருடங்களில் நிலைமை மாறிவிட்டது. சர்வதேசக் கடன் தீர்வுத் திறத்தின் மத்தியச் சேம நிதி என்ற முறையில் தங்கம் தன் தகுதிச் சிறப்பை மறுபடியும் எடுத்துக் காட்டியது. அது ஐரோப்பியப் பணவியல் அமைப்பில் முக்கியமான பாத்திரத்தை வகித்துக் கொண்டிருக்கிறது. சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் உறுப்பினர் நாடுகளின் டாலர் இருப்புக்களுக்குப் பரிவர்த்தனையாகக் கூடுதலான எஸ்.டி.ஆர் அளவுகளை வெளியிடுவதற்கு நிதி ஸ்தாபனத்தின் தங்க நிதிகளை உத்தரவாதமாக உபயோகிப்பதற்குரிய புதிய வழிகளைப் பற்றி விவாதம் நடைபெறுகிறது. விற்பனைகளை நிர்வாகக் கமிட்டியிலுள்ள உறுப்பினர் நாடுகளில் 85 சதவீதத்துக்கு குறையாத பெரும்பான்மை நாடுகள் அந்த முடிவுக்கு ஆதரவாக வாக்களிக்க வேண்டும். இந்தத் தீர்மானத்தை நிகழ்ச்சி நிரலில் சேர்த்தால்கூட, அவ்வளவு அதிகமான வாக்குகள் இன்று கிடைக்கப் போவதில்லை.

சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் தங்க விற்பனையின் மூலம் வளர்முக நாடுகளுக்குச் சில நன்மைகள் கிடைத்தன. நாம் முன்னர் குறிப்பிட்ட அறக்கட்டளை நிதியின் மொத்தத்தொகை சுமார் 5 பில்லியன் டாலர்களாகும். வளர்முக நாடுகள் இந்த நிதியிலிருந்து பல வடிவங்களில் பணம் பெறுகின்றன. ஆகவே தங்க விற்பனை நீடிப்பதில் அந்த நாடுகளுக்கு அக்கறை இருக்கும். எனினும் நிதி ஸ்தாபனத்தில்

அவற்றுக்கு அதிகமான செல்வாக்கு இல்லை, மேலும் அவற்றுக்கிடையே ஒற்றுமையும் இல்லை.

அமெரிக்காவின் தேசிய இருப்பிலிருக்கும் தங்கத்தை விற்பனை செய்யும் பிரச்சினையைப் பற்றி அங்கே தொடர்ச்சியான விவாதமும் தகராறுகளும் நடைபெறுகின்றன. அங்கே செல்வாக்குள்ள வட்டாரங் கள் தங்க விற்பனையே ஆதரிக்கின்றன. முதலாவ தாகவும் முதன்மையாகவும் அவர்கள் தங்கத்தைப் பண உலோகம் என்ற நிலையிலிருந்து அகற்றுவதையும் பணவியல் அமைப்பிலிருந்து தங்கத்தை முற்றிலும் அகற்றுவதையும் முரணில்லாதபடி ஆதரிப்பவர்கள். டாலரினுடைய விகிதம் சீர்கேடடைந் திருப்பதாலும் அதன் பரிவர்த்தனை விகிதம் வீழ்ச்சி யடைந்திருப்பதாலும் டாலர்களுக்குத் தங்கத்தை விற்பனை செய்வது அதை பலப்படுத்துவதற்கும் ஸ்திரமாக்குவதற்கும் சிறந்த வழி என்று நம்புகின்ற பயன்பாட்டுவாதிகளுடைய நிலை இதிலிருந்து சிறிதளவு வேறுபட்டதாகும்.

தங்க இருப்பை "விரயமாக்குவதை" எதிர்ப்பவர்களும் அங்கே கணிசமான செல்வாக்கைக் கொண்டிருக் கிறார்கள். மற்றவை எப்படியிருந்தாலும் அமெரிக்காவின் இன்றைய தங்க இருப்பு ஒரு சமயத்தில் அதனிடமிருந்த ஆக உயர்ந்த அளவோடு ஒப்பிடும் பொழுது சுமார் மூன்று மடங்கு குறைந்துவிட்டது. மற்ற நாடுகள் தமது தங்க இருப்பைவிடாப்பிடியாக வைத்துக்கொண்டு சர்வதேச வழங்கீடுகளுக்கு அதைக் காப்பு நிதியாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கும் நேரத்தில் அமெரிக்காவும் தன்னுடைய தங்க இருப்பைப் பாதுகாக்க வேண்டும் என்று அவர்கள் வாதிடுகிறார்கள்.

அமெரிக்க ராணுவத் தலைமையகமான பென்டகன் தங்க விற்பனையை எப்பொழுதுமே எதிர்த்து வந்திருக்கிறது என்பது நன்கு தெரிந்ததே. மிக அதிகமான செல்வாக்குள்ள இந்த இலாகாவும்அதனோடு தொடர்பு கொண்ட அரசியல் வட்டாரங்களும் பார்ட்– நாக்சிலிருக்கம் தங்கத்தை ராµவ போர்த்திட்டக் காப்பு நிதியாகக் கருதுகின்றன. பண உலோகம் என்ற நிலையிலிருந்து தங்கத்தை அகற்றுவதைப் பற்றி நுணுக்கமான விவாகரங்களில் ராணுவத்தளபதிகளுக்கு அக்கறை இல்லாதிருக்கலாம். ஆனால் ஒரு நெருக் கடியான நேரத்தில் தங்கம் இதுவரை யாருக்கும் தீமையைச் செய்ததில்லை. அது தேவையற்றதாகவும் இருந்ததில்லை என்பதைப் பல நூற்றாண்டுகளின் அனுபவம் அவர்களுக்கு போதிக்கிறது.

இதன் விளைவாக அமெரிக்காவின் தங்கக் கொள்கை நடைமுறையில் முரண்பாட்டைக் கொண்டிருக்கிறது. அதில் நீண்ட காலத்திட்டம் இல்லை.

உலகத்தின் அந்நியச் செலாவணிச் சந்தைகளில் டாலர் மதிப்புக் குறைவின் தாக்கத்தினால் அமெரிக்க அரசாங்கம் 1978 ஏப்ரலின் தங்க ஏல விற்பனைகளைத் தொடர்ந்து நடத்துவதென்று முடிவு செய்தது. ஒவ்வொரு தடவையும் 3,00,000 அவுன்சுகள் [9.3 டன்கள்] தங்கம் விற்பனை செய்யப்படும். சர்வதேச நிதி ஸ்தாபன ஏல விற்பனைகளைப் போலவே இவை இருந்தன. இந்த விற்பனைகளுக்கு இரண்டு நோக்கங்கள் இருப்பதாக அதிகாரபூர்வமாக அறிவிக்கப்பட்டது. முதலாவதாக, வழங்கீடுகளின் சம நிலையிலுள்ள பற்றாக்குறையைக் குறைத்து, டாலரின் பரிவர்த்தனை விகிதத்தை பலப்படுவத்துவது; இரண்டாவதாக, தங்கத்தின் சர்வதேசப் பணவியல் செயல்களை ஒழிக்கின்ற நிகழ்வுப் போக்கைத் தொடர வேண்டும் என்ற அமெரிக்காவின் விருப்பத்தை நிறைவேற்றுவது.

பண உலோகம் என்ற நிலையிலிருந்து தங்கத்தை அகற்ற விரும்பியவர்கள் தம் நோக்கத்தில் தீவிரமாக இருந்தனர் என்பதைப் பார்க்க முடியும் அமெரிக்க நடவடிக்கையைப் பற்றிய மேற்கு ஐரோப்பிய அபிப்பிராயங்ள் சாதகமாக இல்லை. அவை பல சமயங்களில் ஏளனமாகவும் இருந்தன. Le Figaro என்ற பிரெஞ்சு நாளிதழ் அதன் நிதி விவகார விமர்சகர் எழுதிய "அமெரிக்க தங்க விற்பனை வெத்துவேட்டு" என்ற கட்டுரையை வெளியிட்டது. இது அமெரிக்காவின் திசை மாற்ற நடவடிக்கை என்று அவர் எழுதியிருந்தார். அமெரிக்கா சில நூறு மில்லியன் டாலர்கள் மதிப்புள்ள தங்கத்தை விற்பனை செய்கிறது; அதே சமயத்தில் பல பில்லியன்கள் மதிப்புள்ள காகித டாலர்களை [அதே கடன் காப்பு நிதிகள்] மற்ற நாடுகள் மீது பலவந்தமாகத் திணிக்கிறது. அமெரிக்கா, "தன்னுடைய அடிப்படையான பிரச்சினைகளில் கவனத்தைச் செலுத்தாமல் ஒரு நாடகத்தை" நடத்திக் கொண்டிருக்கிறது.

இந்த விற்பனைகளினால் டாலரின் நிலையில் உணரத்தக்க விளைவு ஏற்படாத பொழுது அவற்றின் அளவு கணிசமாக அதிகரிக்கப்பட்டது. முதலில் 7,50,000 அவுன்சுகளாகவும் [23.3 டன்கள்] பிறகு ஒவ்வொரு ஏலத்துக்கம் 1.5 மில்லியன் அவுன்சுகளுக்குக் கூட [46.7 டன்கள்] உயர்த்தப்பட்டது. விற்பனையின் அளவு இவ்வளவு அதிகமான பொழுது வழக்கமாக சர்வதேச நிதி ஸ்தாபனம் செய்த அடக்கமான விற்பனைகளையும் அது குறைந்த காலத்துக்கு மறைத்தது. இதற்குப் பிறகு விற்பனையின் அளவும் செயல்தந்திரமும் அடிக்கடி மாற்றப்பட்டன. 1979 முழுவதிலுமே அமெரிக்க அரசாங்கம் தங்க விலைக்கோடு தடுக்கப்பட

முடியாத வகையில் மேலே போய்க் கொண்டிருப்பதைத் தடுக்க முயற்சி செய்தது.

அமெரிக்காவின் நிதி மற்றும் வர்த்தக வட்டாரங்களில் செல்வாக்குள்ள பத்திரிகையானWall Street Journal அதிகாரிகளுடைய நடவடிக்கைகளின் நோக்கத்தையும் தர்க்கவியலையும் விளக்கி எழுதியது. தங்கம் ஒரு பண்டம் என்பதைத் தவிர அதிகமான வேறு ஒன்று மில்லை என்பதை அரசாங்கம் உண்மையாகவே நம்பினால் தங்களுடைய சந்தையில் அது இவ்வளவு அதிகமான அக்கறை எடுத்துக்கொள்வது ஏன் என்று தங்க வர்த்தகர்கள் ஆச்சரியப்படலாம். அரசாங்கம் இதை நம்பவிலலை என்பதுதான் உண்மையாகும். தங்கத்துக்கம் டாலருக்கும் இருந்த இணைப்பு அநேமாக முறிந்துவிட்டது. தங்கத்தின் விலை அதிகரித்த பொழுது அமெரிக்க நாணயம் தானாகவே வீழ்ச்சி அடையவில்லை. ஆனால் விலை அதிகரிப்பது–அதிலும் வானத்தைத் தொடுகின்ற அளவுக்கு அது அதிகரிக்குமானால் முதலீடு செய்பவர்கள் காகிதப் பணத்தைக் காட்டிலும் உறுதியான சொத்துக்களை நோக்கிப் போவதற்கு விரும்புகிறார்கள் என்பதற்கு மிகவும் தெளிவான குறியீடாகும்.

அது பணவீக்கம் ஏற்படக் போகிறது என்ற எதிர்ப்பார்ப்புகளின் அளவுகோல், அதுவே பண வீக்கத்தை அதிகப்படுத்துகின்ற காரணியாகவும் இருக்கிறது. விலைகள் வேகமாக அதிகரிப்பது பெரும் பாலான மக்கள் வைத்திருக்கும் காகிதப் பணத்தின் மதிப்பைப் பற்றிய சந்தேகங்களை அவர்களிடம் ஏற்படுத்துகிறது. இது மிக அதிகமான அளவுக்கு நம்பிக்கையின்மையைக் காட்டுகிறது என்று அந்தப் பத்திரிகை எழுதியது.

தங்கச் சந்தை அமெரிக்கத் தங்கத்கதை விழுங்கியது. எனினும் அதன் பசி அடங்கிவிட்டதாக அறிகுறிகள் இல்லை. 1978–1979ம் ருடங்களில் சுமார் 500 டன்கள் தங்கத்தை விற்பனை செய்த பிறகு 1979 நவம்பரில் அமெரிக்க அரசாங்கம் ஏல விற்பனைகளை நிறுத்தியது. அமெரிக்காவின் கொள்கையல் ஏற்பட்ட திடீர் மாற்றம் அந்த வருடக் கடைசியில் தோன்றிய தங்க வேட்டை நெருப்பில் எண்ணெய் ஊற்றியது, கற்பனையிலும் நினைக்க முடியாத அளவுக்குத் தங்கவிலை அதகரிக்கக் காரணமாக இருந்தது என்பதை முன்பே குறிப்பிட்டோம்.

தங்கம் உற்பத்தி செய்த மற்ற சில நாடுகள் சமீப வருடங்களில் தங்களுயைட சேம நிதிகளின் ஒரு பகுதியை சுதந்திரச் சந்தையில் விற்பனை செய்ய நேர்ந்திருக்கிறது. இதற்குப் பல காரணங்கள்

இருக்கின்றன. பண உலோகம் என்ற நிலையிலிருந்து தங்கத்தை அகற்ற வேண்டும் என்ற கொள்கைக்கு ஆதரவளிப்பது அவர்களுடைய நோக்கமல்ல. அதிகமான பொருளாதார மற்றும் நிதி நெருக்கடிகளினால் போர்த்துக்கீசியா ஓரளவுக்குத் தங்கத்தை விற்பனை செய்தது. இந்திய அரசாங்கம் தங்கக் கடத்தலைப் பொருளாதார ரீதியில் ஒழிப்பதற்காகத் தன்னுடைய சொந்த இருப்புக்களிலிருந்து தங்கத்தை உள்நாட்டுச் சந்தையில் விற்பனை செய்தது.

தங்கத்தின் பொருளாதாரச் செயல்களையும் அதன் எதிர்காலத்தையும் பற்றி எதிரிடையான கருத்துக் களைக் கொண்டிருக்கும் பொருளியலாளர்கள் மேலே சொல்லப்பட்டிருக்கும் விவரங்களை முற்றிலும் வெவ்வேறு முறைகளில் விளக்குவது சாத்தியமே. பண உலோகம் என்ற நிலையிலிருந்து தங்கத்தை அகற்றுவதைப் பிரதானமான போக்காகக் கருதுபவர்கள் அதிகமான ஏற்ற இறக்கங்களைக் கொண்ட சந்தை விலைகளில் தங்கத்தை விற்பனை செய்வது அது ஒரு சாதாரணப் பண்டமாக மாறிவிட்டது என்பதையும் அதன் பணவியல் செயல் கள் குறைந்துவிட்டதையும் சுட்டிக்காட்டுவதாகக் கூறுகிறார்கள். பண உலோகம் என்ற நிலையிலிருந்து தங்கத்தை அகற்றுவதை எதிர்ப்பவர்கள் தங்கத்தைக் கொண்டு செய்யப்பட்டிருக்கும் நடவடிக்கைகள் விஸ்தரிக்கப்பட்டிருப்பதும் அதன் பணவியல் செயல்கள் நீடிப்பதற்கும் அதிகரிப்பதற்கும் சான்று எனக் கூறுகிறார்கள்.

தங்கத்தின் பொருளாதாரப் பாத்திரத்தைப் பற்றிய பிரச்சினை மிகவும் கூர்மையானது, அதே சமயத்தில் சிக்கலானதும்கூட என்பதை இக்கருத்து வேறுபாடுகள் குறைந்த பட்சம் எடுத்துக் காட்டுகின்றன. முதலாளித் துவப் பொருளாதார அமைப்பில் தங்கம் முக்கியமான நிலையைத் தக்க வைத்துக் கொண்டிருக்கிறது என்ற உண்மையை இவை பிரதிபலிக்கின்றன.

# மஞ்சள் உலோகத்தின் எதிர்காலம்

**தங்** கம் அதன் நீண்ட வராற்றில் ஒரு திருப்புமுனை யில் இருந்து கொண்டிருக்கிறது. இது இன்றைய முதலாளித்துவத்தின் அரசு –ஏகபோகக் கட்டத்தின் வளர்ச்சியோடும் குறிப்பாக பணவியல் அமைப்பு மற்றும் சர்வதேசப் பொருளாதார உறவுகளின் பரிணாமத் தோடும் இணைந்திருக்கிறது. தங்கத்தின் பொருளாதாரச் செயலில் சிக்கலான, பல்வகைப் பட்ட நிகழ்வுகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன, இவை மாறுபட்ட விளக்கங்களுக்கு இடமளிக்கக்கூடியவை என்பதை நாம பார்த்தோம். தங்கத்தின் எதிர்காலத்தைப் பெருமளவில் நிர்ணயிக்கக் கூடிய இரண்டு கேள்விகள் விசேஷமான கவனத்துக்கு உரியவை. முதலவாதாக, பண்டங்களை (அல்லது மேலும் துல்லியமாகச் சொல்லவேண்டுமென்றால மற்ற பண்டங்களைப்) பொறுத்தவரையிலும் அதன் வாங்கும் சக்தி எப்படி வளர்ச்சியடையும்?

இரண்டாவதாக, அதன் பொருளாதார வாழ்க்கையில் பணவியல் மற்றும் பணவியல் அல்லாத செயல் களின் விகிதம் எவ்வாறிருக்கும்? இந்தக் கேள்வி கள் நெருக்கமான இடை இணைப்பைக் கொண்டிருக் கின்றன. இதற்கு முந்திய அத்தியாயங்களில் இந்தக் கேள்விகளுக்கு நிபந்தனையற்ற பதில்களைக் கூற முடியாத போதிலும் (அவ்வாற கூற முடியும் என்று நினைப்பதுகூட மிகையான துணிவாகவே இருக்கும்) எதிர்கால வளர்ச்சியின் உருவரைகளைக் கூறுவதற்கு அடிப்படை கொடுக்கப்பட்டுள்ளது.

# மதிப்பு, விலை மற்றம் வாங்கும் சக்தி

இவற்றின் இடையுறவு பணவியல் தத்துவத்தின் கருவாக, முக்கியமான உள்ளடக்கமாக வராற்று ரீதியாகவே இருந்ததிருக்கிறது, பணவியல் அமைப்பிலிருந்து தங்கம் அகற்றப்பட்ட பிறகு, காகிதக் கடன் பணத்தின் தங்க அடிப்படை பிரிக்கப்பட்ட பிறகு இந்த தத்துவத்தின் கருமையம் தகர்ந்துவிட்டது. பொருளாதார வளர்ச்சியில் பணம் மற்றும் பணவியல் அமைப்பின் தாக்கம், பொருளாதாரத்தை அரசு ஒழுங்குப்படுத்துவதிலும் சக்கரவளைய நெருக்கடிகளிலும் அவற்றின் பாத்திரம் ஆகிய பிரச்சினைகள் அதில் முக்கியமான இடத்தை எடுத்துக் கொண்டுவிட்டன. ஆனால் தங்கத்தின் மதிப்பு, வாங்கும் சந்தி மற்றும் விலை ஆகியவற்றின் அர்த்தமும் இடைத் தொடர்பும் மிகவும் சிக்கலான பிரச்சினையாக இருக்கின்றன.

ஒரு காலத்தில் உலோகப் பணமும் அதன் செலாவணியும் என்ற நிகழ்வுகள் அரசியல் பொருளா தார விஞ்ஞானத்தின் உருவாக்கத்தில் தீர்மானமான பாத்திரத்தை வகித்தன. இந்தத் துறையின் காட்சிப் பதிவுகள் பல அம்சங்களில் பொருளாதார ஆராய்ச்சியின் முதல் முயற்சிகளுக்குப் பொருளாக இருந்தன. 16 மற்றும் 17ம் நூற்றாண்டுளில் தங்கத்தின் (மற்றும் வெள்ளியின்) மதிப்பிலும் வாங்கும் சக்தியிலும் ஏற்பட்ட தீவிரமான இறக்கம் –விலைப் புரட்சி என்று சொல்லப்படுவது –இந்தப் புதிய விஞ்ஞானத்தின் வளர்ச்சிக்குப் போதுமான விவரங்களைக் கொடுத்ததோடு அடிப்படையாகவும் உதவியது. புகழ்மிக்க சோவியத் பணவியல் நிபுணரான ஐ.ஏ.டிராக்டன்பெர்க் பின்வருமாறு கூறினார்: “பொருளாதார விஞ்ஞானம் பணப் பிரச்சினையிலிருந்தே வளர்ச்சியடைந்தது என்று கூறினால் அது மிகையான தல்ல”. இதே போன்ற கருத்து இதற்கு முன்னரும் சொல்லப்பட்டிருக்கிறது.

எனினும் காகிதக் கடன் பணம் தோன்றி பரிணாம வளர்ச்சி அடைகின்ற பொழுது பொருளாதாரத்தில் நடைபெறுகின்றவற்றோடு ஒப்பிடும்பொழுது உலோகச் செலாவணி நிகழ்வு சாதாரணமாகதாகக் தோன்றும். காகிதக்

கடன் பணத்தின் வாங்கும் சக்தி எங்கேயிருந்து வருகிறது? அதை நிர்ணயிப்பது எது? இந்தக் கேள்வி தத்துவரீதியிலும் செய்முறையிலும் முக்கியமானதாகும்.

சமீப பத்தாண்டுகளாக மார்க்சியப் பொருளாதார விஞ்ஞானத்தில் காகிதக் கடன் பணத்துக்கும் தங்கத் துக்கும் இடையிலுள்ள உறவுகளைப் பற்றியும் 19ம் நூற்றாண்டில் இருந்ததைப் போல அது தங்கத்தை மட்டுமே பிரதிநிதித்துவப்படுத்துவதாகப் பார்ப்பதா அல்லது 20-ம் நூற்றாண்டின் முதலாளித்துவத்தின் வளர்ச்சியோடு அது தங்கத்திலிருந்து பிரிக்கப்பட்டு பண்டங்களின் பரிவர்த்தனை மதிப்பைச் சுதந்திரமாக அளக்கக்கூடிய திறமையைக் கொண்டிருக்கிறதா என்பதைப் பற்றியும் தீவிரமான விவாதம் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. நவீன காலப் பணவீக்கத்தில் எது முதலில் ஏற்படுகிறது – தங்கத்தைப் பொறுத்தவரை காகிதக் கடன் பணத்தின் மதிப்புக் குறைவா அல்லது பண்டங்களைப் பொறுத்தவரை அதன் மதிப்புக் குறைவா? இந்தக் கேள்வி அதன் பல விளக்கங்களிலும் அம்சங்களிலும் பொருளியலாளர்களின் தீவிரமான கவனத்தைப் பெற்றிருக்கிறது.

பணம் மற்றும் தங்கத்தின் பிரச்சினைகளைப் பற்றிய புதிர் பல வேடிக்கையான, கிண்டலான கருத்துக்களுக்கு இடமளித்திருக்கிறது. ராத்ஷீல்டு வங்கியையும் அந்தப் பரம்பரையையும் நிறுவியவர் ஒரு சமயத்தில் பின்வருமாறு கூறியதாகச் சொல்லப்படுகிறது: ‘‘உலகத்திலேயே தங்கத்தைப் புரிந்து கொண்டவர்கள் இரண்டு பேர் மட்டும்தான். அவர்களில் ஒருவர் பிரான்ஸ் வங்கியில் எந்த முக்கியத் துவமும் இல்லாத எழுத்தராக இருக்கிறார், அடுத்தவர் இங்கிலாந்து வங்கியில் இயக்குநராக இருக்கிறார். ஒருவர் சொல்வதை அடுத்தவர் ஒத்துக் கொள்வதில்லை என்பது துரதிர்ஷ்டமே.’’

நிற்க, நாம் பிரச்சினையின் கருவுக்கு வருவோம். நம்முடைய பொருளாதாரச் சிந்தனையின் அடிப்படை உழைப்பளவு மதிப்புத் தத்துவமே. 17 மற்றும் 18ம் நூற்றாண்டுகளில் மூலச்சிறப்புடைய முதலாளித்துவ அரசியல் பொருளாதாரம் அதை உருவாக்கியது. மார்க்ஸ் அதை வளர்த்துச் சீரமைத்தார்.

தங்கம் மற்ற எல்லாப் பண்டங்களோடும் மிக முக்கியமான ஒரு பொது அம்சத்தைக் கொண்டிருக்கிறது: அது மனித உழைப்பினால் உற்பத்தி செய்யப்படுவது இந்தப் பொது அம்சமாகும். மற்ற எல்லாப் பண்டங்களையும்

போலவே தங்கத்தின் மதிப்பையும் உழைப்புதான் படைக்கிறது. உற்பத்தியின் வழக்கமான நிலைமைகளல் அந்தப் பண்டத்தின் ஒரு அலகை [இங்கே ஒரு அவுன்ஸ் அல்லது ஒரு கிராம் தங்கத்தை] உற்பத்தி செய்யத் தேவையான உழைப்பின் அளவு மதிப்பன் அளவை நிர்ணயிக்ககிறது. உழைப்பின் உற்பத்தித் திறன் அதிகரிக்கும் பொழுது இந்த அளவு [வேறு வார்த்தைகளில் சொல்வதென்றால் மனித மணி நேரத்தில் அல்லது அதைப் போன்ற அலகுகளில் கணக்கிடப்படுகின்ற உழைக்கும் நேரம்] குறைகிறது; ஆகவே மதிப்பும் குறைகிறது.

ஆனால் மதிப்பு எனப்படுவது பொருளாதாரத்தின் ஆழத்தில் எங்கோ மறைத்து வைக்கப்பட்டிருக்கிறது. அது பரிவர்த்தனை மதிப்பின் வடிவத்தில், அதாவது ஒரு பண்டம் மற்ற பண்டங்களுக்குப் பரிவர்த்தனை செய்யப்படுகின்ற விகிதங்களின் அமைப்பாக மட்டுமே வெளித் தோற்றம் பெற முடியும். இந்த விகிதங்களின் அமைப்பு தங்கத்தின் வாங்கும் சக்தி என்று சொல்லப்படுகிறது. அடிப்படையாகவே தங்கத்தின் வாங்கும் சக்தி [எந்தப் பண்டத்தின் பரிவர்த்தனை மதிப்பையும் போலவே] தங்கத்தின் ஒரு அலகை உற்பத்தி செய்யத் தேவையான உழைப்புச் செலவுக்கும் மற்ற பண்டங்களை உற்பத்தி செய்யத் தேவையான உழைப்புச் செலவுக்கும் உள்ள விகிதத்தைப் பொறுத்திருக்கிறது.

ஆகவே மற்ற பண்டங்களை உற்பத்தி செய்ய அவசியமான உழைப்புச் செலவைக் காட்டிலும் தங்கத்தை உற்பத்தி செய்ய அவசியமான உழைப்புச் செலவு கூடுதலான வேகத்தோடு குறைக்கப்படுமானால் [வேறு வார்த்தைகளில் சொல்வதென்றால் தங்கத்தின் உற்பத்தியில் உழைப்பின் உற்பத்தித் திறன் கூடுதலான வேகத்தோடு வளர்ச்சியடைந்தால்] மற்ற எல்லாம் சமமாக இருக்கும் பொழுது தங்கத்தின் வாங்கும் சக்தி குறையும். மற்ற தொழில்லில் உழைப்பின் உற்பத்தித் திறன் அதிகமான வேகத்தோடு வளர்ச்சியடையுமானால், தங்கத்தின் வாங்கும் சக்தி அதிகரிக்க முற்பட வேண்டும் என்பது இதன் மறுதலையாகும்.

ஒரு பௌதிகக் கூறு -மூலப்பொருள் கிடைக்குமிடங் களின் வளம்- தீர்மானமான தாக்கத்தை வகிக்கின்ற தொழில்துறைகளில் தங்கச்சுரங்கத் தொழிலும் ஒன்று என்பது இந்த விஷயத்தைக் கணிசமான அளவுக்குச் சிக்கலாக்குகிறது. தங்கம் ஒரே சமயத்தில் அதிக மாகக் கிடைக்கின்ற இடங்களிலும் குறைவாகக் கிடைக்கின்ற இடங்களிலும் வெட்டியெடுக்கப்படுகிறது. இந்த இடங்களின் எண்ணிக்கையும் இந்த

உலோகம் வெட்டியெடுக்கப்படக் கூடிய மண்ணியல் இருப்புக்களினால் வரையறுக்கப்படுகிறது.

தங்கம் வெட்டியெடுக்கப்படும் எல்லா இடங்களையும் படிப்படியாகக் கீழே சரிகின்ற அளவுப்படி வரிசைப் படுத்தலாம். மிக அதிகமான உழைப்பின் உற்பத்தித் திறனும் உற்பத்திப் பொருளின் மிகக்குறைவான தனிப்பட்ட மதிப்பையும் கொண்ட மிகவும் குறைவான தனிப்பட்பட மதிப்பையும் கொண்ட மிகவும் வளமான சுரங்கத்திலிருந்து குறைந்த தரம் மற்றும் மோசமான நிலைமைகளிலும் உழைப்பின் உற்பத்தித் திறன் மிகவும குறைவாகவும் உற்பத்திப் பொருள் மிக அதிகமான தனிப்பட்ட மதிப்பையும் கொண்டிருக்கும்

சுரங்கம் வரை இப்படி வரிசைப்படுத்தலாம். ஆனால் ஒப்பு நிலையில் மோசமான சுரங்கங்கள் உள்பட எல்லாச் சுரங்கங்களின் உற்பத்தியும் சமூகத்துக்கு அவசியமாக இருக்கிறது. இறுதி நிலை நிலத்தையும் [மூலப்பொருள் குறைவாகவே இருந்தாலும் வெட்டி எடுப்பது பயனுடையதே] வெட்டி எடுப்பது பயனற்றதான இறுதி நிலைக்குத் கீழான நிலத்தையும் பிரிக்கின்ற கோடு சில பொருளாதாரக் காரணிகளால் நிர்ணயிக்கப்படுகிறது. அத்தகைய பயனற்ற நிலத்தில் முயற்சியைச் செலவிடுவதை சமூகம் அனுமதிக்கவில்லை. ஆனால் இறுதி நிலை நிலத்தில் செலவிடப்படும் உழைப்பு மொத்தத் தொழிலுக்குமே நிர்ணயிக்கப் கூடியதாக இருக்கிறது. தங்கத்தின் மதிப்பை உருவாக்குவதற்கு அது அடிப்படையாக இருக்கிறது. அந்த நிலத்தின் தனியார் உடைமையாளரான தொழில்முனைவர் தான் செலவழித்த பணத்தைத் திரும்பப் பெறுவதோடு முதலீடு செய்திருக்கும் மூலதனத்துக்குத் திருப்திகரமான லாபமும் அடைவார் என்பதுஇதன் அர்த்தம். இறுதி நிலை நிலத்தைக் காட்டிலும் சிறந்த நிலங்களைக் கொண்டிருக்கிற உடைமையார்களுக்குத் திருப்திகரமான லாபம் கிடைப்பதோடு உபரியும் கிடைக்கிறது. அரசியல் பொருளாதாரத்தின் வார்த்தைகளில் இதை வாரம் என்று சொல்கிறோம். இவ்வாறு முதலாளித்துவத்தின் கீழ்ஒப்பு நிலையில் நல்ல நிலத்தின் உடைமையாளர்களுக்கு அவர்களுடைய சொத்திலிருந்து பலன் கிடைக்கிறது. அதை விற்பனை செய்கின்ற பொழுது விற்பனைவிய லியல் முன்பே கணக்கிடப்பட்டுப் பல வருடங்களுக்குப் பெருக்கிக் கொள்ளப்பட்ட வாரம் அடங்கியிருக்கிறது. இந்த வாரம் தன்கு முறைப்படியாகக் கிடைக்கும் என்று உறுதியாகத் தெரிந்தால் மட்டுமே வாங்குபவர் இந்த விலையைக் கொடுப்பார்.

இந்த வாரத்தை மார்க்சிய அரசியல் பொருளாதாரம் வேறுபாட்டு வாரம் என்று கூறுகிறது. ஏனென்றால் வயல்கள் அமைந்திருக்கும் இடத்திலும் அவற்றின் வளத்திலுமுள்ள இயற்கையான வேறுபாடு களினால் அது ஏற்படுகிறது. ஆனால் இறுதி நிலை நிலத்தின் [தங்கம் வெட்டியெடுக்கப்படும் இடங்களிலேயே மிக மோசமானது] உடைமையாளர் தனியார் உடைமையாளர். அவர் பொருளாதார ரீதியில் நியாயமான காரணங்களுக்காகத் தன்னுடைய உடைமையிலிருந்து வருமானத்தைப் பெற விரும்புகிறார். அவருக்கு இந்த வருமானத்தைக் கொடுக்குமாறு சமூகம் நிர்ப்பந்திக்கப் படுகிறது. அதனால் தங்கத்தின் விலை மேலும் அதிகரிக்கிறது. இந்தக் கூடுதல் மதிப்பு தனிமுதலான வாரம் என்று கூறப்படுகிறது. தங்கச் சுரங்கங்கள் மற்றும் தங்க வயல்களிலிருந்து கிடைக்கும் வரம் அடிப்படையில் நிலத்துக்குக் கிடைக்கும் [விவசாய] வாரத்திலிருந்து வேறுபட்டதல்ல, அதேபொது விதிகளுக்கு இதுவும் உட்பட்டிருக்கிறது. அதே சமயத்தில் சுரங்கத்திலிருந்து தங்கத்தை வெட்டியெடுத்தல் விவசாயத்திலிருந்து மட்டுமல்லாமல் மற்ற சுரங்கத் தொழில்களிலிருந்தும் கணிசமான அளவுக்கு வேறுபட்டிருக்கிறது. ஆகவே உற்பத்திப் பொருளின் மதிப்பின் உருவாக்கம் சில பிரத்யேகமான கூறுகளைக் கொண்டிருக்கிறது.

மேலே கூறப்பட்டிருக்கும் விதி தங்கத்தின் பரிவர்த்தனை மதிப்பின் [வாங்கும் சக்தியின்] உருவாக்கத்தின் மிகவும் சூக்குமமான திட்டமே. பொருளாதார எதார்த்தத்தில் அது மிகவும் சிக்கலான முறையில், அந்த உலோகத் தின் உற்பத்தியில் ரேநடியாகவும் மொத்தமாகப் பொருளா தாரத்திலும் இயங்குகின்ற பல காரணிகளின் தாக்கத்தில் உருவாக்கப்படுகிறது.

உழைப்புச் செலவு மற்றும் உழைப்பின் உற்பத்தித் திறன் என்பவை யாவை? தங்க உற்பத்தியில் நேரடியாக ஈடுபடுத்தப்படுகின்ற உயிருள்ள உழைப்பு மற்றும் கருவிகள், இயந்திரங்கள், போக்குவரத்து, மின்சாரம், இதரவைகளைப் போன்ற கெட்டிப்படுத்தப்பட்ட உழைப்பு ஆகிய இருபகுதிகளை உழைப்புச் செலவு கொண்டிருக்கிறது. உழைப்பின் உற்பத்தித் திறன் என்பது அதன் இரண்டு வடிவங்களின் உற்பத்தித் திறனின் மொத்தமே. அது பல கூறுகளை, பிரதானமாக தங்கம் கிடைக்குமிடத்தின் வளப்பெருக்கம், தொழில்நுட்பவியல் முன்னேற்றம் மற்றும் தொழிலாளர்களின் திறமை ஆகியவற்றைப் பொறுத்திருக்கிறது. ஆனால் உழைப்புச் செலவும் உற்பத்தித் திறனும்

தங்கம் எப்படி விற்பனை செய்யப்படுகிறது. இங்கே நேரடியான இணைப்பு இருப்பது மட்டுமல்ல, உழைப்பளவை மதிப்புக்கும் வாங்கும் சக்திக்கும் இடையே எதிர்மறையான தாக்கமும் இருக்கிறது. உலோகத்தை உற்பத்தி செய்கின்ற இறுதி நிலை நிலைமைகளை நிர்ணயிக்கின்ற இயந்திர நுட்பத்தின் மூலமாக இந்த எதிர்மறைத் தாக்கம் இயங்குகிறது.

தங்கத்தின் வாங்கும் சக்தி அதன் உற்பத்தி நிலைமைகளில் எத்தகைய முக்கியமான மாற்றங்களும் இல்லாமலேயே உபயோகிக்கப்படுகின்ற துறைகளில் ஏற்படுமு மாற்றங்கள், அரசாங்கக் கொள்கை, இதரவை களைப் போன்ற காரணிகளின் தாக்கத்தில் கணிசமான அளவுக்கு மாற்றமடையும் என்பது நன்கு அறிந்ததே. இதே மாதிரியான காரணிகளின் தாக்கத்தின் விளைவாகத் தங்கத்தின் வாங்கும் சக்தி வீழ்ச்சியடைவதாக வைத்துக் கொஷீமீவோம். இவ்வகையைச் சேர்ந்த உண்மையான வரலாற்று நிலைமையை 1950-க்கள் மற்றும் 1960க்களின் காலகட்டத்தில் பார்க்கிறோம். இத்தகைய நிலைமைகளில் உற்பத்தியாளர்கள் [இன்று இதற்குப் பெரிய கம்பெனிகள் என்று அர்த்தம்] குறைவாகத் தங்கம் கிடைக்கும் இடங்களைக் கைவிடுகிறார்கள்.

குறைவான உற்பத்தித் திறனைக் கொண்ட சுரங்கங்களையும் வயல்களையும் மூடி விடுகிறார்கள். அதிகமாகத் தங்கம் கிடைக்கின்ற இடங்களில் அதிகமான கவனத்தைச் செலுத்துகிறார்கள். அடுத்து நடைபெறும் சம்பவங்களின் போக்கை எஸ்.எம்.பரீசவ் பின்வருமாறு வர்ணிக்கிறார்: “அதிகமான உற்பத்தியைத் தரக்கூடிய வயல்களில் உலோக உற்பத்தி ஒன்று குவிக்கப்படுகிறது. இவற்றில் மிகவும் குறைந்த அளவில் தங்கத்தைக் கொடுக்கும் வயல்கள்தான் தங்கத்தின் புதிய மதிப்பை நிர்ணயிக்கின்றன. குறைவான தங்கத்தைக் கொண்ட பழைய வயல்களைக் காட்டிலும குறைவான தங்கத்தைக்கொண்ட புதிய வயல்களில் உழைப்புச் செலவு குறைவாக இருக்குமாதலால் தங்கத்தின் மதிப்பு குறையும்.” மிகச் சிறந்த வயல்களுக்கும மிக மோசமான வயல்களுக்கும் இடையே உள்ள வேறுபாடு குறைக்கப் படுவதால் ஒப்பு நிலையில் சிறந்த வயல்களில் வாரம் இதனால் குறைய நேரிடும் என்பது தெளிவு. அந்த சமயத்தில் தென் ஆப்பிரிக் காவில் இது உண்மையிலேயே நடைபெற்றது. பெருமளவுக்குச் சந்தைக்க வெளியே உள்ள காரணிகளால் நிர்ணயிக்கப்பட்ட தங்கத்தின் குறைவான விலை தங்க உற்பத்தியாளர்கள் மத்தியில் அதிகமான அதிருப்தியை ஏற்படுத்தியது.

இதற்கு எதிரிடையான நிகழ்வை எழுபதுக்களில் கண்டோம். தங்கத்தின் விலையும் அதன் வாங்கும் சக்தியும் கணிசமாக அதிகரித்தபடியால் கம்பெனிகள் குறைவாகத் தங்கம் கிடைக்கும் பாறைகளையும் தோண்டின. இதற்கு முன்பு சுரங்கங்களில் விட்டு வைக்கப்பட்ட குவியல்களையும் உபயோகப்படுத்தின. மிகக் குறைவாகத் தங்கம் கிடைக்கும் பகுதிகளின் உற்பத்தி நிலைமைகள் முன்னைக் காட்டிலும் அதிகமான அளவுக்கு இந்தத் தொழில்துறையில் ஏற்படும் மதிப்பை நிர்ணயித்தன என்பது வெளிப்படையாகும். ஆகவே இதன் விளைவாக மதிப்பு அதிகரித்தது. இது படிப் படியாகத் தங்கத்தின் உயர்ந்த சந்தை விலைக்கும் அதன் வாங்கும் சக்திக்கும் ஒரு வகையான அடிப்படையைக் கொடுத்தது.

அதிகமாகத் தங்கம் கிடைக்கும் புதிய இடங்கள் கண்டு பிடிக்கப்பட்டிருந்தால் என்ன நடைபெற்றிருக்கும்? அவை உற்பத்தியில கொண்டுவரப்படுவதால் ஒப்பு நிலையில் அதிகமான தங்கம் கிடைத்துக்கொண்டிருந்த பகுதிகள் இறுதி நிலைப் பகுதிகளாக மாற்றப்படும், உழைப்புச் செலவு குறைவதன் விளைவாக தங்கத்தின் மதிப்பு குறையும், மற்ற எல்லாம் சமமாக இருக்குமானால் இது தங்கத்தின் வாங்கும் சக்தியில் குறைவை ஏற்படுத்தக்கூடும். இந்த மொத்த நிகழவுக்கும் அடிப்படை உற்பத்தி நிலைமைகளே தவிர, சந்தை நிலைமைகள் அல்ல என்பதைத் தெளிவுபடுத்துவதற்காக இதை வலியுறுத்துவது அவசியமாக இருக்கிறது.

தங்கத்தின் வாங்கும் சக்தி காகிதக் கடன் பணத்தில் அதன் விலையும் இதர எல்லாப் பண்டங்களின் விலை மட்டத்தையும் நேரடியாகச் சார்ந்திருக்கிறது. உண்மை யான கூலி என்ற கருதுகோளோடு இதை ஒப்பிடலாம். இந்தக் கருதுகோள் ஒரு பக்கத்தில் பெயரளவு (பணத்தில்) கூலியையும் மறு பக்கத்தில் அந்தக் கூலியைக் கொண்டு வாங்கப்படுகின்ற பண்டங்களின் விலைகளையும் பொறுத்துகிக்கிறது. தங்கத்தின் விலை (கூலியைப் போல) பண அலகுகளில்), உதாரணமாக டாலர்களில் எடுத்தரைக்கப்படலாம். ஆனால் எண்ணற்ற ஏராளமான பண்டங்களின் விலைகளோடு அதை ஒப்பிட வேண்டும். இயக்கியல் மூலமாக மட்டுமே இதற்கு அர்த்தமேற்படுகிறது. அது குறியீட்டெண்களின் உதவியோடு செய்யப்படுகிறது.

உதாரணமாக, ஒரு குறிப்பிட்ட கட்டத்தில், ஒரு குறிப்பிட்ட ஆதாரக் காலகட்டத்தோடு ஒப்பிடும் பொழுது தங்கத்தின் விலை 200 சதவீதமாக இருந்தது. முன்னதைப் பின்னதால் வகுக்கும்பொழுது தங்கத்தின் வாங்கும்

சக்தி ஆதார அளவில் 133 சதவீதமாக இருந்தது அல்லது 33 சதவீதம் அதிகரித்தது என்று கணக்கிடுகிறோம். வேறு வார்த்தைகளில் சொல்வதென்றால், ஒரே அளவு தங்கத்தைக் கொண்டு ஆதார வருடத்தைக் காட்டிலும் 33 சதவீதம் அதிகமான பண்டங்களை வாங்க முடிந்தது.

தங்க ஆதார அளவுக் காலத்தின்போது தங்கத்தின் விலை நிலையாக இருந்தது. உண்மையில் அது விலையே அல்ல. ஏனென்றால் விலை என்பது பணத்தில் எடுத்துக்கூறப்படுகின்ற மதிப்பாகும். ஆனால் தங்கம் பணம் என்றால் அது தன் மதிப்பைத் தானே எடுத்துக்கூறுகிறது என்பது அர்த்தம். தங்கத்தின் விலை என்பது பணவியல் அலகின் தங்க அடக்கத்தைத் தலை கீழாக வைப்பதே.

எல்லாப் பண்டங்களின் விலைகளுமே இத்தனை அவுன்ஸ் தங்கம் அல்லது இத்தனை கிராமகஷீமீ தங்கம் என்று சொல்லப்படுவதில்லை. டாலர்களிலும் இதர தேசிய நாணயங்களிலுமே அவை சொல்லப்படுகின்றன. இந்த விலைகள் நிலையாக இருக்கவில்லை, தொடர்ச்சியாக மாறிக்கொண்டிருந்தன. இதற்கு எதிர்மாறான வகையில் தங்கத்தின் விலை நிலையாக வைக்கப்பட்டிருந்தது. ஆகவே தங்கத்தின் வாங்கும் சக்தி பண்ட விலைகளின் பொது மட்டத்தில் ஏற்படுகின்ற மாற்றத்தின் மூலமாக மட்டுமே மாற முடியும். இந்த விலை மட்டம் அதிகரித்தால் தங்கத்தின் வாங்கும் சக்தி குறையும். விலை மட்டம் குறைந்தால் தங்கத்தின் வாங்கும் சக்தி அதிகரிக்கும். 19ம் நூற்றாண்டில் விலைகளின் பொது மட்டமும் அதன் மாற்றங்களும் விலைக் குறியீட்டெண்களின் உதவியோடு முன்னே கணக்கிடப்பட்டன. ஆனால் ஆரம்பத்தில் அவை மிகவும் நம்பக மற்றவையாக இருந்தன.

தங்க ஆதார அளவின்போது தங்கத்தை விற்பனை செய்வதென்பது தங்கக் கட்டிகளை நாணயத்துக்கு அல்லது நாணயத்துக்குப் பரிவர்த்தனை செய்யப்படக் கூடிய வங்கி உண்டிகளுக்குப் பரிவர்த்தனை செய்வ தென்பதே அர்த்தம். தங்கத்தை வாங்குவதும் விற்பனை செய்வதன் அடிப்படையில் அதன் ஆரம்பத்தில் அவை மிகவும் நம்பகமற்றவையாக இருந்தன. தங்க ஆதார அளவின்போது தங்கத்தை விற்பனை செய்வதென்பது தங்கக் கட்டிகளை நாணயத்துக்கு அல்லது நாணயத்துக்குப் பரிவர்த்தனை செளிணியப்படக்கூடிய வங்கி உண்டிகளுக்குப் பரிவர்த்தனை செய்வதென்பதே அர்த்தம். தங்கத்தை வாங்குவதும் விற்பனை செய்வதும் அடிப்படையில் அதன் வடிவத்தை மாற்றிக் கொள்வதென்று மட்டுமே பொருள். ஆனால் காகிதக் கடன் பணத்தைத் தங்கத்துக்குப் பரிவர்த்தனை

செளிணிய முடியாத பொழுது, செலாவணியிலிருக்கும் பணத்தின் உண்மையான வடிவமகக அது ஒன்று மட்டுமே இருக்கும்பொழுது இந்தப் பணத்தில் தங்கத்தின் விலை கோட்பாட்டளவில் மற்ற பண்டங்களின் விலை களிலிருந்து இனிமேல் வேறுபட்டிருக்கவில்லை.

தங்கத்தை வாங்குவதும் விற்பனை செய்வதும் எந்தவொரு பண்டத்தையும் வாங்குவதையும் விற்பனை செய்வதையும் போலவே இருக்கிறது. தங்க உற்பத்தியாளர் தங்கத்தை டாலர்களுக்கு அல்லது பவுன் ஸ்டர்லிங்குகளுக்கு விற்பனை செளிணியும்பொழுது வைரங்கள், செம்பு அல்லது ஈய உற்பத்தியாளரிடமிருந்து கோட்பாட்டளவில் சற்றும் வேறுபடவில்லை. இன்று இது குறிப்பிட்ட வகையில் தெளிவாகப் புலப்படுகிறது. கடந்த சில நூற்றாண்டுளின் வரலாற்றில் தங்கத்தின் மதிப்பில் ஏற்பட்ட மாற்றங்களின் தாக்கத்தில் தங்கத்தின் வாங்கும் சக்தி கூர்மையாகவும் தானாகவும் மாறிய இரண்டு கட்டங்கள் இருக்கின்றன.

முதல் கட்டம் நாம் மேலே குறிப்பிட்ட விலைப் புரட்சிக் கட்டமாகும். அமெரிக்காவிலிருந்து “மலிவான” தங்கமும் வெள்ளியும் மேற்கு ஐரோப்பாவுக்குள் வெள்ளம் போல நுழைந்தன. குறைந்த உழைப்புச் செலவுகள் அரிய உலோகங்களின் மதிப்பை நிர்ணயிக்கத் தொடங்கின. இவ்வாறு வந்துகொண்டிருந்த அரிய உலோகங்களின் தாக்கம் மிகவும் அதிகமான அளவுக்கு நேரடியாக இருந்த ஸ்பெயினில் விலைகளின் சராசரி மட்டம் 1500க்கும் 1600க்குமிடையில் 3.5 மடங்கு அதிகரித்தது. சிறிது காலதாமதத்துக்குப் பிறகு மற்ற ஐரோப்பிய நாடுகளிலும் இதே நிகழ்வு ஏற்பட்டது. தங்கம் மற்றும் வெள்ளியின் வாங்கும் சக்தியில்–இது நவீன அளவுகோல்களின்படி ஓரளவுக்கு மெதுவானதாக இருந்தாலும்–கணிசமான வீழ்ச்சியே. 1560–ம் வருடத்திலிருந்து இங்கிலாந்தைப் பற்றி மிகவும் நம்பகமான புள்ளிவிவரங்கள் கிடைத் திருக்கின்றன. அவற்றின்படி 1630–க்களில் தங்கத்தின் சராசரி வாங்கும் சக்தி 1560–க்களில் இருந்ததில் மூன்றில் இரண்டு பங்குதான் இருந்தது. 1560க்கும் முன்னரும் தங்கத்தின் வாங்கும் சக்தியில் சிறிதளவு வீழ்ச்சி ஏற்பட்டிருக்கலாம். ஆனால் அன்றைய நாணய முறையில் இருந்த குழப்பத்தின் காரணமாக நம்பகமான மதிப்பீடுகளைச் செய்ய இயலாது.

நாம் அக்கறையெடுத்துக்கொள்ள வேண்டிய இரண்டாவது கட்டம் தங்கம் ஆதாரஅளவு நிறுவப்பட்ட காலகட்டமாகிய 19ம் நூற்றாண்டின் கடைசி

முப்பதாண்டு களாகும். 1872 முதல் 1896 முடிய மொத்த விலைக் குறியீட்டெண் அமெரிக்காவில் 50 சதவீதமும் இங்கிலாந்தில் 39 சதவீதமும் பிரான்சில் 43 சதவீதமும் குறைந்தது. இதைப் பின்வருமாறு விளக்கலாம். இந்தக் காலகட்டத்தின்போது அதிகமான தங்கம் கிடைக் கின்ற புதிய இடங்கள் கண்டுபிடிக்கப் படவில்லை [ஆப்பிரிக்காவின் தென் பகுதியில் தங்கச் சுரங்கத் தொழில் இன்னும் சிறு அளவிலேதான் நடைபெற்றது], தங்கச் சுரங்கத் தொழிலின் உழைப்பின் உற்பத்தித் திறன் அதிகரிக்கவில்லை, ஒருவேளை குறைந்து கொண்டும் இருந்திருக்கலாம். ஆனால் பெரும்பாலான எல்லாத் தொழில்துறைகளிலும் வேகமான தொழில்நுட்ப முன்னேற்றம் இருந்தது. உழைப்பின் உற்பத்தித் திறனும் அதிகரித்துக்கொண்டிருந்தது. ஆகவே தங்கத்தின் வாங்கும் சக்தி அதிகரித்தது. தங்கத்தின் விலை அதிகரித்ததனால் ஏற்பட்ட விளைவுகளில் தங்கச் சுரங்கத் தொழிலின் லாபம் அதிகரித்ததும் ஒன்று. புதிதாக வெட்டியெடுக்கப்பட்ட தங்கத்தின் முடிவில்லாத அளவை நிர்ணயிக் கப்பட்ட விலையில் வாங்கியதன் மூலம் அரசாங்கங்கள் தங்கச் சுரங்கத் தொழிலுக்கு நிதியுதவி கொடுத்தன என்று சொல்லலாம். இந்த முடிவில்லாத தேவையும் கூட அதனளவில் பின்வரும் இயந்திர நுட்பத்தின் மூலம் தங்கத்தின் மதிப்பின் அதிகரிப்பை உற்பத்தி செளிணிதிருக்கலாம். குறைவான தங்கக்தைக் கொண்ட மூலப் பொருட்களும் வண்டற்படிவுகளும்கூட உற்பத்தியில் கொண்டுவரப் பட்டன. அவற்றில் உற்பத்திப் பொருளின் ஒவ்வொரு அலகுக்கும் உழைப்புச் செலவு மிகஅதிகமாக இருந்தது. உலகத்தில் தங்கம் வெட்டியெடுக்கப்படக்கூடிய இடங்கஷீமீ வரையறுக்கப் பட்டவை என்பதால், உற்பத்தியை விருப்பம்போல அதிகரிக்க முடியாது என்பதால், சுரங்கத் தொழிலின் இந்த மோசமனா நிலைமைகள் தங்கத்தின் மதிப்பை நிர்ணயித்தன.

19–ம் நூற்றாண்டின் கடைசியில் தங்கத்தின் வாங்கும் சக்தி அசாதாரணமான அளவுக்கு அதிகமாக இருந்தது. மூன்று நூற்றாண்டுக் காலத்தில் அதன் மிக உயர்ந்த மட்டத்தை எட்டியெதன்று கூடச் சொல்லலாம். இதற்குப் பிறகு அது 1930–க்களில் பவுன், டாலர் ஆகியவற்றின் தங்க அடக்கம் இடையிடையே பெரும் அளவுகளில் குறைக்கப்பட்டு அதற்கேற்ப தங்கத்தின் விலை அதிகரித்தபொழுது மட்டுமே இந்த மட்டத்தைத் தாண்டி மேலே சென்றது. பிறகு நம் காலத்தில் 1970–க்களின் பிற்பகுதியிலும் 1980களின் தொடக்கத்திலும் இவ்வாறு அதிகரித்தது.19ம் நூற்றாண்டின் கடைசியில் ஒரு அவுன்ஸ் தங்கத்தைக் கொண்டு அதற்கு முந்திய முப்பது வருடங்களைக் காட்டிலும்

சுமாராக இரண்டு மடங்கு சரக்குகளை வாங்க முடியும். தங்கத் தொழில்துறையில மிக உயர்ந்த லாபம் கிடைத்தது. ஆகவே தங்க வேட்டையும் அதிகமான மூர்க்கத்தனத்தோடு நடை பெற்றது. இந்தக் காலகட்டத்தில் தங்க வேட்டைகளில் காணப்பட்ட பயங்கரமான வெறியை இது ஓரளவுக்கு விளக்கும்.

1914–க்குப் பிறகு தங்கத்தைப் பற்றிய நிலைமை மாறிவிட்டது. வெவ்வேறு நாடுகளின் காகிதக் கடன் பணத்தில் அதன் விலையை நிர்ணயம் செளிணிவது நிறுத்தப்பட்டது. தங்கத்தின் வாங்கும் சக்தி இப்பொழுது காகதக் கடன் பணத்தில் பண்ட விலைகள் மற்றும் அதே பணத்தில் தங்க விலை என்ற இரண்டு காரணிகளைச் சார்ந்திருந்தது. இந்த விலை அரசாங்கக் கொள்கையின், அமெரிக்க அரசாங்கத்தின் நடவடிக்கைகள் விசேஷமான பொருளாதார மற்றும் அரசியல் முக்கியத்துவத்தைக் கொண்டிருந்தன.

1933 மார்ச்சில் சிறிது காலத்துக்கு முன்பு பதவிக்கு வந்த ரூஸ்வெல்ட் அரசாங்கம் தங்க ஆதார அளவை ஒழித்தது; நவீன வார்த்தைகளில் சொல்வதென்றால் மிதக்கும் தங்க விலையையும் மிதக்கும் டாலர் விகிதத்தையும் அமுலாக்கியது. தங்கத்தை வாங்கும் ஏகபோகம் என்ற முறையில் அரசு தங்கத்தின் விலையைப் படிப் படியாக உயர்த்தியது. சில சமயங்களில் ஜனாதிபதி தன்னுடைய காலைச் சிற்றுண்டியின்போது, நிதித்துறைச் செயலாளரான மார்கென்தாவ் [இளையவர்] மற்றும் நிதிச் சீரமைப்புக் கார்ப்பரேஷனின் தலைவரான ஜான்சுடன் பேசிக்கொண்டிருக்கும் நேரத்தில் அன்றைக்குத தங்கத்தின் விலையை முடிவு செய்வார் என்று சொல்லப் படுகிறது. ஒருநாள் விலை 21 சென்டுகள் அதிகமாக நிர்ணயிக்கப்பட்டது. ஏழு அதிர்ஷ்ட எண் என்று கருதிய ரூஸ்வெல்ட் அதைப் பொருத்தமான எண்ணாக மாற்ற மூன்றில் பெருக்கி விலையை நிர்ணயித்தாராம். 1934 ஜனவரிக்குள் ஒரு அவுன்சின் விலை 35 டாலர்களை எட்டிவிட்டது. அந்த மட்டத்தில விலை நிர்ணயிக்கப்பட்டது. இது பழைய விலையைக் காட்டிலும் சுமார் 70 சதவீதம் அதிகமாக இருந்தது.

தங்கத்தின் விலை பண்ட விலைகளை மேலே தூக்கும், சுறுசுறுப்பான தேவையைப் பெருக்கும். தீவிரமான நெருக்கடி என்ற புதைமணலிலிருந்து பொருளா தாரத்தைத் கைதூக்கிவிடும் என்ற அனுமானத்தின் பேரில் எல்லா நடவடிக்கைகளும் செய்யப்பட்டன. ஆனால் தங்கத்தின் விலை உயர்வைப் பண்ட விலைகள் அநேமாகப் பின்பற்றவில்லை. தங்க விலைகள் தீவிரமாக

அதிகரித்து பண்ட விலைகள் மாறாதிருந்த அளவில் தங்கத்தின் வாங்கும் சக்தி உயர்ந்தது. 19-ம் நூற்றாண்டின் கடைசியில் நடைபெற்ற சம்பவங்களிலிருந்து இது வேறுபட்டிருந்தது, இது திட்டமிட்ட நடவடிக்கையின், அரசியல் முடிவின் விளைவு. தங்கத்தின் மதிப்பின் மாற்றத்துக்கும் இதற்கும் சம்பந்தம் ஒன்றுமில்லை.

தங்கத்தின் வாங்கும் சக்தி அதிகரித்ததன் விளைவுகளில் ஒன்று அதன் உற்பத்தியின் கணிசமான அதிகரிப்பாகும். 1930க்களில் இருந்த ஸ்தூலமான நிலைமைகளில் தென் ஆப்பிரிக்கக் கம்பெனிகள் குறைவான அளவில் தங்கம் இருக்கும் மூலப்பொருள்களையும் உபயோகித்தன (1970-க்களிலும் இதே மாதிரி நடைபெற்றது) என்பதோடு புதிய சுரங்கங்களை வேகமாகக் கட்டி அவற்றில் உற்பத்தியைச் செய்தன. 1930-களில் தென் ஆப்பிரிக்காவில் தங்கச் சுரங்கத் தொழில் இன்றைக்கு இருப்பதைக் காட்டிலும் குறைவாகவே ஒன்று குவிந்திருந்தது. மற்ற நாடுகளின் பிரத்யேகமான நிலைமைகளில் விலை மாற்றங்களுக்கு உற்பத்தி மிகவும் பலமான எதிர்விளைவைக் கொண்டிருக்கிறது.

1934 முதல் 1971 வரை தங்கத்தின் அதிகாரபூர்வமான விலையை ஒரு அவுன்சுக்கு 35 டாலர்கஷீமீ என்ற நிலையான மட்டத்தில் அமெரிகக் அரசாங்கம் ஆதரவளித்து நிறுத்தியது. சில சமயங்களில் சுதந்திரச் சந்தை விலை இதைக் காட்டிலும் அதிகரித்த போதிலும் அது அன்றைக்குக் குறைவான முக்கியத்தையே கொண்டிருந்தது (6-ம் அட்டவணையைப் பார்க்க). தங்கக் கூட்டிணைப்புக் காலத்தில் சந்தை விலை அதிகார பூர்வமான விலையிலிருந்து வேறுபடவில்லை. எனினும் இதற்கிடையில் யுத்தகால மற்றும் யுத்தத்துக்குப் பிந்திய காலப் பணவீக்கத்தின் தாக்கத்தினால் மொத்த விற்பனை விலைக் குறியீட்டெண் இந்தக் காலகட்டத்தில் அமெரிக்காவில் உத்தேசமாக மும்மடங்கு உயர்ந்தது. தங்கத்தின் வாங்கும் சக்தி கூர்மையாக வீழ்ச்சியடைந்தது, 1918-1920ல் ஒரு குறுகிய காலத்தை ஒதுக்கிப் பார்த்தால் அது 1970-ம் வருடத்தில் அமெரிக்க வரலாற்றிலேயே ஆகக்குறைந்த மட்டத்தை அடைந்தது.

தங்கத்தின் மதிப்புக் குறைவு போதிய அளவுக்கு உண்மையான பொருளாதார அடிப்படைகளைக் கொண்டிருக்கவில்லை. அது பெருமளவுக்குப் பொருளா தாரத் துறையில் அரசுக் கொள்கையின் தாக்கத்தினால் ஏற்பட்ட விளைவாகவே இருந்தது. அமெரிக்கா தங்கத்தின் விலையை இயற்கைக்குப் புறம்பான வகையில் பிடிவாதமாகக் குறைவாக வைத்துக் கொண்டிருந்ததற்கு அரசியல் பூர்வமான விலையை உயர்த்தினால்

[டாலரின் மதிப்புக் குறையுமாதலால்] அது அமெரிக்காவின் கௌரவத்தைப் பாதிக்கும் என்று கருதப்பட்டது.

1971–1973ம் வருடங்களில் அமெரிக்கா இந்த நிலையைக் கைவிடுமாறு நிர்ப்பந்திக்கப்பட்டது. அது விருப்பு வெறுப்பற்ற புள்ளியியல் மதிப்பீடுகள், அமைதியான விவாதம் ஆகியவற்றின் அடிப்படையில் செய்யப்படவில்லை. தீவிரமான நெருக்கடிகள், பீதி, அவசர உணர்ச்சி என்ற சூழ்நிலையில் இது நடைபெற்றது. 1973–ல் அதிகாரபூர்வமான விலை ஒரு அவுன்சுக்கு 42.22 டாலர்கள் என்று முடிவு செய்யப்பட்டது. ஆரம்பத்திலிரந்தே இதற்கு உண்மையான பொருளாதார முக்கியத்துவம் எதுவும் கிடையாது. 1971–ம் வருடக் கடைசிக்கும் 1974ம் வருடத்தின் கடைசிக்கும் இடையே தங்கத்தின் சந்தை விலை நான்கு மடங்கு அதிகரித்தது. அமெரிக்காவில் 1974–ல் தங்கத்தின் வாங்கும் சக்தி 1913–ம் வருடத்தைக் காட்டிலும சராசரியாக 76 சதவீதமும் 1934–ம் வருடத்தைக் காட்டிலும் 12 சதவீதமும் அதிகமாக இருந்தது என்று மொத்த விற்பனை விலைக் குறியீட்டெண்களிலிருந்து அறிகிறோம். காகித டாலர்களில் தங்கத்தின் விலை 1913–ம் வருட விலையைக் காட்டிலும் சுமார் எட்டு மடங்கு அதிகமாக இருந்தது.

வர்த்தகச் சூதாட்டம் செளிணியப்படுகின்ற பண்டங்களில் எப்பொழுதும் ஏற்படுவதைப் போல, இந்த உயர்வுக்குப் பிறகு தங்கத்தின் விலை குறைந்தது. 1975–1976ல் பொதுவிலைக் குறியீட்டெண்ணின் அதிகரிப்பின் பின்னணியில் இது நடைபெற்றது. தங்கத்தின் வாங்கும் சக்தி மறுபடியும் கணிசமாகக் குறைந்தது. 1974ம் வருடத் திலிருந்த மட்டத்துக்கு மேல் 1979 வரை உயரவில்லை. 1980ல் தங்கத்தின் வாங்கும் சக்தி வரலாற்றிலேயே ஆக உயர்ந்த மட்டத்தை எட்டியது; ஆனால் அதற்குப் பிறகு கணிசமாகக் குறைந்தது.

கடந்த ஐம்பது வருடங்கள் முழுவதுமே தங்கத்தின் வாங்கும் சக்தியின் ஏற்ற இறக்கம் பண்ட விலைகளின் தொடர்ச்சியான அதிகரிபப்ன் பின்னணியில் நடை பெற்றிருக்கிறது. சில சமயங்களில் சில தனிப்பட்ட பண்டங்கள் முன்னைக் காட்டிலும் மலிவாக இருக்கலாம். ஆனால் விலைகளின் பொது மட்டம் அநேகமாக எல்லாக் காலத்திலுமே அதிகரித்துக் கொண்டுதான் இருக்கிறது. இப்பொழுது இது ஒருவகையான இயற்கை விதியாகவே இருக்கிறது. தங்கத்தின் வாங்கும் சக்தி தங்கத்தின் விலைக்கும் விலைகளின் பொது மட்டத்துக்குமிடையே நடைபெறுகின்ற தொடர்ச்சியான ஓட்டப்பந்தயத்தின் விளைவாக உருவாகிறது.

# கடந்த காலமும் எதிர்காலமும்

**1933** –ல் ரூஸ்வெல்ட் தங்கத்தின் விலையை உயர்த்திய பொழுது அது பொருளாதாரக் கொஷீமீகையில் ஒரு முக்கியமான நடவடிக்கையாகக் கருதப்பட்டது. 1960ல் “தங்கஜுரம்” ஏற்பட்டு தங்கத்தின் சுதந்திரச் சந்தைவிலை ஒரு அவுன்சுக்கு 41–42 டாலர்களாக ஏறிய பொழுது, ஒரு அவுன்ஸ் 35 டாலர்கள் என்ற அதிகார பூர்வமான விலையை வைத்துக் கொண்டிருந்த அமெரிக்கா அபாய அறிவிப்புச் செய்தது, சந்தையையும் சந்தை விலையையும் ஒழுங்கு படுத்துவதற்காக சீக்கிரத்திலேயே தங்கக் கூட்டிணைப்பை ஏற்படுத்தியது. தற்பொழுது நிலைமைகள் மாறிவிட்டன. 1973ம் வருடத்தின் கோடைகாலத்தில் தங்கத்தின் விலை “உளவியல் தடையாகிய” 100 டாலர்களை (இன்று இது சிரிக்கக்கூடிய அளவுக்குக் குறைவாகத தோன்றுகிறது) தாண்டிய பொழுது நிதி இலாகாவின் செயலாளரான ஷுல்ட்ஸ் தங்கத்தின் விலையைக் காட்டிலும் இறைச்சியின் விலையைப் பற்றியே தான் அதிகமாகக் கவலைப்படுவதறாகக் கூறினார்.

இந்த வேடிக்கைப் பேச்சு ஓரளவுக்குப் போலித் தனத்தையும் நடிப்பையும் மூடி மறைத்தது. வயோதிக அவநம்பிக்கைவாதியான லண்டன் Economistt இதழ் மார்க்ஸ் காலத்திலிருந்தே செல்வாக்கோடு இருந்து வருகிறது. “அவர் வார்த்தைகளைப் பலரும் நம்பவில்லை” என்று அது எழுதியது. தங்கத்தின் சந்தை விலை அதிகார பூர்வமான விலையிலிருந்து எந்த அளவுக்கு விலகிச் செல்கிறதோ அந்த அளவுக்கு டாலரைப் பற்றி அதிகமான நம்பிக்கை இழப்பு ஏற்படும் என்று விளக்கியது. இது இக்காலத்துக்கும் பொருந்தும். எனினும் நிதித்துறைச் செயலாளரின் வேடிக்கைப் பேச்சில் சிறிதளவு உண்மையும் இருக்கிறது. தங்கத்தின் விலை டாலரின் சர்வதேச மதிப்பின் குறியீடு என்ற முக்கியத்துவத்தை இழந்துவிடவில்லை. ஆனால் மக்கள் தங்கத்தின் விலையைக் கொண்டு பணவீக்கத்தைத உணர்வதில்லை, இறைச்சி மற்றும் இதர அவசியமான பொருள்களின் விலையைக் கொண்டே அதை உணர்கிறார்கள். எனவே இது அதிகமான அரசியல் முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

தங்கம் பணவியல் அமைப்புக்களின் அடிப்படையாக இருந்தது முடிந்துவிட்ட அளவில் காகிதக் கடன் பணத்தில் அதன் விலை முன்பிருந்த முக்கியத்துவத்தை இழந்தது. இதைக் காட்டிலும் அது

முக்கியத்துவத்தை மாற்றிக்கொண்டிருக்கிறது என்று சொல்வது அதிகப் பொருத்தமாக இருக்கும். அதைப் பணவியல் அமைப்பின் நேரடியான கூறு என்று சொல்வதைக் காட்டிலும் முதலாளித்துவ உலகத்தின் பொதுவான பொருளாதார, நிதித்துறை மற்றும் அரசியல் நிலைமையின் அளவுகோல் என்றே கூறவேண்டும்.

தங்கத்தின் உலக விலை டாலர்களில் எடுத்துக் கூறப்படுகிறது. இது உலக முதலாளித்துவப் பொருளா தாரத்தில் அமெரிக்க நாணயத்தின் பாத்திரத்தைப் பிரதிபலிக்கிறது. இன்னும் உலகத்தின் முக்கியமான சந்தையாக இருக்கின்ற லண்டன் சந்தையில் தங்கத்தின் விலை டாலர்களில் சொல்லப்படுகிறது என்பதை நாம் நினைவுபடுத்திக் கொள்வோம். தங்கத்தின் விலை இன்னும் பல நாணயங்களில் சொல்லப்படலாம். உண்மையில் சந்தையில் அப்படித்தான் சொல்லப் படுகிறது. ஆனால் இந்த விலைகள் அந்தக் குறிப்பிட்ட நாணயத்துக்கும் டாலருக்கும் உள்ள உறவை மட்டுமே எடுத்துக் கூறுகின்றன. கடைசியாகப் பார்க்கும்பொழுது ஒரு நாணயத்தின் பரிவர்த்தனை விகிதம் அந்த நாட்டில் பணவீக்கத்தின் விகிதத்தைப் பெருமளவுக்குச் சார்ந்திருக்கிறது. இந்த விகிதம் அமெரிக்காவில் இருப்பதைக் காட்டிலும் அந்த நாட்டில் கணிசமாகக் குறைவாக இருந்தால், டாலருக்கு அந்த நாணயத்தின் பரிவர்த்தனை

விகிதம் அதிகரிக்கலாம். இந்த உதாணரத்தில் குறிப்பிட்ட நாணயத்தில் தங்கத்ன் விலை டாலர்களில் அதன் விலையைக் காட்டிலும் மெதுவாக அதிகரிக்கும்–அது குறைவதும்கூட சாத்தியமே. 1976–1978ம் வருடங்களின் போது ஒப்பளவில் நிலையான நாணயங்களான மேற்குஜெர்மனியின் மார்க், ஸ்விட்சர்லாந்தின் பிராங்க் ஆகியவற்றோடு ஒப்பிடும்பொழுது டாலரின் பரிவர்த்தனை விகிதம் கணிசமான அளவுக்குக் குறைந்த பொழுது ஏற்பட்ட நிலை இதுவே. 1978–ல் சராசரியாக தங்கத்தின் டாலர் விலை 1975–ன் சராசரி விலையைக் காட்டிலும் 20 சதவீதம் உயர்ந்திருந்தது. ஆனால் மார்க்குகளில் விலை இந்த மட்டத்தைக் காட்டிலும் 3 சதவீதம் குறைவாக இருந்தது, ஸ்விஸ் பிராங்குகளில் 17 சதவீதம் குறைவாக இருந்தது. இதற்கு மாறாக 1979–ல் தங்கத்தின் விலையின் அதிகரிப்பு அநேகமாக ஒரே மாதிரியாக இருந்தது. முந்திய வருடத்தோடு ஒப்பிடும் பொழுது அது சராசரியாக டாலர்களில் 58 சதவீதமும் மார்க்குகளில் 46 சதவீதமும் பிராங்குகளின் 48 சதவீதமும் அதிகரித்தது. வெவ்வேறு காலகட்டங்களில் விலைகளின் போக்க வெவ்வேறு விதமாக இருப்பது ஒரு முக்கியமான விஷயத்தைப் பிரதிபலிக்கிறது. முதல் காலகட்டத்தில் விலை

அதிகரித்ததற்கு முக்கியமான காரணம் டாலரின் தனிப்பட்ட பலவீனம், இரண்டாவது காலகட்டத்தில் பொதுவாகக் காகிதப் பணத்தின் மீது நம்பிக்கையிழப்பு, பண மூலதனம் நிலையான மதிப்பு என்ற முறையில் தங்கத்தைத் தேடியது முக்கியமான காரணமாகும்.

தங்கத்தின் டாலர் விலையின் அதிகரிப்பு பண வீக்கத்தால் அமெரிக்காவின் தேசிய நாணயம் அடைந்த மதிப்புக் குறைவின் நேரடியான பிரதிபலிப்பே. ஆனால் உலக வர்த்தகத்தில் டாலர் மிகவும் அதிகமாக உபயோகப்படுத்தப்படுகிறது என்ற அளவில் தங்கம் உலகரீதியில் டாலரின் மதிப்புக் குறைவின் அளவுகோலாகிக் கொண்டிருக்கிறது. எண்ணெயின் உதாரணத்தைக் கொண்டு இதை விளக்கிக் கூறலாம். கடந்த பத்து வருடங்களில் உலகச் சந்தையின் எண்ணெயின் டாலர் விலை 12–15 மடங்கு (சில சமயங்களில் இதற்கும் அதிகமாகவே) உயர்ந்திருக்கிறது. இது அமெரிக்காவுக்குள் டாலரின் வாங்கும் சக்தி குறைந்ததோடு இணைந்திருக்கிறது என்றாலும் அமெரிக்காவில் உள்நாட்டில் ஏற்பட்ட பணவீக்கத் தோடு நேரடியாக சம்பந்தமில்லாத பிரத்யேகமான கூறுகளும் இதற்குக் காரணமென்பது உண்மையே. தங்கத்தைப் பற்றியும் இதையே சொல்லலாம்.

எண்ணெய் மற்றும் தங்கத்தின் விலைகளின் தீவிரமான அதிகரிப்புகளின் பரிமாணங்களும் அவை ஏற்பட்ட காலமும்கூட, ஒன்றுக்கொன்று நெருக்கமாக இருப்பது சுவாரசியமாதாகும். இவற்றுக்கு ஒரு நடைமுறை "முன்மாதிரி" கூட நிறுவப்பட்டிருக்கிறது. அதன்படி ஒரு அவுன்ஸ் தங்கம் 17 பீப்பாய்கள் (ஒரு பீப்பாய் 159 லிட்டர்கள் எண்ணெயைக் கொண்டிருக்கும், இது எண்ணெயின் வழக்கமான அளவுகோல்) எண்ணெய் விலையைக் "கொண்டிருக்க வேண்டும்", எழுபதுக்களில் "விலைப் புரட்சிக்கு" முந்திய 1971–ல் உலகச் சந்தையில் ஒரு பீப்பாய் எண்ணெயின் விலை 2 டாலர்களாகவும் இருந்தது. 1980ல் ஒரு அவுன்ஸ் தங்கம் 500–600 டாலர்களாகவும் ஒரு பீப்பாய் எண்ணெய் 30–35 டாலர்களாகவும் இருந்தது. இத்தகைய நிகழ்வுப் பொருத்தத்தை நெடுங்காலமாக இருக்கின்ற, நிலையான மாதிரிப்படிவத்தின் வெளிப்பாடு என்று கருதிவிட முடியாது. இரண்டு பண்டங்களிலும் (தங்கம், எண்ணெய்) விலை உயர்வை ஏற்படுத்திய காரணிகளுக்கிடையே அதிகமான ஒற்றுமை இருக்கிறது, ஆனால் அவை சாராம்சத்தில் வேறுபடவும் செய்கின்றன.

இனி வருகின்ற பக்கங்களில் எதிர்கால முன்னறிவிப்புக் களை நாம் விவாதிக்க வேண்டியிருக்கும் என்பதால் பிரபலமான முன்னறிவிப்பாளர்கள்

மற்றும் ஆருடக் காரர்கள் எழுதியிருக்கின்றவற்றை உபயோகிக்க வேண்டியிருக்கும். வி.லியோன்டியேவ் தலைமையில் ஐக்கிய நாடுகள் சபையின் நிபுணர்கள் குழு மிகவும் தகுதிவாய்ந்த நீண்ட கால முன்னறிவிப்பைத் தயாரித்திருக்கிறது. அவர்கள் தங்கத்தின் விலை என்னவாக இருக்கும் என்பதில் அக்கறை காட்டவில்லை.

ஏனென்றால் தொழில்துறை மூலப்பொருள் என்ற முறையில் அதன் பொருளாதாரப் பாத்திரம் அற்பமானதே. ஆனால் எண்ணெய் விலையைப் பொறுத்தவரை அதன் ஒப்புவிலை [அதாவது எண்ணெய் விலைக் குறியீட்டெண்ணைப் பொதுவிலைக் குறியீட்டெண் மூலம் வகுத்தால் கிடைக்கும் ஈவு], உண்மையாகச் சொல்ல வேண்டுமென்றால் எண்ணெயின் வாங்கும் சக்தி 1980ம் வருடத்தோடு ஒப்பிடும்பொழுது 1990ம் வருடத்தில் 2.2 மடங்கும் 2000ம் வருடத்தில் 2.5 மடங்கும் அதிகரிக்கும் என்று கூறியிருக்கிறார்கள். பணவீக்கம் நவீன முதலாளித்துவப் பொருளாதாரத்துக்குள்ளாகவே இடம் பெற்றிருக்கிறது. முதலாளித்துவப் பொருளாதாரத்தின் வளர்ச்சியைப் பற்றிய எந்த முன்னறிவிப்பும் விலைகளின் சராசரி மட்டத்தின் அதிகரிப்பு முன்னறிப்பு கூறக் கூடிய எதிர்காலத்திலும் தொடர்ந்து இருக்கும் என்று அனுமானிக்கிறது. தங்கத்தின் விலையின் அதிகரிப்பு டாலர்களில் பண்ட விலைகளின் சராசரி மட்டத்தைத் தாண்டுமா என்பதே இங்குள்ள பிரச்சினை. வேறு வார்த்தைகளில் சொல்வதென்றால் தங்கத்தின் வாங்கும் சக்தி அதிகரிக்குமா அல்லது குறையுமா?

தங்கத்தின் மதிப்பு, மற்ற பண்டங்களின் உற்பத்தி யில் ஈடுபடுத்தப்படும் உழைப்புச் செலவோடு ஒப்பிடும் பொழுது சுரங்கத் தொழிலில் உழைப்புச் செலவின் இயக்கம்தான் தங்கத்தின் விலைக்கும் அதன் வாங்கும் சக்திக்கும் இறுதியான அடிப்படை, ஆனால் இந்த விதி சந்தை மூலமாக, அளிப்புக்கும் தேவைக்குமிடையே உள்ள உறவின் வழியாக வெளிப்படுகிறது. ஆகவே தங்கத்தின் வாங்கும் சக்தியைப் பற்றி ஒருவர் முன்னறிவிப்புச் செய்வதற்கும் அதன் உற்பத்தி மற்றும் நுகர்வின் பிரத்யேகமான நிலைமைகளை ஆராய வேண்டும்.

சமீப வருடங்களில் தங்கத்தைப் பற்றி மேற்கு நாடுகளில் வெளியிடப்பட்டிருக்கும் நூல்களில் ஆர்.ஜேஸ்ட் ரெம் என்ற அமெரிக்கர் எழுதிய தங்கத்தின் நிலையெண்: ஆங்கில மற்றும் அமெரிக்க அனுபவம் 1560–1976 என்ற புத்தகம் குறிப்பிடத்தக்க தாகும். இது நான்கு நூற்றாண்டுகளுக்கம் அதிகமான காலத்தில் பண்டங்கள் சம்பந்தமாகத்

தங்கத்தின் வாங்கும் சக்தியின் இயக்கத்தைப் பற்றிய விஞ்ஞான முறையான ஆராய்ச்சி நூல், வரலாறு, பொருளாதாரம் மற்றும் புள்ளி விவரங்கள் இப்புத்தகத்தின் சுவாரசியமான முறையில் இணைந்திருக்கின்றன. இது தங்கத்தின் வரலாற்றைப் பற்றிய எவ்விதமான ஆராய்ச்சிக்கும் அவசியமான புத்தகம். நான்கு நூற்றாண்டுகளின் அனுபவம் முன்னறிவிப்புக்குப் பயனுள்ளதாகத்தானே இருக்கும். ஆசிரியரின் முடிவுகளைப் பின்வரும் வகையல் சுருக்கிக் கூறுவோம்.

1. கடந்த நான்கு நூற்றாண்டுக் காலத்தில் தங்கத்தின் வாங்கும் சக்தியின் ஏற்ற இறக்கங்கள் ஒப்பீட்டளவில் குறைவாகதான். அது ஒவ்வொரு தடவை விலகிப்போன பிறகும் பிடிவாதமாக ஓரளவுக்கு ஸ்திரமான நிலையெண்ணை நோக்கித் திரும்பிவிடுகிறது. முன்பு சொல்லப்பட்ட முக்கியமான மாற்றங்கள் (1870கள் முதல் 1890-கள் வரை மற்றும் 1930-க்களில்) ஒப்பீட்டளவில் வேகமான எதிர்த்திசை மாற்றங்களினால் ஈடுசெய்யப்பட்டன. 1930-ம் வருடத்தை ஆதாரமான 100ஆக வைத்துக்கொண்டு ஒவ்வொரு ஐம்பது வருட காலத்திலும் பிரிட்டனில் தங்கத்தின் வாங்கும் சக்தியின் குறியீட் டெண்களைக் கொண்ட பின்வரும் சுவாரசியமான தொடரை ஆசிரியர் குறிப்பிடுகிறார். (ஆசிரியரின் சொந்த விருப்பப்படி 1600ம் வரடத்திலிருந்து ஆரம்பமாகிறது): 1600-125;1650-97; 1700-120; 1750-111; 1800-76; 1850-111; 1900-143; 1950-103. நூறிலிருந்து மிகவும் அதிகமாக விலகிவிடவில்லை. கடைசியில் 350 வருடங்களுக்குப் பிறகு தங்கத்தின் வாங்கும் சக்தி 1600ம் வருடத்தின் மட்டத்துக்குத் திரும்பி விடுகிறது என்பதைப் பார்க்க முடியும்.

2. தங்கத்தின் வாங்கும் சக்தியை நிர்ணயிக்கின்ற இரண்டு காரணிகளில் பண்ட விலைக் குறியீட்டெண் தங்கத்தின் விலையைக் காட்டிலும் மிகவும் அதிகமான நகரும் சக்தியைக் கொண்டிருந்தது இந்தக் குறியீட் டெண்ணின் இயக்கமே தங்கத்தின் வாங்கும் சக்தியை ஒரு நிலையான அளவுக்குத் தவறாமல் திரும்பக் கொண்டுவந்து சேர்த்தது. பிரிட்டனில் 17ம் நூற்றாண்டின் கடைசியிலிருந்து 1931 வரை (நெப்போலியன் யுயத்தங்களின்போதும் முதலாம் உலக யுத்தத்தின்போதும் சிற்சில குறுகிய காலகட்டங்களைத் தவிர) தங்கத்தின் விலை அநேகமாக மாறாதபடி இருந்தது. இந்த உத்தேசமான 250 வருடங்களின்போது பண்ட விலைக் குறியீட்டெண் 1896-ல் மிகக் குறைவான 63 மட்டத்தை அடைந்தது. 1920ல் மிக அதிகமான 259 மட்டத்துக்கு உயர்ந்தது. அமெரிக்காவில் தங்கத்தின் விலை 1800 முதல் 1933 வரை அநேகமாக மாறாதபடி

இருந்தது. பண்ட விலைக் குறியீட்டெண் 1896–ல் அதன் மிகக் குறைவான 54 மட்டத்தை அடைந்தது. 1920–ல் மிக அதிகமான 179 மட்டத்துக்கு உயர்ந்தது. இரண்டு நாடுகளிலும் இரண்டு முனைக்கோடி நிலைகளும் ஒரே வருடங்களில் ஏற்பட்டிருப்பது சுவாரசியமானதே.

பிரிட்டனிலும் அமெரிக்காவிலும் 1930க்களின் தொடக்கத்தில் தங்கத்தின் விலை ஒரே பாளிணிச்சலில் உயர்ந்த பிறகு அது சில பத்தாண்டுகளுக்கு மாறாம லிருந்தது. ஆனால் பண்ட விலைகளின் மட்டம் தீவிரமாக மாற்றமடைந்தது, அநேகமாக முழுவதுமே மென்மேலும் அதிகரிக்கின்ற போக்காக இருந்தது. பண்ட விலைக் குறியீட்டெண் 1896ல் மிக அதிகமான 179 மட்டத்துக்கு உயர்ந்தது. இரண்டு நாடுகளிலும் இரண்டு முனைக்கோடி நிலைகளும் ஒரே வருடங்களில் ஏற்பட்டிருப்பது சுவாரசியமானதே. பிரிட்டனிலும் அமெரிக்காவிலும் 1930–க்களின் தொடக்கத்தில் தங்கத்தின் விலை ஒரே பாய்ச்சிலில் உயர்ந்த பிறகு அது சில பத்தாண்டுகளுக்கு மாறாமலிருந்தது. ஆனால் பண்ட விலைகளின் மட்டம் தீவிரமாக மாற்றமடைகிறது, அநேகமாக முழுவதுமே மென்மேலும் அதிகரிக்கின்ற போக்காக இருந்தது.

3. பணவீக்கம் காலங்களில் [விலை அதிகரிக்கும் எல்லாக் காலங்களையுமே ஆசிரியர் இப்படித்தான் கூறுகிறார்] தங்கத்தின் விலையில் ஏற்பட்ட அதிகரிப்பு பண்ட விலைக் குறியீட்டெண்ணின் அதிகரிப்புக்குப் பின்தங்கியது,அதன் விளைவாகத் தங்கம் மதிப்புக் குறைவை அடைந்தது. அவருடைய ஆராளிணிச்சியில் இது சற்றும் எதிர்பாராத முடிவாக இருக்குமென்று ஆசிரியர் காரணத்தோடுதான் கருதுகிறார். பண வீக்கத்துக்கு எதிராகப் பாதுகாப்புப் பெறுவதற்கு தங்கத்தில் முதலீடு செய்வது மிகச்சிறந்த வழி என்று கருதுவது வழக்கம். 1970ள் வரை இத்தகைய நிலைமை கிடையாது என்று அறிகிறோம். நெப்போலியன் யுத்தங்களின் போது பிரிட்டனில் தங்கத்தின் விலை அதிக பட்சமாக 41 சதவீதம் அதிகரித்தது. பண்ட விலைக் குறியீட்டெண் 59 சதவீதம் அதிகரித்தது. முதலாவது உலக யுத்தத்தின் போதும் அதற்குப் பின்னரும் அவை முறையே 33 சதவீதமும் 195 சதவீதமும் அதிகரித்தன. அமெரிக்காவிலும் இதே மாதிரியான நிலைமையை 1861–1865ம் வருடங்களில் நடைபெற்ற உள்நாட்டு யுத்தத்தின்போதும் முதல் உலக யுத்தத்தின் போதும் பார்க்க முடியும். 1940–க்கள் முதல் 1960க்கள் வரை பணவீக்க காலகட்டத்தின்போது தங்கத்தின் வாங்கும் சக்தியின் இழப்பை முன்பே விவாதித்தோம்.

4. பணவாட்ட (பண்ட விலைகள் வீழ்ச்சியடைந்த) கால கட்டங்களில் தங்கத்தின் வாங்கும் சக்தி அதிகரித்தது. அத்தகைய காலகட்டங்களில் தங்த்தின் விலை மாற்றமயைவிலலை; 1930-க்களின் தொடக்கத்தில் பண்ட விலைகள் வீழ்ச்சியடைந்தபொழுது தங்கத்தின் விலை திடீர்ப் பாயச்சலோடு அதிகரித்தது. இந்த முடிவு இதற்கு முந்திய முடிவோடு தர்க்கரீதியில் பொருந்துவதே. இந்த அனுபவத்தை அப்படியே எதிர்காலத்துக்கு மாற்றுவதற்கு முயற்சி செய்தால் நாம் பின்வரும் முன்னறிவிப்பைப் பெறுவோம். 1979-1980ம் வருடங் களில் எக்காலத்திலும் எட்டியிராத உச்சத்தைத் தொட்ட தங்கத்தின் வாங்கும் சக்தி தன்னுடைய மரபு வழிப்பட்ட வழக்கமான நிலைக்குத் திரும்புவதற்காக அடுத்து வருகின்ற சில பத்தாண்டுகளில் குறையும். இது தங்கத்தின் விலையில் ஏற்படுகின்ற மாற்றத்தின் மூலமாக இல்லாமல் அதிகமான அளவுக்குப் பண்ட விலைகளின் மாற்றத்தின் மூலமாகவே நடைபெறும். இனி வரப்போகின்ற வருடங்கள் பணவீக்க காலகட்டமாக இருக்குமென்பதில் சந்தேகம் இருக்கமுடியாது. எனவே தங்கத்தின் விலையின் அதிகரிப்பு பண்ட விலைகளின் அதிகரிப்புக்குப் பின்தங்கும்.

1981-1982ல் தங்கத்தின் விலை குறைந்த காரணத்தால், பண்டவிலைகளின் பொது மட்டம் அதிகரித்துக் கொண்டிருந்த சமயத்தில் தங்கத்தின் வாங்கும் சக்தி திடீரென்று குறைந்தது உண்மையே. எனினும் இது பிரதானமாக குறைந்த காலக் கூறுகளின் தாக்கத்தைப் பிரதிபலிக்கிறது, நீண்டகால அளவில் வளர்ச்சியின் போக்குகளை இது நிர்ணயிக்க முடியாது.

ஆனால் இங்கே வரலாற்று அனுபவத்தை எதிர்காலத் துக்குத் தீர்மானமானதாகக் கருத முடியாது. பின்வரும் பகுதியில் ஜேஸ்ட்ரெம் இதை மறைமுகமாக ஒத்துக் கொள்கிறார்: "ஆகவே எதிர்காலத்தில் தங்கத்துக்கு இன்னும் அதிகமான அளவில் சுதந்திரமான சந்தை இருக்கும், கடந்த சில நூற்றாண்டுகளின்போது இருந்ததைக் காட்டிலும் பணவீக்கத்துக்க எதிராக மேலும் சிறந்த பாதுகாப்பாக அது இருக்கும் என்று ஆரூடம் கூறுகூது சுலபமானதே." 1970களும் 1980-களும் கடந்த காலத்திலிருந்த எல்லா பணவீக்க காலகட்டங்களிலிருந்தும் அடிப்படையில் வேறுபடுகின்றன. இதுவரை நாம் குறிப்பிட்ட உதாரணங்கள் அனைத்துமே ஒப்பீட்டளவில் யுத்தங்கள் மற்றும் கொந்தளிப்புக்கள் ஏற்பட்ட குறுகிய காலங்களே. இவற்றுக்குப் பிறகு பணவியல் அமைப்பு ஸ்திர நிலைமையை அடையும், தங்க ஆதார அளவு மறுபடியும் ஏற்படும். இன்று "அமைப்போடு சேர்ந்த"

பணவீக்கத்தைப் பார்க்கிறோம். இது சமாதான காலத்தில் வளர்ச்சியடைகின்றது. எவ் வகையான ஸ்திர நிலைமையாவது ஏற்படும் என்ற அறிகுறியே இல்லை. இத்தகைய நிலைமைகளில் தங்கத்தின் வாங்கும் சக்தியின் போக்கை முன்னறிந்து கூறுவதற்குரிய வரலாற்று அனுபவம் நமக்குக் கிடையாது. பெரும்பாலான இனங்களில் முன்பு பணவீக்கம் ஏற்பட்ட காலங்களில் சந்தை நிலைமைகளின்படி தங்கத்தின் விலை அதிகரிப்பதை அரசு செயற்கையான முறையில் தடுத்தது. பின்னர் ஏற்பட்ட பணவாட்டத்தில் இது முக்கியமான கூறாக இருந்தது. 1920–க்களில் பிரிட்டனின் அனுபவமும் சர்ச்சில் அங்கே தங்க ஆதார அளவை மறுபடியும் ஏற்படுத்தியதும் இதற்கு மூலச் சிறப்பான உதாரணமாகும்.

1940–க்கள் முதல் 1960–க்கள் வரை தங்கத்தின் உலக டாலர் விலையும் குறைந்த மட்டத்தில் செயற்கையாக வைத்திரக்கப்பட்டது. ஆனால் இரண்டாம் உலக யுத்தத்துக்குப் பிறகு ஏற்பட்ட புதிய நிலைமை களில் பணவாட்டத்திலும் பண்ட விலைகளின் பொது மட்டத்தின் வீழ்ச்சியிலும் இது இனியும் முடிவாக இயலவில்லை; தங்கத்தின் நிர்ணயிக்கப்பட்ட விலையைக் கைவிடுவதற்கும் அதன் சந்தைவிலை பன்மடங்கு அதிகரிப்பதற்கும் வழி வகுத்தது. இனி எதிர்காலத்தில் தங்கத்துக்கு நிர்ணயிகக்ப்பட்ட விலை என்ற பேச்சே ஏற்பட முடியாது. கடந்த பத்தாண்டுகளில் தோன்றியிருக்கின்ற கனிப்பொருள்களின் விலைகளின் உருவாக்கத்தையும் இயக்கத்தையும் பற்றிய மாதிரிப் படிவங்களில் பலவும் (எண்ணெய் விலையைக் பற்றி முன்னர் எழுதிய பொழுது இந்தப் பிரச்சினையைக் குறிப்பிட்டோம்) தங்கத்துக்கும் பொருந்துவனவே. 1980க்களிலும் 1990க்களிலும் எண்ணெய் மற்றும் இயற்கை வாயுக்கு மட்டுமல்லாமல் இரும்பு அல்லாத உலோகங்களிலும் (செம்பு, நிக்கல், துத்தநாகம் மற்றும் ஈயம்) சார்பு விலைகளின் அதிகரிப்பில் குறைவான உற்பத்தியைத் தருகின்ற ஆனால் அதிகச் செலவை ஏற்படுத்துகின்ற பிறப்பிடங்களை வெட்டியெடுப்பதே ஆக முக்கியமான கூறாக இருக்கும் என்று ஐக்கிய நாடுகள் சபையின் நிபுணர்கள் நம்புகிறார்கள். இதுபோலவே தங்கத்துக்கும் ஏற்படுவது சாத்தியமே.

பூமியின் மேற்பகுதியிலும் கடல் நீரிலும் இருக்கும் தங்கத்தின் மொத்த அளவு மிக அதிகமாகும். அது பல மில்லியன் டன்களாக இருக்குமென்று மதிப்பிடப்படுகிறது. ஆனால் தொழில்துறை இருப்புக்கள் (தொழில்நுட்பவியலின் இன்றைய தரத்தில் லாபகரமாக இருப்பவை) மிக மிகக் குறைவுதான். அமெரிக்கச் சுரங்க இலாகாவின் புள்ளிவிவரங்களின்படி

முதலாளித்துவ உலகத்தில் தங்கத்தின் தொழில்துறை இருப்புக்கள் சுமார் 35,000 டன்கள் இருக்கின்றன. இதில் தென் ஆபிரிக்காவில் இருக்கும் 25,000 டன்களும் அடங்கும். இன்றைய உற்பத்தி விகிதப்படி அது 30 அல்லது 40 வருடங்களுக்கு நீடிக்கும். இந்த மதிப்பீடுகள் ஒரு அவுன்ஸ் தஙக்த்துக்கு சுமார் 200 டாலர்கள் என்ற 1974ம் வருட விலைகளை அடிப்படையாகக் கொண்டவை. விலைகள் உயர்கின்றபொழுது அளிப்பைப் பற்றிய மதிப்பீடுகளும் அதிகரிக்கும். ஏனென்றால் அப்பொழுது குறைவாகத் தங்கம் கிடைக்கின்ற இடங்களிலும் உற்பத்தி செய்வது லாபகரமானதாக இருக்கும்.

எனினும் தங்கம் இயற்கையாகக் கிடைக்குமிடங்கள் அவற்றை வெட்டியெடுக்கும் வள வாய்ப்புக்களைப் பற்றி நம்மிடம் அநேகமாக எதுவும் தெரிவிப்பதில்லை. உற்பத்தியைக் கணிசமான அளவுக்கு அதிகப்படுத்தக் கூடிய புதிய வளமான இருப்பிடங்களைக் கண்டுபிடிப்பது தீர்மானமான முக்கியத்துவத்தைக் கொண்டிருக்கிறது.அப்படிப்பட்ட வாய்ப்பு இப்பொழுது இருக்கிறதா? குறைந்தபட்சம் சமீப எதிர்காலத்தில் அப்படிப்பட்ட வாய்ப்புக் கிடையாது. சமீபத்தில் மிகப்பெரிய அளவில் கண்டுபிடிக்கப்பட்ட தங்க இருப்புக்கள் 1950க்களில் தென் ஆப்பிரிக்காவில் கண்டுபிடிக்கப்பட்டவைதான். அவை எப்பொழுதோ சுரண்டப்பட்டுவிட்டன.

மண்ணியலாளர்கள் அதிசயங்கள் நடக்கும் என்று வாக்குறுதி அளிப்பதில்லை. ஒப்பீட்டளவில் வளமான இருப்பிடங்களைக் கண்டு பிடித்தாலும் அவற்றை வெட்டியெடுப்பதற்கு நெடுங்காலம் பிடிக்கும். அவை தங்கச் சந்தையில் தாக்கத்தை ஏற்படுத்துவதற்குப் பத்து வருடங்களாவது தேவைப்படும். 1976-ம் வருடப் புள்ளிவிவரங்களின்படி தென்ஆப்பிரிக்காவில் மூன்று சிறு தங்கச்சுரங்கங்கள்தான் கட்டப்பட்டுக் கொண்டிருந்தன. கம்பெனிகள் தமக்குக் கிடைக்கும் ஏராளமான லாபத்தைக் புதிய சுரங்கங்களை வெட்டுவதற்கு முதலீடு செய்வதில்லை. மண்ணியல் மற்றும் பொருளாதாரக் காரணங்களைத் தவிர தென் ஆப்பிரிக்காவிலுள்ள இனவெறி ஆட்சி முறைக்கு ஏற்பட்டிருக்கும் நெருக்கடியும் ஆப்பிரிக்க தேசிய விடுதலை இயக்கத்தின் எழுச்சியும் என்ற அரசியல் நிலைமையும் இதற்குக் காரணமாகும். தென் ஆப்பிரிக்காவில் தங்கச் சுரங்கத் தொழிலின் எதிர்கால வாய்ப்புக்கள் அவ்வளவு நன்றாக இல்லை என்பதற்கு அந்தக் கம்பெனிகளின் பங்குகள் ஒப்பீட்டளவில் குறைவாக இருப்பது மறைமுகமான அடையாளமாகும். இக்கம்பெனிகளின் ஏராளமான லாபங்கள் மற்றும் லாப ஈவுகளுக்கும் பங்குகளின் நிலைமைக்கும் பொருத்தமில்லை.

வழக்கமான நிலைமைகளில் முதலீடு செய்பவர் வருட லாப ஈவைப்போல பத்து அல்லது இருபது மடங்கு விலையில் அந்தக் அந்தக் கம்பெனியின் பங்குகளை வாங்குகிறார். எனினும் சமீப காலத்தில் தங்க உற்பத்தி இணையங்களின் பங்குகளின் விகிதங்கள் வருடாந்தர லாபஈவுகளைக் காட்டிலும் சுமார் ஐந்து மடங்குதான் அதிகமாக இருந்திருக்கின்றன. தங்கப் பங்குகளில் முதலீடு செய்வது ஆபத்து என்பது இதன் அர்த்தம். முதலீடு செய்பவர் தன் பணத்தைக் குறைந்த காலத்தில் –ஐந்து வருடங்களில்– எடுத்துவிட விரும்புகிறார். Economoist எழுதியது போல முதலீடு செய்பவர் அந்த ஆட்சி முறை அதிக காலம் நீடிக்கமுடியாது என்று கருதுவது காரணமாக இருக்கலாம்.

இதைத் தவிர கம்பெனிகளின் ஏகபோக நிலையும் நாட்டில் தங்கம் உற்பத்தி செய்கின்ற வள வாய்ப்புக்களில் மிக அதிகமான முக்கியத்துவத்தைக் கொண்டிருக்கிறது. எண்ணெய் உற்பத்தி செய்யும் நாடுகளைப் போலவே அவைகளும் இயன்ற அளவுக்குத் தங்கத்தை உற்பத்தி செய்ய முயற்சிப்பதில்லை. குறைவாகத் தங்கம் கிடைக்கும் இடங்களில் முழுச் சக்தியோடு உற்பத்தியைச் செய்வதும் அதிகமாகத் தங்கம் கிடைக்கும் இடங்களில் பிற்காலத்துக்கு விட்டு வைப்பதும் அவைகளுக்கு மிகவும் லாபகரமானதாகும்.

1980–க்களின் நடுப்பகுதி வரையிலும் உற்பத்தி மட்டம் (700–750 டன்கள் Economoist) அநேகமாக நிலையாக இருக்கும், அதன் பிறகு உற்பத்தி குறையும் என்ற அனுமானத்தில் தென் ஆப்பிரிக்காவின் தஙக் உற்பத்தித் தொழிலின் தலைவர்கள் செயல்படுகிறார்கள். இந்த நூற்றாண்டின் கடைசியில் தங்கத்தின் விலை மட்டம் எப்படியிருந்தாலும் உற்பத்தி இன்றிருப்பதில் அநேகமாகப் பாதியளவுக்குத்தான் இருக்கும் என்று "ஆங்கிலோ–அமெரிக்கன் கார்ப்பரேஷன்" அதிகாரிகள் மதிப்பிடுகிறார்கள். தென் ஆப்பிரிக்காவில் அரசியல் ரீதியில் எந்த மாற்றமும் ஏற்படாது என்று இந்த முன்னறிவிப்பு கருதுகிறது. ஆனால் அது கம்பெனிகளைப் பொறுத்த விஷயமல்லவே.

முதலாளித்துவ உலகத்தில் உற்பத்தி செய்யப்படுகின்ற தங்கத்தில் முக்கால் பங்கை தென் ஆப்பிரிக்கா உற்பத்தி செய்தால் இந்த நாட்டின் வள வாய்ப்புக்கள் பொதுப்படத்தைப் பெருமளவுக்கு நிர்ணயிக்கின்றன. மற்ற நாடுகளில் தங்கத்தில் பெரும் பகுதி துணைப்பொருளாக உற்பத்தி செள்யப்படுகிறது. உற்பத்தியின் அளவு தங்கத்தின் விலையைப் பொறுத் திருக்கவில்லை. முக்கிய பொருளான இரும்பு அல்லாத உலோகங்களின்

உற்பத்தி மட்டத்தைப் பொறுத்திருக்கிறது என்பதையும் இங்கே கூற வேண்டும். இந்தத் தொழில் துறையில் தங்க உற்பத்தி அநேகமாக வளர்ச்சியடையும், ஆனால் அது மிக மெதுவாகவே நடைபெறும். கைவிடப்பட்ட சுரங்கங்களில் மறு படியும் உற்பத்தி தொடங்க முயற்சிகள் செள்யப்படுவதாகவும் புதிய தங்க வேட்டைக்காரர்கள் தோன்றுவதாகவும் பலரக நாடுகளிலிருந்து சமீப வருடங்களில் செய்திகள் வந்துகொண்டிருக்கின்றன. பிரேசிலில் வண்டற்படிவுகளிலிருந்து உற்பத்தி செய்ப்படுகின்ற தங்கம் கணிசமான அளவுக்கு அதிகரித்தது. ஆஸ்திரேலி யாவிலும் கலிபோர்னியாவிலும், மேற்கு ஐரோப்பாவின் சில பகுதிகளிலும்கூட தொழிலுக்கும் மிகுந்தவர்கள் அல்லது வெகுளித்தனமானவர்கள் ஒரு காலத்தில் தங்கம் கிடைத்த மணலைக் கொண்ட ஆறுகள், நீரோட்டங்களின் மணற்படுகைகளில் மணலை அலசிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இது கடலில் ஒரு சிறு துளி மட்டுமே.

புதிய வளமான தங்க இருப்புக்களைக் கண்டு பிடிப்பதற்கான வாய்ப்புக்களை நாம் விலக்கிவிட முடியாது என்பதும் உண்மையே. குறைந்த பட்சம் கால் நூற்றாண்டுக் காலமாக அப்படிப்பட்ட கண்டுபிடிப்புகள் இல்லை என்பது எதிர்காலத்தை முழுமையாக நிர்ணயிக்காது; அதிலும் இன்று தங்கத்தின விலையில் ஏற்பட்டிருக்கும் தீவிரமான அதிகரிப்பு தங்க வேட்டையை ஊக்கி வருகிறது. எனினும் வளமான தங்க இருப்புக்கள் அபூர்வமே. இன்று வெற்றி யடையக் கூடும் என்று எதிர்பார்க்கப்படுகின்ற தங்க வேட்டையைப் பற்றி நம்மிடம் நம்பகமான தகவல் இல்லை.

அடுத்த வரும் பத்தாண்டுகளில் உலகச் சந்தையில் தங்கம் அருமையான பண்டமாகவே இருக்கும் எனலாம். முதலாளித்துவ உலகத்தில் உற்பத்தியின் மொத்த அளவின், குறிப்பாக மற்ற உலோகங்களின் உற்பத்தியின் அதிகரிப்புக்கும் தங்கத்தின் உற்பத்திக்கும் இடையே இருக்கம் மிகப் பெரிய ஏற்றத்தாழ்வு இந்த அருமைப்பாட்டுக்கு மிகவும் வெளிப்படையான குறியீடாக இருக்கிறதெலாம். மிகவும் வெளிப்படையான குறியீடாக இருக்கிறதெனலாம். தங்க உற்பத்தி 1913 மட்டத்தைக் காட்டிலும் சிறிதளவுதான் அதிகமாக இருக்கிறது. 1940 மட்டத்தைக் காட்டிலும் மிகக் குறைவாக இருப்பதோடு மேலும் குறைந்து கொண்டிருக்கிறது என்பதை இங்கே குறிப்பிட வேண்டும். 1977–1979ல் அமெரிக்காவின் தங்க இருப்புக்களும் சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் இருப்புக்களும் கணிசமான அளவில் விற்பனை செய்யப்பட்டது தங்கத்தின் அளிப்புக்கும் தேவைக்குமிடையே உள்ள உறவைப் பெருமளவுக்கு நிர்ணயித்தது.

இனிமேல் முன்னறிந்து சொல்லக்கூடிய எதர்காலத்தில் இந்த இடங்களிலிருந்து தங்கம் சந்தைக்குள் வரக்கூடிய சாத்தியம் கிடையாது. 1980 ஜனவரியில் தேவையும் விலை உயர்வுகளும் ஜுர வேகத்தில் நடைபெற்றுக் கொண்டிருந்த நேரத்தில் மேற்கு நாடுகளின் மத்திய வங்கிகளின் தலைவர்கள் "ஆரோக்கியமான" சந்தையை ஏற்படுத்துவதற்குத் தங்கத்தை விற்பனை செய்வதைப் பற்றி விவாதிப்பதற்காகக் கூடினார்கள். அங்கே மேற்கு ஜெர்மனியும் பிரான்சும் இதை உறுதியாக எதிர்த்தன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

முதலாளித்துவ உலகத்தில் இந்த இரண்டு நாடுகளும் [அமெரிக்காவுக்கு பிறகு] அதிகமான தங்கம் வைத்திருக்கின்ற இரண்டாவது, மூன்றாவது நாடுகளாக முறையே இருக்கின்றன. ஐரோப்பிய பணவியல் அமைப்பில் தங்கத்தைச் சேர்த்திருப்பதால் அதிகமான தங்க இருப்புக்களைக் கொண்டிருக்கும் மேற்கு ஐரோப்பாவின் பணக்கார நாடுகள் சந்தையில் தங்கத்கதை விற்பனை செய்யும் சாத்தியம் மிகவும் குறைவுதான். இதற்கு எதிராக நடைபெறுவது அதிகமான அளவுக்கு சாத்தியமே: சில நிலைமைகளில் இந்த நாடுகஷீமீ தங்கத்தை வாங்கலாம். நமக்குத் தெரிந்த அளவுக்கு இவை கடந்த பதினைந்து வருடங்களில் குறிப்பிடத்தக்க அளவில் இவ்வாறு வாங்கவில்லை.

தனியாரது தங்கத் தேவை தொழில்துறை உபயோகம் மற்றும் பதுக்கல் முதலீடு என்று பிரிக்கப்படும். ஆனால் இரண்டுக்குமிடையே துல்லியமன பிரிவினை இல்லை. 1978–1979ல் தங்கத்தின் விலை அதிகரித்த பொழுது ஆபரணத் தொழிலின் தங்கத் தேவை ஒப்புநோக்கில் பலவீனமாக அதற்கு எதிர்ச்செயலாற்றியது. இன்ற தேவையின் அடுக்கமையில் பதுக்கல் மற்றும் முதலீட்டு நோக்கங்கள் மிக முக்கியமான பாத்திரத்தை வகிக்கின்றன என்பது அதைச் சந்தேகமில்லாதபடி விளக்குகிறது. அதாவது ஆபரணங்கள் நகைகள் என்ற முறையில் அநேகமாக வாங்கப்படவில்லை. மதிப்பைப் பாதுகாப்பதற்கும் பெருக்குவதற்கம் உரிய சாதனங்கள் என்று வாங்கப்படுகின்றன. தேவையின் விலை நெகிழ்ச்சி குறைந்திருப்பது நீண்ட காலப் போக்காக இருக்குமானால் இது சந்தையில் முக்கியமான விளைவை ஏற்படுத்தும்.

இத்தகைய நிலைமையில் மரபு வழியாக அதிகமாக இருக்கின்ற தேவையின வருமான நெகிழ்ச்சி, அதாவது அபரணத் தேவை வருமானத்தைக் காட்டிலும் அதிக வேகமாக வளர்ச்சியடைகின்ற தன்மை மேலும் அதிகமான முக்கியத்துவத்தைப் பெறும். உதாரணமாக,

வருடத்துக்கு 50,000 டாலர்கள் வருமானத்தைக் கொண்ட குடும்பத்தின் வருமானத்தில் 10,000 டாலர்கள் அதிகரித்தால் அந்தக் குடும்பம் அந்தத் தொகையில் 5 சதவீதத்தையும் அதிகமாகக் கிடைத்திருக்கும் அடுத்த 10,000இல் 7 அல்லது 8 சதவீதத்தையும் ஆபரணங் களை வாங்குவதில் செலவிடும். அதோடு உணவுக்குச் செலவிடப்படும் விகிதாச்சாரம் குறையும். ஆகவே செல்வந்தர்கள் பிரிவில் வருமானங்கள் அதிகரிப்பது ஆபரணத் தேவையில் சிகிதாச்சாரத்தைக் காட்டிலும் கூடுதலான அதிகரிப்பை ஏற்படுத்தும். இந்தத் தேவை முழுவதுமே பொருளாதார மற்றும் சமூகச் கோணங்களில் மிகவும் அதிகச் சிக்கலான நிகழ்வாக இருப்பது இயற்கையே.

மூலப்பொருள் என்ற வகையில் தங்கத்தின் விலை மட்டத்துக்கும் பொருளாதாரத்தின் நிலைமைக்கும் தகுந்தவாறு ஆபரணத் தேவை தீவிரமாக ஏற்ற இறக்கங்களை அடைகிறது. 1979–1980ல் தங்கத்தின் அதிகமான விலையும் பொருளாதார மந்தமும் ஆபரணத் தேவையில் தீவிரமான வீழ்ச்சியை ஏற்படுத்தின. 1980ல் வளர்முக நாடுகளின் ஆபரணத் தொழில் துறையினர் சந்தையல் சிறிதும் தங்கம் ஆனால் தங்கத்தின் விலை குறைந்த உடனேயே ஆபரணங்களுக்குப் புதிய தேவை ஏற்பட்டுவிடுகிறது. அந்தத் தொழில்துறை மூலப் பொருள்களை வாங்குவது அதிகரிக்கிறது என்பதை எழுபதுக்களின் நடுப்பகுதி எடுத்துக்காட்டுகிறது. இந்தக் கட்டம் 1981–1982ல் தொடங்கியிருப்பது போலத் தோன்றுகிறது.

இத்தகைய ஏற்ற இறக்கங்கள் எதிர்காலத்திலும் ஏற்படுவது சாத்தியமே. ஆனால் நெடுங்காலப் போக்கில் ஆபரணத் தொழில் தங்கத்தின் உற்பத்தியாளர்கள் மற்றும் விற்பனையாளர்களுக்குப் பெரிய அளவில் நம்பகமான வாடிக்கை யாளராக இருக்கும். மின்னுட்பவியல் மற்றும் இதர தொழில்துறைகள் மெதுவாக வளர்ச்சியடைகின்ற ஆனால் நிலையான தேவையைக் கொண்டிருக்கின்றன. இது பல் கட்டும் தொழிலுக்கும் பொருந்துவதே.

பதுக்கல்காரர்கள் மற்றும் முதலீட்டுக்காரர்களின் தேவையைப் பற்றி எந்த ஆரூடமும் சொல்ல முடியாது. 1978–1980ல் உலகத்தில் பணவீக்கமும் பதட்ட நிலைமையும் அதிகரித்தன தாக்கத்தல் அது திடீரென்று உயர்ந்தது. பணவீக்கத்திலும் பதட்ட நிலைமையிலும் ஒப்புநிலையில் தணிவு ஏற்பட்டால் எதிர்காலத்தில் இந்தத் துறையின் தேவையும் ஒப்புநிலையில் குறையும். இந்த விஷயத்தில் புள்ளிவிவரங்கள் கூறுவதை நம்பலாமென்றால், கடந்த காலத்தில் பதுக்கல் தங்கம் வெளியே வந்த,

தனிப்பட்ட உடைமைகளிலிருந்து வெளிப்பட்ட வருடங்களும் இருந்தன என்று புள்ளிவிவரங்கள் தெரிவிக்கின்றன. எனினும் இன்று ‘‘பணவீக்க உளவியல்’’ மிகவும் பலமடைந்திருக்கிறது, காகிதக் கடன் பணத்தில் அவநம்பிக்கை மிக அதிகமாக இருக்கிறது. ஒவருடைய உடைமைகளில் ஒரு பகுதியைத் தங்கத்தில் முதலீடு செய்கின்ற பழக்கம் மிக ஆழமாக வேரூன்றிவிட்டது. மென்மேலும் புதிய சமூகப் பகுதிகளைச் சேர்ந்த தங்கப் பதுக்கல்காரர்களும் தங்கம் வாங்குகின்ற முதலீட்டாளர்களும் தோன்றிக்கொண்டிருக்கிறார்கள். இந்தப் போக்கை நிறுத்துவதற்குப் பல மாற்றங்கள் தேவைப்படுகின்றன.

ஆனால் முதலாளித்துவத்தின் இன்றைய சமூக- பொருளாதார மற்றும் அரசியல் யதார்த்தங்களில் அவற்றைக் கற்பனை செய்யக்கூட முடியாது. இந்தப் போக்கு பலவீனமடைவதற்கப் பதிலாக பலமடைந்து கொண்டிருக்கிறது. 1979-1980ம் வருட நிகழ்ச்சிகளைப் பற்றி Economist பின்வருமாறு எழுதிது: ‘‘வர்த்தக சூதாட்டம் என்ற நுரைக்கு அடியில் தங்கத்தைப் பற்றி மக்களுடைய சிந்தனையில் ஒரு அடிப்படையான மாற்றம் காணப்பட்டது. அது இனியும் அயற்பாணியான முதலீடு என்று கருதப்படவில்லை. ஆனால் காகிதப் பணத்தைப் பற்றி சந்தேகங்கள் ஏற்பட்டிருக்கும் சமயத்தில் மதிப்பைச் சேமித்து வைத்திருக்க கூடியதாகக் கருதப்பட்டது.’’ இந்த அடிப்பயையான மாற்றம் தங்கச் சந்தையில் ஏற்படுத்தவிருக்கும் விளைவைக் கற்பனை செய்வது சுலபமே.

தங்கத்தை வாங்கும் ஒவ்வொருவரும் -அவரால் இயன்ற அளவுக்கு, அவருக்க உபயோகமுள்ள அளவுக்கு -அந்த நடவடிக்கைக்கு முக்கியமாக இருக்கும் பிரதானமான வர்த்தககக் கூறுகளைச் சிந்திக்கிறார். இந்தக் கூறுகளில் உலோகத்தின் விலையைத தவிர வட்டி விகிதங்களின் மட்டம் முக்கியமான கூறாக இருக்கிறது. ஏனென்றால் தங்கம் அதை வைத்திருப்பவருக்கு வட்டி என்ற வடிவத்தல் வருமானத்தைக் கொடுக்காதது மட்டுமல்லாமல் அதை வைத்திருப்பதற்கு இன்ஷூரன்ஸ் மற்றும் இதரவைகளுக்காகக் கூடுதலாகச் செலவிடுவதும் அவசியமாக இருக்கிறது. தங்கத்தை வாங்கும் பொழுது, அதன் விலையில் ஏற்படும் தங்கத்தை வாங்கும் பொழுது,அதன் விலையில் ஏற்படும் அதிகரிப்பு அந்தப் பணத்தைப் பத்திரங்களில் முதலீடு செய்வதால் அல்லது வங்கியில் இட்டு வைப்பதால் கிடைக்கக்கூடிய வட்டியின் இழப்பை ஈடு செளிணியும் என்று வாங்குபவர் கருதுகிறார்.

வட்டி விகிதங்கள் எவ்வளவு அதிகமாக இருக் கின்றனவோ அந்த அளவுக்குத் தங்கத்தை வாங்குவது குறைவான லாபத்தைக் கொண்டிருக்கும். இந்தச் சார்புநிலை இன்று முன்னைக்காட்டிலும் நெரக்க மானதாக இருக்கிறது. ஏனென்றால் தங்கச் சந்தையில் அனுபவம் இல்லாத பதுக்கல்காரர் வகிக்கின்ற பாத்திரம் ஒப்புநிலையில் குறைவானதே, முதலீட்டுக்காரரும் வர்த்தக சூதாட்டக்காரருமே அதிக முக்கியமான பாத்திரத்தை வகிக்கின்றனர். அவர்கள் பெரும் முக்கியமான பாத்திரத்தை வகிக்கின்றனர். அவர்கள் பெரும்பாலும் கடனாகப் பெற்றிருக்கம் பணத்தைக் கொண்டுதான் தங்கத்தை வாங்குகிறார்கள். ஆகவே வட்டி விகிதமட்டத்தினால் அவர்கள் நேரடியாக பாதிக்கப் படுகிறார்கள்.

1980ம் வருடத்தின் தொடக்கத்தில் தங்கத்தின் விலையோடு சர்வதேச மற்றும் தேசியப் பணச் சந்தை களின் வட்டி விகிதங்கள் வானளாவ உயர்ந்து வரலாறு படைத்தன. டாலர் கடன் அதன் வடிவம், கால அளவு, துணைப்பிணையம் ஆகியவற்றைப் பொறுத்து 15–20 சதவீத வட்டியைக் கொண்டிருந்தது. இத்தகைய நிலைமைகளில் வர்த்தக சூதாட்ட வெறியின் தாக்கமே தங்கத்தின் விலையை உயர்த்த முடியும். ஏனென்றால் வட்டி விகிதம் இவ்வளவு அதிகமாக இருக்கும் பொழுது அசல் நான்கு அல்லது ஐந்து வருடங்களில் இரண்டு மடங்காகிவிடும். 1980 ஜனவரியிலும் பிப்ரவரியிலும் தங்கத்தின் விலை ஒரு அவுன்சுக்கு 300 டாலர்களும் அதற்கு அதிகமாகவும குறைந்தது இதை மிகத் தெளிவாக எடுத்துக்காட்டியது. இத்தகைய அதிகமான வட்டி விகிதங்கள் தங்கத்தின் விலை அதிகரிப்பதைப் கட்டுப்படுத்துகின்றன.

1981–1982ம் வருடங்களில் தங்க விலைகள் ஒப்புநிலையில் குறைவான மட்டத்தில் இருந்தன. பொருளாதார மந்தம் ஒரு புறமிருக்க பணச் சந்தைகளில் மிகவும் அதிகமான வட்டி விகிதங்கள் நிலவியது இதற்குப் பெருங்காரணமாகும். சில நிலைமைகளில் வட்டி விகிதங்களின் மட்டத்துக்குச் சம்பந்தமில்லாமல் அதிகமான தங்கத் தேவையை எற்படுத்தத் கூடிய கூறு ஒன்று இருக்கிறது. சர்வதேசப் பணச் சந்தையின் ஸ்திர நிலைமையின் அளவு இந்தக் கூறாகும. சர்வதேசப் பணச் சந்தை எனப்படுவது சர்வதேச வங்கிகள் தமக்கிடையேயும் உலக முழுவதிலுமுள்ள தொழில் தறை இணையங்களோடும் கடன் வாங்குபவர்களோடும் கடன் உறவுகள் என்ற சிலந்தி வலையில் நெருக்கமாக இணைந்திருக்கின்ற அமைப்பாகும். இந்த அமைப்பில் பல பலவீனங்கள் நெடுங்காலமாகவே இருந்த வருகின்றன. அவற்றில் பிரதானமானது வளர்முக நாடுகள் கடன்

கொடுக்கும் வங்கிகளில் மிகவும் அதிகமான அளவுக்குக் கடன் கொடுக்கம் வங்கிகளில் மிகவும் அதிகமான அளவுக்குக் கடன் வாங்கியிருப்பதே. இவற்றில் ஒரு முக்கியமான நாடு அல்லது சில முக்கியமான நாடுகள் திருப்பிக் கொடுப்பதை நிறுத்திவைத்தால் வங்கிகளுக்க நெருக்கடி ஏற்படும். சில பெரிய வங்கிகளின் மீது நம்பிக்கை குறைந்துவிட்டால் கடன் கோபுரமே ஆடத் தொடங்கும். இத்தகைய சந்தர்ப்பத்தில் என்ன நடக்கும் என்பதை விவரமாகக் கற்பனை செய்வது கடினம். ஆனர் வெறி பிடித்த மாதிரி தங்கம் வாங்கப்படும் என்பதில் சந்தேகமில்லை. இந்த அம்சங்கள் அனைத்துமே தங்கத்தின் நவீன நிலைமைக்குக் கடந்த காலத்தில் ஒப்புமை கிடையாது என்று ஏற்கெனவே சொல்லப்பட்ட கருத்தை வலுப்படுத்துகின்றன என்று கருதுகிறேன்.

தங்கம் எப்பொழுதுமோ மர்மமான, புதிரான பொருளாக இருந்து வந்திருக்கிறது. சமீப வருடங் களின் நிலைமையில் புதிர்கள் இருப்பதை நாம் சந்தேகத்துக்கிடமின்றிப் பார்க்க முடியும். தங்கத்தின் தேவையும் அதன் விலையும் அதிகரித்துக் கொண்டிருந் தன; ஆனால் வழக்கமான பொருளாதார விதிகளுக்கும் பொது அறிவுக்கும் மாறான விதத்தில அதன் உற்பத்தி குறைந்தது. தங்கம் பண உலோகம் என்ற நிலைமையிலிருந்து நீக்கப்பட்டால் அதன் அந்தஸ்துக்கு ஆபத்தேற்படும் என்று எப்பொழுதுமே கருதப்பட்டு வந்திருக்கிறது. இப்பொழுது தங்கம் பண உலோகம் என்ற நிலைமையிலிருந்து நீக்கப்படுகிறது, ஆனால் அதன் வாங்கும் சக்தி அதிகரித்துக்கொண்டிருக்கிறது.

இன்றைய நிலைமையிலுள்ள முக்கியமான புதிரைப் பின்வருமாறு கூறலாம்: நவீன முதலாளித்துவம் தங்கத்தை அடிப்படையாகக் கொண்டு தன்னுடைய பணவியல் அமைப்பை ஏற்படுத்தமுடியாது, ஆனால் அதே சமயத்தில் தங்கம் இல்லாமலும் அதனால் சமாளிக்க முடியாது. இந்த முரண்பாடு வளர்ச்சியைப் பற்றிய பல்வேறு போக்குகளின் போராட்டத்தில் தீர்க்கப்படுகிறது. பரபரப்பும் தீவிரமான மோதல்களும் தொடர்ச்சியாக ஏற்படக் காரணமாக இருக்கிறது. முதலாளித்துவப் பணவியல் அமைப்பின் பரிணாமத்தில் அது அடிப்படையான முக்கியத்துவத்தைக் கொண்டிருக்கிறது.

# பண உலோகமாவதை நீக்குவதா? அல்லது

## திரும்பவும் பண உலோகமாக ஆக்குவதா?

**த**ங்கத்தின் பணவியல் செயல்களை ஒழிப்பதை அல்லது குறைப்பதைப் பண உலோகம் என்ற நிலையிலிருந்து நீக்குவது என்று சொல்கிறோம். இதற்கு எதிரிடை திரும்பவும் பண உலோகமாக ஆக்குவதெனப்படும். அது தங்கத்தின் பணவியல் செயல்களை மறுபடியும் ஏற்படுத்துவதும் அதிகப்படுத்துவதுமாகும். நவீன நிலைமைகளில் இந்த இரண்டு போக்குகளில் எது நிலவுகிறது என்ற கேள்வி இயற்கையாகவே எழுகிறது. இந்தப் பிரச்சினையைப் பற்றிய விவாதம் தொடர்ந்து நடைபெறுகிறது. ஏனென்றால் இருபோக்குகளும் இருப்பதை எடுத்க்காட்டும் விவரங்கள் இருகின்றன. ஆகவே இந்த இரண்டு நிகழ்வுப் போக்குகளும் எத்தகைய ஏற்படுகின்றன, அவற்றுக்கிடையே உள்ள உறவு எவ்விரமானது என்று கேட்பது இன்னும் சரியானதாகும்.

ஒரு சோவியத் பாடபுத்தகத்தில் பின்வரும் பகுதி காணப்படுகிறது: ‘‘தங்கத்தைப் பண உலோகம் என்ற நிலையிலிருந்து நீக்குகின்ற, அதாவது தங்கம் பணவியல் பண்டத்தின் செயல்களைப் படிப்படியாக இழக்கின்ற போக்கு நவீன முதலாளித்துவத்தின் கீழ் வளர்ச்சியடைந்து கொண்டிருக்கிறது.... தங்கப் பணம் அரசு –ஏகபோக முதலாளித்துவத்தின் பொருளாதாரத் தேவைகளைப் பூர்த்தி செய்யவில்லை. ஏகபோகங்களின் விஸ்தரிப்பையும் பொருளா தாரத்தை ஒழுங்கு படுத்துவதில் பணவீக்கத்தை உபயோகிப் பதையும் கட்டுப்படுத்துகின்ற ஒரு வகையான தங்கச் சங்கிலியாக அது மாறிவிட்டது... பண உலோகம் என்ற நிலையிலிருந்து தங்கத்தை அகற்றுகின்ற நிகழ்வுப் போக்கு உற்பத்தியின் வளர்ச்சியிலும் சமூகமயமாக்குதலிலும் அரசு ஏகபோக முதலாளித்துவத்தின் தேவைகளுக்குப் பணவியல் துறையைத் தகவமைத்துக் கொள்வதிலும் அடைந்திருக்கும் மட்டத்தைப் பிரதிபலிக்கிறது.’’

இந்தப் பாடபுத்தகத்தின் பதிப்பாசிரியரான எல்.என். கிரசாவினா தன் கட்டுரையில் பின்வருமாறு எழுதுகிறார்: ‘‘தங்கத்தைச் சுற்றி நடைபெறும்

போராட்டம் முடியவில்லை. பண உலோகம் என்ற நிலையிலிருந்து தங்கத்தை நீக்க வேண்டும் என்ற யதார்த்தத்தில் நடைபெற்று வருகின்ற, அமெரிக்காவின் உந்துதலினால் வேகமடைந்து வருகின்ற போக்கின் தாக்கத்தில் அது தன் பழைய பாத்திரத்தை இழந்துவிட்ட போதிலும், சமீப காலத்தில் அதன் பணவியல் பாத்திரத்தை அதிகப்படுத்தும் போக்கு ஏற்பட்டிருக்கிறது.

இங்கே இந்தப் பிரச்சினை சரியான முறையில் எடுத்துச் ★முதலாளித்துவ நாடுகளின் பணச் செலாவணியும் கடன் வசதிகளும் சொல்லப்பட்டிருக்கிறது என்று நாம் கருதுகிறோம். மேற்கு நாடுகளில் தங்கத்தைப் பற்றி நடைபெறுகின்ற விவாதங்களில் தங்கத்தைப் பணஉலோகம் என்ற நிலையிலிருந்து நீக்கிவிட முடியும் அல்லது அது பணச் செயல்களை வைத்திருக்க அனுமதிக்க முடியும் என்பதைப் போல அடிக்கடி பேசப்படுகிறது. சிலர் முன்னதை விரும்புகிறார்கள். வேறு சிலர் பின்னால் சொல்லப்பட்டதை விரும்புகிறார்கள். ஆனால் அதைப் பண உலோகம் என்ற நிலையிலிருந்து நீக்க வேண்டும் என்பதை ஆதரிப்பவர்களுடைய நிலை பலமுடையதாக இருக்கிறது. அது ஏன் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது என்பதை இது விளக்குகிறது. உண்மையில் பணவியல் அமைப்பிலிருந்து தங்கத்தை நீக்குவது ஒரு புறநிலையான நிகழ்வு, அது யாருடைய விருப்பத்தையும் பொறுத்ததல்ல. அது வரலாற்று ரீதியான வளர்ச்சிப் போக்கினால் முதலாளித்துவத்தின் மீது திணிக்கப்பட்டிருக்கிறது. அதே சமயத்தில் அவ்வாறு நீக்கப்படுவதன் வேகமும் வடிவங்களும் நாட்டில் அல்லது சர்வதேச அரங்கத்தில் செல்வாக்குஷீமீள குழுக்களின் அணிச் சேர்க்கையைப் பொறுத்திருக்கிறது என்பதை ஒதுக்கிவிட முடியாது. சமீப வருடங்களில் தங்கத்தைப் பண உலோகம் என்ற நிலையிலிருந்து சம்பிரதாயமான முறையில் நீக்குவதில் அமெரிக் காவின் பொருளாதார, அரசியல் சக்தி முக்கியமான பாத்திரத்தை வகித்திருக்கிறது என்பது எல்லோருக்கும் தெரிந்த உண்மையே.

தங்க ஆதார அளவு 19ம் நூற்றாண்டின் எளிமை யான பொருளாதாரத்தோடு பொருந்தியிருந்தது. தங்கம் உள்ளே வருவது அல்லது வெளியே போவது பணவியல் மற்றும் கடன் வசதித் துறையின் மீதும் [இதன் அடுக்கமைவும் ஒப்புநிலையில் எளிமை யானதே] அதன் மூலமாக மொத்த பொருளாதாரத்தின் மீதும் தாக்கத்தை ஏற்படுத்த முடியும். நவீன கடன் மற்றும் பணவியல் அமைப்பின் பல அடுக்குத் துறையின் மீது அதனுடைய இணைப்புக்களும் தாக்கத்தை ஏற்படுத்த முடியும். நவீன கடன்

மற்றும் பணவியல் அமைப்பின் பல அடுக்குத் தன்மையும் பல கூறுகளும் குறிப்பிடத்தக்கவை; உற்பத்தித் துறையின்மீது அதனுடைய இணைப்புக்களும் தாக்கத்தை ஏற்படுத்தும் வழிமுறைகளும் அதே அளவுக்குப் பல அடுக்கானவையே.

தங்க ஆதார அளவு ஏகபோகத்துக்கு முந்திய முதலாளித்துவ நிலைமைகளோடு பொருந்தியிருந்தது. அப்பொழுது உற்பத்தி மிகப் பெருந்திராளன சிறு நிறுவனங்களில் தனித்தனியே நடைபெற்றது. அவை ஒன்றுகூட தனிப்பட்ட முறையில் தங்குளுடைய பண்டங்களின் விலைகளின் மீது தாக்கம் செலுத்த முடியாது. ஆனால அது பெரிய நிறுவனங்களின் விஸ்தபரிப்பையும் மிக அதிகமான ஏகபோக விலைகளை நிறுவுவதற்கு அவை செளிணிகின்ற முயற்சிகளையும் தடுக்கிறது. ஒரு நாட்டில் விலைகள் அதிகரித்தால் அது வழங்கீடுகளின் சமநில சீர்குலைய, அந்த நாடு தங்கத்தை இழக்க வழிவகுக்கிறது. தங்க ஆதார அளவு பிற்பற்றப்படும் நாட்டில் இந்த நிலைமையை ஒரே ஒரு வழியின் –வங்கிக் கடன் வசதிகளையும் மூலதன முதலீட்டையும் சுருக்கி விலைகளைக் குறைப்பதன்– மூலமாகவே திருத்த முடியும் என்று நம்புபவர்கள், நல்லெண்யத்தோடு நம்புபவர்கள் இருக்கிறார்கள்.

கடைசியாகப் பார்க்கும்பொழுது இந்தக் கூற்றை யாரும் ஆதரிக்க முடியாது, ஏனென்றால் இந்த அமைப்பு இவ்வளவு காலம் இருந்தது, இப்பொழுது தகர்ந்துவிட்டது. தங்க ஆதார அளவைக் காட்டிலும் அரசியல், பொருளாதார மற்றும் சமூக ரீதியில் நெகிழ்ச்சியற்ற ஒரு ஆட்சிமுறை இருக்க முடியாது. ஒரு பொருளாதார நிலைமையைச் சரிப்படுத்த வேண்டுமென்று மக்கள் பேசும்பொழுது, ஒரு விவசாயப் பகுதி திடீரென்று பெரும் பாதிப்புக்கு ஆளாகின்ற பொழுது ஒவ்வொருவருடைய உதடுகளில் தோன்றுகின்ற முதல் வார்த்தை என்ன? அது கடன் என்ற வார்த்தையே. ஒரு நிறுவனம் நெருக்கடியில் சிக்கிக் கொள்ளும்பொழுது,அதன் கதவுகளை மூட வேண்டிய ஆபத்து ஏற்படும்பொழுது அதற்கு நம் மனதிலே தோன்றும் தீர்வு என்ன? அது கடன் என்னும் தீர்வுதான். தங்க ஆதார அளவு அமைப்பு, அதாவது கடனை ஒழிப்பது நாம் செய்ய வேண்டிய சீரமைத்தல்களில் தொடர்பாக மிகவும் அதிகமான அளவுக்கு நெகிழ்ச்சியற்ற, காட்டுமிராண்டித்தனமான, மனிதத் தன்மையற்ற கருவியாக இருக்காது என்று ஒருவர் எப்படி நம்ப முடியும்''

சர்வதேசத் துறைக்கு மட்டுமே பயன்படுகின்ற குறைக்கப் பட்ட பிரெட்டன்வுட்ஸ் வகையான தங்க ஆதார அளவுத் திட்டம் கூட

வெற்றியடையவில்லை. இத்தனைக்கும் அதை அதிகமான நெகிழ்ச்சியடையதாகவும் நிலைமைக்குத் தக்கவாறு மாறக் கூடியதாகவும் ஆக்குவதற்குத் திட்டமிட்ட முயற்சிகள் செய்யப்பட்டன. யுத்தத்துக்குப் பிந்திய இரண்டு பத்தாண்டுகளின் பிரத்யேகமான நிலைமைகளில் உலக முதலாளித்துவப் பொருளாதாரத்தில் கேந்திரமான இடத்தை அமெரிக்கா சந்தேகமில்லாமல் வைத்துக்கொண்டிருந்த பொழுது தங்கத்துக்குத் திருப்திகரமான "பதிலியாக" டாலர் இருந்தபொழுது மட்டுமே அது நீடிக்க முடிந்தது. ஆனால் டாலர்களுக்குத தங்கத்தைப் பரிவர்த்தனை செய்துகொள்வதும் [அந்நிய நாடுகளைச் சேர்ந்த மத்திய வங்கிகளுக்கு] டாலரின் நிர்ணயிக்கப்பட்ட சம மதிப்பும் அமெரிக்க அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கைக்குத் தீவிரமான தலைவலியாக மாறிய பொழுது அது தங்க ஆதார அளவின் இத்தகைய எச்சங்களை ஒழித்தது. பண உலோகம் என்ற நிலையிலிருந்து தங்கம் சம்பிரதாயமாக நீக்கப்பட்டது பணவியல் நெருக்கடியின்போது குறைந்த பட்சம் தங்கம், சேம நாணயங்கள் மற்றும் நிர்ணயிக்கப்பட்ட சமமதிப்புக்களைப் பொறுத்த அளவில் மட்டுமாவது பிரெட்டன்வுட்ஸ் அமைப்பு வீழ்ச்சியடைந்துவிட்டது என்பதைப் பதிவு செய்து கொண்டது.

இன்றைய நிலைமையில் சர்வதேசத் துறையில் தங்கத்தின் பாத்திரத்தை அதிகப்படுத்துகின்ற சந்தேகத்துக்கிடமில்லாத அறிகுறிகள் தென்படகின்றன. ஆனால் மூலச் சிறப்புடைய தங்க ஆதார அளவின்போதும், பிரெட்டன்வுட்ஸ் அமைப்பின் சுற்று வட்டத்துக்குள் கூட தங்கத்தின் பாத்திரம எப்படி இருந்ததோ அதிலிருந்து இது குண ரீதியில் முற்றிலும் மாறுபட்டிருக்கிறது என்பது என்னுடைய கருத்தாகும். காகித நணங்களோடு தங்கத்தின் உறவு ஏறக்குறைய நீண்டகால அளவுகளுக்கு நிர்ணயிக்கப்படவில்லை என்றால், அது நாணயங்களின் மதிப்பின் அளவுகோலாக இல்லை என்றால் தங்கம் பணவியல் அமைப்பின் அடிப்படையாக இருக்க முடியாது. இதுதான் இன்றைய நிலைமை, காகிதக் கடன் பணத்தின் மதிப்புக் குறைவும் நம்பகமற்ற செய்யும், பணவியல் நாடகத்தின் முன்னணிக்கு அதை உந்தித் தள்ளும். ஆனால் சர்வதேச பணவியல் அமைப்பு முழுமைக்குமே அச்சாணியாத் தங்கம் வகித்த முந்திய பாத்திரத்துக்கு அது திரும்ப முடியாது.

சர்வதேசப் பணவியல் அமைப்பில் தங்கம் செயல்படும் பொழுது கூட அந்த இனத்தில் அது பணமா அல்லது பண்டமா என்பது விவாதத்திற்குரியதே. 1974ல் இத்தாலி தன்னுடைய தங்க இருப்பில் ஒரு பகுதியைப்

பிணையமாக வைத்து மேற்கு ஜெர்மனி யிடமிருந்து கடன் வாங்கிய பொழுது பண உலோகம் என்ற நிலையிலிருந்து தங்கத்தை நீக்க வேண்டும் என்ற கருத்தின் ஆதரவாளர்கள் தங்கம் இங்கே பணவியல் செயல்களை நிறைவேற்றவில்லை. அது பணமாக இருக்கவில்லை என்று வாதாட முடிந்தது. மேலே குறிப்பிடப்பட்ட பிணையத்தின் பேரில வாங்கப்பட்ட மேற்கு ஜெர்மன் மார்க்குகள்தான் உண்மையான பணமாகும். இங்கேயிருக்கும் தர்க்க முறை தெளிவானதே. நீங்கள் ஒரு தங்க மோதிரத்தை அடகுக் கடைக்காரரிடம் கொடுத்து அதன் பேரில் கடன் வாங்கினால் அந்த மோதிரத்தைப் பணம் என்று நினைப்பதில்லை. அமெரிக்க நிதி இலாகாவில் பணவியல் விவகாரங்களின் துணைச் செயலாளர் பதவியிலிருந்து 1980–ல் ஓய்வு பெற்ற ஏ.சாலமோன் தங்கத்தைத் திரும்பவும் பண உலோகமாக ஆக்க முடியாது என்று அரசாங்கங்களும் நிதிச் செல்வர்களும் ஏகமனதாக கருத்துக் கொண்டிருப்பதாகக் கூறினார். சர்வதேச நிதி ஸ்தாபனத்தின் பதில் கணக்கின் செயல்பாட்டில் தங்கம் பாத்திரம் வகிக்க முடியுமா என்ற பிரச்சினை எழுப்பப்பட்ட பொழுது இது தங்கத்துக்க ஒரு பணவியல் பாத்திரத்தைக் கொடுக்காது என்று அவர் கூறினார்.

தங்கத்தின் பொருளாதார வாழ்க்கையிலுள்ள பணவியல் கூறுகள் அவ்வப்பொழுது சின்னா பின்னப்பட்ட நிலையில், பகுதியளவில், தற்செயலான வகையில் தம்மை வெளிப்படுத்திக்கொள்ளும். ஆனால் இது பணவியல் அமைப்புக்குள் நடைபெறாது. சர்வசேதப் பணவியல் அமைப்பின் அச்சாணி என்ற முறையில் அதன் பாத்திரத்தை மறுபடியும் ஏற்படுத்துவதன் மூலம் இது நடைபெறாது. தங்கத்தின் பொருளாதார வாழ்க்கை மற்றும் செயல்பாட்டு முறையில் மிக ஆழமான மாற்றங்கள் தாமாகவே தோன்றியுள்ளன. சம்பிரதாயமாக சர்வதேச அளவில் அதைப் பண உலோகம் என்ற நிலையிலிருந்து நீக்குவது இந்த மாற்றங்களின் வெளிறிப்போன நிழல் மட்டுமே. பணத்தின் சாராம்சம் அதன் செயல்களில் வெளிப்படுகிறது. ஆகவே தங்கம் பணத்தின் செயல்களை நிறைவேற்றுவது எந்த அளவுக்கு முடிந்துவிட்டது. எந்த அளவுக்கு மாற்றமடைந்திருக்கிறது என்பதை நாம ஆராய வேண்டும்.

செலாவணி ஊடகம் என்ற செயலைப் பொருத்தவரை இந்த விஷயம் மிகத் தெளிவாக இருக்கிறது. நெடுங் காலத்துக்கு முன்பே தங்கம் இந்தச் செயலை நிறுத்திக் கொண்டுவிட்டது. தங்க ஆதார அளவின்போதுகூட அது எல்லா இடங்களிலும் அல்லது ஏராளமான அளவுகளில்

செலாவணியாகவில்லை என்பது உண்மையே. ஆனால் அது எப்பொழுதும் செலாவணியில் நுழையக் கூடிய சக்தியைக் கொண்டிருந்தது. தன்னுடைய பிரதிநியாக மட்டுமே இருந்த காகிதக் கடன் பணத்துக்கு அது ஆதரவு கொடுத்தது.

தங்கம் வழங்கீட்டு ஊடகம் (பின் செலுத்தும் முறையில் தீர்வுகளின் ஊடகம்) என்ற செயலையும் இழந்துவிட்டது. இன்று யாரும் காகிதக் கடன் பணத்தில் செய்யப்படுகின்ற வழங்கீடு தற்காலிகமானது, இறுதியான வழங்கீடு அல்ல என்று நினைப்பதில்லை, அல்லது தங்கத்தைக் கொடுப்பதன் மூலம் இறுதி வழங்கீடு செய்யப்படுமென்றும் நினைப்பதில்லை.

மதிப்பின் இருப்பிடம் என்ற செயலும் அடையாளம் தெரிந்துகொள்ள முடியாத அளவுக்கு மாறிவிட்டது. மத்திய தங்க இருப்புக்கள் காகிதக் கடன் பணத்தின் பரித்த்தனைக்குரிய நிதிகளாக இனிமேல் பயன்படாது, அவை உள்நாட்டுப் பணச்செலாவணியோடு எல்லாவிதமான தொடர்புகளையும் இழந்துவிட்டன. முந்திய காலங்களில் தனிப்பட்ட தங்க இருப்புக்கள் காப்புச் செலாவணி நிதியின் பாத்திரத்தை வகித்தன. செலாவணியில் அவசியமில்லாத பொழுது தங்கம் தனிப்பட்ட இருப்புகளுக்குள் புதைந்தது. பொருளாதார ரீதியில் செலாவணிக்கு உதவ வேண்டிய அவசியம் ஏற்படுகின்ற பொழுது அது வெளியே வந்தது. இன்று தங்கப்பதுக்கல்கள் முற்றிலும் வேறு தன்மையைக் கொண்டிருக்கின்றன. அவை பணவீக்க எதிர்ப்பு மற்றும் அரசியல் இன்ஷுரன்ஸ் நிதியாகப் பயன்படுகின்றன, அவை பணச் செலாவணியிலிருந்து பிரிக்கப்பட்டிருக்கின்றன.

எனினும் பணத்தின் முதல் செயல் மதிப்பின் அளவு கோல் என்ற செயலே. தங்கம் இந்தச் செயலை இனிமேல் நிறைவேற்றாது என்று நாம் கருதினால் பண்ட மதிப்புக்களை கேள்வி எழுகிறது. பணம் என்ற வார்த்தையின் முழு அர்த்தத்தில் தங்கம் பணமாக இருந்த பொழுது எல்லாமே தெளிவாக இருந்தது. அது ஒவ்வொரு பண்டத்தின் மதிப்பையும் அளந்தது. எல்லாப் பண்டங்களின் விலை உருவாக்கத்துக்கும் அடிப்படையைக் கொடுத்தது. காகிதக் கடன் பணத்தை உலாகத்துக்குப் பரிவர்த்தனை செய்ய முடிந்தால் அதுவும் துல்லியமாக இதே முறையில் பண்டங்களின் மதிப்பை அளந்தது. பரிவர்த்தனை இல்லையென்றால் காகிதக் கடன் பணம் உலோகத்தோடு தொடர்புடைய வகையில் மதிப்புக் குறையலாம். அப்பொழுது பண்டங்களுக்கு இரண்டு விலைகள் –தங்கத்தில் (அல்லது வெள்ளியில்) ஒரு விலையும் காகிதத்தில் மற்றொரு விலையும்–இருக்கும். ஆனால்

காகித விலைகள் சுதந்திரமானவை அல்ல. காகிதப் பணம் எந்த அளவுக்கு மதிப்புக் குறைவு அடைந்திருக்கிறது என்பதை அவை எடுத்துக் கூறின.

ரஷ்யாவில் 19-ம் நூற்றாண்டின் முதற்பாதியில் முக்கியமான பண உலோகமாக வெள்ளி இருந்தது. ஒவ்வொரு பண்டத்தின் விலையும் வெள்ளி ரூபிள்களில் சொல்லப்பட்டது. ஆனால் இவற்றைத் தவிர அராசங்க வங்கி உண்டிகளும்-இவை இரண்டாம் கத்தரினாவின் ஆட்சியின்போது முதன்முதலாக வெளியிடப்பட்ட விசேஷமான ரகத்தைச் சேர்ந்த காகிதப் பணம்-செலாவணியில் இருந்தன. அரசு வங்கி உண்டிகளின் முகமதிப்புக்கு வெள்ளியைப் பரிவர்த்தனை செய்யவில்லை. அவை அப்பொழுதிருந்த சந்தை விலையைத்தான் கொண்டிருந்தன. வெளியிடப் பட்டிருக்கும் நாணய அளவையும் நாட்டிலுள்ள அரசியல் மற்றும் பொருளாதார நிலைமை மற்றும் இதர கூறுகளையும் பொறுத்து ஒருவெள்ளி ரூபிளுக்கு வங்கி உண்டிகளில் இரண்டு, மூன்று அல்லது நான்கு ரூபிள்கள் விலை கொடுக்கப்பட்டது (வங்கி உண்டிகளின் பரிவர்த்தனை விகிதம் இதற்கும் கீழே போகவில்லை).

ஆகவே ஒவ்வொரு பண்டத்துக்கும் இரண்டு விலைகள், வெள்ளியிலும் வங்கி உண்டி ரூபிள்களிலும் இருந்தன. இந்த உண்மையை கோகலின் மூலுச்சிறப்பான படைப் பாகிய இறந்த உயிர்கள் என்பதில் காண்கிறோம். நில உடைமையாளரான ஸோபகேவிச் சாகசக்காரரான சிச்சிக்கோவுடன் தீவிரமாகப் பேரம் பேசுகின்ற பொழுது, "ஒவ்வொரு ஆன்மாவுக்கும் எழுபத்தைந்து ரூபிள்கள் விலை -நீ அதை வங்கி உண்டிகளில் கொடுக்கலாம், இது நான் உனக்குத் தருகின்ற சலுகை" என்கிறார். வெள்ளி ரூபிள்களில் அதே விலை என்றால் அது மிக அதிகமான விலையாக இருந்திருக்கும். வங்கி உண்டிகளில் விலையைக் கூறும் பழக்கம் பரவலாக இருந்தபோதிலும் அவை உண்மையில் வெள்ளி ரூபிள் விலைகளை இரண்டு அல்லது மூன்று மடங்குகளாக்கிச் சொல்லப்பட்டன. இங்கே தங்கத்துக்குப் பதிலாக வெள்ளி உபயோகிக்கப்பட்டிருப்பது எத்தகைய வேறுபாட்டையும் கொண்டிருக்க வில்லை.

இன்று வேறு நிலைமை ஏற்பட்டிருப்பதை எல்லோரும் பார்க்க முடியும். உலோகப் பணச் செலாவணி இல்லை. விலைகள் உலோகப் பணத்தில் சொல்லப்படுவதில்லை. தங்கமுமே காகிதக் கடன் பணத்தில்தான் எதார்த்தமான விலையைக் கொண்டிருக்கிறது. புதிதாக உற்பத்தி செய்யப்படும் ஏராளமான தங்கம் தொழில் துறையில் உபயோகிக்கப்படுகிறது. பணவியல் துறைக்கும் அதற்கும் சம்பந்தம் இல்லை. இத்தகைய

நிலைமைகளில் மதிப்பின் அளவுகோல் என்ற முறையில் தங்கத்தின் செயல் மாறதிருந்து வருவதாக நாம் சொல்ல முடியுமா? முடியாது என்பது வெளிப்படை.

பணம் என்பது அதன் செயல்களின் ஒருமை என்று மார்க்ஸ் கருதினார். தங்கம் பண்ட உலகத்தன்பொது சமமதிப்பாக எந்த நிலைமைகளின் கீழ் முழுமையாகப் பயன்பட முடியும் என்பதை மார்க்ஸ் சுட்டிக் காட்டினார்: "..... தங்கம் பரிவர்த்தனை நிகழவின்போது முன்னமேயே தன்னைப் பணப் பண்டமாக நிறுவிக்கொண்டதனால் மட்டுமே அது மதிப்பின் லட்சிய அளவுகோலாகப் பயன்பட முடிகிறது. மதிப்புக்களின் லட்சிய அளவுகோலுக்குக் கீழே உறுதியான பணம் மறைந்திருக்கிறது."★ ஆனால் முதலாளித்துவப் பொருளாதாரத்தில் இந்த நிலைமைகள் நெடுங்காலமாகவே இல்லாதிருக்கின்றன. "உறுதியான பணம்" யார் கைகளிலாவது அகப்படு மானால் அது பணம் என்ற முறையில் இருக்காது, பிரத்யேகமான பதுக்கல் பண்டம் என்ற முறையில்தான் இருக்கும்.

வரலாற்று வளர்ச்சியின் தீவிரமான சக்திகள் தங்கத்தைப் பணவியல் துறையிலிருந்து விரட்டிக்கொண்டிருக் கின்றன. ஆனால் பண்டங்களை ஏதாவது ஒரு வழியில் ஒப்பிடவேண்டும், அவற்றின் மதிப்புக்களை வேறுபடுத்திக் காட்டவேண்டும். அவற்றின் விலைகளை எதாவதொன்றில் எடுத்துச் சொல்லவேண்டும். காகிதக் கடன் பணம் இந்த நோக்கத்துக்காக ஏற்பட்டிருக்கிறது. இது நன்மையானதா தீமையானதா என்று விவாதிப்பதில் அர்த்தமில்லை. ஏனென்றால் இது ஒன்று மட்டுமே யதார்த்த ரீதியில் சாத்தியமாகும்.

மதிப்பின் அளவுகோல் என்ற செயல்களைப் பணம் நிறை வேற்றுவதற்குரிய இன்றைய இயந்திர அமைப்பைப் பற்றிய பிரச்சினை சமீப வருடங்களில் சோவியத் யூனியனிலும் மற்ற சோஷலிஸ்ட் நாடுகளிலும் நடை பெற்றிருக்கும் ஆராய்ச்சிகளில் முக்கியமான இடத்தைப் பெற்றிருக்கிறது. வி.எம். உசோஸ்கின் இந்தத் துறையில் மிகவும் சுவாரசியமான நூல்களை எழுதியிருக்கிறார். அவர் பின்வருமாறு எழுதுகிறார்.

"நவீன முதலாளித்துவப் பொருளாதாரத்தில் ணத்தைப் பற்றி அங்ககமான, முரண்பாடு இல்லாத, விஞ்ஞான ரீதியான கருதுகோளை உருவாக்குவதை நாம் எப்படி அµக வேண்டும்? நவீன நிலைமைகளில் தங்கம் மட்டுமே பணப் பண்டம் என்ற பாத்திரத்தை, அதன் மூலம் முதலாளித்துவ நாடுகளின் உள்நாட்டுச் செலாவணியில் பொது சமமதிப்பு என்ற

பாத்திரத்தை, அதன் மூலம் முதலாளித்துவ நாடுகளின் உள்நாட்டுச் செலாவணியில் பொது சமமதிப்பு என்ற பாத்திரத்தை நிறைவேற்ற முடியும் என்ற காலாவதியான கருத்தைக் கைவிடுவதே அத்தகைய கருதுகோளை விரித்துரைப்பதில் முதலாவது –ஒரு வேளை மிகவும் முக்கியமானகாலடியாக இருக்கும் என்பது நம் கருத்தாகும்.''

நவீன காகிதக் கடன் பணத்தை விசேஷமான ஏகபோகமாக்கப்பட்ட பண்டம் என்று கருத வேண்டுமென்று கூறுகிறார். காகிதக் கடன் பணத்துக்கு உள்ளார்ந்த மதிப்பு இல்லாவிட்டாலும் அந்தப் பணத்தின் ''உற்பத்தியையும்'' ''அளிப்பையும்'' ஒழுங்குபடுத்துவதிலும் கட்டுப்படுத்து வதிலும் அரசு ஏகபோகத்தைக் கொண்டிருப்பதால் அது மதிப்பின் தன்மைகளைப் பெறுகிறது. ஒரு ''செயற்கையான ஏகபோகத்தின்'' நோக்கம் பணமே. எனவே அது எப்பொழுதுமே அளிப்பைக் குறைவாக்கி தட்டுப்பாட்டு நிலையை ஏற்படுத்துகிறது.

பின்வரும் உதாரணத்தின் மூலம் ஆசிரியருடைய தர்க்கத்தைப் புரிந்துகொள்ளலாம். ஒரு நாடாக அரங்கத்தில் நடைபெறும் கலை நிகழ்ச்சிக்கு மக்கள் இலவசமாக அனுமதிக்கப்பட்டால் அதைப் பார்க்க விரும்பும் அவ்வளவு பேரும் உட்கார அங்கே இடமிருந் தால் இந்தக் கலை நிகழ்ச்சியின் அனுமதிக் சீட்டுகளுக்கு அங்கே மதிப்பு இருக்காது, ஆனால் உண்மையில் நாடக அரங்கத்தில் உட்கார்ந்து பார்க்கும் இருக்கைகளின் எண்ணிக்கை எப்பொழுதும் குறைவாகவே இருக்கிறது. நிர்வாகத்துக்க அனுமதிச் சீட்டுகளின் விற்பனையில் ஏகபோகம் இருக்கிறது. இதனால் அனுமதிச் சீட்டுகள் மதிப்பைப் பெறுகின்றன. பணத்தின் கதையும் இதுதான். யார் வேண்டுமானலும் அதை ''உற்பத்தி'' செய்யலாம் என்றால் அதற்கு மதிப்பு இருக்காது. ஆனால் அரசு [பகுதியளவுக்கு வங்கியமைப்பும் என்று ஆசிரியர் சேர்த்துக்கொள்கிறார். நாமும் அவ்வாறே சேர்த்துக் கொள்வோம்] பணத்தின் ''உற்பத்தியில்'' ஏகபோகத்தைக் கொண்டிருக்கிறது. பணத்துக்குப் பயன்பாடு, அதாவது பண்டங்களுக்குப் பரிவர்த்தனை செய்யப்படக்கூடிய தகுதி இருப்பதால் அது அரை மதிப்பைப் பெறுகிறது. இந்த விஷயத்தில் அக்கறையுள்ள வாசகரை மேலே சொல்லப்பட்ட கட்டுரையையும் இந்தப் பொருளைப் பற்றி எழுதப்பட்டிருக்கும் மற்ற நூல்களையும் படிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

ஏகபோகமாக்கப்பட்ட பண்டம் என்ற முறையில் காகிதக் கடன் பணம் மதிப்பின் அளவுகோல் என்ற செயலைக் குறிப்பிட்ட வகையில் உண்மையிலேயே நிறைவேற்றுவதாக இருக்கலாம். ஆனால் அதன் அளிப்பு

வெற்றிகரமாகக் கட்டுப்படுத்தப்பட்டால்–அதாவது கடன் மற்றும் பணவியல் அமைப்பு ஏறக்குறைய சகஜமான முறையில் செயல்புரிய வேண்டும், பணவீக்கம் தாங்கிக் கொள்ளக் கூடிய அளவுகளில் இருக்க வேண்டும்–மட்டுமே இது முடியும் என்பது தெளிவானதாகும். ஆகவே ஒரு கேள்வி எழுகிறது: இந்த அமைப்பில் தீவிரமான சீரழிவு ஏற்படும் பொழுது, பணவீக்கம் "குதிரைப் பாளிணிச்சலில்" வளர்ச்சி அடைகின்ற பொழுது பணம் என்ற வகையில் தானாகவே தங்கத்தை நோக்கிப் திரும்ப நேருமா? குறைந்தபட்சம் இரண்டு காரணங்களினால் இந்தக் கேள்விக்குப் பதிலளிப்பது கஷ்டமாகும். முதலாவதாக, "தங்கத்தை நோக்கித் திரும்புவது" என்ற சொல்லும் பொபது நாம் எதைக் குறிக்கிறோம் என்பதைப் பற்றி முதலிடம் நமக்கிடையே உடன்பாடிருக்க வேண்டும். இரண்டாவதாக, இன்னும் எந்த அளவுக்குப் பணவீக்கத்தைத் தாங்கிக் கொள்ள முடியும் கடன் மற்றும் பணவியல் அமைப்பின் "தீவிரமான சீரழிவு" என்பது என்ன என்பதையோ யாரும் இதுவரையிலும் வரையறுத்துக் கூறவில்லை.

அதிகமான பணவீக்கம் ஏற்பட்டு காகிதக் கடன் பணத்தின் மதிப்பு தகர்க்கப்படும் பொழுது ஒரு அர்த்தத்தில் தங்கத்தின் முக்கியத்துவம் அதிகரிக்கிறது என்பது உண்மையே. ஆனால் பதுக்கல் பண்டம் என்ற முறையில் அதன் மதிப்பு அதிகரிக்கிறது என்பதை அனுபவம் எடுத்துக்காட்டுகிறது. மிகவும் அதிகமான பணவீக்கம் ஏற்படும் பொழுதுகூட, சில சமயங்களில் பணம் பல லட்சம் தடவைகள் மதிப்புக் குறைந்த நேரத்தில்கூட மதிப்புக்களின் அளவுகோல் மற்றும் ஒப்பீட்டு ஊடகம் என்ற முறையில், அதாவது பணம் என்ற முறையில் தங்கத்துக்குத் தானாகவே திரும்பியதாகச் சொல்ல முடியாது. அத்தகைய காலங்களில் உப்பு, சிகரெட்டுகள் மற்றும் உணவுச் சீட்டுகளைப் போன்ற ஸ்தல மற்றும் தற்காலிகமான அளவுகோல்கள் தோன்றுவது அதிக சாத்தியமே.

எனினும் இங்கே பெரிய அளவில் ஆனால் என்ற வார்த்தையைச் சேர்த்துச் சொல்வது அவசியமாக இருக்கிறது. தங்கம் மற்றும் பணத்தைப் பற்றிய பிரச்சினை யானது, ஒரு நிகழ்வு அதன் கலப்பற்ற வடிவத்தில் எப்பொழுதுமே இருப்பதில்லை. "ஆம்" "இல்லை" என்ற வகையைச் சேர்ந்த கருத்துக்களில் மூலம் உண்மையை அடைய முடியாது என்ற முக்கியமான இயக்கவியல் கோட்பாட்டுடன் நேரடியாகச் சம்பந்தப்பட்டிருக்கிறது என்று முன்பே கூறியிருக்கிறோம். தங்கம்

பணவியல் செயல்களை இழந்தது ஒரு நீண்டகால நிகழ்வுப் போக்கு, அது இன்னும் முடிவடையவில்ல என்று ஒருவர் கூற முடியும்.

ஓரளவுக்கு சமீபகாலமாகிய 1973–ல் பிரான்சில் வெளியிடப்பட்ட அரசு கடனுக்குப் பங்குச் சந்தையில் "ஜிஸ்கார்" என்ற பெயர் வைக்கப்பட்டது (ஜிஸ்கார் ட எஸ்டேன் அப்பொபது பிரான்சில் நிதி அமைச்ச ராக இருந்தார்). இந்தக் கடன் பத்திரத்தில் முகப்பு மதிப்புக்குப் பணம் தருவதில்லை. அதற்கு மாறாக பாரிஸ் சந்தையில் தங்கத்தின் விலையில் ஏற்படும் மாற்றங்களைக் கணக்கிட்டு உருவாக்கப்படும் விகிதத்தின்படி பணம் தருவார்கள். அமெரிக்காவில் தங்க ஷரத்து விதிக்கும் தடை ஒழிக்கப்பட்டுவருகிறது: பிற்காலத்தில் செய்யப்படவிருக்கம் வழங்கீட்டுத் தொகையை சட்டரீதியாகவே காகித டாலர்களின் தங்கத்தின் விலையோடு இணைத்துக் கொள்ள முடியும். இந்த உதாரணங்களிலும் இதைப் போன்ற மற்ற உதாரணங்களிலும் தங்கம் மறைமுகமாக மதிப்பின் அளவுகோலாக அல்லது இன்னும் துல்லியமாகச் சொல்ல வேண்டுமென்றால் காகிதக் கடன் பணத்தின் மதிப்புக் குறைவின் அளவு கோலாகக் செயல்படுகிறது.பண உலோகம் என்ற நிலையிலிருந்து தங்கத்தை நீக்குவது முழுமையாகவும் பரிபூரணமாகவும் முடிந்துவிட்டது என்று கருதுபவர்கள் ஒரு கடனைக் கொடுத்து முடிப்பதை வெள்ளி, துத்த நாகம், எண்ணெய் மற்றும் ஏதாவது ஒரு பண்டம் அல்லது பண்டங்களின் தொகுதியின் விலையோடு சேர்த்துக் கூறலாமே என்று வாதிடுகிறார்கள் என்பது உண்மையே. சில சமயங்களில் பண்டங்களின் தொகுதி இத்தகைய குறியீட்டுக்குப் பயன்படுவது உண்மையே.

ஆனால் ஒரு தனிப்பண்டம் என்ற முறையில் –நமக்குத் தெரிந்த வரைதங்கம் மட்டும்தான் இந்தச் செயலுக்கு உபயோகிக்கப்படுகிறது. பண்டங்கள் என்ற பரந்த கடலில் அது இன்றும் ஒரு விசேஷமான இடத்தை வகித்துக்கொண்டிருக்கிறது. இது பெருமளவுக்கு சர்வதேசப் பொருளாதாரத்துறையில் தங்கம் இன்னும் நிறைவேற்றுகின்ற பாத்திரத்தின் பிரதிபலிப்பே. மத்திய வங்கிகள் செம்பு, வெள்ளீயம் அல்லது வெள்ளியைக்கூட இருப்புக்களாக வைத்திருப் பதில்லை. ஆனால் தங்க இருப்புக்களைப் பிடிவாதத் தோடு வைத்துக் கொண்டிருக்கின்றனவே. தங்கத்தின் பணவியல் வாழ்க்கைக்குச் சாதகமாக மிகவும் பழமையான மரபு, அதன் புகழ்மிக்க கடந்த காலம் இருக்கிறது. இந்த அம்சத்தை ஒதுக்கிவடுவது அவசர புத்தியாகும்.

தங்கம் உலகப் பணம் என்ற செயலை மிகவும் நெடுங்காலமாக வைத்திருக்கிறது. இது முற்றிலும் இயற்கையானதே: தேசிய அரசின் அதிகாரம் இயங்க முடியாத ஒரு துறையில் தங்கத்துக்குப் பதிலாகக் காகிதக் கடன் பணத்தை நிறுவுவது குறிப்பிடத்தக்க அளவுக்குக் கடினமானது, இன்றைய நிலைமைகளில் இறுதியான முறையில் அதைச் செய்வது அநேகமாக சாத்தியமல்ல.

தேசிய நாணய அலகுகளின் அளவுகோலாகத் தங்கத்தை உபயோகிக்காமல் இருக்க முடியாது என்று சிலர் நினைக்கிறார்கள். அது சரியல்ல. நாணங்களின் தங்க சமமதிப்புக்கள் இப்பொழுது ஒழிக்கப்பட்டுவிட்டன. இது பொருளாதாரத்தில் முக்கியமான தாக்கத்தை ஏற்படுத்தவில்லை. மறைமுகமனா மற்றும் உண்மையான சர்வதேச வழங்கீட்டுச் சாதனம் என்ற முறையில் தஙக்த்தின் பாத்திரம இதைக் காட்டிலும் அதிகமான அளவுக்கு முக்கியமமானதாகும். நம்பகமான தன்மை, ஏற்றுக்கொள்ளும் தன்மை ஆகியவை பற்றிய பிரச்சினை இந்த ஒரு சேம வடிவத்தைப் பற்றியே ஏற்படுவதில்லை. மற்ற நாடுகளிடமிருந்து அமெரிக்கா வாங்கியிருக்கும் கடனே. அவற்றின் தொடர்பான எல்லா விளைவுகளுமே இங்கும் உண்டு. பணவீக்கத்தினால் அவை மதிப்புக் குறைவை அடைகின்றன.

அமெரிகக் அரசாங்கம் சில ஆழ்நிலைகளில் அவற்றை நிறுத்திவைத்து அந்தநாடுகளின் மீது நிர்பந்தத்தைப் பிரயோகிக்க ஒரு வழியாக உபயோகப்படுத்தலாம். சர்வதேச நிதி ஸ்தாபனத்தில் உள்ள நாடுகளின் சேம இருப்புக்களும் பிரயோகிக்க ஒரு வழியாக உபயோகப்படுத் தலாம். சர்வதேச நிதி ஸ்தாபனத்தில் உள்ள நாடுகளின் சேம இருப்புக்களும் விசேஷமான வாங்கும் உரிமைகளும் [எஸ்.டி.ஆர்]. பல அரசுகளின் பொதுக் கடன் தகுதியை ஆதாரமாகக் கொண்டிருந் தாலும் அவையும் சர்வதேச நம்பிக்கை என்ற நிலைமையில், வழக்கமான நிலைமைகளில் மட்டுமே நம்பகமானவை. இந்தநிலைமைகள் மாறமாட்டா, வெளிப்புறக் கூறுகளை, யாராவது ஒருவருடைய விருப்பத்தைப் பொறுத்திராத மதிப்பும் மாற்றப்படக்கூடிய தன்மையும் கொண்ட சேம இருப்புக்கள் ஏதாவது ஒரு சூழ்நிலையில் ஒரு நாட்டுக்குத் தேவைப்படமாட்டா என்று யாரும் உத்தரவாதம் கொடுக்க முடியாது. இந்த நிபந்தனைகளைத் தங்கம் பூர்த்தி செய்கிறது. இதைப் பொறுத்தவரையிலும் அதன் இடத்தை வேறு எதுவும் வெற்றிகரமாக எடுத்துக்கொள்ள முடியும் என்ற அறிகுறிகள் இல்லை.

ராணுவ மற்றும் போர்த்திட்ட சேம இருப்பு என்ற பாத்திரத்தைத் தங்கம் இழக்கவில்லை என்று அனுமானிக்க முடியும். அது மூலப் பொருஷீம்

என்ற முறையில் அல்ல, பொது வழங்கீட்டுச் சாதனம், உலகப் பணத்தின் சேம இருப்பு என்ற முறையில்தான் அந்தப் பாத்திரத்தை இழக்கவில்லை என்பது உண்மையே. தங்கத்தின் விலையில் அடிக்கடி ஏற்படுகின்ற உயர்வுகள் தங்க இருப்புக்களின் உண்மையான சந்தை விலையைத் தீவிரமாக அதிகப்படுத்திவிட்டன. வழங்கீடுகளின் சம நிலையில் பற்றாக்குறையைத் தீர்ப்பதற்கு அவற்றின் தகுதி அதற்குத் தகுந்தவாறு வளர்ச்சி அடைந்திருக்கிறது. மத்திய இருப்புக்களுக்கும் சந்தைக்குமிடையே தங்கப் போக்குவரத்து புதிய வடிவங்களில் மறுபடியும் ஏற்பட்டுவருகிறது. சில நாடுகள் அவற்றைச் சந்தையில் விற்பனை செய்கின்றன. வேறு சில நாடுகள் அவற்றைச் சந்தையில் வாங்குவதால் கடைசியில் இந்த உலோகம் சகல அரசுகளிடமிருந்து வேறு அரசுகளுக்க மாற்றப் படுகிறது. அது உலகச் சந்தையில் எல்லாக் காலங்களலும் நிறைவேற்றியிருக்கும் மரபுவழிப்பட்ட செயல் இதுவே.

பணம் என்ற வகையில் காட்டுமிரண்டித்தனமான எச்சம் என்று பெயர் சூட்டப்பட்டு "நற்புண்புகளைக்கொண்ட சமூகத்திலிருந்து" வெளியேற்றப்பட்டு ஆபரண உற்பத்தியாளர்களிடமும் பதக்கல் காகரர்களிடமும் ஒப்படைக்கப்பட்ட தங்கம் சர்வதேசப் பணவயல் உறவுகள் என்ற களத்தைவிட்டுப் போக பிடிவாதமாக மறுக்கிறது. இதை ஒரு மேற்கத்தியப் பொழளியலாளர் மிகவும் கச்சிதமாக எடுத்துக் கூறியிருக்கிறார். கெய்ன்ஸ் தங்கக்தைக் காட்டு மிராண்டித்தனமான எச்சம் என்று கூறியபொழுது நாம் அத்தகைய காட்டுமிராண்டித்தனமான காலத்தின்தான் வசிக்கிறோம் என்பதை மறந்துவிட்டார் என்று அவர் குறிப்பிட்டார். மக்களோ, நாடுகளோ ஒருவரையொருவர் நம்புவதில்லை. அவர்கள் சேம இருப்புக்களின் தனி முதலான வடிவமாகத் தங்கத்தின் மீதுதான் நம்பிக்கை வைத்திருக்கிறார்கள்.

எதிர்காலத்தில் தங்கத்தின் நிலை என்ன? வரலாறு மறுபடியும் நடைபெறுவதில்லை. தங்க ஆதார அளவின் மரபு வழிப்பட்ட வடிவங்களில் ஏதாவதொன்றுக்குக் கூடத்திரும்ப முடியும் என்ற நினைத்துப் பார்கக்க்கூட முடியாதென்று தோன்றுகிறது. ஆனால் தங்கத்தின் பணவியல் அல்லது ஏற்படுத்துவது, குறிப்பாக சர்வதேசத் துறையில் ஏற்படுத்துவது சாத்தியமே. இது தற்பொழுது உண்மையிலேயே நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. இத்தகைய ஆரூடங்களைச் சிறிதும் எதிர்பார்க்கதா நேரத்தில் அவை செய்யப்படுகின்றன. 1976-ல் ஹெர்மன் கான் என்பவர் இணை ஆசியராக எழுதிய புத்தகம் வெளியிடப்பட்டது. அவர் அமெரிக்காவிலுள்ள ஹட்சன்

நிறுவனத்தின் இயக்குநர். எதிர்காலத்தைப் பற்றி முன்னறிவிப்பவர்களில் மிகவும் பிரபல மானவர். அடுத்த இருபது வருடங்களில் மேற்கத்திய உலகத்தின் வளர்ச்சியைப் பற்றிய முன்னறிவிப்பின் பொருளாதாரப் பகுதியில் அப்புத்தகத்தன் ஆசிரியர்கயள் பின்வரும் முன்னறிவிப்பைக் கொடுத்துள்ளனர். ''குறியிட்டெண் ஒப்பந்தங்களும் நிதித்துறைப் பத்திரங்களும் மிகவும் அதிகமான அளவுக்கு வளர்ச்சி அடையும். ஒருவேளை சர்வதேசப் பணவியல் அமைப்பில் தங்கத்துக்கு ஒரு பாத்திரம் (மதிப்பின் சேமிப்பு என்ற முறையிலும் ஒருவேளை கணக்குப் பணமாகவும்) ஏற்படவும் கூடும். எஸ்.டி.ஆர்.உலக நாணயமாக வளர்க்கப்படும். ஆனால் முழுமையான ஒப்புதலைப் பெறுவதில் அநேகமாக நிச்சயமாகத் தவறும்.''

சர்வதேசப் பணவியல் அமைப்பில் தங்கத்தின் உபயோகத்தை அங்கீகரிக்கின்ற ஒரு வகையான திருப்பம் மேற்கு நாடுகளில் 1978-1980ல் ஏற்பட்டது. இதை எடுத்துக்காட்டுகின்ற விவரங்களும் முடிவுகளும் முன்பே கூறப்பட்டன. தென் ஆப்பிரிக்க அரசியல் வாதிகள், பிரெஞ்சு ''உலோகவாதிகள்'' அளிப்பை ஆதரிக்கின்ற அமெரிக்கப் பொருளரியலாளர்கள் ஆகியோர் ஏதாவது ஒருவகையான தங்க ஆதார அளவை மறுபடியும் ஏற்படுத்தவேண்டு மென்று நெடுங்காலமாகவே கூறி வருகிறார்கள். இவர்களுடைய வாதங்களைக் கேட்டு எல்லோருக்கும் அலுத்துவிட்டது. எதிர்காலத் திலும் இவற்றை அவநம்பிக்கையோடு தான் கேட்பார்கள். ஆனால் சேம உடைமைகளின் விசேஷமான, அடிப்படை யில் ஒதுக்க முடியாத பகுதியாகத் தங்கம் சர்வதேசப் பணவியல் அமைப்பில் தன்னுடைய பாத்திரத்தை ஆராவரமில்லாமல், அரசுகளின் அங்கீகாரமில்லாமல் தொடர்ந்து செய்யும்.

தங்கத்தின் பாத்திரம் மொத்த பணவியல் அமைப்பின் பரிணாமத்தோடு பெருமளவுக்கு இணைந்திருக்கும். பிரெட்டன்வுட்ஸ் ஒப்பந்தங்களுக்குப் பிறகு ஒரு நிலையான, நிரந்தரமான சர்வதேசப் பணவியல் அமைப்பு ஏற்படுத்துப்பட்டிருக்கிறதென்று பொதுவாக நம்பப்பட்டது. அது ஓரளவுக்கு உண்மையாகவும் இருந்தது. இன்றைய நிலை வேறு விதமாக இருக்கிறது. இன்றுள்ள பணவியல் அமைப்பு தற்காலிகமானது. மாறுந்தன்மையைக் கொண்டது என்று கருதப்படுகிறது. எனினும் இந்த மாற்றம் எங்கே போய்க்கொண்டிருக்கிறது. எங்கே, எத்தகைய நிலைமைகளிலம் இத்தகைய மாற்றம் நடைபெறும் என்பது சிறிதும் தெளிவாகப் புலப்படவில்லை.

1967ல் டாலர் இன்னும் தங்கமாக மாற்றப்பட்டுக் கொண்டிருந்தபொழுது, பிரெட்டன்வுட்ஸ் அமைப்பு இன்னும் இயங்கிக்கொண்டிருந்தபொழுது அமெரிக்க பேராசிரியர் கின்டில்பெர்கெர் சர்வதேசப் பணம் மற்றும் உலக மொழியின் அரசியல் என்ற சுவாரசிய மான புத்தகத்தை வெளியிட்டார். அவர் உலகப் பணம் என்ற முறையில் தங்கத்தை இலத்தின் மொழியோடு ஒப்பிட்டார். தங்கத்தின் பணவியல் பாத்திரத்தை மறுபடியும் ஏற்படுத்துவதைப் பற்றிய பழங்கால நாட்டக் கனவுகள் இலத்தின் மொழியைப் பொது மொழியாக ஏற்படுத்த நினைப்பதைப் பேலவே கற்பனையானவைதான் என்றார். அவர் எஸ்.டி.ஆரை எஸ்பெரான் டோவுடன் ஒப்பிட்டு அந்தச் செய்கையான மொழியை சர்வதேச உறவுகளில் பயன்படுத்தப்படச் செய்யப்பட்ட முயற்சிகள் தோல்வியடைந்ததைக் குறிப்பிடுகிறார்.

இனி மிஞ்சுவது என்ன? ஆங்கிலம் முக்கியமான சர்வதேச மொழியாகத் தானாகவே ஏற்பட்டு வருவதைப் போல அமெரிக்க டாலர் நடைமுறையில் மிகச் சிறந்த சர்வதேசப் பணமாகி வருகிறது என்ற முடிவுக்கு அவர் வருகிறார். "கல்வித்துறைப் பொருளியலாளர்கள்" அன்று ஆலோசனை கூறிய மிதக்கும் பரிவர்த்தனை விகிதங்களின் அமைப்பையும் சர்வதேசச் செலாவணியில் பல நாணங்களும் ஏறக்குறைய சமத்துவமான அந்தஸ்தில் பங்கெடுப்பதையும் அவர் பாபிலோன் ஸ்தூபியோடு ஒப்பிடுகிறார்.

முதலாவதாகவும் முதன்மையாகவும், பணவியல் துறையில் "பாபிலோன் ஸ்தூபி" என்பது ஒரு நடைமுறை உண்மையாக இருக்கிறது. பரிவர்த்தனை விகிதங்கள் மிதக்கின்றன; டாலரைத் தவிர மற்ற நாணங்களும் சர்வதேச சே இருப்புக்களில் விரிவாகப் பயன்படுத்தப்படுகின்றன. இன்றைக்கிருக்கும் டாலர் பேராசிரியர் ஆரூடம் கூறிய இயற்கையான, நிரந்தரமான சர்வதேசப் பணம் அல்ல. ஆனால் பணவீக்கத்துக்கு ஆளாகின்ற, மாற்றப்பட முடியாத, மதிப்புக் குறைகின்ற டாலர் சர்வசேதப் பணத்துக்குப் பதிலாக இன்னும் பயன்பட்டுக் கொண்டிருக்கிறது.

பாபிலோன் ஸ்தூபி இருக்கின்ற உகலத்தில், மொத்தக் கட்டிடடத்தின் அடிப்படையுமே இப்படி ஆடிக் கொண்டிருக்கும் பொழுது தங்கம் தவிர்க்க முடியாதபடி தன்னுடைய நிலையைத் தக்கவைத்துக் கொள்ளும்.

# தங்கமும் முதலாளித்தவமும்

## (முடிவுரைக்குப் பதிலாக)

த ங்கத்தின் பாத்திரம், வாய்ப்புக்களைப் பற்றி அறிஞர்களும் அரசியல்வாதிகளும், தொழிலதிபர்களும் எழுத்தாளர்களும், வங்கி முதலாளிகளும் தத்துவ ஞானிகளும் கூறியிருக்கின்ற சுவாரசியமான கருத்துக்கள் (முடிவுரைக்குப் பதிலாக) இந்தப் புத்தகம் முழுவதிலும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவற்றோடு இன்னொரு கருத்தையும் மேற்கோள் காட்டுவோம்.

முதலாவது உலக யுத்தத்தின் முன்னடிப் பொழுதில் வெளியிடப்பட்ட புதிய கலைக்களஞ்சிய அகாரதியின் (புரட்சிக்கு முன்பு ரஷ்யாவில் வெளியிடப் பட்ட கலைக்களஞ்சியம்) ஒரு தொகுதியில் தங்கத்தைப் பற்றி எழுதப்பட்டிருக்கும் கட்டுரை பின்வருமாறு தொடங்குகிறது:

“தங்கத்தின் பொருளாதார முக்கியத்துவம் மிகவும் அதிகமாகும். தங்கத்தின் தொழில்நுட்ப உபயோகத்தைப் பற்றி ஒன்றும் சொல்லா விட்டாலும்கூட அநேகமாக உலகத்தின் எல்லாப் பணவியல் முறைகளுமே தங்கத்தை ஆதாரமாகக் கொண்டிருக்கின்றன. முன்னெப்போதுமிருந்ததைக் காட்டிலும் இது இப்போது அதிகமே. அதன் பணவியல் செயலும் உற்பத்தியின் அளவும் அவற்றின் சிகரத்தை நெருங்கிக்கொண்டிருக்கின்றன என்று நம்ப இடமிருக்கிறது.” ஆசிரியர் பின்வருமாறு மேலும் எழுதுகிறார்:

“சட்டரீதியான பலத்தையும் அரசின் பொருளாதார ரீதியில் ஒழுங்குபடுத்தும் நடவடிக்கையையும் ஆதாரமாகக் கொண்டிருக்கும் காகித நோட்டுகளின் செலாவணியை விரிவுபடுத்தும் வகையில் வழங்கீட்டுச் சாதனங்களின் மற்ற வடிவங்களுக்கு மாறும் அறிகுறிகள். இன்றைய பணவியல் அமைப்புக்களில் காணப்படுகின்றன.”

தங்க உற்பத்தியின் அளவைப் பொறுத்தவரை இந்த ஆரூடம் நிறைவேறவில்லை. 1913–க்கும் 1970–க்கும் இடையே முதலாளித்துவ உலகத்தில் அதுஇரண்டு மடங்காக அதிகரித்தது. தங்கத்தின் பணவியல் செயல் களைப் பொறுத்தவரை அவை உண்மையிலேயே முதலாவது உலக

யுத்தம் ஆரம்பமான பொழுது சிகரத்தை அடைந்தன. தங்கத்தின் பொருளாதார முக்கியத்துவம் 20ம் நூற்றாண்டின் தொடக்கத்தோடு ஒப்பிடுகின்ற பொழுது பொதுவாகக் குறைந்திருக்கிறது. இன்று அதை வர்ணிப்பதற்கு ''மிகவும் அதிகம்'' என்ற சொற்கள் பொருத்தமல்ல. தங்கம் பணவியல் அமைப்புக்களின் அடிப்படையாக இருந்தது இன்று முடிந்துவிட்டதென்று உண்மை இதைத விளக்கும். அதன் பாத்திரம் அளவுரீதியாக மட்டுமல்லாமல் குணரீதியாகவும் மாறிவிட்டது. தங்கத்தின் பொருளாதாரப் பாத்திரம் குறைந்திருக்கிறது என்று சொல்வதைக் காட்டிலும் மாறியிருக்கிறது என்று சொல்வதே பொருத்தம். இதுதான் தடை பெற்றிருக்கிறது. இன்னும் நடைபெற்றுவருகிறது.

எந்தப் பண்டத்தின் பயன் மதிப்பும் (பொருளாதார உபயோகம்) மாறும் தன்மையைக் கொண்டது என்று முன்பே கூறினோம். இது மற்ற பண்டங்களைக் காட்டிலும் தங்கத்துக்கே அதிகமான அளவுக்குப் பொருந்தும் என்று கூறலாம்: தங்கத்தின் உபயோகம் கலப்பற்ற சமூகக் காரணிகளால் நிர்ணயிக்கப்படுகிறது. உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சி (உற்பத்தி முறைகள், தொழில்நுட்பவியல் மற்றும் உற்பத்திகளின் புதிய ரகங்கள் ஆகியவை) தங்கத்தை உபயோகிப்பதன் புதிய வடிவங்களைப் பகுதியளவுக்கு நிர்ணயிக்கின்றன. இதற்கு மிகச்சிறந்த உதாரணமாக மின்நுட்பவியலைக் குறிப்பிடலாம். மறு பக்கத்தில் சமூக உளவியலில் ஏற்படுகின்ற மாற்றங்கள் ஆகிய சமூக –பொருளாதாரக் கூறுகளும் தாக்கத்தைக் கொண்டிருக்கின்றன. இந்தக் கூறுகள் தங்கத்தின் பணவியல் செயல்கள் குறை வதற்குக் காரணமாக இருந்திருக்கின்றன.

ஆனால் அவை தங்கத்தின் பொருளாதார வாழ்க்கையில் புதிய வடிவங்களையும் அதைப் பயன்படுத்தும் புதிய துறை களையும் தோற்றுவிக்கின்றன. இந்தக் கூறுகளில் முதலாவது ரகமும் இரண்டாவது ரகமும் நெருக்கமாகப் பின்னிப் பிணைந்திருக்கின்றன. ஆபரணத் தொழிலில் உபயோகிக்கப்படும் தங்கத்தின் அதிகரிப்பு உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சியையும் நுகர்வின் அடுக்கமைவில் பொருத்தமான மாற்றங்களையும் பகுதியளவுக்குப் பிரதிபலிக்கிறது.

ஆனால் அது இன்னும் மிக அதிகமான அளவுக்கு முதலளித்துவ சமூகத்தின் அடுக்கமை வின் வளர்ச்சியோடு முதலாளித்துவ வாழ்க்கை முறையின் பிரத்யேகமான கூறுகளோடு இணைந்திருக்கிறது. தங்கம் பகட்டான, பெருமைக்காகச் செய்யப்படும் நுகர்வுக்கு, பதுக்கலுக்கு, சட்ட மற்றும் நிதித் துறை அதிகாரிகளிடமிருந்து வருமானங்களையும்

செல்வத்தையும் மறைப்பதற்குப் பயன்படுகிறது. முதலாளித்துவத்தில் இந்த அம்சங்கள் நெடுங் காலமாகவே உள்ளூறையாக இருந்தன. அதன் வளர்ச்சியில்தான் இவை பலமடைகின்றன. முதலாளித் துவம் ஒழிக்கப்பட்ட பிறகும்கூட இவை தாமாகவே மறைந்துவிடுவதில்லல என்பது நமக்குத் தெரியும். மக்களின் உளவியலிலும் நடத்தையிலும் இவற்றின் எச்சங்களை சோஷலிசம் சந்திக்கிறது. தங்கத்தின் தலைவிதியை நிர்ணயிக்கின்ற கூறுகளில் பணவீக்கமும் சமூக –அரசியல் நெருக்கடிகளும் விசேஷமான பாத்திரத்தை வகிக்கின்றன. இவை தங்கப் பதுக்கலை, முதலீட்டை, வர்த்தக சூதாட்டத்தேவையைத் தூண்டுகின்றன. அதைப் பயன்படுத்தக்கூடிய விசேஷ மான, வேகமாக வளர்ச்சியடைக் கூடிய துறையைத் தோற்றுவிக்கின்றன. இந்தக் கூறுகளின் முக்கியத்துவமும் சக்தியும் குறையும் என்று நம்புவதற்குக் காரணமில்லை.

சர்வதேசப் பணவியல் அமைப்பில் தங்கத்தைப் பயன் படுத்துகின்ற துறையில் முரண்பாடான மற்றும் சிக்கலான போக்குகள் வளர்ச்சி அடைந்துகொண்டிருக்கின்றன. நவீனப் பணவியல் அமைப்பின் அடிப்படையாகத் தங்கம் யதார்த்தத்தில் இருக்க முடியாது. ஆனால் இந்த அமைப்பு தங்கம் இல்லாமலேயே நீடிக்க முடியும் என்று இன்னும் நிரூபிக்கப்படவில்லை.

இந்த அமைப்பின் எதிர்காலப் பரிணாமத்தோடு தங்கம் ஏதாவதொரு வகையில் இணைக்கப்பட்டிருக்கும் என்பதில் சிறிதும் சந்தேகம் இருக்க முடியாது.மஞ்சள் பிசாசு தன்னுடைய முகத்தை மாற்றிக் கொள்ள முடியும். அது முன்னேற்றம், கடன் வசதி, தொழில்நுட்பம் மற்றும் கலை என்ற கௌரவமான முகமூடிக்குப் பின்னால் மறைந்துக்கொள்கிறது. முதலாளித்துவம் நீடிக்கின்றவரை மஞ்சள் பிசாசும் உயிரோடிருக்கும். முன்பிருந்தைப்போலவே அது மக்களுடைய மனங்களில் முதலா ளித்துவ நாகரித்தின். பண நாகரிகத்தின் சின்னமாக இருக்கிறது. அதுவும் தகுந்த காரணங் களோடுதான். தங்கத்திடம் மனிதகுலத்துக்கு இன்னும் பல அதிர்ச்சிகள் இருக்கின்றன.

இந்தச் சமூக நிகழ்வின் கடந்த காலத்தைப் போலவே அதன் எதிர்காலமும் சம்பவங்களும் புதிர்களும் நிறைந்து விளங்கும். இந்தப் புத்தகத்தின் வாசகர் இந்தச் சம்பவங் களையும் புதிர்களையும் புரிந்துகொள்வதற்கு இன்னும் சிறந்த தகுதிநிலை அடைந்தால் தன்னடைய கடமையை நிறைவேற்றிவிட்டதாக ஆசிரியர் கருத முடியும்.

